# அணிந்துரை.

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம் "தமிழிலேயே கற்பிப்போம்" என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி ஆகிய இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில், அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர். இவற்றுள், ஒன்றான இந்தியச் செலாவணி முறையின் வரலாறு என்னும் இந்நூலை அனைவரும் வரவேற்பார்களென நம்புகிறோம்.

கல்லூரித் தமிழ்க் குழுவினர் சார்பில் இதுவரை வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளிலும் 37 நூல்கள் வெளி வந்துள்ளன.

இத்துறையை இன்னும் விரிவுபடுத்த சென்னை அரசினர், தமிழ் வெளியீட்டுக் கழகம் ஒன்றை நிறுவியுள்ளனர். அதன் மூலம் இன்னும் வேறு பல நூல்கள் தமிழில் வெளிவர இருக்கின்றன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லையாதலின் உழைத்து வெற்றி காண்போம்.

தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பற்பல உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்,
தமிழக நிதி, கல்வியமைச்சர்.

## ஆசிரியர் முன்னுரை

ஆண்டவன் மனிதனுக்கு அளித்த ஆர்வம் (curiosity) அவனை அறிவைத்தேடும் முயற்சியில் ஈடுபடுத்துகின்றது. ஒவ்வொருவனும் அறிவைப் பெறவேண்டும் என்ற ஆர்வத்துடன் இயற்கையாகவே முயன்று கற்கும் கல்வியே சிறந்த கல்வியாகும். ஆனால், இயற்கைக்குமாறாக, ஒருவன் மனோநிலைக்கு ஒவ்வாத வகையில் கல்வி புகட்டுவது தவறான முறையாகும். நன்றாகப் பண்படுத்திய நிலத்தில் தாவரம் செழித்தோங்கி வளரும். கல்வி கற்பதற்கும் கூட ஒருவன் மனோநிலை பக்குவமாக அமைய வேண்டும். கற்கும் பொருளுக்கும், கற்பவர்களுக்கும் இடையே ஒரு பாலமாக ஆர்வம் அமைகின்றது. இப்பாலத்தை நன்கு பயன்படுத்தி நேரிடையாக ஒருவன் சொந்த அனுபவத்தின் மூலம் கற்கும் கல்வியே சிறந்த கல்வியாகும்.

ஆனால், நடைமுறையில் மாணவர்களுக்கும் அவர்கள் கற்க வேண்டிய பொருளுக்கும் இடையே ஒரு பெரிய இடைவெளி இருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். அவர்கள் எதையும் விரும்பிக் கற்காததே இதை எடுத்துக் காட்டுகின்றது. அவர்களுடைய இயற்கையான ஆர்வம் ஒரு பாலமாக அமையவில்லை. இதற்குப் பல காரணங்கள் உள. அவற்றுள் அன்னிய மொழியில் பாடங்களைக் கற்றுக்கொள்வதும் ஒன்றாகும். ஒருவன் தாய்மொழியின் மூலம் எத்துறையிலும் அறிவை எளிதில் பெறலாம்.

மாணவர்கள் தமிழில் எழுதப்பெற்ற புத்தகங்களைப் படித்துப் பயனடைய வேண்டுமென்ற எண்ணத்துடனும், ஒரு தொண்டு மனப்பான்மையுடனும் நான் கல்லூரித் தமிழ்க் குழுவினர் அளித்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு இப்புத்தகத்தை எழுதியுள்ளேன். தமிழ் மொழியில் இந்த நூலை எழுதவேண்டுமென்ற "ஆசை பற்றி அறையலுற்றே"னே தவிர, என் புலமையைப் புலப்படுத்தவேண்டும் என்ற எண்ணத்துடன் இம்முயற்சியைத் தொடங்கவில்லை.

இந்நூலின் தமிழ் மொழியமைப்பு செம்மை பெறுவதற்குப் பேருதவி புரிந்த திரு. க. ஆறுமுகம் (தமிழ்த்துறை, அரசினர் கலைக்கல்லூரி, கோவை) அவர்களுக்குக் கடமைப் பட்டிருக்கின்றேன்.


பு. வி. சீனிவாசன்,
பொருளாதாரத்துறை,
அரசினர் கல்லூரி, குடந்தை.


12-1-63
குடந்தை

# உள்ளுறை

—:o:—

**இந்தியச் செலாவணி முறையின் வரலாறு:**

# 1

# இந்தியச் செலாவணி முறையின் வரலாறு

## 1. வெள்ளித் தனி உலோக நாணய முறை
(Silver monometallism)

இக்காலத்துப் பொருளாதாரத்தில் வர்த்தகம் ஒரு முக்கியமான இடம் பெற்றுள்ளது. பழைய காலத்தில், அதாவது தொழிற் புரட்சிக்குமுன் வர்த்தகத்தின் தன்மையும் அளவும் இப்பொழுது இருப்பது போல் இல்லை. அக்காலத்தில் மிகக் குறைந்த அளவே வாணிகம் நடைபெற்றது. பண்டமாற்று முறையே (barter) பெரும்பாலும் எங்கும் நிலவியது. போக்குவரத்து வசதிகளும் இப் பொழுது இருப்பதுபோல் அக்காலத்தில் இல்லை. மக்கள் ஆங் காங்கே தன்—நிறைவு பெற்ற (self-sufficiency) கிராமங்களில் வாழ்ந்து வந்தனர். இந்தக் கிராமங்களுக்கிடையே பொருளாதார, வாணிகத் தொடர்புகள் அதிகம் இல்லை. இந்தியா ஒரே மன்னர் ஆட்சியில் இல்லாததால் ஆட்சி முறையில்கூடப் பல பகுதிக ளிடையே வேற்றுமைகள் இருந்தன. அரசியல் குழப்பங்களும் அவ் வப்போது தோன்றி மறைந்தன. மக்கள் தொகையும் இப்பொழுது இருப்பதைவிட மிகக் குறைவாகவே இருந்தது.

ஆங்கிலேயர் வருகைக்குப் பின் இந்த நிலைமை மாறியது. இந்தியா முழுவதும் ஆங்கிலேய ஆட்சியின்கீழ் வந்தது. புதிய தொழில்கள் வளர்ச்சி பெற்றன. நவீனத் தொழில்களும் வாணிகமும் சிறிது சிறிதாக வளர்ந்தன. இருப்புப் பாதைகளும், சாலைகளும் ஏற் பட்டதால் வர்த்தகம் பெருகியது. நாடுகளின் பல பகுதிகளிடையே தொடர்புகளும் பெருகின. சுருங்கக் கூறினால், நாட்டின் பொருளா தார அமைப்பு முற்றிலும் மாறியது. புதிய பொருளாதார அமைப் பில் வர்த்தகம் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றது. இந்தியச் செலா

வணி முறை அக்காலத்தில் எப்படி அமைந்திருந்தது என்பதையும், எப்படி வளர்ச்சி பெற்றது என்பதையும் இங்குக் காண்போம்.

வர்த்தகத்துக்கு இடையூறுகள் ஏற்பட்டால் விவசாயம் தொழில் துறைகளில் உற்பத்தி குறையும். பொருளுற்பத்தி தங்குதடையின்றி நன்கு நடைபெற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்றால், வர்த்தகம் பெருக வேண்டும். பழைய பண்டமாற்று முறையில் இக்கால வாணிகத்தை அமைத்துக் கொள்ள முடியாது. இக்காலத்திய வாணிகத்துக்குச் செலாவணி இன்றியமையாதது. தொழிலுற் பத்திக்கும் செலாவணி வேண்டும். இக்காலத்தில் தொழிலுற்பத்தி பல கூறுகளாகப் பிரிந்துள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் பல சிறப் புப் பயிற்சி பெற்றவர்கள் பணியாற்றுகின்றனர். இந்த முறையில் இயந்திரங்களைப் பயன்படுத்திக் குறைந்த செலவில் மிகுதியான அளவு பொருளுற்பத்தி செய்கின்றனர். செலாவணி இல்லாத ஒரு சமுதாயத்தில் இந்தப் புதிய முறை உற்பத்தியும் பங்கீடும் இருக்க முடியாது. செலாவணி இல்லாவிடில் பண்டமாற்று முறையையே நாம் பின்பற்ற வேண்டும். அதாவது, இக்காலப் பொருளாதார அமைப்பையும் அதன் நலன்களையும் இழந்து பழைய முறையைப் பின்பற்ற வேண்டும்.

இக்காலத்திய பொருளாதார அமைப்பில் செலாவணி ஒரு சிறந்த இடம் பெற்றுள்ளது என்பது தெளிவாகின்றது. இதிலிருந்து செலாவணியும் அதன் பயனும் கலப்பற்ற நலன்களையே கொடுக் கின்றன என்று நாம் கருத முடியாது. இக்காலத்தில் இலாப நோக் குடன் பொருளுற்பத்தி செய்கின்றனர். தேவைக்கேற்றபடி உற் பத்தி பெருகவேண்டும். ஆனால், தடையற்ற பொருளாதார அமைப் புள்ள நாடுகளில் சில சமயங்களில் உற்பத்தி குறைந்து பொருளா தார மந்தமும், சில சமயங்களில் உற்பத்திப் பெருக்கமும் பொருளா தார வீக்கமும் ஏற்படுவது இயற்கை. விலைவாசிகளும் ஒரே நிலை யில் இருக்காமல் மாறிக்கொண்டே இருக்கின்றன. இக்காலத்திய பொருளாதார அமைப்பில் உள்ள குறைகளை நீக்க நாம் ஒரு சிறந்த செலாவணிக் கொள்கையை அமைத்துக் கொள்ளவேண்டும்.

அரசியலாரும், ரிசர்வ் பாங்கும் வெளியிடும் நாணயங்களையும், செலாவணித் தாள்களையும் (currency notes) பணம் என்று அழைக்கின்றோம். வர்த்தகத்தில் பொருளுக்கு ஈடாக நாம் ஏற்றுக் கொள்ளும் எல்லாவற்றையும் செலாவணி என்று சொல்லலாம். செலாவணித் தாள்களையும், நாணயங்களையும், செக்குகளையும் (cheques) நாம் சாதாரணமாக ஏற்றுக்கொள்வதால் இவை எல்லா வற்றையும் செலாவணி என்று கூறலாம்.

## ஆங்கிலேயர் வருகைக்கு முன் இந்தியச் செலாவணி

இந்தியச் செலாவணியின் வரலாற்றை இங்குக் காண்போம். இந்தியாவின் பல பகுதிகளைப் பல மன்னர்களும், சிற்றரசர்களும் ஆண்டு வந்தனர். இந்து, முகமதிய மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் தங்க வெள்ளி நாணயங்கள் புழக்கத்தில் இருந்தன. வட இந்தியாவில் புழக்கத்தில் இருந்த நாணயங்களை 'மோகர்' (Mohur), 'டாம்' (Dam), ரூபாய் என்று அழைத்தனர். நாணயங்கள் செய்வதற்குத் தங்கம், வெள்ளி, தாமிரம் போன்ற உலோகங்களைப் பயன்படுத்தினர். 'மோகருக்கும்' 'டாமுக்கும்' இடையே ஒரு விகித மதிப்பை ஏற்படுத்தி யிருந்தனர். தென்னிந்தியாவில் நாணய வெளியீட்டுக்குப் பெரும்பாலும் தங்கத்தையே பயன்படுத்தினர். தென்னிந்தியப் பொன் நாணயத்துக்குப் 'பகோடா' (Pagoda) என்று பெயர்.

பழைய காலத்தில் மன்னர்கள் தங்கள் வருவாயைப் பெருக்குவதற்குப் பல வழிகளைக் கையாண்டனர். நாணயத் தரக்குறைப்பு (debasement) அவற்றுள் ஒன்றாகும். பொன், வெள்ளி போன்ற மதிப்புள்ள உலோகங்களைக்கொண்டு நாணயங்கள் செய்தனர். ஒவ்வொரு நாணயத்திலும் ஒரு குறிப்பிட்ட அளவு இந்த உலோகங்களைச் சேர்த்தனர். இந்த அளவைக் குறைப்பதே நாணயத் தரக் குறைப்பாகும். இப்படிச் செய்வதால் மன்னர்கள் குறைந்த உலோகத்தைக் கொண்டு அதிகமான நாணயங்களை அச்சிட முடியும். தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களைக் குறைந்த அளவில் சேர்த்து நாணயங்கள் செய்தனர். இப்பொழுது மதிப்பற்ற தாள்களைக் கொண்டு அரசியலார் செலாவணித் தாள் அச்சிடுகின்றனர். மக்களும், இத்தாள்களை ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால், மதிப்புள்ள உலோகக் கலவை இருந்த காரணத்தாலேயே மக்கள் நாணயங்களை ஏற்றுக் கொண்டனர். தரமிழந்த நாணயங்களின் மதிப்புக் குறைவது இயற்கை. ஓரளவுக்கு மேல் நாணயங்களின் தரம் குறைந்தால் மக்கள் அவைகளை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். தரமிழந்த நாணயங்கள் புழக்கத்திலிருந்து நீங்கிவிடலாம். இந்த நிலைமை ஏற்பட்டால் உற்பத்தியும் வர்த்தகமும் குறையும். நாட்டின் பொருளாதாரம் சீர்குலைந்துவிடும்.

முகலாய மன்னர்கள் ஆட்சிபுரிந்த காலத்தில் நாணயங்களின் தரத்தைக் குறைக்கவில்லை. நாடெங்கும் ஒரே விதமான நாணயங்கள் வழங்கி வந்தன. முகலாய மன்னர்களின் நாணய நிருவாகம் நன்கு அமைந்திருந்தது. முகலாயப் பேரரசு சிதைவுண்ட பிறகு பல சிற்றரசர்கள் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டினர். அரசியல் குழப்பம் ஏற்பட்டது. ஒவ்வொரு சிற்றரசரும் ஆங்காங்கே தனது

ஆட்சியின் அறிகுறியாக நாணயங்களை அச்சிட்டு வெளியிட்டனர். நாட்டின் பல பகுதிகளில் பல்வேறு நாணயங்கள் புழக்கத்திலிருந்தன. பல அரசர்கள் நாணயங்களின் தரத்தை அடிக்கடிக் குறைத்தனர். தரங்குறைந்த நாணயங்கள் மக்களுடைய நன் மதிப்பை இழந்தன. மன்னர்கள் இந்த நாணயங்களுக்குக் கொடுத்த மதிப்பை மக்கள் அங்கீகரிக்கவில்லை. அவர்கள் நாணயங்களில் உள்ள உலோகத்துக்கேற்ற மதிப்பையே கொடுத்தனர்.

ஆங்காங்கே பல பகுதிகளில் புழக்கத்திலிருந்த நாணயங்களின் மதிப்பு ஒரே நிலையில் இராமல் அடிக்கடி மாறியது. பல்வேறு நாணயங்களின் விகித மதிப்பை எளிய முறையில் கண்டுபிடிக்க முடியவில்லை. இந்த நிலை வர்த்தகத்துக்கு உகந்ததல்ல. வாணிகம் அடிக்கடி பண்டமாற்று நிலையை அடைந்ததில் வியப்பொன்றுமில்லை. முகலாயப் பேரரசு வீழ்ச்சியடைந்தபின் நாட்டில் அரசியல் குழப்பம் இருந்தது. நாட்டின் பொருளாதாரமும் இதனுல் பாதிக்கப்பட்டது. இந்த நிலையில் ஆங்கிலேயர் நம் நாட்டுக்கு வந்தனர். அவர்கள் முதன் முதலில் வர்த்தகம் செய்யவே இந்தியாவுக்கு வந்தனர். ஆனுல், நாட்டில் நிலவிய நிலைமை வர்த்தகத்துக்கு உகந்ததாக இல்லை. எனவே, கிழக்கிந்தியக் கம்பெனியார் நாணயச் சீர்திருத்தத்தின் இன்றியமையாமையை உணர்ந்தனர்.

## இரட்டை உலோக நாணய முறை (Bimetallism)

கிழக்கிந்தியக் கம்பெனியார் முதன் முதலில் இரட்டை உலோக நாணய முறையை நம் நாட்டில் புகுத்தினர். இந்த முறைப்படி தங்கம், வெள்ளி நாணயங்களை அரசினர் வெளியிடுவது வழக்கம். இரண்டு உலோகங்களையும் தடையின்றி மக்களுக்கு வேண்டிய அளவு அரசாங்கம் நாணயங்களாக அச்சிடும். இதைத் தடையற்ற நாணய அச்சிடல் (free coinage) என்று கூறலாம். இரண்டு உலோக நாணயங்களும் சட்டப்பூர்வமான நாணயங்களாகும் (legal tender). இந்த முறைப்படி அரசினர் இரண்டு நாணயங்களுக்கிடையே ஒரு விகித மதிப்பை ஏற்படுத்தி அந்த மதிப்பைக் காப்பாற்ற வேண்டும். இரு உலோகங்களின் மதிப்பும் இந்த விகிதத்தை ஒட்டியே இருக்கும். இரண்டு உலோகங்களையும் தடையற்ற முறையில் ஏற்றுமதியோ இறக்குமதியோ செய்யலாம். எல்லா நாடுகளுக்கும் நாணய வெளியீட்டுக்கு வேண்டிய அளவு பொன் கிடைக்காது. ஆகையால், இரண்டு உலோகங்களையும் பயன்படுத்தலாம். மேலும், எல்லா நாடுகளும் இம்முறையைப் பின்பற்றினுல் பல நன்மைகள் ஏற்படும்.

ஆனால், நடைமுறையில் இந்த முறை பல இடையூறுகளுக்கும் தொல்லைகளுக்கும் உட்பட்டது. நாணயங்களின் சட்டப்பூர்வமான மதிப்பையும் அவைகளிடையே உள்ள விகிதத்தையும் நிலைநாட்டுவது கடினம். கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு அவ்வப்போது தேவைக்கேற்றபடி இரண்டு உலோகங்களும் கிடைக்கவில்லை. உலோகங்களின் மதிப்பில் நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஏற்றத் தாழ்வுகள் இருந்தன. இம்முறையைப் பின்பற்றுவதில் ஏற்பட்ட தொல்லைகளைச் சமாளிக்க முடியாமல் பிரான்சு, அமெரிக்கா போன்ற நாடுகள் இதைக் கைவிட்டன. இரட்டை உலோக நாணய முறை வெற்றிகரமாக இயங்கவேண்டுமென்றால் அரசியலார் உலோகங்களுக்கும் நாணயங்களுக்கும் கொடுத்த மதிப்பைத் தவிர வேறு மதிப்பு மார்க்கட்டில் நிலவக் கூடாது. ஆனால், வேறு மதிப்பு நாட்டில் நிலவாதபடி செய்வது மிக்கக் கடினமாயிற்று. இந்தியா முழுவதும் கம்பெனியார் ஆட்சியின்கீழ் வரவில்லை. இரட்டை உலோக நாணய முறை கம்பெனியார் ஆட்சிபுரிந்த பகுதிகளில் மட்டுமே அமுலில் இருந்தது. இப்பகுதிகளிலிருந்து மற்றப் பகுதிகளுக்குத் தங்கத்தைக் கடத்துவது எளிதாயிற்று. கம்பெனியாரிடம் இருந்த தங்கம் குறைந்து கொண்டே வந்ததால், அதன் சட்டப்பூர்வமான மதிப்பைக் காப்பாற்ற முடியவில்லை. நாட்டில் நிலவிய தங்கத்தின் உண்மையான மதிப்பும், அதற்குக் கம்பெனியார் கொடுத்த சட்டப்பூர்வமான மதிப்பும் வேறுபட்டிருந்தன.

இந்தச் சமயத்தில்லிவர்பூல் பிரபு தனி உலோக நாணய முறையின் (monometallism) சிறப்பைப்பற்றி ஒரு நூலில் எழுதினர். 1806-ஆம் ஆண்டில் கிழக்கிந்தியக் கம்பெனியின் நிருவாகச் சபையினர் இரட்டை உலோக நாணய முறையைக் கம்பெனியார் கைவிடலாமென்றும், தனி உலோக நாணய முறையைக் கம்பெனியார் கைவிடலாமென்றும், வெள்ளியை நாணயம் செய்வதற்குப் பயன்படுத்தலாமென்றும் சிபாரிசு செய்தார்கள். ஆனால், நிருவாகச் சபையினர் இச் சிபாரிசை உடனே ஏற்கவேண்டும் என்று வற்புறுத்தவில்லை. நல்ல வாய்ப்புக் கிட்டும்பொழுது மாநிலங்கள் தனி உலோக நாணய முறையைப் பின்பற்றலாமென்று நிருவாகச் சபையினர் தம் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தனர்.

1818-ஆம் ஆண்டில் சென்னை மாநில அரசாங்கம் புதிய நாணயத்தை வெளியிட்டனர். ஒரு தோலா எடையுள்ள இந்த நாணயம் 11/12 சுத்த வெள்ளியும், 1/12 கலவையும் கொண்டிருந்தது. இந்தப் புதிய நாணயம் முகலாய மன்னர்கள் வெளியிட்ட பழைய நாணயத்தைப் போல் இருந்தது. புதிய நாணயம் வெளியிட்ட பிறகும் மக்கள் வசதியைக் கருதி அரசாங்கம் பகோடா என்ற தங்க

நாணயத்தை 1:15 என்ற விகிதத்தில் ஏற்றுக் கொண்டனர். சென்னை மாநிலத்தைப் பின்பற்றிப் பம்பாய் மாநில அரசும் 1824-இல் புதிய நாணயத்தை வெளியிட்டது. எடை, தோற்றம் முதலிய எல்லாவற்றிலும் சென்னை நாணயமும், பம்பாய் நாணயமும் ஒன்றுகவே அமைந்திருந்தன.

வங்காள மாநிலத்தில் மூன்று வகை வெள்ளி நாணயங்கள் புழக்கத்திலிருந்தன. இவற்றில் ஒன்றுகிய காசியில் வெளியான ரூபாயை அந்த மாநிலம் நீக்கி, அதற்குப் பதிலாகப் புதியதொரு நாணயத்தை வெளியிட்டது. இந்தப் புதிய நாணயம் சென்னை ரூபாயைப்போல் 11/12 சுத்த வெள்ளியைக் கொண்டிருந்தது. இந்த நாணயத்தைப் ' பரூகாபாத் ரூபாய் ' என்று அழைத்தனர். 1833-இல் கீழ்க்கண்ட நாணயங்கள் கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆட்சி செய்த பகுதிகளில் புழக்கத்திலிருந்தன.

| நாணயத்தை வெளியிட்ட அரசாங்கம். | (வெள்ளி) (நாணயத்தின் பெயர்) | (தங்கம்) (நாணயத்தின் பெயர்) | விகித மதிப்பு. |
|---|---|---|---|
| வங்காள மாநிலம். | (1) சிக்கா ரூபாய்.<br>(2) பரூகாபாத் ரூபாய். | மோகர் | 1:15 |
| பம்பாய் மாநிலம். | (வெள்ளி) ரூபாய். | (தங்க) ரூபாய். | 1:15 |
| சென்னை மாநிலம். | (வெள்ளி) ரூபாய். | (தங்க) ரூபாய். | 1:15 |

1833-இல் மூன்று மாநிலங்களிலும், தங்க வெள்ளி நாணயங்கள் புழக்கத்திலிருந்தன. வங்காளத்தில் இருவகை வெள்ளி ரூபாய்கள் இருந்தன. ஆகையால், வெள்ளித் தனி உலோக நாணய முறை முழு வளர்ச்சி பெறவில்லை. கம்பெனியின் நிருவாகச் சபையினர் தனி உலோக நாணய முறையையே மூன்று மாநிலங்களும் பின்பற்ற வேண்டுமென்று வற்புறுத்தினர். வெள்ளி நாணயங்களே புழக்கத்திலிருக்க வேண்டுமென்பதும் நிருவாகச் சபையினரின் கருத்தாகும். ஆனல், சென்னை மாநில அரசியலார் பொன் நாணயத்தைக் கைவிட மறுத்தனர். வங்காள அரசாங்கமும் நிருவாகச் சபையின் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்கவில்லை. வங்கா

ளத்தில் மோகர் நாணயத்தை மாற்றியமைக்க ஏற்பாடுகள் செய்தனர். சுருங்கக் கூறினால், மூன்று மாநிலங்களும் இரட்டை உலோக நாணய முறையைக் கைவிட மறுத்தன.

மூன்று மாநிலங்களும் தனித்தனி நாணயங்களை வெளியிட்டன. இந்த நாணயங்கள் ஒரே மாதிரியாக இருந்தால் நாட்டின் வர்த்தகம் பயனடையும் என்று நிருவாகச் சபையினர் கருதினர். ஆனால், ஒரே மாதிரியான நாணயங்கள் இருத்தல்மட்டும் போதாது. மூன்று மாநிலங்களும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருந்தன. ஒரு மாநிலத்தில் நிதிப் பற்றுக்குறை ஏற்பட்டால் அது மற்ற மாநிலங்களின் உதவியை எதிர்பார்ப்பது வழக்கம். மூன்று மாநிலங்களுக்கும் ஒரே நாணயத்தை வெளியிட்டிருந்தால், அவ்வப்போது ஏற்படும் பற்றுக்குறையை எளிதில் சமாளித்திருக்கலாம். ஆனால், ஒவ்வொரு மாநிலத்திலும் தனித்தனி நாணயங்கள் புழங்கி வந்தன. எனவே, சென்னையில் நாணயப் பற்றுக்குறை ஏற்பட்டால், பம்பாய் அல்லது வங்காளத்திலிருந்து நாணயங்களைப் பெற்று அவைகளை உலோகமாக மாற்றி மீண்டும் அச்சிட்டு வெளியிடவேண்டும். ஏனெனில், அந்தந்த மாநிலங்களில் வெளியான நாணயங்கள் மற்ற இடங்களில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. மூன்று மாநிலங்களிலும் தனித்தனி நாணயங்களை அச்சிடுவது இதுபோன்ற பல தொல்லைகளை எழுப்பியது.

1833-ஆம் ஆண்டில் மூன்று மாநிலங்களின் நிருவாகமும் ஒருமுகமாகியது. இதைத் தொடர்ந்து ஒரு பெரிய நாணயச் சீர்திருத்தம் ஏற்பட்டது. 1835-இல் ஒரு சட்டமியற்றினர். இதன்படி இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்ட எல்லாப் பகுதிகளுக்கும் ஒரே வெள்ளி நாணயத்தை வெளியிட்டனர். ரூபாய் என்று அழைக்கப்பட்ட இந்த நாணயம் சட்டப்பூர்வமானது. 1835-க்குப் பிறகு இந்த நாணயங்கள் நாடெங்கும் புழக்கத்தில் இருந்தன. சென்னை, வங்காளம், பம்பாய் முதலிய பகுதிகளுக்குத் தனித்தனி நாணயங்கள் அச்சிடாமல், வெள்ளித் தனி உலோக நாணய முறையை இந்தியாவில் முதன்முதலில் புகுத்தினர். மக்கள் தேவைக்கும், வர்த்தகத்தின் அளவுக்கும் ஏற்றபடி தடையின்றி இந்தப் புதிய நாணயங்களை வெளியிட்டனர்.

1835-ஆம் ஆண்டு இந்தியச் செலாவணியின் வரலாற்றில் ஒரு முக்கியமான ஆண்டாகும். இரட்டை நாணய முறை மறைந்து தனி உலோக நாணய முறை நாட்டில் உருவாகியது. ஆனால், சிலர் இந்தியா பொன் நாணயத் திட்டத்தைப் புறக்கணித்து விட்டதென்று கருதி 1835-ஆம் ஆண்டுச் சட்டத்தைக் குறை கூறினர்.

நாணயச் சீர்திருத்தத்தைத் தொடர்ந்து நடந்த நிகழ்ச்சிகளை நாம் உற்று நோக்கும்பொழுது 1835-ஆம் ஆண்டுச் சட்டத்தின் மேன்மை தெளிவாகின்றது.

19-ஆம் நூற்றுண்டில் இங்கிலாந்தில் பொன் நாணயத் திட்டம் வளர்ச்சிபெற்றது. 1835-இலிருந்து இந்தியாவில் வெள்ளி நாணயத்திட்டம் நல்லமுறையில் வளரும் என்று எதிர்பார்த்தனர். ஆனால், பேராசிரியர் மக்ளியட் போன்றவர்கள் இந்தியாவில் வெள்ளித் தனி உலோக நாணய முறையைப் புகுத்துவது தவறு என்றும், பொன் நாணயத் திட்டமே நம் நாட்டுக்கு உகந்தது என்றும் வாதாடினர். பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றுவதற்கு ஏராளமான தங்கம் வேண்டும். அக்காலத்தில் பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றிய நாடுகளில் தங்க நாணயங்கள் புழக்கத்திலிருக்க வேண்டுமென்று கருதினர். மேலும், அரசாங்கம் தங்கத்துக்கு ஒரு விலையை ஏற்படுத்தி அது மாருமல் இருக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். உலோகத்தின் சட்டப்பூர்வமான விலையும், மார்க்கட்டு விலையும் ஒன்ருகவே இருக்கவேண்டும். மேலும், பொன் ஏற்றுமதியையும் இறக்குமதியையும் அரசாங்கம் தடை செய்யக் கூடாது.

இந்தியாவில் பொன் நாணயத் திட்டத்தைப் புகுத்துவதற்குத் தகுந்த சூழ்நிலை வளர்ச்சியடையவில்லை. பண்டமாற்றுமுறை முற்றிலும் மறைந்து வாணிகம் நாடெங்கும் பரவவில்லை. நாணயத்தின் பயன் சரிவர நாடெங்கும் பரவவில்லை. பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றுவதற்கு ஏராளமான தங்கம் வேண்டும். இந்தியா மேலை நாடுகளைப்போல் செல்வம் மிகுந்த நாடல்ல. பல மேல்நாடுகளில்கூட வெள்ளியைத் தங்கத்துடன் சேர்த்துப் பயன்படுத்திக் கொண்டிருந்தனர். இந்த நிலையில் பொன் நாணயத் திட்டத்தை நம் நாட்டில் புகுத்தியிருந்தால் அது வெற்றிகரமாக இயங்கி யிருக்காது. வெள்ளி நாணயத் திட்டமே இந்தியாவிற்கு உகந்தது.

1806-இல் கம்பெனியின் நிருவாகச் சபையினர் விடுத்த அறிக்கையோ, 1835-இல் இயற்றிய சட்டமோ தங்க நாணய வெளியீட்டைத் தடை செய்யவில்லை. இரட்டை நாணய முறையைக் கைவிடவேண்டுமென்று அரசினர் கருதினர். ஆனால், பொன் நாணயங்களை மக்கள் வசதிக்காக ஒரு துணை நாணயமாக வெளியிட வேண்டுமென்றும் கருதினர். இந்திய நாணய முறையை இரட்டை நாணய முறை என்ருே தனி உலோக நாணய முறை என்ருே கூறமுடியாது. இரண்டுக்கும் இடையே உள்ள ஓர் ஏற்பாட்டை அரசினர் பின்பற்ற முயற்சி செய்தனர். தங்க நாணயங்கள்

அச்சிடுவதில் அரசாங்கத்திற்கு அச்சுத் தீர்வை கிடைத்தது. தங்க நாணயங்களை வெள்ளி நாணயங்களோடு துணை நாணயங்களாக வெளியிட்டது. 1841-இல் அரசாங்கம் ஓர் அறிக்கை வெளியிட்டது. அரசினர் கருவூலங்கள் பொன் நாணயத்தை மக்களிடம் 1:15 என்ற விகிதத்தில் பெற்றுக் கொள்ளலாம் என்று அந்த அறிக்கை குறிப்பிட்டது. அரசாங்கம் தங்கத்துக்குக் கொடுத்த மதிப்பு அதன் உண்மையான மதிப்பைவிடக் குறைவாக இருந்ததால், மக்கள் செலுத்த வேண்டிய தொகைகள் எல்லாவற்றிற்கும் வெள்ளி நாணயங்களையே பயன்படுத்தினர்.

ஆனால், இந்த நிலைமை அதிக நாள் நீடிக்கவில்லை.. ஆஸ்திரேலியாவிலும், அமெரிக்காவிலும் புதிய தங்கச் சுரங்கங்களைத் தோண்டினர். தங்க உற்பத்தி பெருகவே அதன் விலை குறைந்தது. முன்பு இருந்த நிலைமை மாறியது. அரசினர் தங்கத்துக்குக் கொடுத்த மதிப்பு அதன் உண்மையான விலையை விட அதிகமாக இருந்தது. அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய தீர்வைகள், கட்டணங்கள் எல்லாவற்றிற்கும் தங்க நாணயங்களையே பயன்படுத்தினர். மதிப்புக் குறைந்த உலோகத்தைப் பெற்ற அரசாங்கம் அதை மீண்டும் நாணய வெளியீட்டுக்குப் பயன்படுத்த முடியவில்லை. ஏனெனில், பொன் நாணயங்கள் சட்டப்பூர்வமானவை அல்ல. இரட்டை நாணயத் திட்டத்துக்கும் தனி உலோக நாணய முறைக்கும் இடையில் ஒரு புதிய முறையை ஏற்படுத்தியதால் பல தொல்லைகள் எழுந்தன. இந்த இன்னல்களைச் சமாளிப்பது கடினமாக இருந்ததால், அரசியலார் 1852-இல் ஓர் அறிக்கை மூலம் தங்க நாணயங்களைப் புழக்கத்திலிருந்து நீக்கினர். அதாவது, 1841-ஆம் ஆண்டு வெளியிட்ட அறிக்கை ரத்தாயிற்று.

1852-க்குப் பின் நம் நாட்டில் வெள்ளித் தனி உலோக நாணய முறை முழு வளர்ச்சி பெற்றுவிட்டதென்று சொல்லலாம். ஆனால், சில புதிய பிரச்சினைகள் தோன்றியதால் இந்த முறை சோதனைக்குட்பட்டது. தனி உலோக நாணயத் திட்டத்துக்கு வெள்ளியை விட இந்தியாவில் தங்கம் சிறந்த பயனளித்திருக்கும் என்று சிலர் கருதினர். 19-ஆம் நூற்றாண்டின் இரண்டாவது பகுதியில் நம் நாட்டில் பொருளாதாரத்தில் சில மாறுதல்கள் நிகழ்ந்தன. பழைய முகலாய மன்னர்களின் நிலவரித் திட்டத்தை நீக்கி ஆங்கிலேயர் புதிய வரித் திட்டத்தைப் புகுத்தினர். பழைய முறைப்படி மக்கள் நிலவரியைத் தானியங்கள் மூலம் செலுத்தலாம். ஆனால், ஆங்கிலேய அரசாங்கம் மக்கள் செலுத்தவேண்டிய தொகைகளுக்கு ஈடாகப் பொருள்களை ஏற்றுக்கொள்ளவில்லை. பணத்தையே ஏற்றுக் கொண்டனர். இராணுவத்தினருக்கும், மற்ற அரசாங்க அலுவலர்களுக்கும்,

ஊழியர்களுக்கும் அவர்கள் பணத்தையே சம்பளமாகக் கொடுத்தனர். பண்டமாற்று முறை சிறிது சிறிதாக மறைந்தது. மக்கள் நாணயத்தை முன்பைவிட மிகுதியான அளவில் பயன்படுத்தினர். எனவே, நாணயத்தின் தேவை நாளடைவில் பெருகியது.

மேலும், இந்தியாவில் உள்நாட்டு வர்த்தகமும், வெளி நாட்டு வர்த்தகமும் பெருகியது. இங்கிலாந்து நாட்டில் அரசியலார் அயல் நாட்டு வர்த்தகத்திற்கு விதித்திருந்த தடைகளை நீக்கியதால் நமது அயல்நாட்டு வாணிகம் வளர்ச்சியடைந்தது. வர்த்தகம் பெருகப் பெருகச் செலாவணியின் தேவை அதிகரித்துக் கொண்டே சென்றது. ஒரு சிறந்த செலாவணி முறை நெகிழ்ச்சியுடையதாக இருத்தல் வேண்டும். அதாவது, மக்களின் தேவைக்கும் வர்த்தகத்தின் அளவுக்கும் ஏற்ற முறையில் செலாவணிச் சுருக்கமோ பெருக்கமோ ஏற்பட வேண்டும். ஆனால், இந்தியச் செலாவணி முறை 19-ஆம் நூற்றாண்டில் அவ்வாறு அமையவில்லை. தங்க நாணயங்கள் சட்டப்பூர்வமானவை அல்ல. 1852-இலிருந்து அந்த நாணயங்கள் புழக்கத்தில் இல்லை.

சர். ராபர்ட் பீல் என்பவர் வர்த்தகத் தடைகளையும் கட்டுப்பாடுகளையும் நீக்கிய பிறகு இந்தியாவின் ஏற்றுமதி பெருகியது. 1850-க்குப்பின் நமது உலோக இறக்குமதி மிகுதியடைந்தது.

உலோக இறக்குமதி.

| ஆண்டுகள். | வெள்ளி (பவுன் பெறுமானம்) | தங்கம் (பவுன் பெறுமானம்) |
|---|---|---|
| 1850-51 | 2,117,225 | 1,153,294 |
| 1852-53 | 3,605,024 | 1,172,301 |
| 1853-54 | 2,305,744 | 1,061,443 |
| 1855-56 | 8,194,375 | 2,506,245 |
| 1859-60 | 11,147,563 | 4,284,234 |

ஆனால், உலக நாடுகளின் தேவைக்கேற்றபடி வெள்ளி உற்பத்தி பெருகவில்லை. இந்தியாவில் இறக்குமதியான உலோகம் அனைத்தையும் நாணயமாக அச்சிட்டிருந்தால் நாணயப் பற்றுக் குறை ஏற்பட்டிருக்காது. ஆனால், வெளி நாடுகளைப்போல் அல்லாமல் தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களை நம் நாட்டில் நகைகள், பாத்திரங்கள் முதலியன செய்வதற்குப் பயன்படுத்துகின்றோம்,

நம் நாட்டில் நாணயங்களை உருக்கி அவற்றின் உலோகத்தைப் பயன் படுத்துவது மிகச் சாதாரணமான வழக்கமாகும். இறக்குமதியான உலோகம் முழுவதையும் நாணய வெளியீட்டுக்கு அரசாங்கம் பயன் படுத்தியது. ஆனால், மக்கள் இந்த உலோகத்தை நகைகளாகவும், பாத்திரங்களாகவும் மாற்றிவிட்டனர். தேவைக்கு வேண்டிய நாண யங்கள் கிடைக்கவில்லை. பண நெருக்கடியும், பற்றுக்குறையும் ஏற் பட்டன. உலகத்தில் உற்பத்தியாகும் வெள்ளி உலோகத்தில் ஒரு பெரும் பகுதியை இந்தியா பெற்றபோதிலும், நாணயப் பற்றுக்குறை இருந்தது. நாட்டில் அப்பொழுது இருந்த நிலைமையையும், மக்கள் பழக்க வழக்கங்களையும் பரிசீலனை செய்தவர்கள் இந்த நெருக்கடி இந்தியாவில் அடிக்கடி ஏற்படலாமென்று கருதினர்.

பாங்கு முறை நல்ல வளர்ச்சி பெற்றிருந்தால் பாங்குச் செலாவணியாக்கம் (Bank credit creation) செய்து நிலைமையைச் சமாளித்திருக்கலாம். ஆனால், அப்பொழுது நம் நாட்டில் பாங்கு முறை நன்றாக வளர்ச்சியடையவில்லை. அரசினர் செலாவணித் தாள்களை (currency notes) அச்சிட்டு நிலைமையைச் சமாளிக்க முயன்றனர். இந்தச் செலாவணித் தாள்களைப் புழக்கத்தில் கொண்டுவர முடியவில்லை. நிலைமையச் சமாளிப்பதற்கு அரசி யலார் கீழ்க்கண்ட திட்டங்களைச் செயலாற்றியிருக்கலாம்.

(1) பொன் நாணயங்களை இந்தியாவில் அச்சிட்டு வெளியிட் டிருக்கலாம். பொன் நாணயத்திற்கும், வெள்ளி நாணயத்திற்கும் விகித மதிப்பை ஏற்படுத்தாமல் மார்க்கெட்டின் நிலைக்கேற்றவாறு பொன் நாணயத்தின் மதிப்பு மாறுபாடடைய விட்டிருக்கலாம். ஆனால், நாணயத்துக்கு ஒரு நிலையான மதிப்பைக் கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். ஆகையால், இந்தத் திட்டத்தைப் பின்பற்றவில்லை.

(2) பொன் நாணயத்தை வெளியிட்டு அதைச் சட்டப்பூர்வ மாக்கி அதற்குத் தற்காலிகமான ஒரு மதிப்பைக் கொடுத்திருக் கலாம். வேண்டும்பொழுது அதன் மதிப்பை மாற்றியமைக்கலாம். முதல் திட்டத்தின் குறைபாடு இதிலும் உள்ளதாகையால், இத் திட்டத்தையும் அரசினர் பின்பற்றவில்லை.

குறைபாடற்ற இந்திய அரசாங்கம் பின்பற்றக்கூடிய ஒரே திட்டம் பொன் நாணய முறைதான். நாணயப் பற்றுக்குறையைச் சமாளிக்கும் வகையில் மக்கள் பொன் கட்டியைப் பயன்படுத்தி வந்தனர். அயல் நாடுகளிலிருந்து இறக்குமதியான பொன் உலோ கத்தை நாணயங்களாக அச்சிடலாமென்றும், பொன் நாணயத்

திட்டத்தை அரசியலார் பின்பற்றலாமென்றும் பலர் கருதினர். ஆனால், செலாவணித் தாள் முறை சிக்கனமாகவும், எளிமையாகவும், நெகிழ்ச்சியுடையதாகவும் இருக்கும். எனவே, அரசினர் வெள்ளி நாணயங்களுக்குத் துணையாகச் செலாவணித் தாள்களை வெளியிட்டனர். ஆனால், மக்கள் பொன் நாணயத் திட்டத்தையே விரும்பினர். வில்சன் என்பவர் பொன் நாணயத் திட்டத்துக்குப் பதிலாகவே செலாவணித் தாள்முறையைத் தொடங்கினார். ஆனால், வில்சனுக்குப் பின் பதவியேற்ற லெயங்கு என்பவர் பொன் நாணயம் இந்தியாவில் புழக்கத்திலிருக்க வேண்டுமென்று கருதியதால் வில்சனுடைய திட்டத்தை மாற்றினார். செலாவணித் தாள்கள் நாணயப் பற்றுக்குறையை நீக்கவில்லை. மக்கள் இந்தத் தாள்களை நன்கு பயன்படுத்தவில்லை. ஆகையால், செலாவணிப் பற்றுக்குறை மறையவில்லை.

இந்த நிலையில் அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் தொடங்கியதால், அந்த நாடு வழக்கம்போல்இங்கிலாந்திற்குக் கச்சாப் பருத்தியை அனுப்ப முடியவில்லை. இந்தியப் பருத்தி ஏற்றுமதிக்கு ஒரு சிறந்த வாய்ப்புக் கிடைத்தது. நமது அயல்நாட்டு வர்த்தகம் பெருகியது. செலாவணியின் தேவை மிகுதியடைந்தது. இந்தியாவில் தங்க உலோகத்தை மேலும் மேலும் மிகுதியான அளவில் இறக்குமதி செய்தனர். இப்படி இறக்குமதியான உலோகத்தை மக்கள் நாணயத்துக்குப் பதிலாகப் பயன்படுத்தலாயினர். பம்பாய் வாணிபச் சங்கம் (Bombay Chamber of Commerce) இதை எடுத்துக் காட்டி அரசினரிடம் பொன் நாணயத்தை அச்சிடவேண்டுமென்று வற்புறுத்தியது. செலாவணித் தாள்களை அச்சிடும் பொழுது அவைகளுக்குக் காப்பு நிதியாக ஓர் உலோகத்தை வைத்துக் கொள்வது வழக்கம். இந்தியாவில் அரசாங்கம் வெள்ளி நாணயங்களையே வெளியிட்டனர். இந்த நாணயங்களே சட்டப்பூர்வமானவை. எனினும், செலாவணித் தாள்களுக்குக் காப்பு நிதியாகப் பொன் உலோகத்தை வைத்துக்கொண்டனர். செலாவணித் தாள்களை மக்கள் அரசினரிடம் கொடுத்து நாணயங்களைப் பெறலாம். மக்கள் வேண்டுகோளுக்கேற்றபடி செலாவணித் தாள்களை அவர்களிடம் பெற்று வெள்ளி நாணயங்களைக் கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். ஆகையால், பொன்னைக் காப்பு நிதியாகப் பயன்படுத்துவது சரியல்லவென்றும், அதை நாணய வெளியீட்டுக்குப் பயன்படுத்த வேண்டுமென்றும் சர். சார்லஸ் ட்ரெவிலியன் என்பவர் கூறினார்.

இந்தியச் செலாவணிப் பிரச்சினைகளைத் தீர்க்க ட்ரெவிலியன் அவர்கள் புதிய திட்டம் ஒன்றை வகுத்தார். பொன் நாணய

முறைக்குப் பதிலாக வில்சன் புகுத்திய செலாவணித் தாள் முறை குறைபாடுள்ளது என்று இவர் கருதினார். தங்க நாணயங்களை அரசாங்கம் அச்சிட்டாலன்றி நிலைமையைச் சமாளிக்க முடியா தென்ற இவரது கூற்றினைப் பலர் ஒத்துக் கொள்ளவில்லை. தங்க நாணயங்கள் வெள்ளியை ஒரு துணை உலோகமாக மாற்றிவிடு மென்றும், இரு உலோகங்களையும் பயன்படுத்தினால் மீண்டும் இரட்டை நாணய முறை தலைதூக்குமென்றும் பலர் கருதினர். ஆனால், ட்ரெவிலியன் இரட்டை நாணய முறை குறைபாடுள்ளது என்பதை ஒத்துக்கொண்ட போதிலும், தனி உலோக நாணய முறையை நிலைநாட்டுவதற்கு முன் ஒவ்வொரு நாடும் இரட்டை நாணய முறையைக் கட்டாயம் பின்பற்றவேண்டுமென்று கருதினார். ஆகையால், இந்தியாவில் பொன் நாணயங்களை அச்சிட வேண்டு மென்றும், தற்காலிகமாக மக்கள் இரட்டை நாணய முறையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் ட்ரெவிலியன் கருதினார். ஆனால், நாளடைவில் வெள்ளி நாணயங்கள் அச்சிடுவதைக் கை விடலாம். பொன் நாணயத் திட்டம் இந்தியாவில் படிப்படியாக முழு வளர்ச்சி பெற்று விடும். நாட்டில் ஏற்பட்ட நாணயப் பற்றுக் குறையையும், செலாவணி நெருக்கடியையும் இந்த வழியில் அகற்றி விடலாமென்று ட்ரெவிலியன் கருதினார்.

இந்திய அரசாங்கம் இந்தத் திட்டத்தை இந்தியா மந்திரியின் பரி சீலனைக்காக இங்கிலாந்திற்கு அனுப்பியது. ஆனால், அங்கு இத்திட் டம் அங்கீகாரம் பெறாததால் இதைச் செயலாற்றவில்லை. நாணயப் பற்றுக்குறை நீடித்தது. அரசினர் எந்த முடிவுக்கும் வரவில்லை. மக்கள் தொடர்ந்து பொன் நாணயத் திட்டம் வேண்டுமென்று முறை யிட்டனர். 1866-இல் வங்காள வாணிபச் சங்கம் பொன் நாணயங் களை அச்சிடும்படி அரசாங்கத்தை வேண்டிக் கொண்டது. நாட்டின் பொருளாதார நிலையை ஆராய்ந்து செலாவணிப் பிரச்சினைகளைத் தீர்க்க அரசாங்கம் மேன்ஸ்பீல்டு என்றவர் தலைமையில் ஒரு குழுவை நியமித்தது. இக்குழுவினர் செலாவணித் தாள் முறை சிறந்த தென்று கருதினர். இந்தியச் செலாவணித் தாள் முறையில் உள்ள குறைகளை நீக்கவேண்டு மென்றும், சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற இடங்களில் செலாவணித் தாள்களை நாணயங்களாக மாற்றுவதற்கு வசதிகள் ஏற்படுத்தவேண்டுமென்றும் இக்குழுவினர் கருதினர். இப்படிச் செய்தால் செலாவணித் தாள்களைப் புழக்கத்தில் கொண்டு வரலாமென்று இவர்கள் கூறினர். ஒவ்வொரு மாநிலத் துக்கும் தனித்தனியான செலாவணித் தாள்களை வெளியிடலாமென்ற கூற்றினைக் குழுவினர் ஏற்கவில்லை. நாடெங்கும் ஒரேவிதமான தாள்கள் புழக்கத்தில் இருக்கவேண்டுமென்பதை இவர்கள் உணர்ந்

தனர். இந்தத் தாள்களை பாங்குகள் மூலம் புழக்கத்தில் கொண்டு வரவேண்டுமென்று இவர்கள் கருதினர்.

நாடெங்கும் மக்கள் பொன் நாணயங்களை விரும்பியதால் அந்த நாணயங்களை அரசினர் வெளியிட வேண்டும். 15, 10, 5 ரூபாய் மதிப்புள்ள தங்க நாணயங்களை அரசினர் வெளியிடுவதால், செலாவணித் தாள்களின் வெளியீடும் வெற்றிகரமாகவும், பயனுள்ளதாகவும் அமையும் என்பது குழுவினர் கருத்து.

மேன்ஸ்பீல்டு குழுவினரின் சிபாரிசுகளை அரசினர் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்தக் குழுவை நியமனம் செய்யும் பொழுது இருந்த நிலைமையும், பிரச்சினைகளும் இயற்கையாகவே மறைந்ததால் அரசினர் எந்த நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை. பழைய பிரச்சினைகள் தீர்ந்தன. ஆனால், புதிய சிக்கல்கள் தோன்றின. வெள்ளி உலோகத்தின் மதிப்பு 1870-இல் இருந்து குறைய ஆரம்பித்தது. இந்திய நாணயமாகிய ரூபாயின் மதிப்பும் குறைய ஆரம்பித்ததால் 1871-இல் இருந்து 1877-வரை இந்திய அரசாங்கம் ஆண்டுதோறும் சராசரி இரண்டரைக் கோடி ரூபாயை இழக்கவேண்டியதாயிற்று. இந்தியச் செலாவணி முறை மீண்டும் ஒரு சோதனைக்குட்பட்டது.

இரு நாடுகளிடையே செலாவணி மாற்று மதிப்பு (Par of exchange) எப்படி அமைகின்றது என்பதை இங்குக் காண்போம். செலாவணி மாற்று மதிப்பு இரு நாணயங்களின் புற மதிப்பைக் குறிக்கும். இரு நாடுகள் ஒரே உலோகத்தைப் பயன்படுத்தினால் அவற்றின் செலாவணி மாற்று மதிப்பு மாறாமல் ஒரே நிலையாக இருக்கும். இரு நாடுகளிலும் நாணயங்களை உலோகமாக மாற்றவும் அவைகளை ஏற்றுமதியோ இறக்குமதியோ செய்யவும் வசதிகள் இருக்கவேண்டும். இந்த நிலையில் அவற்றின் செலாவணி மாற்று மதிப்பு மாறாமல் ஒரே நிலையில் இருக்கும். ஒரு நாடு பொன்னையும், மற்றொரு நாடு வெள்ளியையும் நாணயங்கள் அச்சிடுவதற்குப் பயன்படுத்தினால், உலோகங்களின் மதிப்புக்கு ஏற்றவாறு அவற்றின் மதிப்பு மாறுபாடடையும். இரு உலோகங்களின் மதிப்பும் மாறாமல் இருந்தால் இரு நாணயங்களின் வீத மதிப்பு ஒரே நிலையாக இருக்கும். இங்கிலாந்து 19-ஆம் நூற்றாண்டில் பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றியது. இந்தியாவில் வெள்ளித் தனி உலோக நாணய முறை இருந்தது. ஆனால், பவுன்-ரூபாய் வீத மதிப்பு மாறாமல் ஒரே நிலையாக இருந்தது. ஒரு ரூபாய்க்கு 1 ஷில்லிங் $10\frac{1}{2}$ பென்சு சமமாக இருந்தது. இதற்குக் காரணம் தங்கம், வெள்ளி இரு உலோகங்களின் மதிப்பு அதிகம் மாறாமல் ஒரே நிலையில் இருந்ததேயாகும்.

ஆனால், 1873-க்குப் பின் பவுன்-ரூபாய் வீதம் மாறத் தொடங்கியது. 1873-க்குப் பின் ஏற்பட்ட மாறுதல்களுக்குப் பல காரணங்கள் இருந்தன. 19-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தைப் பின்பற்றி மற்ற ஐரோப்பிய நாடுகளும் பொன் நாணயத்திட்டத்தைப் பின்பற்றின. முதன் முதலாக ஜெர்மனி 1871-இல் வெள்ளியைக் கைவிட்டுத் தங்க நாணய முறையை ஏற்படுத்தியது. 1873-க்குப் பின் வெள்ளியைச் சட்டப்பூர்வமான நாணயமாக ஜெர்மனியர்கள் பயன்படுத்தவில்லை. அது தங்கத்துக்குத் துணையாகவே புழக்கத்திலிருந்தது. நார்வே, ஸ்வீடன், டென்மார்க் முதலிய நாடுகளும் இரட்டை உலோக நாணய முறையைக் கைவிட்டுப் பொன் நாணயத் திட்டத்தைப் பின் பற்றின. ஏராளமான வெள்ளி உலோகத்தை நாணயங்கள் அச்சிடுவதற்குப் பயன்படுத்தும் நாடுகள்கூட வெள்ளி நாணய வெளியீட்டைக் குறைத்தன. 1840-இலிருந்து 1870-வரை பொன் உற்பத்தி மிகுதியடைந்தது. 1870-இலிருந்து 1893 வரை அதன் உற்பத்தி ஒரே நிலையில் இருந்தது. ஆனால், வெள்ளி உற்பத்தி 1870-இலிருந்து 1893-க்குள் பத்து மடங்கு உயர்ந்தது. வெள்ளி நாணயத்தின் பயனைப் பலநாடுகள் கைவிட்டதாலும், அந்த உலோகத்தின் உற்பத்தி அதிகரித்ததாலும், அதன் விலை படிப்படியாகக் குறைந்துகொண்டே வந்தது. உலக நாடுகள் பொன்னை மிகுதியான அளவில் பயன்படுத்தியதால் அதன் விலை உயர்ந்தது. மற்ற நாடுகளில் பயன் இழந்த உலோகம் இந்தியாவை நோக்கி வந்தது. நமது வெள்ளி இறக்குமதி பெருகியது. இறக்குமதியான வெள்ளியை இந்தியா நாணய வெளியீட்டுக்குப் பயன்படுத்தியதால், நாட்டில் செலாவணிப் பெருக்கம் ஏற்பட்டது. பவுன்-ரூபாய் மதிப்பும் மாறியது.

இந்தியா மட்டுமன்றி வெள்ளியைப் பயன்படுத்தும் மற்ற நாடுகளும் பல தொல்லைகளுக்கு இலக்காயின. ரூபாயின் மதிப்பு நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வந்தது. வர்த்தகம் நன்கு நடைபெற வேண்டுமென்றால் நாணயத்தின் மதிப்பு மாறாமல் ஒரே நிலையில் இருத்தல் வேண்டும். செலாவணியின புறமதிப்பு மாறிக் கொண்டே இருந்தால் அயல்நாட்டு வர்த்தகம் சூதாட்டம் போல் மாறிவிடும். இறக்குமதிக்காக நாம் முன்பைவிட அதிகமாகச் செலவு செய்ய வேண்டியதாயிற்று. ரூபாயின் மதிப்புக் குறைந்ததால் நாம் அதிகமான ரூபாயைக் கொடுத்துக் குறைந்த அளவு பவுனுக்குச் சமமான பொருளை இங்கிலாந்திலிருந்து அடைய வேண்டியதாயிற்று. ரூபாயின் மதிப்புக் குறைந்ததால், இந்தியாவுக்குப் பல தீமைகள் விளைந்தன. ஆண்டுதோறும் இந்திய அரசாங்கம் இங்கிலாந்திற்குக் கீழ்க்கண்டவற்றிற்காகப் பணம் செலுத்த வேண்டியிருந்தது. செலுத்தவேண்டிய தொகையின் மதிப்பு மிகுதியடைந்தது.

(1) இந்தியா பெற்ற கடனுக்கு வட்டி கொடுத்தல்.

(2) ஆங்கிலேய இராணுவத்தை இந்தியாவில் வைத்துக் கொள்வதால் ஏற்படும் செலவுகள்.

(3) இந்திய நிருவாகத்திலிருந்து ஓய்வு பெற்ற அரசாங்க அலுவலர்களுக்குக் கொடுக்கவேண்டிய தொகைகள்.

(4) இந்திய நிருவாகத்துக்காகச் செய்யும் செலவுகள்.

(5) இங்கிலாந்திலிருந்து வாங்கும் பொருள்களுக்காகக் கொடுக்கவேண்டிய தொகைகள். ரூபாயின் மதிப்புக் குறைந்ததால் நமது செலவுகள் மிகுதியடைந்தன.

இந்திய அரசாங்கத்தின் செலவுகள் அதிகரித்தன. ஆனால், வருமானம் போதிய அளவு பெருகவில்லை. அரசினர் எவ்வளவு சிக்கனமாகச் செலவு செய்தபோதிலும், நிலைமையைச் சமாளிக்க முடியவில்லை. வருவாயைப் பெருக்கிக் கொள்ளப் புதிய வரிகளை விதிக்க வேண்டியதாயிற்று. இந்தியப் பொருளாதார முன்னேற்றத்திற்கு மூலதனம் வேண்டும். ஏழை நாடாகிய நமது நாட்டில் போதிய அளவு மூலதனம் கிடைக்கவில்லை. ரூபாயின் மதிப்பு அடிக்கடிக் குறைந்ததால் அன்னிய நாட்டினர் நம் நாட்டில் முதலீடு செய்ய விரும்பவில்லை. இந்தியாவில் பணியாற்றும் ஆங்கிலேயர்கள் தாய் நாட்டுக்குப் பணம் அனுப்பும்பொழுது அதிக ரூபாயைச் செலவு செய்ய வேண்டியதாயிற்று. ஆனால், செலாவணியின் மதிப்புக் குறைந்ததால் சில நன்மைகளும் ஏற்பட்டன. இந்தியாவில் தொழிலும் உள்நாட்டு வர்த்தகமும் நல்ல வளர்ச்சிபெற்றன. இங்கிலாந்து வர்த்தகத் தடைகளை நீக்கியதால் நமது அன்னிய நாட்டு வர்த்தகம் பெருகிற்று. நம் நாட்டுத் தொழில்களும் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்தன. முக்கியமாகப் பருத்தி ஆலைத் தொழிலும், சணல் தொழிலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அடைந்தன. இந்திய விவசாயமும் ஓரளவு பயன் அடைந்தது. முன்பெல்லாம் இந்திய விவசாயி தன் தேவைக்கு வேண்டிய அளவே உற்பத்தி செய்வான். ஆனால், இப்பொழுது ஓரளவு இலாப நோக்குடனும், பொருள் ஈட்டலுக்காகவும், உற்பத்தி செய்ய ஆரம்பித்து விட்டான். விவசாயம் நல்ல வளர்ச்சி பெற்றது.

1873-இலிருந்து இங்கிலாந்தில் வேலைவாய்ப்புக்களும் தொழில் உற்பத்தியும் குறைய ஆரம்பித்தன. ஆனால், இந்தியாவில் தொழிலுற்பத்தி பெருகியது. உற்பத்தி பெருகியதோடல்லாமல் தொழில் முன்னேற்றமும் ஏற்பட்டது. 1870-க்குமுன் இங்கிலாந்து உற்பத்தி செய்யும் பொருள்களை இந்தியா உற்பத்தி செய்யவில்லை.

ஆனால், 1870-க்குப் பின் பருத்தி, சணல் போன்ற பொருள்களை நம் நாடு கணிசமான அளவில் உற்பத்தி செய்யத் தொடங்கிற்று. ரூபாயின் மதிப்புக் குறைந்ததால்தான் நமது தொழில் முன்னேறிய தென்று பலர் கருதினர். இந்தியத் தொழில் முன்னேற்றத்திற்கு ரூபாயின் மதிப்புக் குறைந்ததுதான் காரணமா அல்லது வேறு காரணங்கள் உண்டா என்பதைப் பற்றி அக்காலத்தில் மக்களிடம் கருத்து வேற்றுமை இருந்தது. ரூபாய்-பவுன் வீதம் மாறியதால் இங்கிலாந்தின் உற்பத்தியும் ஏற்றுமதியும் குறைந்தனவென்றும், ஆங்கிலேய உற்பத்தியாளர்கள் கடுமையான போட்டியைச் சமாளிக்க வேண்டியதாயிற்றென்றும் பலர் கருதினர்.

1873-ஆம் ஆண்டிலிருந்து வெள்ளியின் விலை படிப்படியாக இறங்கிக்கொண்டே சென்றது. 1871-இல் ஓர் அவுன்சு வெள்ளி ஆங்கிலேய நாணயத்தில் 60½ பென்சு விலையாக இருந்தது. 1892-93-இல் அதன் விலை 39 பென்சாகக் குறைந்தது. ரூபாய்-பவுன் வீத மதிப்பும் வெள்ளி மதிப்பைத் தொடர்ந்து குறைந்தது. 1 ஷில்லிங் 11⅛ பென்சுக்குச் சமமாக இருந்த ரூபாயின் மதிப்பு 1 ஷில்லிங் 3 பென்சுக்கு இறங்கி விட்டது.

செலாவணிப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு இரு வழிகள் இருந்தன. உலக நாடுகள் எல்லாம் நாணய வெளியீட்டுக்கு ஒரே உலோகத்தைப் பயன்படுத்தியிருக்கவேண்டும், அல்லது இரு உலோகங்களுக்கும் இடையே ஒரு வீத மதிப்பை நிலைநாட்டி அது மாருமல் இருக்க ஏற்பாடு செய்திருக்கவேண்டும். ரூபாய்-பவுன் மதிப்பு மாறத் தொடங்குவதற்கு முன்பே பலர் பொன் நாணயத்துக்காக வாதாடினர். சர். ஆர். டெம்பிள் (Sir R. Temple) என்பவர் நிதி அமைச்சராகப் பதவி ஏற்ற பிறகு, 1872-இல் இந்தியாவில் தங்க நாணயம் அச்சிடுவதற்கு ஒரு புதிய திட்டத்தை வகுத்தார். ஆங்கில நாட்டுச் சாவரின் (Sovereign) நாணயத்தைப் பயன் படுத்தாமல் 'மோகர்' நாணயத்தை இந்தியாவில் வெளியிடலாம் என்பது அவர் கருத்து. வெள்ளி விலை இறங்குவதற்கு முன்பே இவர் தம் திட்டத்தை அரசினர் பரிசீலனைக்கு அனுப்பிவிட்டார். ஆனால், அரசாங்கம் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. தங்கசாலைத் தலைவராகப் பணியாற்றிய ஸ்மித் என்பவர் நிருவகிக்கப்படும் செலாவணி முறையை (Managed currency) சிபாரிசு செய்தார். இந்த முறைப்படி ரூபாய்க்கு அரசாங்கம் கொடுக்கும் மதிப்பு அதன் உலோக மதிப்பை விட அதிகம் இருக்கலாம் என்றார். இந்த முறையில் இரட்டை நாணய முறையில் உள்ள குறைகள் நீங்கும். நிருவகிக்கப்படும் நாணய முறையாக இருந்தபோதிலும் இதற்குத் தானாக இயங்கும் சக்தியைக் (automatiaty) கொடுக்கலாமென்பது ஸ்மித்

அவர்களின் கருத்து. செலாவணித் தாள்களுக்குக் காப்பு நிதியாகப் பொன்னைப் பயன்படுத்திக் கொள்ளலாமென்று இவர் கருதினர்.

செலாவணிப் பிரச்சினைக்கு ஒரு முடிவாக இந்தியா பொன் நாணய முறையைப் பின்பற்றியிருக்கலாம். ஆனால், அப்படிச் செய்திருந்தால் பொன்னின் தேவையும், அதன் விலையும் மேலும் உயர்ந்திருக்கும். இந்த நிலையை இங்கிலாந்து அரசாங்கம் தவிர்க்க வேண்டுமென்று கருதியது. ஆகையால், தங்கத்தின் தேவையை அதிகரிக்காமல், இந்தியா புதியதொரு செலாவணி முறையை உருவாக்க வேண்டிய நிலையில் இருந்தது. வங்காள வாணிபச் சங்கம் வெள்ளி ரூபாய் அச்சிடலை அரசினர் தடை செய்யவேண்டுமென்று முறையிட்டது. இப்படிச் செய்தால் பொருள்களின் விலை உயர்ந்து விடுமென்று அஞ்சி, அரசினர் இந்த வேண்டுகோளுக்கிணங்கவில்லை.

தானாக இயங்கும் செலாவணியே சிறந்ததென்று அக்காலத்தில் கருதினர். இக்காலத்தில் எல்லா நாடுகளிலும் நிருவகிக்கப்படும் செலாவணி முறையையே பின்பற்றுகின்றனர். ஆனால், இந்த முறை நெகிழ்ச்சியுடையதல்லவென்றும், பல குறைபாடுகள் உள்ளதென்றும் பேஜ்காட் (Bagchot) என்பவர் கருதினர். இந்தியச் செலாவணிப் பிரச்சினையைத் தீர்ப்பதற்காக அரசாங்கம் 1878-இல் ஒரு திட்டத்தை வகுத்தது. நிருவகிக்கப்படும் செலாவணி முறையின் அடிப்படையில் இந்தத் திட்டம் அமைந்திருந்தது. அரசினர் ரூபாய்க்குக் கொடுக்கும் மதிப்பு அதன் உண்மையான மதிப்பைவிட அதிகமாக இருக்கவேண்டுமென்று இத்திட்டத்தில் கண்டிருந்தது. இதன்படி வெள்ளி ரூபாயே இந்தியாவில் முக்கியமான நாணயமாக இருக்கவேண்டும். அதன் மதிப்பு இரண்டு ஷில்லிங்குக்குச் சமமாக இருக்கவேண்டும். நாணய அச்சுத் தீர்வை மூலம் ரூபாயின் மதிப்பை உயர்த்தலாம் என்று இத் திட்டத்தில் குறிப்பிட்டிருந்தது. பொன் நாணயங்களை அரசினர் செலாவணிக் காப்பு நிதியாகப் பயன்படுத்தலாம். வெள்ளி நாணயத்தைப் புழக்கத்தில் வைத்துக் கொண்டு ஒரு புதிய நாணயத் திட்டத்தை இந்தியாவில் புகுத்துவதே இத்திட்டத்தின் நோக்கமாகும். இத்திட்டம் பல ஆண்டுகளுக்குப் பிறகு நம் நாட்டில் உருவாகிய பொன் நாணய முறையை (Gold Exchange Standard) ஒத்திருந்தது. இத்திட்டத்தைப் பரிசீலனை செய்த குழுவினர் இதை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டனர். ரூபாய்-பவுன் வீதத்தில் ஏற்பட்ட மாறுதல் தற்காலிகமானதென்றும், நாளடைவில் நிலைமை தானாகவே மாறிவிடுமென்றும் வால்ட்டர் பேஜ்காட் என்பவர் கூறினர்.

இந்தியாவைப் போல் வெள்ளியைப் பயன்படுத்தும் அமெரிக்கா போன்ற நாடுகளும் தொல்லைகளுக்கு இலக்காயின. வெள்ளியின் விலை மேலும் தாழ்வடையாமல் இருப்பதற்காக 1878-இல் அமெரிக்கா ப்ளாண்டு ஆலிசன் சட்டத்தை (Bland Allisen Act) இயற்றியது. வெள்ளி உலோகத்தைப் பயன்படுத்தும் நாடு களின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக 1878-இல் பாரிசில் ஒரு மாநாட்டைக் கூட்டினர். 1881-இல் இரண்டாவது மாநாடு பாரிசிலும், 1892-இல் மூன்ருவது மாநாடு ப்ரஸ்ஸல்சிலும் கூடியது. வெள்ளியின் விலையை உயர்த்துவதற்குச் சிறந்த வழி இரட்டை உலோக நாணய முறையை அகில உலக ரீதியில் பின்பற்றுவதே யாகுமென்று சில நாடுகள் வாதாடின. ஆனல், இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற ஐரோப்பிய நாடுகள் இதை ஏற்றுக் கொள்ள வில்லை. இந்த நாடுகள் வெள்ளிக்கு எந்த விதச் சலுகையும் காட்ட மறுத்து விட்டனர். இங்கிலாந்தையும், பிரான்சையும் தவிர மற்ற நாடுகள் இரட்டை நாணய முறையில் அக்கறை கொள்ளவில்லை.

இங்கிலாந்து நாடு பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றிய தால் மற்றநாடுகளும் அதே திட்டத்தை விரும்பின. திரு. அம்பேத்கார் அவர்கள் கூறுவதுபோல் இங்கிலாந்து இரட்டை உலோக நாணய முறையைப் பின்பற்றியிருந்தால் மற்ற நாடுகளும் அதைத் தொடர்ந்து அந்த முறையை ஏற்றுக் கொண்டிருக்கும். ஆனல், ஐரோப்பிய நாடுகள் பொன்னை அகில உலக நாணயமாக ஏற்றுக் கொண்டார்கள். இந்திய இரட்டை நாணய முறையை அகில உலக ரீதியில் உலக நாடுகள் ஏற்றுக் கொள்ளுமென்று வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. உலக மாநாடுகளில் இந்தியாவின் வேண்டுகோளுக்கு எந்த நாடும் செவிசாய்க்கவில்லை. இந்தியா பொன்னை விரும்பியதென்றும் அதன் விலையை உயர்த்தி விடு மென்றும் மற்ற நாட்டினர் அஞ்சினர். இரட்டை உலோக நாணய முறை வெற்றி பெறுதென்று அஞ்சி, வெள்ளி உலோகத்தைப் பயன் படுத்தும் நாடுகள் மாநாடுகள் நடந்துகொண்டிருக்கும் காலத்தில் தங்களுக்கு வேண்டிய பொன்னை ஈட்டிக் கொண்டார்கள். அமெரிக்காவும் ப்ளாண்டு ஆலிசன் சட்டத்தை ரத்து செய்தது. தாழ்வடையும் வெள்ளியின் விலையை உயர்த்த முடியாதென்று அமெரிக்கா உணர்ந்தது. இரட்டை உலோக நாணய முறைக்குப் புத்துயிர் அளிக்க முடியாதென்பதை எல்லோரும் உணர்ந்தனர்.

## 2. மறைமுகப் பொன் நாணயத் திட்டம் (Gold Exchange Standard) உருவாதல்

1878-இல் இந்திய அரசாங்கம் வகுத்த திட்டத்தைப் போன்ற ஒரு திட்டத்தை ஜெனரல் ஸ்டராச்சி (General Strachey) என்பவர் உருவாக்கி அரசினர் பரிசீலனைக்குச் சமர்ப்பித்தார். அவர் திட்டம் பிறகு இந்தியாவில் தோன்றிய மறைமுகப் பொன் நாணய முறையை ஒத்திருந்தது. தடையற்ற முறையில் வெள்ளி நாணயங்களை அச்சிடும் பழக்கத்தை உடனடியாக நிறுத்தவேண்டுமென்பது ஸ்டராச்சி அவர்கள் கருத்து. பொன்னைக் கொடுத்து ரூபாய் நாணயங்களைப் பெறுவதற்கு வசதிவேண்டும்.

ரூபாயின் மதிப்புக் குறைந்துகொண்டே வந்ததால் இந்தியா இங்கிலாந்துக்கு ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய தொகை மிகுதியடைந்தது. இந்த நிலைமை இந்தியாவின் வரவு செலவுத் திட்டத்தைப் பாதித்தது. புதிய வரிகளை விதிக்காமல் நிலைமையைச் சமாளிக்க இயலவில்லை. இந்திய மக்களும், இந்தியாவில் பணியாற்றும் ஐரோப்பியர்களும் பல தொல்லைகளுக்கு இலக்காயினர். நமது நாடு அயல் நாடுகளிலிருந்து பெறும் மூலதனம் குறைந்தது. உலக நாடுகளின் மாநாடுகள் செலாவணிப் பிரச்சினைகளுக்கு நல்ல முடிவு காணும் என்ற நம்பிக்கையை இந்திய அரசாங்கம் இழந்த பின், ஹெர்ஷெல் (Herschell) ஒரு குழுவை நியமனம் செய்தனர். குழுவினர் இந்தியச் செலாவணிப் பிரச்சினைகளை நன்கு பரிசீலனை செய்து சிறந்த முடிவுகளை அரசாங்கத்திற்கு அனுப்பவேண்டும். கீழ்க்கண்ட பிரச்சினைகளைக் குழுவினர் ஆராய்ச்சிசெய்து தங்கள் சிபாரிசுகளைச் சமர்ப்பித்தனர்.

### வெள்ளித் தனி உலோக நாணய முறை

இந்த முறையைப் பின்பற்றியதால் பல இடையூறுகள் ஏற்பட்டன. ரூபாயின் மதிப்புக் குறைந்ததால் இந்திய அரசாங்கத்தின் செலவு அதிகரித்தது. கிபின் என்பவர் மேற்கொண்டு புதிய வரிகளை விதிக்காமல் தடையற்ற வெள்ளி நாணயங்கள் அச்சிடுவதை நீட்டிக்கமுடியாது என்று கூறினுர். மேலும், உலக நாடுகள் பொன்னையே பெரும்பாலும் பயன்படுத்தின. இந்தியா வெள்ளித் தனி உலோக நாணய முறையை நீட்டித்தால் விலைவாசிகள் உயரும். இதனுல், பல தீமைகள் விளையும். ஆகையால், இந்த முறையை உடனடியாகக் கைவிடவேண்டுமென்று ஹெர்ஷல் குழுவினர் கருதினர்.

### அயல் நாட்டு வர்த்தகம்

வர்த்தகத் துறையிலிருப்போர் ரூபாயின் மதிப்பு மாறியதால் இந்தியாவின் வர்த்தகம், குறிப்பாக நமது ஏற்றுமதி மிகுதியடைந்ததென்றும், அதன் மூலம் இந்தியாவுக்கு நன்மையே விளைந்ததென்றும் கூறினர். ஒரு நாட்டின் செலாவணி மதிப்பிழந்தால் அந்த நாட்டின் ஏற்றுமதி அதிகரிப்பது இயல்பு. ஆனுல், இது ஒரு குறுகிய காலத்தில் ஏற்படும் விளைவாகும். நமது செலாவணியின் புற மதிப்புக் குறைந்ததால் அன்னிய நாட்டினர் நமது பொருள்களைக் குறைந்த விலையில் வாங்க முடிந்தது. இதன் பலனுக நமது ஏற்றுமதி மிகுதியடைந்தது. ஆனுல், சிறிது காலம் சென்றபின் ஏற்றுமதிப் பொருள்களின் அடக்கச் செலவு அதிகரித்துவிடும். அவற்றின் விலையும் உயர்ந்துவிடும். ஏற்றுமதியின் அளவு படிப்படியாகக் குறையும். செலாவணியின் மதிப்புக் குறைவதால் வர்த்தகத்துக்கு ஏற்படும் தூண்டுதல் தற்காலிகமானதே. எனவே, ரூபாயின் மதிப்பு மேலும் தாழ்வடையாமல் இருக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

ஹெர்ஷல் குழுவினர் கீழ்க்கண்ட சிபாரிசுகளைச் செய்தனர். வெள்ளி நாணயங்கள் வரையற்ற சட்டப்பூர்வமான (Unlimited legal tender) செலாவணியாக இருத்தல் வேண்டும். பொன் நாணயத் திட்டம் இந்தியாவில் வளரும்வரை நாம் ஒரு நொண்டிச் செலாவணி முறையைப் (limping standard) பின்பற்றலாம். தடையற்ற முறையில் வெள்ளி ரூபாய்களை வெளியிடக் கூடாது. ஆனுல், நாட்டு வர்த்தகத்திற்கு வேண்டிய அளவு ரூபாயை அச்சிடலாம். ரூபாய்-பவுன் வீதத்தை ரூ. 1 = 1 ஷி. 4 பெ. என்று நிலைநாட்ட வேண்டுமென்று குழுவினர் முடிவு செய்தனர். அரசினர் குழுவின் சிபாரிசுகளை ஏற்றுக் கொண்டு 1893-இல் ஒரு சட்டத்தை இயற்றி

னர். அரசினர் விடுத்த அறிக்கைப்படி நாணயச்சாலை தங்க நாணயங்களையும், உலோகத்தையும் மக்களிடம் வாங்கிக் கொண்டு, ஒரு ரூபாய்க்கு 1ஷி. 4 பெ. என்ற வீதத்தில் ரூபாய் நாணயங்களைக் கொடுக்கலாம். மக்கள் அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டிய தொகைக்காகப் பொன் நாணயங்களைக் கொடுக்கலாம். தங்க நாணயங்களை மக்களிடம் வாங்கிக் கொண்டு செலாவணித் தாள்களை அவர்களுக்கு வழங்கலாம்.

ஹெர்ஷல் குழுவினரது சிபாரிசுகளை ஏற்றுக் கொண்டால், இந்தியாவின் வர்த்தகமும் அரசினர் வருமானமும் குறையுமென்று சிலர் கருதினர். ஆனால், இந்த விளைவுகள் ஏற்படவில்லை. சில ஆண்டுகள் செலாவணி முறை நன்கு இயங்கியது. அரசினரிடம் வேண்டிய அளவு ரூபாய் நாணயங்கள் இருந்தன. ஆனால், இந்த நிலைமை சில ஆண்டுகளுக்குமேல் நீடிக்கவில்லை. நாட்டில் நாணயப் பற்றுக்குறை ஏற்பட்டதால், பண மார்க்கட்டில் (Money Market) தள்ளுபடி வீதம் (Discount Rate) உயர்ந்தது. 1893-ஆம் ஆண்டுச் சட்டம் பொன் நாணயத்தைச் சட்டப்பூர்வமானதாக ஏற்றுக் கொள்ளாததால் அரசாங்கம் தங்கத்தைப் பயன்படுத்த முடியவில்லை. 1898-இல் ஒரு புதிய சட்டத்தை இயற்றினர். இதன்படி இங்கிலாந்தில் இந்தியா மந்திரி பெறும் பொன்னைக் காப்பு நிதியாகக் கொண்டு இந்தியாவில் செலாவணித் தாளை வெளியிடலாம். மேலும் ஹெர்ஷல் குழுவினர் ரூபாய்-பவுன் வீதத்தை ரூ. 1 = 1 ஷி. 4. பெ. என்று முடிவு செய்திருந்தனர். ஆனால், ரூபாயின் மதிப்பு அதிகரித்துக்கொண்டே சென்றது.

அரசாங்கம் நிலைமையை எளிய முறையில் சமாளித்திருக்கலாம். 2662-ஆவது அறிக்கைப்படி பொன்னை ஏற்றுக்கொண்டு அரசாங்கம் மக்களுக்கு ரூபாயை வழங்கலாம். இந்த அறிக்கையைப் பயன்படுத்தி, அரசாங்கம் நாணயப் பற்றுக்குறையைத் தீர்திருக்கலாம். மீண்டும் எழுந்த செலாவணிப் பிரச்சினைகளைத் தீர்க்க ஹென்றி பௌலர் (Henry Fowler) என்பவர் தலைமையில் அரசினர் ஒரு குழுவை நியமனம் செய்தனர்.

ஏ. எம். லிண்ட்சே என்பவர் ஒரு புதிய செலாவணித் திட்டத்தைத் தயார் செய்து பௌலர் குழுவின் பரிசீலனைக்கு அளித்தார். இதன்படி அரசினர் இங்கிலாந்தில் 10,000,000 பவுனை நீண்டகாலக் கடனாகப் பெற்று, அதைப் பொன் நாணயத் திட்டக் காப்பு நிதியாக வைத்துக் கொள்ளவேண்டும். ஹெர்ஷல் குழுவினர் முடிவு செய்தபடி ரூபாய்-பவுன் மதிப்பு ரூ. 1 = 1 ஷி. 4 பெ. என்ற நிலையில் மாறாமல் இருக்கவேண்டும். இந்த வீத மதிப்பைக்

காப்பாற்றுவதற்கு அரசினர் லண்டனில் 1 ஷி. $4\frac{1}{16}$ பெ. கொடுப்போருக்கு இந்தியாவில் ஒரு ரூபாய் கொடுக்கவேண்டும். இதேபோல் இந்தியாவில் ரூபாயைக் கொடுத்து இங்கிலாந்தில் பவுனைப் பெற வசதிகள் செய்யவேண்டும். ரூபாய்-பவுன் வீத மதிப்பைக் காப்பாற்றுவதற்காக இரு நாணயங்களையும் ஒரு குறிப்பிட்ட விலையில் விற்பனை செய்வதால் அரசாங்கம் மிகுதியான ரூபாய்களையோ பவுன்களையோ பெறலாம். மக்கள் ரூபாயையே அதிகமாகப் பெற்றால் அரசாங்கத்தினரிடம் இருக்கும் பவுன் நிதி (Reserve) அதிகரிக்கும்; ரூபாய் நிதி குறையும். இவ்வமயங்களில் பவுன் நிதியைப் பயன்படுத்தி வெள்ளி உலோகம் வாங்கி, அதை இந்தியாவுக்கு அனுப்பி நாணயங்கள் அச்சிடலாம். இங்கிலாந்திலுள்ள பவுன் நிதி குறைந்தால், ரூபாய் நிதியைக் கொண்டு இந்தியாவில் தங்கம் வாங்கி இங்கிலாந்திற்கு அனுப்பலாம். அங்கு இதை நாணயங்களாக அச்சிடலாம்.

சர். ஜே. வெஸ்ட்லாந்து (Sir. J. Westland) என்பவர் லிண்ட்சே முறை அரசினர் கண்காணிப்புக்கு உட்பட்டதல்லவென்று அதைக் குறைகூறினர். இயற்கைக்கு மாறான முறை என்று சிலர் கருதினர். லிண்ட்சே திட்டம் எளியதாகவும், தானாக இயங்கும் சக்தியைக் கொண்டும் இருந்தபோதிலும் சிலர் அதைப் புரிந்து கொள்ளாமல் நிருவகிக்கப்படும் முறை (Managed system) என்று அதைக் குறைகூறினர். லிண்ட்சே முறையைப் பரிசீலனை செய்த பௌலர் குழுவினர் அதை இந்தியாவுக்கு உகந்ததல்லவென்று நிராகரித்து விட்டனர். கீழ்க்கண்டவை பௌலர் குழுவின் முடிவுகள் :—ரூபாய்-பவுன் வீத மதிப்பு ரூ. 1 = 1 ஷி. 4. பெ. என்றிருக்கவேண்டும். ஏனெனில், இந்தியாவில் விலைவாசிகள் இந்த வீத மதிப்புக்குப் பொருத்தமாகிவிட்டது. ஆனால், சிலர் கடந்த பத்து மாதங்களில்தான் இந்த மதிப்பு நிலவியதென்றும், மேலும் இந்திய அரசாங்கம் செலாவணி வெளியீட்டைக் கட்டுப்பாடு செய்ததால் இந்த வீத மதிப்பு நிலவியதென்றும் கூறினர். இதை நிரந்தரமான மதிப்பென்று கொள்ளுதல் தவறு என்பது சிலர் கருத்தாகும். சிலர் இந்த வீத மதிப்பு விவசாயிகளுக்குத் தீமை விளைவிக்கும் என்று கூறினர். இது வர்த்தகத்துக்கு உகந்த மதிப்பல்லவென்றும் சிலர் வாதாடினர். ஆனால், இக்கூற்றுத் தவறானது என்றும், கடந்த பத்து மாதங்களில் ரூ. 1 = 1 ஷி. 4 பெ. என்ற வீதம் நிலவிய காலத்தில் இந்தியாவின் வர்த்தகம் நன்கு வளர்ந்ததென்று பௌலர் குழுவினர் எடுத்துக் காட்டினர்.

பௌலர் குழுவினர் சிபாரிசு செய்த முறையை இரட்டை நாணய முறை, என்றோ தனி உலோக நாணய முறை என்றோ

அழைக்கமுடியாது. நொண்டிச் செலாவணி முறை (limping standard) என்றழைக்கப்படும் இம்முறை பேராசிரியர் மக்ளியட் அவர்கள் சிபாரிசுகளை ஒத்திருந்தது. வெள்ளி நாணயங்களைச் சட்டப்பூர்வமான நாணயங்களாகப் புழக்கத்தில் வைத்துக்கொண்டு, பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றுவதே பௌலர் குழுவின ரது திட்டத்தின் நோக்கமாகும். பிரான்சும் அமெரிக்காவும் இத் திட்டத்தைப் பின்பற்றின. இந்தியாவில் பொன் நாணயத் திட்டம் நாளடைவில் வளரவேண்டுமென்பது பௌலர் குழுவின் முடிவாகும். முழு வளர்ச்சி பெற்றபின் தடையற்ற முறையில் பொன்னை ஏற்று மதியோ இறக்குமதியோ செய்யலாம். இப்படிச் செய்தாலன்றி ரூபாய்-பவுன் வீத மதிப்பு மாருமல் ஒரே நிலையில் இருக்கா தென்று பௌலர் குழுவினர் கருதினர். எனவே, இவர்கள் லிண்ட்சே முறையைப் புறக்கணித்ததில் வியப்பொன்றும் இல்லை. தங்க நாணயங்களை அரசாங்கம் வெளியிடவேண்டுமென்றும், ஆனல், வெள்ளி நாணயங்களும் புழக்கத்தில் இருக்கவேண்டுமென் றும் பௌலர் குழுவினர் கூறினர். வெள்ளி நாணயங்கள் வரை யற்ற சட்டப்பூர்வமான நாணயங்களாக இருத்தல் வேண்டும். அர சாங்கம் மக்களிடம் பொன்னை வாங்கிக் கொண்டு அதற்குப் பதி லாக ரூபாய் கொடுக்கலாம். ஆனல், ரூபாய்க்குப் பதிலாகப் பொன் னைக் கொடுக்கக் கூடாது. பொன் நாணயங்களாகிய சாவரின் களையும், அரைச் சாவரின்களையும் இந்திய நாணயச்சாலை வெளியிட வேண்டும். நாட்டின் தேவைக்கு வேண்டிய அளவு பொன் நாண யங்கள் பெருகும்வரை தடையற்ற முறையில் ரூபாய் நாணயங்களை அச்சிடல் கூடாது. பொன் நாணயத்தின் புழக்கம் அதிகரிக்க வேண்டுமென்பதே குழுவின் நோக்கமாகும்.

இங்கிலாந்து பின்பற்றிய பொன் நாணயத் திட்டம் குறை பாடற்ற செம்மையான திட்டமாகையால், அதை இந்தியாவும் பின் பற்ற வேண்டுமென்பது பேராசிரியர் மக்ளியட் கருத்தாகும். ஆனல், முழு வளர்ச்சி பெற்ற பொன் நாணயத் திட்டத்தை உட னடியாக இந்தியாவில் புகுத்துவது கடினம். ஆகையால், பொன் நாணய முறை நம் நாட்டில் படிப்படியாக நாளடைவில் வளர்ச்சி யடையவேண்டும். எனவே, உடனடியாக வெள்ளி நாணயங்களின் சட்டப்பூர்வமான தன்மையைக் கட்டுப்பாடு செய்யக்கூடாது. எனவே, நொண்டிச் செலாவணி முறையைத் தற்காலிகமாகவே குழுவினர் சிபாரிசு செய்தனர். பொன் நாணயத் திட்டம் நல்ல வளர்ச்சி பெற்றபின் வெள்ளி சாதாரண அடையாள நாணயங்களாகி விடும். ஆங்கிலேய நாணயங்களாகிய சாவரின்களை இந்தியாவில் அச்சிட வேண்டுமென்று குழுவினர் கூறினர். ரூபாய் வெளியீட்டில்

கிடைத்த இலாபத்தைக் கொண்டு ஒரு நிதி யமைத்தனர். இதை ரூபாய்-பவுன் வீதத்தை நிலைநாட்டப் பயன்படுத்தினர்.

குழுவினர் சிபாரிசு செய்த நொண்டிச் செலாவணித் திட்டம் பிரான்சு தேசத்தின் திட்டத்தை ஒத்திருந்தது. ஆனால், இத்திட்டம் அங்கு வெற்றிகரமாக இயங்கியதற்குச் சில காரணங்கள் இருந்தன. அந்த நாட்டில் பொன் மிகுதியான அளவு புழக்கத்தில் இருந்தது. வெள்ளி நாணயங்கள் அதிகமாகப் புழக்கத்தில் இல்லை. பிரான்சு வேண்டிய அளவு தங்கத்தை வைத்துக் கொண்டிருந்தது. வெள்ளி நாணய வெளியீட்டைப் பிரான்சு நிறுத்திவிட்டது. பிரான்சு தேசத்தில் இருந்த நிலைமை நம் நாட்டில் இல்லை. பொன் நாணயத் திட்டத்தை இந்தியாவில் புகுத்தவேண்டுமென்பது குழுவின் கருத்து. ஆனால், அவர்கள் செய்த சிபாரிசுகளுக்கும் இந்த நோக்கத்திற்கும் தொடர்பு எதுவும் இல்லை. அவர்கள் சிபாரிசுகள் தெளிவாக வும் நாட்டில் நிலவிய நிலைமைக்குப் பொருத்தமாகவும் அமைய வில்லை.

அரசாங்கம் பௌலர் குழுவின் சிபாரிசுகளை ஏற்றுக் கொண்டு 1899-இல் ஒரு சட்டம் இயற்றினர். இதன்படி ஆங்கிலேய நாணயங் களாகிய சாவரின்களையும், அரைச் சாவரின்களையும் சட்டப்பூர்வ நாணயங்களாக்கினர். பொன் நாணயங்களை அச்சிடுவதற்காக நமது அரசாங்கம் ஒரு புதிய நாணயச்சாலையை நம் நாட்டில் நிறுவ முயற்சி செய்தனர். ஆனால் இம் முயற்சி பயனளிக்கவில்லை. வெள்ளி நாணய வெளியீட்டில் கிடைக்கும் இலாபத்தைக் கொண்டு ஒரு பொன் நாணயத் திட்ட நிதியை (Gold Standard Reserve) நிறுவினர்.

20-ஆம் நூற்றாண்டில் மறைமுகப் பொன் திட்டம் (Gold Exchange Standard) இந்தியாவில் வளர்ச்சியடைந்தது. இந்தியா மட்டுமின்றி பல உலக நாடுகள் பொன் நாணயத் திட்டத்தைப் பின் பற்ற முயற்சி செய்தன. போதிய அளவு பொன் கிடைக்காததால் இத் திட்டத்தைப் பின்பற்றின. இந்தியா, கிரீஸ் (Greece), பிலிப்பைன்சு முதலிய நாடுகள் வெள்ளித் தனி உலோக நாணய முறையைப் புறக்கணித்து இந்த முறையைப் பின்பற்றின. இங்கிலாந்து 1914-க்கு முன் பின்பற்றிய பொன் நாணயத் திட்டத்தையே ஒரு காலத்தில் செம் மையான குறைகளற்ற செலாவணித் திட்டம் என்று கருதினர். அத்திட்டத்தைப் பின்பற்றும் நாட்டில் பொன்னுக்கும், நாணயத் திற்கும் இடையே அரசாங்கம் ஒரு வீத மதிப்பை ஏற்படுத்தி அதை நிலைநாட்டும். ஆனால், மறைமுகப் பொன் திட்டத்தைப் பின்பற்றும்

நாட்டில் பொன்னுக்கும் செலாவணிக்கும் நேரடியான தொடர்பை ஏற்படுத்தாமல் மறைமுகத் தொடர்பை ஏற்படுத்துவது வழக்கம். பவுனுக்கும் தங்கத்திற்கும் இடையே ஒரு மதிப்பை நிலைநாட்டினர். இந்திய ரூபாய்க்கும் பவுனுக்குமிடையே ஒரு வீத மதிப்பை ஏற்படுத்தியதால் நாம் இந்தியச் செலாவணிக்கும் தங்கத்திற்கும் இடையே ஒரு மறைமுகத் தொடர்பை ஏற்படுத்தினோம். மறைமுகப் பொன் திட்டத்தைப் பின்பற்றும் நாட்டில் பொன் நாணயங்கள் இரா. இந்திய ரூபாயைப் பவுன் மூலம் தங்கத்துடன் இணைத்தார்கள். அதாவது, ரூபாய்-பவுன் வீத மதிப்பை ஏற்படுத்தி அதன் மூலம் ரூபாய்-தங்க வீத மதிப்பை நிலை நாட்டினர். இந்த வீத மதிப்பைக் காப்பாற்ற ஒரு பொன் நிதியை ஏற்படுத்தினார்கள்.

பிலிப்பைன்சு, மெக்சிகோ முதலிய நாடுகள் முழு வளர்ச்சியடைந்த மறைமுகப் பொன் திட்டத்தைப் பின்பற்றின. இந்தியா படிப்படியாகப் பல சோதனைகள் செய்து இத்திட்டத்தை வளர்த்தது. 1900-இல் பொன் நாணயத் திட்டக் காப்பு நிதியை நிறுவினர். சாவரின் நாணயங்களைப் புழக்கத்தில் கொண்டுவர முயற்சி செய்தனர். ஆனால், இந்த முயற்சி பயனளிக்கவில்லை. மக்கள் ரூபாயையே பயன்படுத்தியதால் 1900-க்குப் பிறகு அதிகமான அளவு இதை வெளியிட வேண்டியதாயிற்று. தங்க நாணயங்களை மீண்டும் புழக்கத்தில் கொண்டு வர அரசினர் முயற்சி செய்யவில்லை. இந்தியர்கள் பொன் நாணயங்களை விரும்பவில்லை என்று அரசினர் முடிவு செய்தனர். இந்தியாவில் நாணயச் சாலையை ஏற்படுத்துவதற்கு வகுத்த திட்டத்தை 1902-இல் அரசாங்கம் கைவிட்டது. ரூபாய்-பவுன் வீத மதிப்பை நிலைநாட்டுவதற்குக் கவுன்சில் உண்டியல்களையும் எதிர் உண்டியல்களையும் விற்பனை செய்தனர். 1907-இல் தங்க நாணயத் திட்ட நிதியின் கிளையை இந்தியாவில் ஆரம்பித்தனர்.

லிண்ட்சே திட்டத்தைப் பௌலர் குழு ஏற்கவில்லை. ஆனால், 1900-இலிருந்து அரசினர் எடுத்த நடவடிக்கைகள் பொன் மறைமுகத் திட்டத்தை வளர்த்தன. அதாவது, லிண்ட்சே முறையின் முக்கியமான அம்சங்களை அரசாங்கம் செயற்படுத்தியது. இந்த முறையின் முக்கியமான பகுதியாகிய கவுன்சில் உண்டியல் முறை எப்படி இயங்கியதென்பதை இங்குக் காண்போம். இந்தியர்களுக்குப் பணம் செலுத்தவேண்டிய ஆங்கிலேயர்கள் பவுன் நாணயங்களை ரூபாயாக மாற்றி இந்தியர்களுக்குப் பணம் கொடுக்கவேண்டும். இந்தியாவில் பணம் செலுத்த விரும்பும் ஆங்கிலேயர்கள் இந்தியா மந்திரி காரியாலயத்தில் பவுன் நாணயத்தைக் கொடுத்துக் கவுன்சில் உண்டியல்களை வாங்கி இந்தியாவுக்கு அனுப்பலாம். இந்தியா

வில் இந்தக் கவுன்சில் உண்டியல்களை அரசாங்கம் பெற்றுக் கொண்டு ரூபாய் நாணயங்களைக் கொடுத்தனர். கவுன்சில் உண்டியல்கள் மூலமாகப் பணம் அனுப்புவதற்குச் சற்றுக் காலதாமதம் ஆகலாம். உடனடியாகப் பணம் அனுப்ப வேண்டுமென்று விரும்புவோர் 'தந்தி வழி மாற்று' (Telegraphic transfer) மூலமாகச் செலுத்தலாம். இங்கிலாந்தில் ரூ. 1 = 1 ஷி. $4\frac{1}{8}$ பெ. என்ற வீதத்தில் கவுன்சில் உண்டியல்களை விற்பனை செய்தனர். எதிர் உண்டியல்கள் மூலம் (Reverse councils) இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்குப் பணம் செலுத்த வசதி செய்தனர். இந்தியாவில் ரூபாய் நாணயங்களைச் செலுத்தி, எதிர் உண்டியல்களைப் பெற்று இங்கிலாந்துக்கு அனுப்பலாம். இந்த எதிர் உண்டியல்களை இந்தியா மந்திரி காரியாலயத்தில் பவுன் ஸ்டெர்லிங்காக மாற்றிக் கொள்ளலாம். ரூ. 1 = $3\frac{29}{32}$ பெ. என்ற வீதத்தில் எதிர் உண்டியல்களை விற்பனை செய்தனர். இந்தக் கவுன்சில் உண்டியல் முறை பவுன்-ரூபாய் வீதத்தை நிலைநாட்டியது. அதாவது, ரூபாயின் மதிப்பு மாறலாம். ஆனால், 1 ஷி. $3\frac{29}{32}$ பெ.—1 ஷி. $4\frac{1}{8}$ பெ. என்ற குறுகிய எல்லைகட்குள்ளே மாறலாம். இந்த எல்லைகளை மீற முடியாது.

இந்தியாவில் எப்படிப் பொன் மறைமுகத் திட்டம் வளர்ச்சியடைந்தது என்று பார்த்தோம். இந்த முறை எளிமையானதோடல்லாமல் சிக்கனமாகவும் இருந்தது. போதிய தங்கம் இல்லாத போதிலும் இம்முறையை ஒரு நாடு பின்பற்றலாம். மேலும், பொன் நாணயத் திட்டத்தில் இருந்த எல்லா நலன்களும் இத்திட்டத்திலும் இருந்தன. மேலும், இது பொன் நாணயத் திட்டத்தைப்போல் தானாக இயங்கும் சக்தியைப் பெற்றிருந்தது. இந்தியாவில் இந்த முறை நன்கு இயங்கியது.

1907-8-இல் நாட்டின் பல பகுதிகளில் பஞ்சமும், பற்றுக் குறையும் ஏற்பட்டன. இந்தியாவின் ஏற்றுமதி குறைந்தது. சணல், பருத்தி முதலியவற்றின் ஏற்றுமதி குறைந்தது. ரூபாயின் மதிப்புத் தாழ்வடைந்ததால், அரசாங்கம் எதிர் உண்டியல்களை (Reverse councils) விற்பனை செய்து ரூபாய்-பவுன் மதிப்பைக் காப்பாற்ற வேண்டியதாயிற்று. கவுன்சில் உண்டியல்களின் விற்பனை குறைந்ததால், ஸ்டெர்லிங் நிதியைப் பெருக்கிக்கொள்ள, இந்தியா மந்திரி $4\frac{1}{8}$ மிலியன் பவுன் கடன் வாங்க வேண்டியதாயிற்று. 1907-8-இல் ரூபாய்-பவுன் வீதத்தை வெற்றிகரமாக நிலைநாட்டினர். கவுன்சில் உண்டியல்களையும், எதிர் உண்டியல்களையும் விற்பனை செய்ய வேண்டுமென்று அரசாங்கம் சட்டமியற்றவில்லை. ஆயினும், இந்த உண்டியல் முறை மூலமே நாணயங்களின் மதிப்பை நிலைநாட்டினர். மறைமுகப் பொன் திட்டம் அரசாங்கம் செய்த செலாவணி பற்றிய

சோதனைகளின் பலனாகவே இந்தியாவில் வளர்ச்சியடைந்தது என்று சொல்லலாம்.

1913-இல் சேம்பர்லின் (Chamberlain) ஒரு குழுவை நியமனம் செய்தார். இந்தியச் செலாவணி முறையைப் பரிசீலனை செய்து ரூபாய்-பவுன் வீத மதிப்பை எப்படி நிலைநாட்டுவதென்பதைப் பற்றியும், காப்பு நிதிகளின் பயன்களைப் பற்றியும், அவை இருக்கவேண்டிய இடங்களைப் பற்றியும் இக்குழுவினர் ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

குழுவினர் இந்தியாவின் நிலைமைக்கு மறைமுகப் பொன் திட்டம் மிகப் பொருத்தமானதென்றும், 1907-8-இல் தோன்றிய நெருக்கடியை அரசாங்கம் வெற்றிகரமாகச் சமாளித்ததே, புதிய நாணயத் திட்டத்தின் வெற்றிக்குச் சான்றாகுமென்றும் கருதினர். 1898-இலிருந்து அரசினர் அவ்வப்போது நிலைமையைச் சமாளிக்க எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் சரியானவை என்று சேம்பர்லின் குழுவினர் கூறினர். மறைமுகப் பொன் திட்டத்தையே இந்தியாவில் நீட்டிக்கவேண்டுமென்றும், அதன் குறைகளை நீக்கி அதைப் புதிய முறையில் சீரமைக்க வேண்டுமென்றும் குழுவினர் உணர்ந்தனர்.

இந்தியாவில் அரசாங்கம் பொன் நாணயங்களைப் புழக்கத்தில் கொண்டுவர முடியவில்லை. கடந்த சில ஆண்டுகளில் மக்கள் பொன் நாணயங்களை விரும்பவில்லை என்பது தெளிவாயிற்று. பொன் நாணயத் திட்டக் காப்பு நிதியின் பயனைப் பற்றிக் குழுவினர் சில முக்கியமான சிபாரிசுகளைச் செய்தனர். ரயில்வே திட்டங்களையும், மற்றத் திட்டங்களையும் நிறைவேற்றுவதற்கு இந்த நிதியைப் பயன்படுத்துவது சரியான பழக்கமல்லவென்று முடிவு செய்தனர். அதன் குறிப்பிட்ட உபயோகத்திற்கே இந்த நிதியைப் பயன்படுத்தல் வேண்டும். இந்த நிதியின் ஒரு பகுதியைத் தங்க உலோகமாக வைத்துக்கொள்ளவேண்டும். இந்தியா பொன் உலோகம் வேண்டும் பொழுது அதற்காக இங்கிலாந்தை எதிர்பார்க்கும் நிலைமையில் இருக்கக்கூடாது. ரூபாய் நாணயங்கள் வெளியிடுவதில் கிடைக்கும் இலாபத்தை இந்த நிதியில் சேர்க்கவேண்டும். பொன் நாணயத் திட்டக் காப்பு நிதிக் குழுவினர் உச்சவரம்பைச் சிபாரிசு செய்யவில்லை. இந்த நிதியையும் செலாவணித் தாள் காப்பு நிதியையும் பயன்படுத்தி ரூபாயின் புற மதிப்பைக் காப்பாற்றலாம். பொன் நாணயத் திட்டத்தின் இந்தியக் கிளையை நீக்கிவிடலாம்.

தங்க நாணயங்களை மக்கள் விரும்பாததால் அதற்கென ஒரு நாணயச்சாலையை நிறுவ வேண்டாமென்று குழுவினர் கூறினர். அரசாங்கம் மக்கள் விருப்பத்தை அறிந்து அதற்கேற்ற நாணயங்களை அச்சிடவேண்டும். பொன் நாணயத் திட்டக் காப்பு நிதி இங்கிலாந்திலேயே இருக்கவேண்டும். மக்கள் தேவைக்கேற்றபடி கௌன்சில் உண்டியல்களையும், எதிர் உண்டியல்களையும் விற்பனை செய்ய வேண்டும். இந்தியாவுக்கு ஒரு மையப் பாங்கு தேவை என்பதை சேம்பர்லின் குழுவினர் உணர்ந்தனர். நாட்டின் செலாவணி நிருவாகம் மையப் பாங்கு வசமே இருக்கவேண்டும்.

முழு வளர்ச்சிபெற்ற பொன் நாணயத் திட்டம் பொன் மறைமுகத் திட்டத்தைவிடச் சிறந்தது என்று சிலர் கருதினர். மறைமுகத் திட்டம் வேண்டிய அளவு தானாக இயங்கும் சக்தியைக் கொள்ளவில்லை என்று சிலர் கருதினர். ஆனால், இக்கூற்று தவறானது. பொன் மறைமுகத் திட்டம் சிக்கனமாகவும், எளிமையாகவும் இருந்ததால் இந்தியா மட்டுமன்றிப் பல நாடுகளும் இந்த முறையைப் பின்பற்றின.

1914-இல் முதல் உலகப் போர் தொடங்கியது. போர் இந்தியச் செலாவணி முறையை எப்படிப் பாதித்தது என்பதை இங்குக் காண்போம். மறைமுகப் பொன் நாணயத் திட்டம் இந்தியாவில் முழு வளர்ச்சி பெற்று நல்ல முறையில் இயங்கி வந்தது. ஆனால், உலகப் போர் ஒரு பரபரப்பைக் கிளப்பியது. அரசினர் நிலைமையை வெற்றிகரமாகச் சமாளித்தனர். ஆகையால், நாட்டில் அமைதி நிலவிற்று. மக்கள் இந்தியச் செலாவணி மீது மீண்டும் நம்பிக்கை கொண்டனர். ஆனால், 1914-இல் போர் தொடங்கியவுடன் நாட்டில் வர்த்தகம் ஓரளவு குறைந்தது. சேவிங்ஸ் டெபாசிட்டுத் தொகைகளும் குறைந்தன. செலாவணியில் நம்பிக்கை யிழந்த மக்கள் செலாவணித் தாள்களை நாணயங்களாக மாற்ற முயற்சி செய்தனர். அரசினர் மக்களுக்கு வேண்டிய அளவு செலாவணித் தாள்களைக் கொடுத்தனர். தேவைக்கு வேண்டிய அளவு எதிர் உண்டியல்களையும் விற்பனை செய்தனர். மக்கள் விருப்பத்திற்கேற்றபடி சேவிங்ஸ் டெபாசிட்டுக்களைப் பணமாக மாற்ற வசதிகள் செய்தனர். இந்த ஏற்பாடுகள் மூலம் அரசாங்கம் நிலைமையை வெற்றிகரமாகச் சமாளித்தனர். 1916-ஆம் ஆண்டுவரை பொன் மறைமுகத் திட்டம் வெற்றிகரமாக இயங்கி வந்தது.

1916-இல் நிலைமை மாறியது. புதிய பிரச்சினைகள் எழுந்தன. இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகம் பெருகிற்று. 1916-இலிருந்து

1919-வரை நமது ஏற்றுமதி ஆண்டுதோறும் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டே சென்றது. இந்தியாவில் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களையும், கச்சாப் பொருள்களையும் இங்கிலாந்தும் மற்ற நாடுகளும் ஏராளமாக வாங்கிக் கொண்டன. இங்கிலாந்தி லிருந்து நாம் செய்யும் இறக்குமதியின் அளவு குறைந்தது. ஜெர்மனி, ஆஸ்திரியா போன்ற நாடுகளிலிருந்து செய்த இறக்குமதி முற்றிலும் நின்றுவிட்டது. இங்கிலாந்து டொமினியன் நாடுகள் சார்பிலும் இந்தியாவிலிருந்து பொருள்கள் வாங்கியது. இக்கார ணங்களால் இங்கிலாந்து நமக்குச் செலுத்த வேண்டிய தொகை அதி கரித்தது. ஒரு நாட்டின் இறக்குமதிக்கும், ஏற்றுமதிக்கும் உள்ள வேறுபாடு நீண்டகாலம் நீடித்திருக்கக் கூடாது. இந்த வேறு பாட்டை நீக்க ஏற்பாடு செய்யவேண்டும். போர் பற்றிய செலவுகள் அதிகரித்தன. ஆங்கிலேய அரசாங்கத்தின் சார்பில் இந்தியா மிகுதியான தொகைகளைச் செலவு செய்யவேண்டி யிருந்தது. இத ஞல் நிலைமை மேலும் மோசமாயிற்று. இந்தியாவிலிருந்து பெறும் இறக்குமதிப் பொருள்களுக்கு அயல்நாட்டினர் வெள்ளி நாணயங் களாகிய ரூபாயைக் கொடுக்கவேண்டும். அயல்நாடுகளில் அதிக மாக ரூபாய் நாணயங்கள் தேவைப்பட்டமையால் அதன் மதிப்பு உயர்ந்தது.

ரூபாயின் மதிப்புப் படிப்படியாக உயர்ந்துகொண்டே சென்றது. கௌன்சில் உண்டியல்களின் தேவை அதிகரித்ததால் அதன் விற்பனை இங்கிலாந்தில் அதிகரித்தது. இங்கிலாந்தில் கௌன் சில் உண்டியல் விற்பனை பெருகப் பெருக, இந்தியாவில் அதிகமான ரூபாய் நாணயங்கள் தேவைப்பட்டன. அதிக அளவில் ரூபாய் நாணயங்களை அச்சிடவேண்டியதாயிற்று. ஆனல், வெள்ளி விலை உயர்ந்ததால் ரூபாய் நாணய வெளியீடு தடைப்பட்டது. இந்த விதமாகப் பொன் மறைமுகத் திட்டம் ஒரு பெரிய சோதனைக்குட் பட்டது. அரசினர் நிலைமையைச் சமாளித்துத் திட்டத்தை நீட்டிக்க முடியவில்லை. ரூபாய்-பவுன் வீத மதிப்பைக் கௌன்சில் உண்டியல் முறையைப் பயன்படுத்தி நிலைநாட்டுவது அத்திட்டத்தின் ஒரு முக் கியமான கூறுகும். ஆனல், கௌன்சில் உண்டியல்களைத் தடை யற்ற முறையில் விற்பனை செய்ய வெள்ளி உலோகம் வேண்டியிருந் தது. வெள்ளியின் விலை உயர்ந்ததால் பல தொல்லைகள் எழுந் தன. எனவே, இந்தக் கடும் சோதனையால் மறைமுகப் பொன் திட்டம் தாக்குண்டு மறைந்ததில் வியப்பில்லை.

இரண்டாவது போர்க்காலத்தில் வெள்ளியின் விலை விஷம் ஏறுவதுபோல் ஏறிக்கொண்டு சென்றது. இதற்குப் பல காரணங்கள் இருந்தன. வெள்ளியின் விலை உயர்வே இந்தியச் செலாவணி

முறை குலைந்ததற்குக் காரணம் என்று சர். பேசில் ப்ளாக்கட் என்பவர் கூறினார். சீனா, இந்தியா போன்ற நாடுகளும், மற்ற உலக நாடுகளும் அதிகமான அளவில் வெள்ளி உலோகத்தை வாங்கின. ஆனால், அந்த உலோகத்தின் உற்பத்தி தேவைக்கேற்றவாறு பெருகவில்லை. வெள்ளி உற்பத்தி செய்யும் மெக்சிகோ நாட்டில் அமைதியில்லாததாலும், கலவரம் ஏற்பட்டதாலும் உற்பத்தி குறைந்தது. வெள்ளி உற்பத்தியின் அடக்கச் செலவு (cost of production) உயர்ந்தது. பொன் வேண்டிய அளவில் கிடைக்காததால் பல உலக நாடுகள் அதிகமான அளவு வெள்ளியை நாடின. உற்பத்திக் குறைவும், தேவைப் பெருக்கும் ஒரு பொருளின் விலையை விரைவில் உயர்த்தும்.

1918-இல் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டது. அரசாங்கம் வைத்திருந்த ரூபாய் இருப்புக் குறைந்துவிட்டது. பிட்மன் சட்டப்படி அமெரிக்காவிலிருந்து நாம் பெற்ற வெள்ளி நமது தேவைக்கு வேண்டிய அளவு இல்லை. ஆகையால், செலாவணித் தாள் வெளியீட்டைப் பெருக்கவேண்டியதாயிற்று. இதைத் தொடர்ந்து செலாவணித் தாள் காப்பு நிதியில் அதிகமான பத்திரங்களை வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இந்தக் காப்பு நிதியில் இருந்த தங்க, வெள்ளி உலோகங்கள் அளவில் குறைந்தன. 1917-இல் வெள்ளியின் விலை ஆங்கிலேய நாணயத்தில் ஒரு அவுன்சு 43 பென்சாக இருந்தது. ரூ. 1 = 1 ஷி. 4 பெ. என்ற வீதப்படி ரூபாயின் உலோக மதிப்பும் (Bullion value of the rupee) அரசினர் அதற்குக் கொடுத்த மதிப்பும் (Face value of the rupee) ஒன்றாகவே இருந்தன. ஆனால், 1917-க்குப் பின் வெள்ளியின் விலை உயர்ந்தது. அமெரிக்காவும், கனடாவும் வெள்ளி உலோக விற்பனையையும், ஏற்றுமதியையும் கட்டுப்பாடு செய்ததால் அதன் விலை 49 பென்சுக்கு மேல் உயரவில்லை. ஆனால், 1919-இல் அமெரிக்கா விலையுயர்வுக் கட்டுப்பாட்டைக் கைவிட்டதால், அதன் விலை மீண்டும் உயர்ந்தது. வெள்ளியின் விலைமாறுதல்களைக் கீழ்க்கண்ட பட்டியலில் காணலாம்.

| ஆண்டு. | | விலை. | |
|---|---|---|---|
| 1914 | ஓர் அவுன்சு | $26\frac{5}{8}$ | பென்சு |
| 1915 (பிப்ரவரி) | ,, | $22\frac{11}{16}$ | ,, |
| 1916 | ,, | 27 | ,, |
| 1917 (பிப்ரவரி) | ,, | $37\frac{5}{8}$ | ,, |
| 1918 | ,, | 43 | ,, |
| 1919 | ,, | $48\frac{7}{16}$ | ,, |
| 1920 (பிப்ரவரி) | ,, | $89\frac{1}{2}$ | ,, |

ரூபாய்-பவுன் மதிப்பைக் காப்பாற்றுவதற்காகப் பொன் மறை முகத் திட்டப்படி கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்தனர் என்று குறிப்பிட்டோம். ஆனால், 1918-க்குப் பிறகு வெள்ளி நாணயத்தில் அடங்கிய உலோகத்தின் மதிப்பு நாணயத்துக்கு அரசினர் கொடுத்த மதிப்பைவிட அதிகமாயிற்று. மக்கள் ரூபாயை உருக்க ஆரம்பித்தனர். இப்படி உருக்குவது இலாபகரமாக இருந்தது. 1917-இல் வெள்ளியின் விலை $37\frac{5}{8}$ பென்சாக இருந்தபொழுது, ஒரு ரூபாய்க்குச் சமமாக 1 ஷி. 4 பெ. இருந்தது. 1918-இல் ரூபாயின் உண்மையான மதிப்பு 1 ஷி. 5 பெ. ஆகவும், 1919-இல் 2 ஷி. 4 பெ. ஆகவும் உயர்ந்தது. ஆகவே, ரூபாயை உருக்கி மக்கள் இலாபம் பெற்றனர். ஒரு நாணயத்தை மக்கள் பெருவாரியாக உருக்கினால் வர்த்தகத்துக்கு வேண்டிய நாணயம் நாட்டில் கிடைக்காது. இந்த நிலையைச் சட்டத்தால் ஒழிப்பது கடினம். இங்கிலாந்து தன் தேவைக்கு வேண்டிய வெள்ளியை அமெரிக்காவிலிருந்து வாங்கியது. ஆங்கிலேய நாணயமாகிய பவுனின் மதிப்புக் குறைந்ததால் அதிகமான அளவில் பவுன் நாணயங்களைக் கொடுத்து வெள்ளியை வாங்க வேண்டியதாயிற்று. வெள்ளியின் விலை உயர்வதற்கு இதுவும் ஒரு காரணமாகும். நிலைமையைச் சமாளிக்க அரசினர் மூன்று வழிகளைக் கையாண்டிருக்கலாம். அவைகளாவன:—(1) வெள்ளி நாணயங்களின் தரத்தைக் குறைக்கலாம். (2) நாணயங்களாக மாற்ற முடியாத தன்மையைச் செலாவணித் தாள்களுக்குக் கொடுத்தல் (inconvertability of note in issue). (3) ரூபாயின் புற மதிப்பை உயர்த்துவது.

அரசாங்கம் எப்படி நிலைமையைச் சமாளிக்க முயற்சி செய்தனர் என்பதை இங்குக் காண்போம். ரூபாயின் மதிப்பு உயர உயர, இங்கிலாந்தில் கௌன்சில் உண்டியல்களை அதிகமாக மக்கள் வேண்டினர். இந்த உண்டியல்களை அரசினர் விற்பனை செய்ததால் அவர்களிடம் இருந்த ரூபாய் இருப்புக் குறைந்தது. ஆகையால், கௌன்சில் உண்டியல் விற்பனையை அரசாங்கம் கட்டுப்பாடு செய்ய வேண்டியதாயிற்று. வேண்டிய அளவு கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்தாலன்றி ரூபாய்-பவுன் வீத மதிப்பைக் காப்பாற்ற முடியாது. உண்டியல் விற்பனையைக் கட்டுப்பாடு செய்ததால் அரசினர் கொடுத்த மதிப்பைவிட ரூபாயின் உண்மையான மதிப்பு உயர்ந்தது.

சில குறிப்பிட்ட பாங்குகளுக்கு மட்டுமே உண்டியல்களை விற்பனை செய்தனர். நாணய வெளியீட்டுக்கு வேண்டிய வெள்ளியை அரசாங்கம் வெளி நாடுகளிலிருந்து வாங்கியது. இந்த உலோகம் வாங்குவதில் இருந்த போட்டியைக் குறைக்க, அரசியலார் தனிப்பட்

டோர் உலோகம் இறக்குமதி செய்வதைத் தடை செய்தனர். மேலும், இந்த உலோகத்தைச் சிக்கனமாகப் பயன்படுத்தினர். 1917-இல் ஒரு ரூபாய், இரண்டரை ரூபாய் நோட்டுக்களை வெளியிட்டனர். நிக்கல் உலோகத்தில் செய்த இரண்டணு, நாலணு, எட்டணு நாணயங்களையும் வெளியிட்டனர். வெள்ளி ஏற்றுமதியைச் சட்டமியற்றித் தடை செய்தனர். தங்கத்தைக் காப்பு நிதியாகக் கொண்டு செலாவணித் தாள்களை வெளியிட்டனர்.

அரசாங்கம் நிலைமையைப் பரிசீலனை செய்து பிரச்சினைகளுக்கு முடிவு காண 1919–இல் பாபிங்டன் ஸ்மித் (Babington Smith) என்றவர் தலைமையில் ஒரு குழுவை நியமித்தனர். நிலைமையைச் சமாளிக்க மூன்று வழிகள் இருந்தன என்று குறிப்பிட்டோம். இந்த வழிகளில் எது சிறந்ததென்பதையும், இவைகளைப் பின்பற்றினுல் ஏற்படும் விளைவுகள் யாவை என்பதையும் இங்குப் பார்ப்போம். ரூபாய் நாணயத்தின் தரத்தைக் குறைத்திருக்கலாம். அதாவது, நாணயத்தில் குறைந்த அளவு வெள்ளியைச் சேர்த்து அதன் உலோக மதிப்பைக் குறைத்திருக்கலாம். இப்படிச் செய்தால் நாணயங்களை ஒருவரும் உருக்கமாட்டார்கள். ஆனுல், இப்படிச் செய்தால் ஒரு குழப்பம் ஏற்படும். மேலும், அதிக உலோகம் கொண்ட பழைய நாணயங்களை மக்கள் பதுக்கிவிடுவார்கள். உருக்குவதற்கும் பதுக்குவதற்கும் பழைய நாணயங்களை வர்த்தகத்திற்குப் பயன்படுத்துவார்கள். கிரஷாம் விதிப்படி (Gresham's Law) இரு நாணயங்கள் புழக்கத்தில் இருந்தால், அதில் சிறந்த நாணயங்களை மக்கள் பதுக்கிவிட்டுத் தரம் குறைவாக உள்ள நாணயங்களையே பயன்படுத்துவர். இதைத் தடுக்கப் பழைய நாணயங்களை அரசாங்கம் பெற்று அவைகளுக்குப் பதிலாகப் புதிய நாணயங்களை வெளியிடவேண்டும். ஆனுல், புதிய நாணயங்களை அச்சிட்டு வெளியிடுவது எளிதல்ல.

சிலர் செலாவணித் தாள்களை நாணயங்களாக மாற்றமுடியாதபடி செய்யலாமென்று கருதினர். ஆனுல், இப்படிச் செய்தால் மக்கள் செலாவணியில் கொண்ட நம்பிக்கையை இழந்துவிடுவர். ரூபாய் நாணயங்களைப் பதுக்கிவிடுவர். ஆகையால், இந்த இரு வழிகளையும் பின்பற்ருமல் அரசாங்கம் ரூபாயின் மதிப்பை உயர்த்த வேண்டியதாயிற்று. ரூபாய்–பொன் வீத மதிப்பை ரூ.1 = 2 ஷி. என்ற நிலையில் அமைக்கவேண்டும். வேண்டிய அளவு கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்யவேண்டும். தேவைக்கேற்றபடி எதிர் உண்டியல்களையும் அவ்வப்போது விற்பனை செய்யவேண்டும். தடையற்ற முறையில் பொன்னை இறக்குமதியோ ஏற்றுமதியோ செய்யலாம். வெள்ளி உலோக இறக்குமதி மீது விதித்திருந்த

வரியை நீக்கவேண்டும். ஆனல், வெள்ளி ஏற்றுமதி மீது விதித்திருந்த தடையை நீட்டிக்கலாம். தங்க நாணயங்கள் இந்தியாவுக்கு உகந்தவை அல்ல.

ரூபாயின் மதிப்பு மாருமல் இருந்தாலன்றி உற்பத்தியும், வர்த்தகமும் பாதிக்கப்படும். ரூ. 1 = 2 ஷி. என்ற மதிப்பே இயற்கையானது. ஆகையால், இந்த வீதத்தை நிலைநாட்டவேண்டும். குழுவினர் மேற்கண்ட சிபாரிசுகளைச் செய்தனர். புதிய வீத மதிப்பு இறக்குமதிப் பொருள்களின் விலையைக் குறைக்கும். ரூபாயின் மதிப்பை உயர்த்துவதால் ஏற்றுமதி குறையாது. ஏனெனில், உலகெங்கும் இந்தியப் பொருள்களுக்குத் தேவை இருந்தது. இந்திய அரசாங்கம் இங்கிலாந்திற்கு ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய தொகை குறையும். இக்காரணங்களால் ரூ. 1 = 2 ஷி. என்ற வீதமே சிறந்ததென்று குழுவினர் கருதினர்.

குழுவின் அங்கத்தினராகிய திரு. தலால் (D.M. Dalal) என்பவர் வெள்ளி உலோகத்தின் விலையேற்றம் இயற்கையானதல்லவென்றும், தற்காலிகமானதே என்றும், ரூ. 1 = 1 ஷி. 4 பெ. என்ற வீதமே இயற்கையான தென்றும் கூறினர். புதிய மதிப்பை நிலைநாட்டுவது கடினம் என்பது இவர் கருத்து. மேல் நாடுகளில் பொருளாதார வீக்கம் (boom) இருந்ததால் ரூபாயின் மதிப்பை உயர்த்த முடிந்தது. ஆகையால், ரூ. 1 = 2 ஷி. என்ற வீதம் நிரந்தரமாக இருக்க முடியாது. மேல் நாடுகளில் விலைகள் இறங்க ஆரம்பித்தால் மீண்டும் ரூபாய்-பவுன் மதிப்பை மாற்ற நேரிடும். மேலும், வெள்ளி உலோகத்தின் விலையேற்றம் இயற்கையானதல்ல. முதல் உலகப் போரே அதன் விலை உயர்வுக்குக் காரணமாகும்.

போர்க்காலத்தில் பவுன்-டாலர் மதிப்பு படிப்படியாக மாறுபாடடைந்தது. அதைத் தொடர்ந்து ரூபாயின் மதிப்பும் உயர்ந்தது. பவுன்-ரூபாய் வீத மதிப்பை நிலைநாட்டுவதற்கு ஒரே காரணம்தான் இருந்தது. அதாவது, இந்தியா இங்கிலாந்துடனும் பவுனைப் பயன்படுத்தும் மற்ற நாடுகளுடனும் நெருங்கிய வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தது. நமது வெளிநாட்டு வர்த்தகத்தில் ஒரு பெரும் பகுதியை நாம் இங்கிலாந்துடன் கொண்டிருந்தோம். இந்த வர்த்தகத்தைச் சிறந்த முறையில் வளர்க்கவே நாம் ரூபாய்-பவுன் வீதத்தை நிலை நாட்டினேம். ரூபாய்-பவுன் வீதத்தை விட ரூபாய்-பொன் வீதத்தை ஏற்படுத்துவதே சிறந்தது என்று பாபிங்டன் ஸ்மித் குழுவினர் கூறினர். 1914-இல் உலகப் போர் தொடங்கியதும் இங்கிலாந்து பொன் நாணயத் திட்டத்தைக் கைவிடவேண்டியதாயிற்று. 1914-இலிருந்து 1925-வரை இங்கிலாந்து பொன்

திட்டத்தைப் பின்பற்றவில்லை. ஆகையால், 1914-இலிருந்து பவுனின் மதிப்பு ஒரே நிலையில் இல்லை. அடிக்கடி மாறிக் கொண்டே இருந்தது. ரூபாய்-பவுன் வீத மதிப்பை ஏற்படுத்தினுல் பவுனின் மதிப்பைத் தொடர்ந்து ரூபாயின் புற மதிப்பும் அடிக்கடி மாறும். இதனுல், இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகம் சீர்கேடடையும். ஆகவே, ரூபாய்க்கும் தங்கத்திற்குமிடையே ஒரு வீத மதிப்பை ஏற் படுத்துவதே சிறந்ததெனக் குழுவினர் முடிவு செய்தார்கள். ஆகை யால், ஒரு ரூபாய் இரண்டு ஷில்லிங் பெறுமானமுள்ள தங்கத்துக்குச் சமமாக இருத்தல் வேண்டும் என்றும், ரூ. 1 = 2 ஷி. என்ற வீதத் தைக் காப்பாற்றக் கௌன்சில் உண்டியல்களையும், எதிர் உண்டியல் களையும் மக்கள் தேவைக்கேற்ப அரசினர் விற்பனை செய்யவேண்டு மென்றும் குழுவினர் சிபாரிசு செய்தனர்.

குழுவின் சிபாரிசுகளில் மிகச் சிறந்தது செலாவணித் தாள் பற்றியது. தொழிலும், வர்த்தகமும் அதிகரிக்கும் காலங்களில் மக்கள் மிகுதியான அளவில் செலாவணியைப் பயன்படுத்துவர். குழுவினர் சிபாரிசு செய்த செலாவணித் தாள் முறை எளியதாயும், நெகிழ்ச்சி யுடையதாயும் இருந்தது.

உடனடியாக ரூபாய்-பவுன் மதிப்பை ரூ. 1 = 2 ஷி. என்று உயர்த்துவது சரியல்ல என்று மெயர், அப்ரகாம், பார்பர் போன்ற வர்கள் கருதினர். ரூபாயின் மதிப்பைப் படிப்படியாக உயர்த்துவதே சரியான கொள்கையாகும் என்பது அவர்கள் கருத்து. வெள்ளியின் விலை குறையும் என்பதை எல்லோரும் எதிர்பார்த்திருக்கலாம். அந்த நிலையில் உடனடியாகப் புதிய வீத மதிப்பை ஏற்படுத்தியிருக்க வேண்டாம். எதிர் உண்டியல்களை விற்பனை செய்யும்பொழுது அர சாங்கம் பெறும் ஒவ்வொரு ரூபாய்க்கும் இரண்டு ஷில்லிங் கொடுக்க வேண்டும். அரசினர் அதிகமான தொகையைச் செலவு செய்ய வேண்டும். வெள்ளி உலோகத்தின் விலையையொட்டி ரூபாய்-பவுன் வீதத்தை ஏற்படுத்தவேண்டும். செலாவணியின் புற மதிப்பு ஒரே நிலையில் இருத்தல் நல்லது. ஆனுல், உலகப் போருக்குப் பின் இருந்த நிலைமையைக் கவனிக்கும்போது, குழுவினர் முடிவு சரியானதல்ல என்று தோன்றுகிறது.

## 3. உலகப் போருக்குப்பின் இந்தியச் செலாவணி முறை

அரசாங்கம் பாபிங்டன் ஸ்மித் குழுவின் சிபாரிசுகளை ஏற்றுக் கொண்டு அவைகளைச் செயல்படுத்த 1920-இல் ஏற்பாடுகள் செய் தது. ஆனால், இக்குழுவினர் எதிர்பார்த்ததுபோல் அல்லாமல் நாட் டின் நிலைமை மாறியதால் பல தொல்லைகள் எழுந்தன. முதல் உலகப் போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது இந்தியாவின் ஏற்றுமதி மிகுதியடைந்தது. அயல் நாட்டினர் இந்தியச் செலாவணியை வேண்டினர். இங்கிலாந்தில் கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்தனர். ஆனால், கௌன்சில் உண்டியல்களின் தேவை போருக் குப்பின் குறைந்தது. பவுன் நாணயங்களை மக்கள் பெற விரும்பிய தால், அரசினர் எதிர் உண்டியல்களை விற்பனை செய்ய வேண்டிய தாயிற்று.

போருக்குப் பின் சில புதிய பிரச்சினைகள் எழுந்தன. ஸ்மித் குழுவின் முடிவுகளை ஒட்டி ரூ. 1 = 2 ஷி. என்ற அடிப்படையில் தங் கத்தின் மதிப்பை அரசினர் ஏற்படுத்தினர். அதாவது, ஒரு சாவரின் விலை பத்து ரூபாய் என்று அரசினர் முடிவு செய்தனர். ஆனால், முதல் உலகப் போருக்குப் பின் தங்கத்தின் விலை உயர்ந்தது. நாட் டில் நிலவிய அதன் உண்மையான மதிப்புக்கும் அரசினர் அதற்குக் கொடுத்த மதிப்புக்கும் பொருத்தமெதுவும் இல்லை. 1917-இலிருந்து தனியார் துறையில் இறக்குமதி செய்த தங்கத்தைக் கைப்பற்றி விற் பனை செய்தனர். அப்படிச் செய்தபோதிலும் அதன் விலை உயர்ந்து கொண்டே சென்றது. 1920-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் அர சினர் 15 மிலியன் தோலா சுத்தத் தங்கத்தை விற்பனை செய்யும் என்று ஓர் அறிக்கை விடுத்தனர். பொன் உலோகத்தின் விலை உயர்வை அரசினர் ஓரளவு கட்டுப்பாடு செய்தனர். ஆனால்,

1920-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பொன் விற்பனையை அரசாங்கம் நிறுத்திவிட்டது. ஆகையால், 1920-க்குப்பின் அதன் விலை மீண்டும் உயர்ந்தது.

1920-ஆம் ஆண்டு ஜூன் மாதம் அரசினர் சாவரின்களும், அரைச் சாவரின்களும் சட்டபூர்வமானவை அல்ல என்று ஆணையிட்டனர். ஆனால், குழவினர் சிபாரிசை ஒட்டி அதே ஆண்டு மற்றோராணைப்படி இந்த நாணயங்களைச் சட்டபூர்வமானவையாகச் செய்தனர். மக்கள் சாவரின் நாணயங்களைக் கொடுத்தால் அரசாங்க அலுவலகங்கள் அவைகளைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று ஓர் அறிக்கை விடுத்தனர். அரசியலார் பொன்னுக்குக் கொடுத்த மதிப்பை விட உயர்ந்த விலை நாட்டில் நிலவியதால் சாவரின் நாணயங்களை அரசாங்கம் புழக்கத்தில் கொண்டுவர முடியவில்லை. அரசினர் செய்த முயற்சிகள் பயனளிக்கவில்லை.

உலகப் போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது அரசாங்கம் இந்தியப் பொருளாதாரத்தில் சில கட்டுப்பாடுகளைப் புகுத்தியது. போர்முடிந்ததும் இக்கட்டுப்பாடுகளை ஒன்றன்பின் ஒன்றாக நீக்கினர். வெள்ளி உலோக இறக்குமதி தடைக்குட்பட்டிருந்தது. இத்தடையை 1920-இல் பிப்ரவரி மாதம் நீக்கினர். தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களின் பயனும் கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருந்தது. இந்தக் கட்டுப்பாடுகளையும் நீக்கினர். 1920-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 21-ஆம் தேதிக்குப் பின் மக்கள் விருப்பம்போல் பொன்னையும், பொன் நாணயத்தையும் இறக்குமதி செய்யலாம் என்று முடிவு செய்தனர். செலாவணித் தாள்களை நாணயங்களாக மாற்றுவதற்கு வசதிகள் செய்துகொடுத்தனர்.

போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது உற்பத்திப் பெருக்கமும் விலை உயர்வும் உலகெங்கும் சாதாரணமாக இருந்தன. 1920-க்குப்பின் இந்தப் பொருளாதார வீக்கம் மறைய ஆரம்பித்தது. போர்க்காலத்திலும் அதைத் தொடர்ந்து சில ஆண்டுகளிலும் இருந்த நிலைமை இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகத்திற்கு ஒரு தூண்டுதலை அளித்தது. இந்த நிலைமை மாறியதும் 1920 ஜூன் மாதத்திற்குப்பின் நமது அயல்நாட்டு வர்த்தகமும் மாறுபாடடைந்தது. அதாவது, நமது ஏற்றுமதி படிப்படியாகக் குறைந்தது. ஆனால், இறக்குமதி மிகுதியடைந்தது. 1920-ஆம் ஆண்டு வெள்ளி விலை ஓர் அவுன்சு $89\frac{1}{2}$ பென்சாக இருந்தது. இந்த விலை ஜூன் மாதம் திடீரென்று குறைந்தது. வெள்ளியின் விலை திடீரென்று குறைந்ததால் நமது செலாவணி முறை பாதிக்கப்பட்டது. அயல்நாட்டு வர்த்தகம் சீர்கேடான நிலையை அடைந்தது.

இதற்குப் பல காரணங்கள் உள. போருக்குப் பின் ஆரம்பித்த பொருளாதார மந்தம் உலகெங்கும் பரவியது. ஐரோப்பிய நாடுகளின் அரசியல் நிலை சரியாக இல்லாததால், அவற்றின் செலாவணி முறைகள் (குறிப்பாக ஜெர்மனியின் முறை) சீர்குலைந்தன. ஆகையால், இந்த நாடுகள் இந்தியப் பொருள்களை வாங்க முடியவில்லை. இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்தனர். மேலும், இந்தியாவில் விவசாயத் துறையிலும் தொழிலிலும் உற்பத்தி குறைந்தது. 1920-இல் பருவ கால மழையும் வேண்டிய அளவு இல்லை. ஸ்மித் குழுவினர் ரூபாயின் மதிப்பை 2 ஷில்லிங்குக்கு உயர்த்தியதால் அயல் நாடுகளிருந்து இறக்குமதி செய்தல் இலாபகரமாக இருந்தது. போர் நடந்துகொண்டிருக்கும் பொழுது நம் நாட்டின் இறக்குமதி குறைந்துவிட்டதால் பல பொருள்களை நாம் போருக்குப் பின் அயல் நாடுகளிலிருந்து பெறவேண்டியதாயிற்று. எனவே, நம் நாட்டின் இறக்குமதி அதிகரித்ததோடல்லாமல் ஏற்றுமதி குறைந்தது. பாதக வாணிபக் கொடுப்பல் நிலை (unfavourable balance of trade) 1920-21-இல் $77\frac{1}{2}$ கோடி ரூபாய்க்கு வளர்ந்து விட்டது (அதாவது, இறக்குமதி-ஏற்றுமதி வேறுபாட்டின் மதிப்பு $77\frac{1}{2}$ கோடி ரூபாய்).

ஆருண்டுகளில் சிறிது சிறிதாக உயர்ந்த வெள்ளி விலை திடீரென்று குறைந்தது. மேல்நாடுகள் வெள்ளி நாணயங்களை உபயோகத்திலிருந்து நீக்கின. இந்த உலோகத்தை அதிகமாக நாடிய சீனு இப்பொழுது இதை ஏற்றுமதி செய்தது. மேலும் பவுன் டாலர் வீத மதிப்பு மாறியதாலும் வெள்ளி விலை குறைந்தது. ஸ்மித் குழுவினர் சிபாரிசு செய்தபடி ரூபாய் நாணயத்தின் மதிப்பு தங்க விலையின் அடிப்படையில் பவுனுடன் இணைக்கப்பட்டிருந்தது. 1919-இல் ஒரு ரூபாய் 2 ஷில்லிங்குக்குச் சமமாக இருந்தது. ஆனல், போருக்குப் பின் பவுன் மதிப்பு குறைந்தது. அதாவது, பவுன் முன்பு வாங்கியதைவிடக் குறைந்த அளவு தங்கமே வாங்க முடியும். ரூ.1 = 2 ஷி. என்ற வீத மதிப்புப்படி ரூபாயின் மதிப்பு அதிகமாக இருந்தது. இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்குப் பொருளேற்றுமதி செய்பவர்கள் ரூபாயின் மதிப்பு மேலும் உயருமென்று பயந்து, தங்களிடமிருந்த ஏற்றுமதி உண்டியல்களை (Export Bills) விரைவில் விற்பனை செய்தனர். ஏற்றுமதியாளர்கள் தங்களிடமிருந்த உண்டியல்களை விற்பனை செய்ய முயன்றதாலும், மேலும் பவுன்-டாலர் வீத மதிப்பு மாறுபட்டதாலும், ரூபாயின் மதிப்பு மீண்டும் உயர்ந்தது. 1920-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ரூபாய் மதிப்பு 2 ஷில்லிங் $10\frac{1}{4}$ பென்சாக உயர்ந்தது.

ஆனல், இந்த நிலை வெகு விரைவில் மாறிவிட்டது. பவுனின் தேவை அதிகரித்தது. ரூபாயின் மதிப்பும் குறைந்தது. இதற்குப்

பல காரணங்கள் உள. போர் நடந்து கொண்டிருக்கும் பொழுது பொருள்களின் தேவை அதிகரிக்கவே, உற்பத்தியும் வியாபாரமும் வளர்ந்தன. பல வியாபாரிகள் இலாபமடைந்தனர். போருக்குப்பின் ரூபாய் பவுன் வீத மதிப்பு சாதகமாக மாறும்பொழுது இந்த இலாபத் தொகையை இங்கிலாந்திற்கு அனுப்பலாமென்று நினைத்தவர்கள் இப்பொழுது தங்கள் பணத்தை இங்கிலாந்துக்கு அனுப்புவதற்காகப் பவுனாக மாற்றினர். அதிகமான அளவில் பவுன் தேவைப்படவே அதன் மதிப்பு உயர்ந்தது; ரூபாயின் மதிப்பு தாழ்வடைந்தது. இதற்கு மற்றொரு முக்கியமான காரணமுண்டு.

1920-ஆம் ஆண்டு ஜூன் மாதத்திலிருந்து இந்தியாவின் இறக்குமதி அதிகரித்தது. ஏற்றுமதி படிப்படியாகக் குறைந்தது. ஆகையால், பவுன் நாணயத்தின் தேவை அதிகரித்தது. அரசாங்கம் ரூ. 1 = 2 ஷி. 10 $\frac{27}{32}$ பெ. என்ற வீதத்தில் பிப்ரவரி மாதம் எதிர் உண்டியல்கள் விற்றது. ஆனால், ஜூன் மாதம் ரூபாயின் மதிப்பு 2 ஷில்லிங்கை விடக் குறைந்துவிட்டது. ரூ. 1 = 2 ஷி. என்ற வீத மதிப்பை நிலைநாட்ட அரசாங்கம் முயற்சி செய்தது. ஆனால், இந்த முயற்சி பயனளிக்கவில்லை. பவுனின் தேவை மேலும் மேலும் அதிகரிக்கவே, ரூபாயின் மதிப்பு குறைந்து கொண்டே வந்தது. ரூபாயின் மதிப்பைக் காப்பாற்ற முடியாதென்பதை அரசாங்கம் உணர்ந்தது. எதிர் உண்டியல்கள் விற்பனையால் அரசாங்கம் பண மிழந்ததோடல்லாமல் நாட்டில் பணச்சுருக்கத்தையும் (deflation) ஏற்படுத்திவிட்டனர். செலாவணித் தாள்களின் புழக்கத்தை 15 நாட்களுள் 27 கோடி ரூபாயளவு சுருக்கிவிட்டனர். செலாவணிச் சுருக்கமேற்பட்டால் சாதாரணமாக விலைகள் உள்நாட்டில் குறையும்; ஏற்றுமதியும் விரிவடையும். ஆனால், இந்தியாவில் ஏற்றுமதியும் அதிகரிக்கவில்லை; இறக்குமதியும் குறையவில்லை. ஆனால், நாணயப் பற்றுக்குறையேற்பட்டது. விலைகள் தாழ் வடைந்தன. இதனால் உற்பத்தி பாதிக்கப்பட்டது. ரூபாய் நாண யத்தின் மதிப்பை அரசாங்கம் காப்பாற்றுமென்று சிலர் அயல் நாடு களிலிருந்து பொருள்கள் இறக்குமதி செய்ய ஏற்பாடுகள் செய்து விட்டனர். ஆனால், ரூபாயின் மதிப்பு தாழ்வடைந்ததால் இவர் கள் பெருவாரியான பணத்தை இழக்கவேண்டியதாயிற்று.

ஸ்மித் குழுவினர் செலாவணிச் சிக்கல்களைப் பரிசீலனை செய் யும் பொழுது, ரூபாயின் மதிப்பை நிலைநாட்டுவதற்கு நிலைமை ஏற்றதாகக் காணப்பட்டது. ஆனால், நாளடைவில் இந்த நிலைமை மோசமாகிவிட்டது. ஐரோப்பிய நாடுகளின் அரசியல் குழப்பங்க ளும், உலகின் பல பகுதிகளில் விலைவாசி வீழ்ச்சியும் தவிர்க்கப்பட் டிருந்தால் ஸ்மித் குழுவினரது செலாவணி முறை சரியாக இயங்கி

யிருக்கலாம். உலகில் பல பகுதிகளில் விலைவாசிகள் ஒரு நிலைக்கு வராமல் மாறிக் கொண்டே சென்றதால் நமது செலாவணி முறை சீர்கேடடைந்தது. இவ்வமயம் ஒரு நாட்டின் செலாவணியின் மதிப்பை நிலைநாட்ட முயற்சிப்பது சரியல்ல. இந்திய அரசாங்கம் ரூபாயின் மதிப்பை நிலை நாட்டுவதற்குமுன் பணவீக்கத்தைக் (Inflation) குறைத்திருக்க வேண்டும். வீத மதிப்புக் கொள்கை (Exchange poilcy) வெற்றிபெற வேண்டுமானால் அதற்கொரு விலைவாசிக் கொள்கை (Price policy) வேண்டும். இதை உணராமல் அரசினர் ரூபாய்-பவுன் வீதத்தை நிலைநாட்ட அவசரப்பட்டு விட்டனர்.

நாணயத்தின் வீத மதிப்பை நிலைநாட்டுவதில் தோல்வியுற்ற பிறகு, அரசாங்கம் 1921-ஆம் ஆண்டிலிருந்து 1925 வரை எந்த நடவடிக்கையும் எடுக்காமல் நிலைமையை நன்கு கவனித்து வந்தது. பொருளாதார மந்தம் நீடித்தது. இந்தியாவின் ஏற்றுமதி பெருகவில்லை. உலகெங்கும் விலைவாசி தாழ்வடைந்தது. ரூபாயின் வீதமதிப்பும் தாழ்வடைந்தது. அரசாங்கம் 1921-இல் பணச்சுருக்கம் (deflation) செய்து, அதன் மூலம் ரூபாயின் மதிப்பை உயர்த்த முயன்றனர். 1921-இல் சுமார் ரூ. 31,58,000 அளவு பணச்சுருக்கம் செய்தனர். ஆனால், ரூபாயின் மதிப்பை உயர்த்த முடியவில்லை. இங்கிலாந்தில் கௌன்சில் உண்டியல்கள் விற்பனையை நிறுத்திவிட்டனர்.

1921-இலிருந்து 1925-வரை அரசாங்கம் ரூபாய் மதிப்பின் வீழ்ச்சியைத் தடை செய்ய முயன்றனர். இம்முயற்சி பயனளிக்காததால் பணச்சுருக்கம் செய்தனர். ஆனால், 1921-22-இல் பலர் ரூபாய்-பவுன் மதிப்பை 1 ஷி. 4 பெ. என்ற வீதத்தில் (rate) நிலைநாட்டவேண்டுமென்று கருதினர். இதற்குப் பொன் நாணயத் திட்டக் காப்பு நிதியைப் பயன்படுத்தலாமென்று நினைத்தார்கள். ஆனால், வர்த்தக நிலையும், ஏற்றுமதி இறக்குமதி நிலையும் சாதாரணமாக இருந்தாலன்றி, காப்பு நிதியைப் பயன்படுத்தி ரூபாயின் மதிப்பை நிலைநாட்டுவது சரியல்ல என்பதை இவர்கள் உணரவில்லை. இந்த உண்மையை ஹெய்லி (Sir M. Hailey) என்பவர் எடுத்துக் காட்டினார். ஆகையால், அரசாங்கம் ரூபாயின் மதிப்பை நிலைப்படுத்த (stabilise) ஏற்பாடுகள் எவற்றையும் செய்யவில்லை.

சிலர் 1923-இல் ரூபாயின் மதிப்பை 1 ஷி. 4 பெ. என்ற வீதத்தில் நிலைப்படுத்தலாமென்றனர். இப்படிச் செய்வதற்கு ஓரளவு பணச்சுருக்கம் தேவை என்பதை உணர்ந்ததால்தான்

இவர்கள் 1923-இல் இதைச் செய்யலாமென்றனர். ஆனால், பல மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்த அந்த ஆண்டு ரூபாயின் மதிப்பு 1 ஷி. 4 பெ. என்ற நிலையில் நீடிக்குமென்று நம்ப முடிய வில்லை. மீண்டும் வளர ஆரம்பித்த வர்த்தகம் எந்த நிலையை அடையுமென்று சொல்லமுடியாது. அரசாங்க வரவுசெலவு (Budget) சமநிலை (equilibrium) அடையவில்லை. 1923-ஆம் ஆண்டுதான் ரூபாயின் மதிப்பு 1 ஷி. 4 பென்சுக்கு உயர்ந்தது. நாணயத்தின் மதிப்பை நிலைப்படுத்த அரசாங்க வரவுசெலவில் சமநிலை ஏற்படுத்தவேண்டும். 1924-இல் அரசாங்க வரவுசெலவு குறிப்பிடத்தக்க முன்னேற்றமடைந்தது. முதன் முதலாக பற்றாக் குறை நீங்கியது.

1926-ஆம் ஆண்டிலும் பொருளாதார நிலை நாணய மதிப்பை நிலைப்படுத்துவதற்கேற்றதாகவில்லை என்று சிலர் கருதி னர். செலாவணி முறையைப் போருக்குமுன் இருந்தபடி யமைக்க வேண்டுமென்று சிலர் கருதினர். சிலர் புதிய மாறுதல்களைப் புகுத்தவேண்டுமென்றனர். 1920-இலிருந்து 1925 வரை அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் விலைவாசி அடிக்கடி மாறியது. விலைவாசி மாற்றத்தாலும், மேல் நாடுகளின் விலைவாசிக் கொள்கை எதிர் காலத்தில் எப்படி மாறும் என்பதை ஊகிக்க முடியாததாலும், ரூபாய் நாணயத்தின் மதிப்பை நிலைபடுத்துதல் தடைப்பட்டது. ஐரோப்பிய நாடுகளின் பொருளாதார நிலை அரசியல் பிரச்சினை களாலும் பாதிக்கப்பட்டது. ரூபாயின் மதிப்பை 1 ஷி. 4 பெ. என்ற விதத்தில் நிலைப்படுத்துவதால் செலாவணித் துறையில் நமது சுயேச்சையை விட்டுக்கொடுக்க நேரிடும் என்று சர். பேசில் ப்ளாக்கட் (Sir Basil Blackett) 1923-இல் கூறினார். வீத மதிப்பை நிலைநாட்டுவதற்கு நாம் பண வீக்கம் செய்யவேண்டி இருக் கும். ஆனால், 1923-இல் பொருளாதார நிலையைச் சரிப்படுத்தப் பணச்சுருக்கம் தேவைப்பட்டது. மேலும், போருக்குப்பின் இங்கி லாந்து பொன் நாணயத் திட்டத்தை மீண்டும் பின்பற்றவில்லை. அதற்குள் பவுன்-ரூபாய் வீதம் மதிப்பை நிலைப்படுத்துவது சரியான தல்ல. இந்த நிலையில் 1921-இலிருந்து 1925 வரை அரசாங்கம் ஒரு நடவடிக்கையுமெடுக்காமலிருந்தது சரியானதே.

## செலாவணித் தாள்கள்

1809-இலிருந்து சென்னை, வங்காளம், பம்பாய் முதலிய இடங் களிலிருந்து மாநில பாங்குகள் செலாவணித் தாள்கள் அச்சிட்டன. இந்த உரிமை சில சட்டதிட்டங்களுக்குட்பட்டது. இவர்கள்

வெளியிட்ட செலாவணித் தாள்கள் அதிகமாகப் புழக்கத்திலில்லை. சென்னை, பம்பாய், கல்கத்தா நகரங்களுக்குள்ளேயே இத்தாள்கள் புழங்கின. 1860-இல் வில்சன் என்பவர் செலாவணித் தாள்கள் அச்சிடுவதற்குப் புதிய திட்டம் வகுத்தார். இத் திட்டத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு 1861-இல் செலாவணித் தாள் சட்டம் (Paper Currency Act) இயற்றியது. சென்னை, பம்பாய், வங்கம் என்ற மூன்று வட்டாரங்களில் செலாவணித் தாள்களை அச்சிட்டனர். 1910-இல் நாடு ஏழு வட்டாரங்களாகப் பிரிக்கப் பட்டது. ரூ. 10-இலிருந்து ரூ. 10,000 வரை மதிப்புள்ள நோட்டுக் களை வெளியிட்டனர். 1891-இல் ஐந்து ரூபாய் நோட்டுக்களை வெளியிட்டனர். ஆங்கிலேய நாணயமாகிய பவுனையும், தங்கத்தை யும் பெற்றுக் கொண்டு செலாவணித் தாள்களை வெளியிட்டனர். இந்தத் தாள்கள் வரையறையற்ற சட்டபூர்வமான செலாவணியாக இருந்தன. அரசாங்க அலுவலகங்கள் இந்தத் தாள்களைப் பெற்றுக்கொண்டன. ஆனால், எந்த வட்டாரங்களில் அச்சிடப் பட்டனவோ அதே வட்டாரங்களில்தான் இவை ஏற்றுக் கொள்ளப் பட்டன. மற்ற வட்டாரங்களில் இவை செல்லுபடியாகா. இதனால், இவைகள் அதிகமாகப் புழக்கத்திலில்லை. மக்கள் நாணயங்களையே அதிகமாக விரும்பினர். இவற்றை மக்கள் அதிகமாகப் பயன்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் 1903-இல் ஐந்துரூபாய்த்தாள் நாட்டில் எல்லா இடங்களிலும் செல்லுபடியாகுமென்று அரசாங்கம் ஓர் அறிக்கை விடுத்தது. 1910-இல் 10 ரூபாய்த் தாள்களும், 50 ரூபாய்த் தாள்களும் நாடெங்கும் செல்லுபடியாகும் தன்மையைப் பெற்றன. 1911-இல் நூறு ரூபாய்த் தாள்களும் இத்தன்மையைப் பெற்றன. செலாவணித் தாள்களின் புழக்கம் அதிகரித்தது. மாநில பாங்குகளும், அவற்றின் கிளைகளும், அரசாங்க அலுவலகங்களும் செலாவணித் தாள்களை ஏற்றுக் கொண்டன.

1861-ஆம் ஆண்டுச் சட்டப்படி நம்பிக்கை வெளியீடு (Fiduciary Issue) 5 கோடி ரூபாயென முடிவு செய்யப்பட்டது. இந்த வெளியீட்டை அடிக்கடி சட்டமூலம் அதிகரித்துக் கொண்டே சென்றார்கள். நம்பிக்கை வெளியீட்டின் காப்புநிதியை இந்திய அரசாங்கப் பத்திரங்களில் வைத்துக்கொண்டனர். நம்பிக்கை வெளியீட்டுப் பகுதியைத் தவிர மற்றப் பகுதிக்குக் காப்பு நிதியாகத் தங்கம், வெள்ளி உலோகங்களைப் பயன்படுத்தினர். செலாவணித் தாளின் புழக்கம் அதிகரித்தது. காப்பு நிதியின் உலோகப் பகுதி யும் அதிகரித்தது. இதை ரூபாயின் வீத மதிப்பை நிலைப்படுத்து வதற்குப் பயன்படுத்தினர் என்று மேலே குறிப்பிட்டிருக்கின்றோம். நம்பிக்கை வெளியீட்டைத் தேவைக்கேற்றபடி மாற்றியமைத்துக் கொள்ள முடியாது. காப்பு நிதியில் வேண்டிய அளவுக்கு மேல்

உலோக மிருந்தது. ஆகையால், நம் நாட்டுச் செலாவணித்தாள் முறை நெகிழ்ச்சியற்றதாக இருந்தது. செலாவணித் தாள் அச்சி டலுக்கும் பாங்கு முறைக்கும் எந்தவிதத் தொடர்புமில்லை. சாதாரண மாக இவ்விரண்டுக்கும் எல்லா நாடுகளிலும் நெருங்கிய தொடர்பு உண்டு. நாட்டிலொரு மையப் பாங்கு (Central Bank) இல்லாதது பெருங் குறையாகும். வேண்டும்பொழுது செலாவணித் தாள் அச் சிடலைப் பெருக்கிக்கொள்ள முடியாது. இதற்கு வெளி நாடுகளி லிருந்து உலோகத்தை இறக்குமதி செய்யவேண்டும்.

1914-இல் உலகப் போர் தொடங்கியதும் மக்கள் செலாவணித் தாள்களை உலோக நாணயங்களாக மாற்ற முயன்றனர். அரசாங் கம் வேண்டிய அளவு நாணயங்களைக் கொடுத்து இந்தியச் செலா வணி முறையில் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையை மீட்க முடிந் தது. செலாவணித் தாளின் தேவை விரிவடைந்ததால் நம்பிக்கைச் செலாவணியின் வரம்பை உயர்த்தினர். காப்பு நிதியில் ஒரு பகுதி யைப் பத்திரங்களில் முதலீடு செய்யலாம். பத்திர முதலீட்டுத் தொகை 120 கோடி ரூபாயாக இருக்கலாமென்றும் இதில் 100 கோடி ரூபாயை இங்கிலாந்துப் பத்திரங்களில் முதலீடு செய்ய வேண்டுமென்றும் முடிவு செய்தனர்.

1920-ஆம் ஆண்டு ஒரு சட்டம் இயற்றினர். அதன்படி மொத்தக் காப்பு நிதியில் ஐம்பது சதவீதம் உலோகமாக இருத்தல் வேண்டும். பாபிங்டன் ஸ்மித் குழுவினர் காப்பு நிதியின் உலோகப் பகுதி 40 சத வீதம் இருக்கவேண்டுமென்று சிபாரிசு செய்தனர். தொழில் பெருகும் பொழுது மக்கள் மிகுதியான நாணயங்களைப் பயன்படுத்துவர். ஆகையால், காப்பு நிதியின் உலோகப் பகுதி ஐம்பது சத வீதம் இருத்தல் வேண்டுமென்று அரசாங்கம் முடிவு செய்தது. பத்திரங்களில் 20 கோடி ரூபாயே இந்தியாவில் இருக்க வேண்டும். மீதம் இங்கிலாந்தில் குறுகிய காலப் பத்திரங்களாக இருக்கும். இந்தியாவில் குறுகிய கால உண்டியல்களை ஏற்றுக் கொண்டு ஐந்து கோடி ரூபாய் வரை உபரிச் செலாவணித் தாள்களை அச்சிடலாம். இந்தியப் பண மார்க்கட்டை நெகிழ்ச்சியுடையதாகச் செய்ய முயன்றனர். தொழில் பெருகும் காலங்களில் மிகுதியான அளவில் பணம் வேண்டும். அவ்வமயங்களில் வாணிகம் பெருகும். வாணிக உண்டியல்களைப் பெற்றுச் செலாவணித் தாள்களை வெளியிடுவது சிறந்த பழக்கமாகும். வர்த்தகம் பெருகும்பொழுது பண மார்க்கட்டு வேண்டிய ரொக்கத்தைப் பெறலாம். உபரியாக வெளியிடும் இந்தத் தொகையை இம்பீரியல் பாங்குக்குக் கடனாகக் கொடுக்கலாம் என்று முடிவு செய்தனர். 1923-இல் இத்தொகை ஐந்து கோடியிலிருந்து பன்னிரண்டு கோடியாக உயர்த்தப்பட்டது.

1920-இல் ரூபாயின் மதிப்பு மாறியதால் காப்பு நிதியின் மதிப்பும் மாறியது. இதனால் ஏற்பட்ட தொல்லைகளைச் சமாளிக்கச் சில தற்காலிகமான ஏற்பாடுகள் செய்தனர். இந்த ஏற்பாடுகள் நாளடைவில் சிறிது சிறிதாகச் செயலில் கொண்டுவர வேண்டியவை. ஆகவே, 1920-இல் வாணிப உண்டியல்களைப் பெற்றுச் செலாவணித் தாள் வெளியிடும் ஏற்பாடு மட்டுமே நமது செலாவணித் தாள் முறைக்கு நெகிழ்ச்சி யளித்தது.

1920-ஆம் ஆண்டின் ஏற்பாடுகள் சிறந்தவை என்று சொல்ல முடியாது. காப்பு நிதியையும் அரசாங்க நிதியையும் தனித்தனியே வைத்திருக்கவேண்டும். காப்பு நிதியில் குறுகிய கால வாணிப உண்டியல்களைப் பயன்படுத்தவேண்டும். இப்படிச் செய்வதால் நாட்டின் வர்த்தகத்திற்கும் செலாவணிக்கும் ஒரு தொடர்பு ஏற்படுத்தலாம். இத்தொடர்பு எந்தவித நெகிழ்ச்சிச் செலாவணித் தாள் முறைக்குத் தேவையோ அதை யளிக்கும் நம்பிக்கை வெளியீட்டை வேண்டிய அளவு உயர்த்துவதன் மூலம் செலாவணித் தாள் முறைக்கு நெகிழ்ச்சி யளிக்கலாம். ஆனால், இது சிறந்த முறையல்ல. வர்த்தகம் பெருகினால் அதிகச் செலாவணி தேவைப்படும். வாணிப உண்டியல்களும் அதிகமாகப் பயன்படுத்தப்படும். வாணிப உண்டியலைப் பயன்படுத்திச் செலாவணித் தாள்களை வெளியிட்டால் வர்த்தகத்தின் தேவைக்கேற்ப செலாவணி வெளியீடு அதிகரிக்கலாம். செலாவணித் தாள் வெளியீட்டை ஒரு மையப் பாங்கு (Central Bank) மேற் கொள்ள வேண்டும். ஏனெனில், இந்தப் பாங்கு மற்றப் பாங்குகளுடனும், தொழிலுடனும் நேரடித் தொடர்பு கொண்டிருக்கின்றது.

1925-ஆம் ஆண்டு நியமிக்கப்பட்ட ஹில்ட்டன் யங் (Hilton Young) குழுவினர் விகித முறைக் காப்பு நிதியை (Proportional Reserve System) நம் நாட்டுக்குச் சிபாரிசு செய்தனர். நமது பொருளாதாரம் விவசாய அடிப்படையில் அமைந்துள்ளது. ஆகையால், சில பருவகாலங்களில் செலாவணியின் தேவை அதிகரிக்கும். இத்தகைய பொருளாதாரத்திற்கு விகித முறைக் காப்பு நிதி சிறந்த பயனளிக்கும். இம்முறையைச் சேம்பர்லின் குழுவினரே சிபாரிசு செய்தனர். ஹில்ட்டன் யங் குழுவினர் காப்பு நிதியில் ஒரு பெரும் பகுதி குறுகிய கால வாணிப உண்டியல்களைக் கொண்டிருக்க வேண்டுமென்றனர். இப்படிச் செய்வதால் செலாவணித் தாள் முறையின் நெகிழ்ச்சி மேலும் அதிகரிக்கும். பருவத்திற் கேற்றவாறு செலாவணி வெளியீட்டைச் சுருக்கவோ, பெருக்கவோ முடியும். மேலும், மையப் பாங்கு ஒன்றை நிறுவி அதனிடம் செலாவணித் தாள் வெளியீட்டை ஒப்புவித்தலே சிறந்ததாகும்.

## 4. செலாவணிச் சீரமைப்பு

1914-முதல் 1918 வரை முதல் உலகப் போர் நடந்து கொண்டிருந்தது. இவ்வமயம் நம் நாட்டுச் செலாவணி முறை நன்ருக இயங்கியது. ஆனால், போருக்குப் பின் நடந்த நிகழ்ச்சிகள் இம்முறையைப் பாதித்தன. உலோகங்களின் விலை மாற்றத்தால் பல தொல்லைகள் எழுந்தன. தங்கத்திற்கும் பவுன் நாணயத்திற்கு முள்ள தொடர்பு அற்றுப் போய்விட்டது. இந்த நிலையில் பவுனுடன் தொடர்பு கொண்ட இந்தியச் செலாவணி பல வேண்டாத மாறுதல் களுக்கு இலக்காயிற்று. இந்தியச் செலாவணித் தாள் முறையும் சிறந்ததாக அமையவில்லை. ஒரு சிறந்த செலாவணி முறை தாளுக இயங்கும் சக்தியுடையதாக இருக்கவேண்டும். அதாவது, ஒரு நாடு மற்றொரு நாட்டுக்குக் கடன்பட்டால் தங்கம் ஏற்றுமதி யாக வேண்டும். இதன் பலனுகச் செலாவணிச் சுருக்கம் ஏற்பட வேண்டும். செலாவணிச் சுருக்கம் விலைவாசியைக் குறைக்கும். வெளிநாட்டுக்குச் செலுத்தவேண்டிய கடன் நீங்குவதுடன் அதற்குக் காரணமாயிருந்த விலையேற்றமும் தாழ்வடையும். வெளிநாடு நம் நாட்டுக்குக் கடன்பட்டிருந்தால் நாம் தங்கம் இறக்குமதி செய்ய வேண்டும். முழு வளர்ச்சிபெற்ற பொன் நாணயத் திட்டம் இப்படித் தாளுக இயங்கும் சக்தியைக் கொண்டுள்ளது. நமது செலாவணி முறை இப்படியமையவில்லை. மேலும், ஒரு நாட்டின் செலாவணி முறை நன்ருக இயங்கவேண்டுமென்ருல் அதற்கு ஒரு மையப் பாங்கு இன்றியமையாதது. பாங்கிச் செலாவணியையும், மற்றச் செலாவணியையும் இந்த மையப்பாங்கு நிருவகிக்கவேண்டும். இல்லாவிடில் செலாவணிக்கட்டுப்பாடு செய்தல் கடினமாகும். ஆனல், இந்தியாவில் மையப் பாங்கு இல்லாததால் செலாவணி முறை நாட்டின் வர்த்தகத்திற்கும், மக்களின் தேவைக்கும் ஏற்றபடி

நிருவகிக்கப்படவில்லை. மறைமுகப் பொன் நாணயத் திட்டம் எளிய முறையல்ல. போதிய நெகிழ்ச்சி இதிலில்லை. காப்பு நிதிகளின் உபயோகங்கள் சரியாக வரையறுக்கப்படவில்லை என்று பலர் கருதினர்.

மறைமுகப் பொன் நாணயத்திட்டத்தில் மேற்கூறிய குறைகளிருந்தபோதிலும் அதன் சிறந்த அம்சங்களை மறக்கலாகாது. வெள்ளி நாணய முறையை இந்தியா பின்பற்றியபொழுது ரூபாய்-பவுன் வீத மதிப்பை நிலைநாட்ட முடியவில்லை. ஆனால், மறைமுகத் திட்டத்தில் இந்த வீத மதிப்பை நாம் நீண்டகாலம் நிலைப்படுத்த முடிந்தது. மறைமுகத் திட்டத்தைக் குறைகூறும் சிலர் இந்த உண்மையைக்கூட ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர்கள். 1907-8 இல் இத்திட்டம் ஓர் உண்மையான சோதனைக்குட்பட்டது. அவ்வமயம் அரசாங்கம் புதிய வரிகள் மூலம் வருவாயைப் பெருக்காமல் இத்திட்டத்தைப் பின்பற்ற முடியவில்லை. சாதகமான சூழ்நிலையில்தான் இத்திட்டம் இயங்குமென்பது இவர்கள் கருத்து. ஒரு சிறந்த செலாவணி முறை செய்யவேண்டிய வேலைகள் இரண்டு : (1) உள்நாட்டுச் செலாவணிக்கும் மற்ற நாடுகளின் செலாவணிக்குமிடையேயுள்ள வீத மதிப்பை நிலைப்படுத்த வேண்டும். (2) உள்நாட்டில் செலாவணியின் மதிப்பு, அதாவது விலைவாசிகள் மாறுபாடடையாமல் ஒரே நிலையிலிருக்கும்படி செய்யவேண்டும். இந்த இரண்டில் முதல் பணியைப் பொன் மறைமுக நாணயத் திட்டம் செவ்வனே செய்தது. ஆனால், அதைவிட முக்கியமான இரண்டாவது பணியை அது சரிவரச் செய்யவில்லை. ஆனால், அக்காலத்தில் விலைவாசிகள் கட்டுப்பாட்டைவிட நாணயத்தின் புற மதிப்பைக் காப்பாற்றுவதே சிறந்ததென்று கருதினர்.

எனவே, 1925-ஆம் ஆண்டு இங்கிலாந்தில் பொன் நாணய முறை மீட்கப்பட்டவுடன், இந்தியச் செலாவணி முறையைப் பரிசீலனை செய்து, அதன் முன்னேற்றத்திற்கு வேண்டிய சிபாரிசுகளை அரசினருக்கு அளிக்க ஹில்ட்டன் யங் (Hilton Young) என்பவர் தலைமையில் ஒரு குழு நியமித்தனர். இக்குழுவினர் தங்க உலோக முறை (Gold Bullion Standard) இந்தியாவிற்கு உகந்தது என்று முடிவு செய்தனர்.

தங்க நாணயத் திட்டத்தில் பலவகைகள் உள. முதல் உலகப் போருக்குமுன் இங்கிலாந்து பின்பற்றிய முறையை முழு வளர்ச்சி பெற்ற பொன் நாணயத் திட்டம்(Full Gold Standard) என்பர். இந்தியா பின்பற்றிய திட்டத்தை மறைமுகப் பொன் நாணயத்

திட்டம் (Gold Exchange Standard) என்பர். 1925-இலிருந்து இங்கிலாந்து பின்பற்றிய திட்டத்தைப் பொன் உலோகத் திட்டமென்று சொல்லலாம். இத்திட்டப்படி பொன் நாணயங்கள் புழக்கத்திலிருக்கவேண்டாம். உலகப் போருக்குப்பின் பொன் நாணயங்கள் பல நாடுகளில் புழக்கத்திலிருந்து நீங்கிவிட்டன. இந்த நாணயங்களின் உபயோகம் ஒரு காலத்தில் இங்கிலாந்திற்கு ஒரு தனி மதிப்பையும் பெருமையையும் அளித்தது. ஆனல், போருக்குப்பின் இவை தேவையல்லவென்பதைப் பலர் உணர்ந்தனர். ஆனல், பொன் உலோக முறைப்படி செலாவணிக்கும் பொன்னுக்குமிடையே ஒரு வீத மதிப்பு இருத்தல் வேண்டும். அரசாங்கம் இந்த விலையில் தங்கத்தை வாங்கவும், விற்கவும் தயாராக இருக்கும். இப்படிச் செய்வதால் பொன்னுக்கு அரசாங்கம் ஏற்படுத்திய மதிப்பு (விலை) மாருமல் ஒரே நிலையிலிருக்கும் தங்கத்தை மக்கள் விருப்பம் போல் ஏற்றுமதியோ இறக்குமதியோ செய்யலாம்.

ஹில்ட்டன் யங் குழுவினர் கீழ்க்கண்ட செலாவணிச் சீர்திருத்தங்களைச் சிபாரிசு செய்தனர். பொன் நாணயங்கள் புழக்கத்திலிருக்கவேண்டாம். சாவரின் நாணயங்கள் சட்டபூர்வமானவையாக இருத்தல் கூடாது. செலாவணித் தாள்களும், ரூபாய் நாணயங்களும் புழக்கத்திலிருக்கவேண்டும். அரசாங்கம் தாங்கள் ஏற்படுத்திய விலையில் தங்க உலோகத்தை வாங்கவும், விற்கவும் தயாராக இருக்கவேண்டும். அரசாங்கம் மக்களிடம் செலாவணித் தாள்களைப் பெற்றுப் பதிலாக ரூபாய் நாணயங்களைக் கொடுக்க வேண்டுமென்பதில்லை. பழைய செலாவணித் தாள்களை மக்கள் விருப்பம்போல் நாணயங்களாக மாற்றிக் கொள்வதற்கு வசதி செய்யவேண்டும். ஆனல், புதிய தாள்களை இப்படி மாற்ற வேண்டியதில்லை. நாட்டின் செலாவணி முறையையும், பாங்குச் செலாவணியையும் நிருவாகம் செய்ய மையப் பாங்கு (Central Bank) ஒன்றை ரிசர்வ் பாங்கு என்ற பெயரில் நிறுவனம் செய்யவேண்டும். ஒரு ரூபாய்த் தாள்களை அச்சிட்டுச் சட்டபூர்வமான செலாவணியாக வெளியிடலாம்.

பழைய பொன் நாணயத் திட்டக் காப்புநிதியும், செலாவணித் தாள் காப்பு நிதியும் தனித்தனியாக இருக்கக்கூடாது. அவற்றை ஒன்றுபடுத்தவேண்டும். செலாவணி முறை தாளுக இயங்கும் சக்தியைக் காப்பு நிதியின் அமைப்பு கொடுக்கவேண்டும். இந்த விதியையொட்டிக் காப்பு நிதியைப் பற்றிய சட்டத்தை இயற்றவேண்டும். காப்பு நிதியை விகித முறையில் (Proportional Reserve System) அமைக்கவேண்டும். காப்பு நிதியில் வாணிப உண்டியல்களிருக்கவேண்டும். வாணிப உண்டியல்கள் செலாவணி

முறைக்கு நெகிழ்ச்சியைக் கொடுக்கும். காப்பு நிதியில் 40 சத வீதத்திற்குக் குறையாமல் தங்க உலோகமும் பத்திரங்களும் இருத்தல் வேண்டும். தங்க உலோகமிருந்தால்தான் அதன் விலையை நிலை நாட்ட முடியும். புதிய செலாவணித் திட்டத்தில் வெள்ளி உலோகத்தைக் காப்பு நிதியாகப் பயன்படுத்த வேண்டாம். எனினும், இந்தியாவில் ரூபாய் நாணயம் புழக்கத்திலிருப்பதால் வெள்ளி உலோகம் தேவைப்படும்.

அரசாங்கம் பத்திரங்கள் விற்பனை செய்யவேண்டும். இந்தப் பத்திரங்களை வாங்கும் மக்கள் மூன்றாண்டுகளுக்குப்பின் பத்திரங்களைக் கொடுத்து அவற்றின் தொகையை வட்டியுடன் பெற்றுக் கொள்ளலாம் அல்லது தங்க உலோகத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

ஹில்ட்டன் யங் குழுவினர் சிபாரிசு செய்த பொன் உலோக முறையில் பல நலன்கள் உள. பொன் நாணயத் திட்டத்திலுள்ள எல்லா நன்மைகளும் இத்திட்டத்தில் இருக்கின்றன. இந்த முறை எளியதானதோடல்லாமல் தானாக இயங்கும் சக்தியுமுடையது. பொன் நாணயம் புழக்கத்திலிருக்கவேண்டாம். இதன் முக்கியமான அம்சம் இத்திட்டத்தின் நெகிழ்ச்சியேயாகும். மேலும் 1925-இலிருந்து இங்கிலாந்து இத் திட்டத்தைப் பின்பற்றியது. ஆனால், இந்தியா முழு வளர்ச்சிபெற்ற பொன் நாணய முறையைப் பின்பற்றலாமென்று சிலர் கருதினர். இத்திட்டம் நல்ல முறையில் இயங்குவதற்கு வேண்டிய சூழ்நிலை இந்தியாவில் 1925-இல் இருந்தது என்பது இவர்கள் கருத்து.

தங்க உலோகத்திற்கு இக்குழுவினர் கொடுத்த மதிப்பு ரூ. 1 = 1 ஷி. 6 பெ. என்ற விகிதத்தையொட்டி இருந்தது. ரூபாய்க்குக் கொடுத்த இந்த மதிப்பைப்பற்றிக் குழுவினரிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டது. குழுவினர் முடிவு சரியா தவறா என்பதை நாம் சற்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரு நாணயத்தின் உள்நாட்டு மதிப்புக்கும் அகமதிப்புக்கும் (Internal value) வெளிநாட்டு மதிப்புக்கும் புறமதிப்புக்கும் (External value) பொருத்தமிருக்க வேண்டும். அதாவது, உள்நாட்டில் நிலவும் விலைவாசிக்கும் உலகத்தில் நிலவும் விலைவாசிக்கும் ஒரு பொருத்தம் வேண்டும். உள்நாட்டில் விலைகள் குறைவாகவும் அயல்நாடுகளில் அதிகமாகவும் இருப்பின் ஏற்றுமதி அதிகரிக்கும். உள்நாட்டில் விலைவாசி அதிகமாக இருந்தால் இறக்குமதி அதிகரிக்கும். அதாவது, ரூ. 1 = 1 ஷி. 6 பெ. என்றிருந்தால் ஒரு ரூபாய் இந்தியாவில் எவ்வளவு பொருளை வாங்க முடியுமோ அதே அளவை 1 ஷில்லிங் 6 பென்சு இங்கிலாந்தில்

வாங்கவேண்டும். ஒரு ரூபாய் இந்தியாவில் அதிகமான பொருளை வாங்குமென்றால், இந்திய விலைகள் இங்கிலாந்து விலைகளைவிடக் குறைவு. ஆங்கிலேயர்கள் இந்தியாவில் பொருள் வாங்குவார்கள்; நம் ஏற்றுமதி அதிகரிக்கும்; இறக்குமதி குறையும். நம் நாட்டுச் செலாவணியின் மதிப்புக்கும், விலைவாசிக்கும் ஒரு பொருத்தம் ஏற்படும் வரை இந்த நிலை நீடிக்கும். ஒரு நாட்டுச் செலாவணிக்குச் சரியான மதிப்பை நாம் கொடுத்தால் அதன் இறக்குமதியும் ஏற்றுமதியும் ஒன்றாகவே இருக்கும்.

1926-இல் ஹில்ட்டன் யங் குழுவினர், இந்தியாவில் நிலவிய விலைவாசிக்கும் 1 ஷி. 6 பெ. என்ற ரூபாயின் மதிப்புக்கும் ஒரு பொருத்தம் ஏற்பட்டுவிட்டது என்று கருதினர். ரூபாயின் மதிப்பை வேறு விதமாக மாற்றினால், புதிய மதிப்புக்கும் விலைகளுக்கும் பொருத்தமேற்படும்வரை பல இடையூறுகள் ஏற்படுமென்றனர். உழைப்பாளிகளின் கூலியும் (wages) இந்த மதிப்புக்கேற்றபடி அமைந்திருந்தது. ஆகவே, இதுதான் ரூபாயின் உண்மையான மதிப்பென்றும், இதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் குழுவினர் முடிவு செய்தனர். 1 ஷி. 4 பெ. என்ற மதிப்பை ஏற்றுக்கொண்டால் அரசாங்கத்தின் நிதி இதனால் பாதிக்கப்படும்.

ஆனால், 1 ஷி. 4 பெ. என்பதுதான் ரூபாயின் இயற்கையான மதிப்பென்று சிலர் கருதினர். குழுவின் அங்கத்தினராகிய புருஷோத்தம தாஸ் தாகூர்தாஸ் என்பவர் 1 ஷி. 4. பெ. என்ற மதிப்பையே அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தினார். 1 ஷி. 6 பெ. என்ற மதிப்புக்கும், விலைகள், கூலி முதலியவற்றிற்கும் இந்தியாவில் பொருத்தமேற்படவில்லையென்றும் இந்தப் பொருத்தம் ஏற்படும் வரை பல தொல்லைகள் எழுமென்றும் கூறினார். 1 ஷி. 4 பெ. என்ற மதிப்புத்தான் சரியானது. 1 ஷி. 6 பெ. என்ற மதிப்பை நிலைப்படுத்தினால் இங்கிலாந்திலுள்ள ஏற்றுமதியாளர்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பு கிடைக்கும். இந்தியாவின் இறக்குமதி அதிகரிக்கும். நம் நாட்டுத் தொழில்கள் பாதிக்கப்படும். இதனால் பல தொழிலாளிகள் வேலையை இழக்கவும் நேரிடும். மேலும், முதல் முதல் உலகப் போர் ஆரம்பமாகும் வரை 1 ஷி. 4 பெ. என்ற மதிப்பு நிலவியது. இந்த இயற்கையான மதிப்பு மாறியதற்குக் காரணம் உலகப் போரே. எனவே, 1926-இல் மீண்டும் இந்த மதிப்பை நிலைப்படுத்துவதற்கேற்ற சூழ்நிலை இந்தியாவிலிருந்தது என்பது சிலர் கருத்து.

ரூபாயின் மதிப்பைப்பற்றிக் குழுவினர் வந்த முடிவுக்குச் சரியான பல காரணங்கள் உள. 1 ஷி. 4 பெ. என்ற மதிப்பை

4

ஏற்றுக்கொண்டால் அரசாங்கத்தின் செலவு அதிகரிக்கும். போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது நடுத்தர வகுப்பினர் விலையேற்றம், பற்றுக்குறை முதலிய பல தொல்லைகளுக்கு இலக்கானார்கள். 1 ஷி. 4 பெ. என்ற மதிப்பு உள்நாட்டில் விலைவாசியை $12\frac{1}{2}$ சதவீத அளவுக்கு உயர்த்திவிடும். இவர்கள் பொருட்டு விலைகளைக் குறைக்கவேண்டுமென்று புதிய மதிப்பை ஹில்ட்டன் யங் குழுவினர் சிபாரிசு செய்தனர். பழைய மதிப்பைச் சரியானதென்று வாதாடியவர்கள் பணச்சுருக்க மூலம் அரசாங்கம் புதிய மதிப்பை அமுலில் கொண்டு வந்ததென்று சுட்டிக் காட்டினர். இக்கூற்று தவறானது. ஏனெனில், இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற மேலைநாடுகள் செய்த அளவு இந்திய அரசாங்கம் பணச்சுருக்கமே செய்யவில்லை. மேலும், பணச்சுருக்கம் உடனடியாக நாணயத்தின் வெளிநாட்டு மதிப்பை (External value) பாதிக்காது. மேலும், இந்தியாவில் மிகச் சிறிய அளவிலேயே பணச்சுருக்கம் செய்தனர். எனவே, ரூபாயின் இயற்கை மதிப்பு பணச்சுருக்கத்தால் மாறிவிட்டதென்பது சரியல்ல.

ரூபாயின் புதிய மதிப்பு விவசாயிகளின் கடன் தொல்லையைப் பெருக்கிவிடும் என்ற எண்ணமும் தவறானதே. இதற்கு ஈடாக விலைக்குறைவால் அவர்களுக்குப் பல நலன்கள் கிட்டும் என்று சிலர் எடுத்துக்காட்டினர்.

நாட்டுச் செலாவணி நிருவாகம் அரசாங்கத்தினரிடமும், பாங்குச் செலாவணி நிருவாகம் இம்பீரியல் பாங்கினரிடமும் இருந்தன. பாங்குச் செலாவணி நிருவாகம் சரியான முறையில் வளர்ச்சி பெறவில்லை. இந்த நிலை சிறந்த செலாவணி முறைக்குப் பொருத்தமானதல்ல. செலாவணியைப்பற்றிய திட்டங்களை வகுக்கவும் அவற்றைச் செவ்வனே செயலாற்றவும் இந்த நிலை இடங் கொடுக்கவில்லையாகையால், இதை மாற்றியமைக்கவேண்டு மென்று ஹில்ட்டன் யங் குழுவினர் கருதினர். பாங்குச் செலாவணியும், செலாவணித் தாள் அச்சிடலும் ஒரே நிருவாகத்தின் கீழ் இருக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் ஹில்ட்டன் யங் குழவினர் 'இந்தியாவின் ரிசர்வ் பாங்கு' (Reserve Bank of India) என்ற ஒரு மையப் பாங்கை நிறுவனம் செய்யவேண்டுமென்று சிபாரிசு செய்தனர். ஐந்து கோடி ரூபாய் மூலதனத்துடன் இந்தப் பாங்கை ஆரம்பிக்கவேண்டும். பதினன்கு அங்கத்தினர்களடங்கிய ஒரு குழுவினரிடம் இதன் நிருவாகம் ஒப்புவிக்கப்படவேண்டும். இக் குழுவில் பாங்கு நிருவாகத் தலைவர் ஒருவரும், துணைத் தலைவர் ஒருவரும் (Managing Governor and Deputy Managing Governor) இருக்கவேண்டும். இவ்விருவரையும் அரசாங்கம் நியமனம் செய்ய வேண்டும். கவர்னர் ஜெனரலின் நிருவாகக் குழு அங்கத்தினர்

களும், சட்டசபை அங்கத்தினர்களும், மாநில அரசாங்கத்தில் பதவி வகிப்பவர்களும் இந்தப் பாங்கின் மையக் குழுவிலோ பிராந்தியக் குழுவிலோ அங்கத்தினராக இருத்தல் கூடாதென முடிவு செய்தனர். மற்றப் பாங்குகளின் நிருவாகத்தின் தொடர்பு கொண்டவர்களும் இந்த விதிக்குட்பட்டவர்களாவர்.

இந்தியாவுக்கு மையப் பாங்கு ஒன்று வேண்டுமென்பதை முதன் முதலாக ஹில்ட்டன் குழுவினர் உணர்ந்தனர். தானுக இயங்கும் செலாவணி முறையே நாட்டுக்குச் சிறந்தது என்று எண்ணியவர்கள் மையப் பாங்கின் முக்கியத்துவத்தை உணரவில்லை. ஏனெனில், செலாவணி முறை தானுகவே இயங்கவேண்டுமென்றும், அதை அரசாங்கம் நிருவகிக்கக் கூடாதென்றும் அவர்கள் கருதினர். ஆனல், இக்கருத்தைப் பலர் விரைவில் கைவிட்டனர். எனவே, இந்தியாவுக்கு ஒரு மையப் பாங்கு இன்றியமையாதது என்பதை இக் குழுவினர் வலியுறுத்தினுர்கள். இவர்கள் சிபாரிசு செய்த நாணயச் சீரமைப்பில் மையப் பாங்கு மிக முக்கியமான இடம் பெற்றது. இந்தப் பாங்கின் நிருவாகத்தை அரசாங்கம் மேற்கொள்ளக்கூடாதென்று குழுவினர் கருதினர். இந்தியாவுக்குப் பாங்கு முறை புதியதாகும். இது செம்மையான முறையில் வளர வேண்டும். மேலும், மக்கள் இதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். இப் பணிகளைத் தனியார் துறையில் நிருவகிக்கப்படும் பாங்கே சரிவரச் செய்யும். தொழிலும், வர்த்தகமும், ஒரு நாட்டின் பாங்கு முறையினுல் சிறந்த பயனடையவேண்டுமானுல், ரிசர்வ் பாங்கு ஒரு கூட்டுப் பங்குப் பாங்காக (Joint Stock Bank) இருத்தல்வேண்டும். மையப் பாங்கு அரசாங்கத்தின் சட்டதிட்டங்களுக்கும், விதிகளுக்கும் அப்பால் இருத்தல் நலமென்பது பலர் கருத்து.

ரிசர்வ் பாங்கு மையப் பாங்கின் வேலைகளனைத்தையும் மேற்கொள்ளவேண்டும். செலாவணித் தாள் வெளியீடு, மத்திய மாநில அரசாங்கங்களின் நிதியை டெபாசிட்டாக ஏற்றுக் கொள்ளுதல், அரசாங்கத்தின் சார்பில் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்துதல் முதலியவை இந்த ரிசர்வ் பாங்கின் முக்கியமான வேலைகள். இந்திய நாணயத்தின் வெளிநாட்டு மதிப்பையும், உள்நாட்டு மதிப்பையும், நிலைப்படுத்துவதும் அதன் பொறுப்பாகும். இந்தப் பாங்கு, நாணயத் தாள் நிருவாகத்தையும் மேற்கொள்ளவேண்டும்.

மையப் பாங்கின் பொறுப்புக்களை இம்பீரியல் பாங்கிடம் ஒப்புவிக்கலாமென்று சிலர் கூறினர். ஆனல், இதை ஹில்ட்டன் யங் குழுவினர் ஏற்றுக் கொள்ளவில்லை. நாட்டின் வர்த்தகத்திற்கு

வேண்டிய பாங்கு வசதிகளை இம்பீரியல் பாங்கு பெருக்குவதற்கு உதவியாக இருந்ததால், அதனிடம் மையப் பாங்குப் பணிகளைச் சுமத்துவது சரியல்ல என்பதைக் குழுவினர் உணர்ந்தனர். ஆனால், புருஷோத்தம தாஸ் தாகூர் தாஸ் என்பவர் இம்பீரியல் பாங்கை ஒரு மையப் பாங்காக வளர்க்கவேண்டுமென்றார். இல்லையேல் இந்த பாங்குக்கும், ரிசர்வ் பாங்குக்கும் போட்டி ஏற்படும் என்று அவர் எண்ணினார்.

பொன் உலோக முறையின் அடிப்படையிலமைந்த மேற்கண்ட சிபாரிசுகளை ஹில்ட்டன் குழுவினர் செய்தனர். இந்திய அரசாங்க நிதி இலாகாவினர் பொன் நாணய முறையில் ஒரு திட்டம் வகுத்து ஹில்ட்டன் யங் குழுவினரிடம் கொடுத்தனர். கீழ்க்கண்டவை இத்திட்டத்தின் முக்கிய அம்சங்களாகும்.

செலாவணித் தாள்களும், தங்க நாணயங்களும் வரையறையற்ற சட்டபூர்வமான நாணயங்களாக வேண்டும். ரூபாய் நாணயங்கள் சில காலம் வரையறையற்ற சட்டபூர்வமான நாணயமாக இருத்தல் வேண்டும். பிறகு அது ஐம்பது ரூபாய் வரை சட்ட பூர்வமானதாக இருக்கவேண்டும். தங்க உலோகத்தைப் பெற்றுக் கொண்டு மக்களுக்கு அரசாங்கம் தங்க நாணயம் கொடுக்கவேண்டும். செலாவணித் தாள்களை எளிதில் பொன் நாணயமாக மாற்றுவதற்கு வசதி ஏற்படுத்தவேண்டும். செலாவணித் தாள் நிருவாகம் இம்பீரியல் பாங்கிடம் ஒப்புவிக்கப்படவேண்டும். காப்பு நிதியில் தங்க உலோகமும் பத்திரங்களும் இருக்கவேண்டும். ஆனால், ஹில்ட்டன் யங் குழுவினர் இத்திட்டத்தை நிராகரித்தனர். இத்திட்டத்துக்கு வேண்டிய உலோகம் இந்தியாவுக்கு எப்பொழுதும் கிடைக்குமென்று சொல்ல முடியாது. வெள்ளி விலை இறங்குவதால் ஏற்படும் இக்கட்டான நிலைமையைச் சமாளிப்பது கடினம். நமக்கு வேண்டிய பொன்னை இங்கிலாந்து, அமெரிக்க நாடுகளிடம் பெறவேண்டும். இந்த நாடுகளில் இந்தியப் பொன் நாணயத் திட்டத்திற்கு ஆதரவு கிடைக்காது. மேலும், இத் திட்டம் சிக்கனமானதல்ல. முதல் உலகப் போருக்குப்பின் முற்போக்கான நாடுகள் பொன் நாணயத்தைக் கைவிட்டன. ஆகவே, ஹில்ட்டன் யங் குழுவினர் இத்திட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தனர்.

அரசாங்கம் குழுவின் முடிவுகளை ஏற்றுக்கொண்டு, 1927-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அவைகளைச் செயலில் கொண்டுவர ஒரு மசோதாவைச் சட்ட சபையில் புகுத்தியது. ரிசர்வ் பாங்கை நிறுவனம் செய்வதும், பொன் உலோக முறையை ஏற்படுத்துவதும் இந்த மசோதாவின் நோக்கமாகும். இச்சட்டத்தை எதிர்க்கட்சி அங்கத்

தினர்கள் ஏற்க மறுத்தனர். சட்டசபை அங்கத்தினர்கள் ரிசர்வ் பாங்கு நிருவாக சபை அங்கத்தினர்களாக இருத்தல் கூடாதென்பதை இவர்கள் விரும்பவில்லை. ஆகையால், இந்த மசோதா சட்டமாக வில்லை. ரிசர்வ் பாங்கையும் நிறுவனம் செய்யவில்லை. பொன் உலோகத் திட்டமும் அமுலில் வரவில்லை. ஆனால், 1927-ஆம் ஆண்டுச் சட்டம் பொன் உலோக மதிப்பை ஒரு தோலா ரூ. 21-3-10 என்ற வீதத்தில் நிலைநாட்டியது. இதன்படி ரூ. 1 = 1 ஷி. 6 பெ. என்ற வீதமும் அமுலில் வந்தது. மக்கள் இந்த வீதத்தில் அரசாங் கத்தினரிடம் பவுனையோ தங்க உலோகத்தையோ வாங்கிக் கொள்ளலாம். ஆனால், 1065 தோலாவுக்குக் குறைவாகத் தங்கம் வாங்க முடியாது, ஒரு ரூபாய்க்கு 1 ஷி. 5$\frac{49}{64}$ பெ. கொடுத்தனர். பொன் உலோகத் திட்டம் அமுலில் வரவில்லை. அரசாங்கம் ரூபாய்க்குப் பதிலாகத் தங்கம் கொடுக்கவேண்டுமென்று 1927-ஆம் ஆண்டுச் சட்டம் வற்புறுத்தவில்லை. மேலும், ரூபாய்க்குப் பதிலாக நடை முறையில் பவுனையே கொடுத்தனர். சாவரின் நாணயத்தை இச்சட்டம் புழக்கத்திலிருந்து நீக்கியபோதிலும், இந்த நாணயங்களை அரசாங்க அலுவலகங்களில் 1 தோலா = ரூ. 23-3-10 என்ற வீதத்தில் பெற்றுக் கொண்டனர்.

ஹில்ட்டன் யங் குழுவினரது முடிவுகளையும், 1920-ஆம் ஆண்டுச் சட்டத்தையும் சிறிது ஆலோசித்துப் பார்க்கவேண்டும். மறைமுகப் பொன் நாணயத் திட்டத்தில் பல குறைகள் இருந்தன என்று அதைப் புறக்கணித்து, அதைவிடச் சிறந்த முறையென்று பொன் உலோக முறையை இக் குழுவினர் சிபாரிசு செய்தனர். ஆனால், 1927-ஆம் ஆண்டுச் சட்டம் ரூபாய்க்கும் பவுனுக்கு மிடையே ஒரு வீத மதிப்பை ஏற்படுத்தியது. இந்த விதமாகப் பொன் உலோக முறை ஏற்படுத்துவதற்குப் பதிலாக ரூபாய்-ஸ்டெர்லிங் முறையை (Sterling Exchange Standard) இந்தியாவில் ஆரம் பித்துவிட்டார்கள். இங்கிலாந்து பொன் உலோக முறையைப் பின் பற்றியதால் ஸ்டெர்லிங் நாணயத்தைத் தங்கமாக மாற்ற முடியும். ஆகவே, ஹில்ட்டன் யங் குழுவினரால் புறக்கணிக்கப்பட்ட பழைய மறைமுகப் பொன் நாணயத் திட்டத்தையே இந்தியா மீண்டும் தொடர்ந்து பின்பற்றியது.

## பொருளாதார மந்தமும் இந்தியச் செலாவணியும்

1927-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் செலாவணிச் சட்டத்தை அமுலில் கொண்டுவந்தனர். 1927-முதல் 1929 வரை இந்தியா வின் வெளிநாட்டு வர்த்தகம் வளர்ந்தது. ஏற்றுமதி, இறக்குமதி

முதலியவற்றின் மதிப்பு உயர்ந்தது. வர்த்தகம் முன்னேறியதற்கு புதிய ரூபாயின் மதிப்பே காரணம் என்று எண்ணுவது தவறு. ரூ. 1=1 ஷி. 4 பெ. என்ற மதிப்பை நிலைநாட்டியிருந்தால், நமது வர்த்தகம் மேலும் செழித்தோங்கி வளர்ந்திருக்கும். 1929-இல் ஒரு கடுமையான பொருளாதார மந்தம் (depression) உலகைத் தாக்கியது. மேல்நாடுகளுக்கு நிலைமையைச் சமாளிப்பது மிகக் கடினமாயிற்று. விலை வாசிகள் உலகெங்கும் குறைந்தன. விவசாயப் பொருள்களின் விலைகள் மற்றப் பொருள்களின் விலையைவிட விரைவில் குறைந்தன. விவசாயக் கச்சாப் பொருள்களை உற்பத்தி செய்யும் நாடாகிய இந்தியா பாதிக்கப்பட்டது. ரூபாயின் மதிப்பு இதன் விளைவாகக் குறைந்தது. நிலைமையைச் சமாளிக்க அரசாங்கம் கருவூல உண்டியல்களை (Treasury Bills) விற்பனை செய்தது. எதிர் உண்டியல்களையும் விற்பனை செய்தனர்.

1927-ஆம் ஆண்டுச் சட்டமும் நடவடிக்கைகளும் தற்காலிகமானவை. பொன் உலோகத் திட்டத்தை இந்தியாவில் உருவாக்க வேண்டுமென்பது அரசாங்கத்தின் கொள்கை. இந்தக் கொள்கையை நடைமுறையில் கொண்டுவர முடியாததற்குப் பொருளாதார மந்தமும் அதைத் தொடர்ந்து ஏற்பட்ட நெருக்கடியும் காரணமாகும். 1931-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இங்கிலாந்து பொன் உலோக முறையைக் கைவிட வேண்டியதாயிற்று. உடனே இந்திய அரசாங்கமும் தங்கம் அல்லது பவுன் விற்பனையை நிறுத்தி விடுவோம் என்று ஓர் அறிக்கை விடுத்தது. ஆனால், மீண்டும் பவுன் விற்பனையைத் தொடங்குவோமென்றும், குறிப்பிட்ட சில பாங்குகளுக்கு மட்டும் முக்கியமான காரணங்களுக்காகப் பவுன் விற்பனை செய்வோமென்றும் இந்திய அரசாங்கம் இரண்டாவது அறிக்கை விடுத்தது. இதன் நோக்கம் நாணயப் பரிவர்த்தனையில் (Exchange) ஊகவாணிகத்தை (Speculation) ஒழிக்கவேண்டுமென்பது. இந்த விதமாகக் கட்டுப்படுத்தப்பட்ட ரூபாய்-ஸ்டெர்லிங் முறை (Controlled Sterling Exchange Standard) இயங்கியது.

இந்திய நாணயத்துக்குச் சரியான மதிப்பை அரசாங்கம் கொடுக்கவில்லை என்றும், அதனால் பல தொல்லைகள் எழுந்தன வென்றும் பலர் கருதினர். 1924-ஆம் ஆண்டு ரூபாய் மதிப்பை 1 ஷி. 4 பெ. என்று நிலைநாட்டியிருக்கலாம். ஆனால், அந்த அரிய சந்தர்ப்பத்தை அரசாங்கம் பயன்படுத்திக்கொள்ளவில்லையென்றும் இவர்கள் நினைத்தார்கள். 1921-ஆம் ஆண்டு சர். வித்தல் தாஸ் தாக்கர்சே என்பவர் ரூபாய் மதிப்பை மாற்றுவதற்கு ஒரு மசோதாவைச் சட்ட சபையில் கொண்டுவந்தார். ஆனால், அதை அரசாங்கம் மறுத்துவிட்டது. மீண்டும் பலமுறை இப்பிரச்சினை சட்டசபை

யில் எழுந்தது. ஆனால், அரசாங்கம் தங்கள் கொள்கையைச் சிறி தும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. பொருளாதார மந்தம் ஏற்படும்வரை புதிய வீத மதிப்பை நிலைப்படுத்துவது எளிதாக இருந் தது. 1931-க்குப்பிறகு இது மிகக் கடினமாகிவிட்டது.

**இந்த நிலையில் அரசாங்கம் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுத்திருக்கலாம் :**

(1) ரூபாயின் மதிப்பைத் தங்கம் பவுன் முதலிய எதனுடனும் இணைக்காமலிருத்தல். அதாவது, ரூபாய்க்கும் இவற் றிற்கும் எந்த வீத மதிப்பையும் ஏற்படுத்தாமலிருத்தல். இப்படிச் செய்தால் நாணயத்தின் மதிப்பை இயற்கைச் சக்திகளே நிர்ணயிக்கும்.

(2) ரூபாய்க்கும் பவுனுக்குமிடையே ஒரு வீத மதிப்பேற் படுத்துவது.

(3) ரூபாய்க்கும் தங்கத்திற்குமிடையே ஒரு மதிப்பை நிலை நாட்டல்.

தங்க உலோகத்துடன் ரூபாய் மதிப்பை இணைத்தால் வீத மதிப்பைக் காப்பாற்ற அரசாங்கம் வேண்டிய அளவு தங்கம் வைத் திருக்கவேண்டும். ஆனால், அப்பொழுது இந்த உலோகம் வேண் டிய அளவு இல்லை. 1931-ஆம் ஆண்டு இங்கிலாந்து பொன் உலோக நாணயத் திட்டத்தைக் கைவிட்டது. ஆகையால், பவுன் நாணயத்தின் தங்க விலை மாறிக் கொண்டே சென்றது. தங்கத்துடன் ரூபாயின் மதிப்பை இணைத்தால் ரூபாய்-பவுன் மதிப்பு இந்த மாறு தல்களால் பாதிக்கப்படும். இதனால் நம் நாட்டு வர்த்தகம் பாதிக் கப்படும். ரூபாயை எதனுடனும் இணைக்காமல் விட்டிருக்கலாம். உள்நாட்டில் உற்பத்தியைப் பெருக்குவதற்கும், விலைவாசியை நாட் டின் பொருளாதாரத்திற்கேற்றபடி கட்டுப்படுத்துவதற்கும் இந்தக் கொள்கை ஏற்றதாக அமையும். ஆனால், இக்கொள்கையைப் பின் பற்றுவது கடினம். ஆகவே, அரசாங்கம் ரூபாய்-பவுன் மதிப்பை நீட்டித்து நிலைநாட்டியது.

1931-இலிருந்து பவுன் நாணயத்தின் மதிப்பு தாழ்வடைந்து கொண்டே சென்றது. அதனுடன் இணைக்கப்பட்ட ரூபாயின் மதிப் பும் படிப்படியாகக் குறைந்தது. பொன்திட்டத்தைப் பின்பற்றும் நாடுகளின் நாணய மதிப்பு இப்படிக் குறையவில்லை. நாணய மதிப்

புக் குறையாத நாடுகளில் மற்ற நாடுகளின் பொருள் அதிக அளவில் இறக்குமதி செய்யப்படுவது இயற்கை. ஏனெனில், இந்த நாடுகள் குறைந்த தொகையைத் தங்கள் நாணயங்களில் கொடுத்து, அதிக அளவு பொருள்களை மற்ற நாடுகளிலிருந்து பெறமுடியும். இந்தப் பொருளதார விதிக்கு இந்தியா இலக்காயிற்று. நாணயம் மதிப்பிழந்ததால், மற்ற நாடுகளில் நம் பொருள்கள் அதிகம் தேவைப் பட்டன. எனவே, நமது ஏற்றுமதி அதிகரித்தது. ஆனால், பொருளாதார மந்தம் இந்தியாவை மட்டும் தாக்கவில்லை என்பதை நாம் மனத்தில் கொள்ள வேண்டும். எல்லா நாடுகளிலும் விலைவாசிகள் குறைந்தன. ஆகையால், நம்நாட்டு ஏற்றுமதி கட்டுப்பாடின்றி அதிகரிப்பதை ஒரு வாறு தடை செய்தனர். அரசாங்கம் விதித்த ஏற்றுமதி வரியும் (export duty) இதைக் கட்டுப்பாடு செய்தது. ரூபாய் மதிப்பிழந்த தால் அதிக ரூபாயைக் கொடுத்து குறைந்த பொருளை மற்ற நாடு களிலிருந்து நாம் பெறவேண்டியதாயிற்று. இறக்குமதிப் பொருள் களின் விலை உயர்ந்ததால் இறக்குமதி குறைந்துவிட்டது. ரூபாய்-பவுன் மதிப்பை நிலைநாட்டியதால் இந்த விளைவுகள் ஏற்பட்டன. இந்திய அரசாங்கம் இங்கிலாந்திற்குச் செலுத்தவேண்டிய தொகை களை எளிதாகச் செலுத்த, நிலையாக இருந்த ரூபாய்-பவுன் வீத மதிப்பு உதவியது.

1931-இலிருந்து பொன் உலோகத்தின் விலை படிப்படியாக அதிகரித்தது. அந்த ஆண்டு டிசம்பர் மாதம் அதன் விலை ஒரு தோலாவுக்கு 30 ரூபாயாக உயர்ந்தது. விலை உயரவும், தங்கம் நம் நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது. இதன் ஏற்றுமதியின் அளவு 1932-33-இலிருந்து குறைந்தபோதிலும், 1930-இலிருந்து இரண்டாவது உலகப் போர் ஆரம்பமாகும் வரை கணிசமான அளவு உலோகம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. 1930-இல் தொடங்கிய பொருளாதார மந்தம் இந்திய விவசாயத்தையும், தொழிலை யும் கடுமையாகத் தாக்கியது. விவசாயப் பொருள்களின் விலை தாழ் வடைந்தது. வறுமை, பற்றுக்குறை போன்ற காரணங்களால் பலர் தங்களிடமிருந்த பொன்னை விற்பனை செய்யவேண்டியதாயிற்று. பொன் விலை இறங்குவதற்கு முக்கியமான காரணம் பவுன் நாணயம் தன் மதிப்பை இழந்ததேயாகும். ரூபாய் பவுனுடன் இணைக்கப் பட்டதால் அதுவும் தன் மதிப்பை இழந்தது. ரூபாயைப் பவுனுடன் இணைக்காவிடினும் இந்தியாவில் தங்கத்தின் விலை உயர்ந்திருக்கலாம். தங்கத்தின் விலை உயர்வு அதன் ஏற்றுமதிக்குக் காரணமல்ல. இந்தியாவில் தங்கத்தின் விலை உயர்ந்தது. ஆனால், இங்கிலாந்தில் அது இதைவிட அதிகமாக உயர்ந்தது. ரூ. 1=1 ஷி. 4 பெ. என்ற மதிப்பு அமுலிலிருந்ததால், ஒரு ரூபாய்க்கு எவ்வளவு தங்கம் வாங்கமுடியுமோ அதைவிட 1 ஷி. 6 பெ. குறைவாகவே வாங்க

முடியும். ஆகையால் தங்க ஏற்றுமதி இலாபகரமாகிவிட்டது. பவுனுடன் ரூபாயை இணைக்காமலிருந்தால் அதன் மதிப்பு உயர்ந்திருக்கும். ஆனால், நமது வெளிநாட்டு வர்த்தகம் சீர்கேடான நிலையை அடைந்திருக்கும்.

பொன் ஏற்றுமதியால் இந்தியாவின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை (Balance of Payments) முன்னேறியது. இதனால் பொருளாதார மந்தத்தையும், நெருக்கடியையும் மக்கள் ஒருவாறு சமாளித்தனர். இந்தியா செலுத்தவேண்டிய கடன் தொகையையும் பொன் ஏற்றுமதி மூலம் எளிதில் செலுத்தியது. மேலும், இந்திய அரசாங்கம் பவுன் பத்திரங்களைப் பெற முடிந்தது. இப்பத்திரங்கள் நம் காப்பு நிதியைப் பெருக்கின. ஆகவே, பொன் ஏற்றுமதி நாட்டுக்கு நல்ல பலனை அளித்தது. ஆனால், இந்திய மக்களும் வாணிப சங்கங்களும் இதை ஆதரிக்கவில்லை. தங்கத்தின் மதிப்பு உயர்ந்துகொண்டே சென்றது. ஆகையால், அதை நாடு இழப்பது சரியல்ல என்பது பலர் கருத்து. இவர்கள் அரசாங்கம் பொன் ஏற்றுமதியைத் தடைசெய்யவேண்டுமென்றனர்.

ஆனால், உண்மையில் பொன் ஏற்றுமதியால் இந்தியா பாதிக்கப்படவில்லை. எதிர்காலத்தில் பொன் திட்டம் மீட்கப்படுமென்றால், அந்த உலோகத்தை ஏற்றுமதி செய்தது தவறு என்று சொல்வது சரியே. பொன் திட்டத்தை மேல் நாடுகள் புறக்கணித்துவிட்டன. உலகில் எவரும் அதற்குப் புத்துயிரளிக்கத் தயாராக இல்லை. ஆகையால், பொன்னை நம் நாடு சேமித்து வைக்க வேண்டியதில்லை. அரசாங்கம் உலோக ஏற்றுமதியைத் தடை செய்யாமலிருந்தது சரியானதே. பொன் ஏற்றுமதி தடை செய்யப்பட்டிருந்தால், நாம் கடன் தொகையை எளிதாகச் செலுத்தியிருக்கமுடியாது. பவுன் பத்திரங்களையும் பெற்றிருக்கமுடியாது.

1931-இலிருந்து வெள்ளி உலோகமும் ஏற்றுமதி செய்யப்பட்டது. ஆனால், இதன் ஏற்றுமதி தங்கத்தைவிடக் குறைவாகவே இருந்தது. செலாவணித் தாள் காப்பு நிதியிலிருந்த வெள்ளி குறையவேண்டுமென்பது ஹில்ட்டன் யங் குழுவினரது கருத்து. அரசாங்க விற்பனை இந்த உலோகத்தின் விலையைக் குறைத்தது. 1933-ஆம் ஆண்டு வெள்ளியைப்பற்றி உலக நாடுகள் ஒரு முடிவுக்கு வந்தன. இதற்குப்பின் இந்த உலோகத்தின் விலை மாறுபடாமல் நிலையாக இருந்தது.

1934-ஆம் ஆண்டு இந்திய ரிசர்வ் பாங்குச் சட்டத்தை இயற்றினர். இந்தப் பாங்கு ரூ. 1 = 1 ஷி. 6 பெ. என்ற மதிப்பை

நிலைப்படுத்த வேண்டும். ஹில்ட்டன் யங் குழுவினர் சிபாரிசுப்படி, இந்தப் பாங்கு நிறுவனம் செய்யப்பட்டது. ஐந்துகோடி ரூபாய் மூலதனத்துடன் ஒரு தனியார் பாங்காக இதை ஆரம்பித்தனர். ஒவ்வொரு பங்கின் மதிப்பும் ரூ. 100. பதினாறு அங்கத்தினர்கள் கொண்ட ஒரு மையக் குழுவிடம் இதன் நிருவாகத்தை ஒப்புவித்தனர். இக் குழுவில் ஒரு கவர்னரும், இரண்டு துணை கவர்னர்களும், பன்னிரண்டு அங்கத்தினர்களும், ஓர் அரசாங்க அலுவலரும் இருந்தனர். கவர்னர், துணைகவர்னர் உட்பட எட்டு அங்கத்தினர்களை அரசாங்கம் நியமிக்கும். மையக் குழுவைத் தவிர, சென்னை, கல்கத்தா, டில்லி, பம்பாய், இரங்கூன் முதலிய இடங்களில் வட்டாரக் குழுக்கள் நியமிக்கப்பட்டன.

மையப் பாங்கின் பணிகள் யாவையும் ரிசர்வ் பாங்கு மேற்கொள்ளவேண்டுமென்று 1934-ஆம் ஆண்டுச் சட்டத்தில் கண்டிருந்தது. இந்தப் பாங்கு வெளியிடும் செலாவணித் தாள்கள் சட்டபூர்வமானவை. மாநில மத்திய அரசாங்கங்களிடம் பணத்தை டெபாசிட்டாக இந்தப் பாங்கு பெற்றுக்கொண்டு, அவர்கள் சார்பில் செலுத்தவேண்டிய தொகைகளையும் செலுத்துவது இதன் முக்கியமான அலுவல்களில் ஒன்று. அரசாங்க நிதி, வரவுசெலவு, கடன் முதலியவற்றை இந்தப் பாங்கு நிருவாகம் செய்யவேண்டும். குறுகிய காலத்துக்கு ரிசர்வ் பாங்கு அரசாங்கத்திற்குக் கடன் கொடுக்கலாம்.

இந்தப் பாங்கு வாணிப உண்டியல்களை விற்பனை செய்யவோ வாங்கவோ முடியும். சில குறிப்பிட்ட பத்திரங்களையும் வாங்கலாம். இந்தப் பாங்கின் அலுவல்களைப்பற்றி பின்வரும் அதிகாரங்களில் விரிவாகப் பார்ப்போம். இந்தப் பாங்கு செலாவணி முறையைச் சரிவரக் கட்டுப்பாடுசெய்வதில் சில இடர்ப்பாடுகள் உள. நம் நாட்டில் சுதேச பாங்குகள் (Indigenous Banks) பல இருக்கின்றன. இவற்றை ரிசர்வ் பாங்கு எந்த விதத்திலும் கட்டுப்பாடு செய்ய முடியாது. பாங்குத் தொழிலில் பெரும்பகுதி இந்தச் சுதேச பாங்குகளிடமிருப்பதால், ரிசர்வ் பாங்கு செலாவணி நிருவாகத்தைச் சிறந்த முறையில் செய்யமுடியவில்லை.

அரசாங்கத்தின் கொள்கை இந்தியப் பொருளாதார நிலைக்கு உகந்ததா என்பதை நாம் இப்பொழுது பார்ப்போம். 1930-இலிருந்து பொருள்களின் விலை, முக்கியமாக விவசாயப் பொருள்களின் விலை, படிப்படியாக இறங்கியது. நாம் ஏற்றுமதி செய்த பண்டங்களின் விலை இறக்குமதிப் பண்டங்களின் விலையைவிடத் தாழ்வடைந்தது. விலைவாசிகள் தாழ்வடைந்ததால், விவசாயிகள் பல

தொல்லைகளுக்கிலக்கானூர்கள். ஆனூல், நமது ஏற்றுமதி அதிகரித்தது. நாட்டின் வாணிபக் கொடுப்பல் நிலை (Balance of Trade) சாதகமாயிற்று. 1935-36-இல் ரூ. 40 கோடிக்குமேல் வாணிபக் கொடுப்பல் நிலை சாதகமாக இருந்தது. இதற்கு முக்கிய மான காரணம் பொன் ஏற்றுமதிதான். அரசாங்கம் குறுக்கிடாம லிருந்திருப்பின் ரூபாயின் மதிப்பு 1 ஷி. 6 பென்சுக்கு மேல் உயர்ந் திருக்கும்.

ரிசர்வ் பாங்கை நிறுவனம் செய்யும்பொழுது நாட்டுக்கு மீண்டும் ஒரு சிறந்த செலாவணித் திட்டத்தை (Monetary Standard) உருவாக்கும் பிரச்சினை எழுந்தது. 1933-இல் இதற்காக நியமிக்கப்பட்ட குழு செலாவணி முறையைப்பற்றிய முடிவைப் பிறகு எடுத்துக்கொள்ளலாமென்று வற்புறுத்தியது. ஏனெனில் உலக நாடுகள் எப்படித் தங்கள் செலாவணி முறையைத் திருப்பியமைக் கின்றன என்பதை உற்றுநோக்கி, அதற்குப்பின் அந்தப் பிரச் சினையை நம் நாட்டில் எடுத்துக் கொள்ளலாமென்று இக்குழுவினர் கருதினர். ஆகவே, புதிய ரிசர்வ்-பாங்கு, ரூபாய்-ஸ்டெர்லிங் முறையை யொட்டி ரூபாயின் மதிப்பை நிலைநாட்டலாமென்று இவர்கள் முடிவு செய்தனர். மற்ற நாடுகளில் ஏற்படும் மாறுதல்களுக்கேற்ற வாறு நமது செலாவணித் திட்டத்தைத் திருத்தியமைத்தல் நலம். ஆஸ்திரேலியா, அமெரிக்கா, நியூஜிலாந்து முதலிய நாடுகளைப் போல் இந்தியாவும் செலாவணியின் மதிப்பை உடனடியாகத் திருத்தி யமைக்கவேண்டுமென்று சர். புருஷோத்தமதாஸ் தாகூர் தாஸ் என்பவர் வற்புறுத்தினூர். 1 ஷி. 6 பெ. என்ற விகிதத்தைக் குறைப்ப தால் மக்களுக்கு, முக்கியமாக விவசாயிகளுக்குப் பல நலன்களை அளிக்கலாம். ரிசர்வ் பாங்கு மசோதாவைச் சட்டசபை பரிசீலனை செய்துகொண்டிருக்கும்பொழுது, நாடெங்கும் 1 ஷி. 6 பெ. என்ற மதிப்புக்கு எதிர்ப்புக் கிளம்பியது. இந்தியச் செலாவணி இயக்கம் (Indian Currency League) தோன்றியது. அது 1 ஷி. 6 பெ. என்ற வீதத்தை ஏற்றுக்கொள்ள மறுத்துக் கிளர்ச்சி செய்தது. இந்திய வாணிபச் சங்கங்களின் தலைவராகிய மநு சுபேதார் என்பவர் 1935-இல் ரூபாயின் மதிப்பைக் குறைக்கவேண்டுமென்று சர். ஜேம்ஸ் கிரிக் (Sir James Grigg) என்ற இந்திய அரசாங்க நிதி அங்கத்தினரிடம் கேட்டுக்கொண்டார். இப்படிக் குறைப்பதால் விலைகள் உயரும்; விவசாயிகள் நலனடைவர் என்பது அவர் கூற்று. ஆனூல், அரசாங்கம் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ரூபாய் மதிப் புக் குறைப்பு (Devaluation of the Rupee), நிலைமையை மேலும் கடுமையாக்கலாமென்றும் நாட்டின் நிதியையும் வரவு செலவுத் திட்டத்தையும் பாதிக்குமென்றும் நிதி அங்கத்தினர் கருதினூர். 1936-இல் பிரான்ஸ் போன்ற சில நாடுகள் தங்கள் செலாவணி

களின் மதிப்பைக் குறைத்தன. ஆகவே, இப்பிரச்சினையை மீண்டும் இந்தியச் சட்ட சபையில் எழுப்பினர். அயல்நாட்டுச் செலாவணி களின் மதிப்பு மாறியதால், அதற்கேற்றவாறு இந்தியச் செலாவணி யின் மதிப்பும் மாறவேண்டுமென்று பலர் வாதாடினர். ரூபாயின் மதிப்பு தாழ்ந்தால், பொன் ஏற்றுமதி குறையுமென்பதையும் இவர் கள் எடுத்துக் காட்டினார்கள். 1938-இல் மாகாணங்கள் காங்கிரஸ் ஆட்சியிலிருந்தன. காங்கிரஸ் அமைச்சர்கள் செலாவணியின் மதிப் புக் குறைப்பை ஆதரித்தனர். இந்திய தேசீயக் காங்கிரஸ் கட்சி இதை ஆதரித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

விலைகள் தாழ்வடைந்ததால், வர்த்தகம் குறுகியது. இதன் பலனாக மத்திய, மாகாண அரசாங்கங்களின் வருவாய் குறைந்தது. சிக்கனமாகச் செலவு செய்வதோடு புதிய வரிகள் விதிக்கவேண்டிய தாயிற்று. 1933-34-க்குப் பிறகு மத்திய அரசாங்கத்தின் வரு மானம் ஓரளவு முன்னேற்றமடைந்தது. ஆனால், மாகாணங்களின் நிலைமை அப்படியே நீடித்தது. இந்த நிலையில் ரூபாயின் மதிப்பைக் குறைப்பது சரியல்லவென்று ஜேம்ஸ் கிரிக் (James Grigg) சொன் னார். மேலும், இப்படிச் செய்வது இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்ஸ் மூன்று நாடுகளும் செய்துகொண்ட உடன்படிக்கைக்கு விரோதமாக இருக்கும். ஆகையால், அவர்கள் இதற்கு எதிர் நடவடிக்கைகள் எடுக்கலாம். இதன் விளைவாக நாடுகளிடை ஒரு செலாவணிப் போர் (Currency war) ஆரம்பமாகும். மேலும், பவுன் நாணயத்தின் மதிப்பை 40 சதவீதம் குறைத்துவிட்டனர். அதனுடன் இணைபட் டிருக்கும் ரூபாயின் மதிப்பும் அதே அளவு குறைந்துவிட்டது. இதற்கு மேல் மதிப்புக் குறைப்பு (devaluation) தேவையில்லை. ஐரோப்பிய நாடுகள் நாணயங்களின் மதிப்பைக் குறைத்ததால் இந்தியா பாதிக் கப்படமாட்டாது. 1894-ஆம் ஆண்டுச் சட்டம் அயல்நாட்டுப் பொருள்கள் இந்தியாவில் திணிக்கப் (dumping) படுவதைத் தடை செய்ததால் நம்நாட்டுத் தொழில்கள் ஐரோப்பிய நாடுகளின் நாணய மதிப்புக் குறைப்பால் எந்த விதத்திலும் பாதிக்கப்படமாட்டா. ஒரு நாணயத்துக்கு அதன் உண்மையான மதிப்பைவிட அதிகம் கொடுத்தால்தான் மதிப்புக் குறைப்பு தேவை. ரூபாயின் மதிப்பு அதன் உண்மையான மதிப்பைவிட அதிகமென்று சொல்ல முடியாது. எனவே, நாணய மதிப்பைக் குறைத்தல் சரியானதல்ல வென்று அரசாங்கம் முடிவு செய்தது.

இந்தியா ஒரு விவசாய நாடு. மேல் நாடுகளுக்கு ஆண்டு தோறும் கடன்தொகை செலுத்தவேண்டும். ஆகையால், இறக்கு மதியை விட ஏற்றுமதி அதிகமாக இருத்தல் வேண்டும். செலா வணியின் மதிப்பு மாறுவதால் நாம் செலுத்தவேண்டிய தொகை

யின் மதிப்பும் மாறும். ஆகவே, நமது செலாவணியின் மதிப்பு மாறாமல் ஒரே நிலையிலிருத்தல் நலம். இதனால் உள்நாட்டில் நிலவும் விலைவாசிகளுக்கும், அயல் நாட்டின் விலைகளுக்கும் ஒரு பொருத்தம் ஏற்படும். அயல்நாட்டு வர்த்தகம் (Foreign Trade) செழித்தோங்க இப்பொருத்தம் இன்றியமையாதது. ஆனால், இது மட்டும் போதாது. உள்நாட்டில் நிலவும் விலைவாசிக்கும் பொருளுற்பத்தியின் அடக்கச் செலவுக்கும் பொருத்தம் வேண்டும். ஆகையால், எப்பொழுதுமே செலாவணியின் மதிப்பை ஒரே நிலையில் வைத்திருக்கவேண்டுமென்பதில்லை. வெளிநாடுகளில் ஏதாவது செலாவணிக் குழப்பமேற்பட்டால் அது உள்நாட்டைப் பாதிக்காமலிருப்பதற்காக நாணயத்தின் மதிப்பை மாற்றவேண்டும். இது போன்ற சமயங்களில் நாணய மதிப்புக் குறைத்தல் இன்றியமையாதது. நாட்டின் உற்பத்தி, விலைவாசி முதலியன பாதிக்காதபடி செலாவணிக் கொள்கையை ஒரு நாடு பின்பற்றவேண்டும்.

ஒரு நாட்டின் பொருளாதாரத்தையும் அதன் உற்பத்தி, அடக்கச் செலவு முதலியவற்றையும் செலாவணி நிருவாகத்தின் மூலம் ஓரளவுதான் கட்டுப்பாடு செய்யமுடியும். அரசாங்கம் நிதிக் கொள்கையையும் இதனுடன் பயன்படுத்தவேண்டும். இந்தியாவில் விலைவாசிகள் உயரவில்லை. ஆனால், இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்சு முதலிய நாடுகளில் அவை உயர்ந்துவிட்டன. நம் நாட்டிலும் அயல் நாடுகளிலும் நிலவிய விலைவாசியில் உள்ள வேற்றுமைக்குப் பல காரணங்கள் இருந்திருக்கலாம். காரணங்கள் எவையாயினும் இந்த வேற்றுமை இந்தியாவைப் பாதிக்கும். ஆகையால், ரூபாயின் மதிப்பைக் கண்டிப்பாகக் குறைக்கவேண்டும். இந்தியாவில் விலைவாசிக்கும் பொருளுற்பத்தியின் அடக்கச் செலவுக்கும் பொருத்தமே இல்லை. விலைகள் உயர்ந்தாலன்றி விவசாயிகளின் வருமானம் உற்பத்தியின் அடக்கச் செலவை ஈடு செய்யாது. இந்த நிலையில் விவசாயம் தழைக்கவேண்டுமானால், விலையுயர்வு தேவை. அதாவது, ரூபாயின் மதிப்பைக் குறைக்கவேண்டும்.

ரூபாயின் மதிப்பைப் பவுனுடன் இணைத்திருந்தனர். பவுன் மதிப்பு இறங்கியதால் ரூபாயின் மதிப்பும் தாழ்வடைந்தது. ஆகையால், ஓரளவு நமது ஏற்றுமதி அதிகரித்திருக்கலாம். ஆனால், மேல் நாடுகள் தங்கள் செலாவணியின் மதிப்பைக் குறைத்ததால் நமது ஏற்றுமதியும் அதிகரிக்கவில்லை; விலையும் உயரவில்லை. மேலும், இந்த நாடுகள் இறக்குமதிக்குத் தடைகள் விதித்திருந்தன. ஆகையால், ரூபாய் மதிப்பைக் குறைக்கவேண்டும். ஆனால், இப்படிச் செய்தால் மற்ற நாடுகள் தாங்கள் செலாவணியின் மதிப்பை மேலும் குறைக்கலாம். ஆகையால், இந்தியாவின் ஏற்றுமதியைப்

பெருக்க அன்னிய நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்க வேண்டும். இப்படிச் செய்திருந்தால் இந்தியாவில் விலைவாசியை ஓரளவு உயர்த்தியிருக்கலாம்.

ரூபாயின் மதிப்பைக் குறைப்பதால் அயல் நாட்டு வர்த்தகப் பொருள்களின் விலை உயரும். மற்றப் பொருள்களின் விலையும் நாளடைவில் ஏறும். இறக்குமதிப் பொருள்களின் விலை உடனடியாக உயரும். மற்ற உற்பத்திப் பொருள்களின் விலை சிறிது கால தாமதத்துக்குப் பிறகே உயரும். விவசாயி வாங்கும் பொருள்களின் விலை உடனே ஏறுவதாலும், அவன் விற்பனை செய்யும் பொருள் சிறிது காலதாமதத்திற்குப்பின் ஏறுவதாலும், அவன் நிலைமை மோசமாகலாம் என்று சிலர் கருதினர். ஆனால், இது தவறு. இறக்குமதிப் பொருள்களின் விலை அவனுடைய அடக்கச் செலவை எந்த விதத்திலும் உயர்த்தாது. மேலும், விலைவாசி உயர்ந்தவுடன் அடக்கச் செலவும் உடனே உயராது. சிறிது காலம் சென்ற பின் அடக்கச் செலவு உயரும். ஆகவே, விலையுயர்வு விவசாயிகளுக்கு நன்மையை யளிக்கும். அடக்கச் செலவுக்கும் விலைவாசிகளுக்கும் ஒரு பொருத்தம் ஏற்படுத்தவேண்டுமானால் நாணயத்தின் மதிப்பைக் கண்டிப்பாகக் குறைத்தல்வேண்டும். விலைவாசிகளின் தாழ்வு சமுதாயத்தின் பல வகுப்பினருக்குத் தீமை விளைவித்தது. தொழிலாளிகளுக்கு விலை குறைவாக இருத்தல் நலமென்று சொல்லலாம். ஆனால், இது சரியான கருத்தல்ல. விலை உயர்ந்தால்தான் தொழிலுற்பத்தி பெருகும். வேலைவாய்ப்புக்களும் அதிகமாகும். விலைவாசிகள் வரம்பின்றி உயர்ந்துகொண்டே சென்றால், அது சமுதாயத்துக்கு நல்லதல்ல. ஆனால், ஓரளவு விலை உயரவேண்டும். ரூபாயின் மதிப்பை மாற்றாமலிருந்தால் ஒரே நலன் கிடைக்கும். அரசாங்கம் இங்கிலாந்துக்குச் செலுத்தவேண்டிய தொகையின் மதிப்பு குறையும். ஆனால், இதனால் கிடைக்கக்கூடிய மற்ற நலன்களெல்லாம் தற்காலிகமானவை. இதன் மூலம் நாட்டின் பொருளாதாரத்துக்கு நிரந்தரமான வலிவு கொடுக்கமுடியாது.

அரசாங்கம் மக்கள் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கவில்லை. காங்கிரஸ் கட்சி 1 ஷி. 6 பெ. என்ற மதிப்பை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தது. 1937-38-இல் நம் ஏற்றுமதி குறைந்தது. இந்தியச் செலாவணி முறையைப் பரிசீலனை செய்து நாணய மதிப்பை எந்த அளவில் நிலைநாட்ட வேண்டுமென்பதை முடிவு செய்ய ஒரு குழுவை நியமிக்கவேண்டுமென்று சில சட்டசபை அங்கத்தினர்கள் வேண்டிக் கொண்டனர். ஆனால், அரசினர் மக்கள் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்கவில்லை. இந்த நிலையில் 1939-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இரண்டாவது உலகப் போர் ஆரம்பித்தது.

—o—

# 5. இரண்டாவது உலகப்போரும் இந்தியச் செலாவணியும்

1939-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இரண்டாவது உலகப் போர் ஆரம்பித்தது. பழையச் செலாவணிப் பிரச்சினைகள் மறைந்தன. நாட்டின் பொருளாதாரப் போர் ஆரம்பித்தவுடன் ஓரளவு பாதிக்கப் பட்டபோதிலும், உற்பத்தி விரைவில் பெருகிற்று. விலைவாசியும் உயர்ந்தது. செலாவணி முறை சரிவர இயங்கிற்று. ரிசர்வ் பாங்கு ஸ்டெர்லிங் நாணயத்தை அதிக அளவில் பெற்றது.

1927-இலிருந்து ரூபாய்-ஸ்டெர்லிங் மதிப்பு 1 ஷி. 6 பெ. என்ற நிலையிலிருந்து மாறுமலிருந்தது. பொன் ஏற்றுமதி இந்த மதிப்பை நிலைப்படுத்தியது. 1938-க்குப்பிறகு இந்த உலோக ஏற்றுமதி குறைந்ததால் வாணிபக் கொடுப்பல் நிலை இந்தியாவுக்குப் பாதகமாயிற்று. ரூபாயின் மதிப்பும் குறையத் தொடங்கியது. ஆனால், 1939-க்குப்பிறகு மீண்டும் நமது நாட்டின் ஏற்றுமதி அதிக மாயிற்று. ஆகையால், ரூபாய் ஸ்டெர்லிங் மதிப்பு அப்படியே நீடித்தது. 1939-இலிருந்து போர் நடந்துகொண்டிருந்த கால முழுவதும் வாணிபக் கொடுப்பல் நிலை இந்தியாவுக்குச் சாதகமாகவே இருந்தது. ரிசர்வ் பாங்கு மேலும் மேலும் அதிகமான தொகை ஸ்டெர்லிங்கை வாங்கியது. இங்கிலாந்து நாட்டின் அரசாங்கம் போர் நிமித்தமாகப் பல பண்டங்களை இந்தியாவில் வாங்கவேண்டி யிருந்தது. தங்க வெள்ளி உலோகங்களை வெளிநாடுகளுக்கு ஏற்று மதி செய்தனர். ஆங்கிலேய ராணுவம் இந்தியாவிலிருந்தது. அதன் செலவுக்காக இங்கிலாந்து நமக்குப் பணம் செலுத்தியது. இக் காரணங்களால் ரிசர்வ் பாங்கு மேலும் மேலும் ஸ்டெர்லிங்குச் செலாவணியைப் பெற்றது. 1944-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் ரிசர்வ் பாங்கு சுமார் 945 கோடி ரூபாய் பெறுமானமுள்ள ஸ்டெர்லிங் வைத்திருந்தது. நமது ஏற்றுமதி அதிகரித்தபோதிலும் ரூபாய்-ஸ்டெர்லிங் மதிப்பு ஒரே நிலையிலிருந்தது. ஆகையால், விலைகள் உயர்ந்தன. ஆனால், முதல் உலகப் போர் நடந்துகொண்டிருக்கும்

பொழுது ரூபாயின் மதிப்பு உயர்ந்தது. ஆனல், 1939-இலிருந்து ரூபாய்-ஸ்டெர்லிங் மதிப்பு மாருமலிருந்தது. ரிசர்வ் பாங்குக்குக் கிடைத்த ஸ்டெர்லிங்கை வைத்துக்கொண்டு ரூபாய்ச் செலாவணியை இந்தியாவில் அதிகமாக வெளியிட்டனர். இதன் பலனுக விலைகள் இந்தியாவில் உயர்ந்தன.

போர் ஆரம்பமானதும் நாணயமாற்றுக் கட்டுப்பாடு (Exchange control) அமுலில் வந்தது. சாதாரணமாக, அரசாங்கம் செலாவணிகள் விற்பனையில் குறுக்கிடாது. ஆனல், இரண்டாம் உலகப் போர் தொடங்கியதும் இந்தக் குறுக்கீடு தேவைப்பட்டது. ஒரு நாணயத்தின் மதிப்பை உயர்த்துவதற்கோ குறைப்பதற்கோ அரசாங்கம் அங்காடியில் (Market) புகுந்து செலாவணியை வாங்கவோ விற்கவோ செய்யலாம். இதற்கு நாணயமாற்றுக் கட்டுப்பாடு என்று பெயர். இக்கட்டுப்பாட்டில் பல முறைகள் இருக்கின்றன. ஒரு காலத்தில் பொருளாதாரத்தில் எவ்விதக் கட்டுப்பாடுமிருத்தல் கூடாது என்று பலர் கருதினர். ஆனல், இப்பொழுது நாணயமாற்றுக் கட்டுப்பாடு மிகச் சாதாரணமாகி விட்டது. இக்கட்டுப்பாடு முதன்முதலாக இரண்டாவது போர் நடந்துகொண்டிருக்கும் பொழுது அமுலில் வந்தது. இந்தக் கட்டுப்பாட்டை அமுலில் கொண்டுவருவதை ரிசர்வ் பாங்கின் பொறுப்பாகச் செய்தனர். இதற்கு வேண்டிய அதிகாரங்களையும் இந்தப் பாங்குக்குக் கொடுத்தனர். ரிசர்வ் பாங்கு அங்கீகாரம் செய்த சில குறிப்பிட்ட பாங்குகள் மூலமே அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்கவேண்டும். குறிப்பிட்ட சில வீதங்களிலேயே (rates) செலாவணிகளை வாங்கமுடியும். ஆங்கிலேயப் பேரரசின் (British Empire) கீழிருந்த சில நாடுகள் இந்த விதிக்குட்படவில்லை. நாணயமாற்றுக் கட்டுப்பாட்டைச் செயலில் கொண்டுவர ரிசர்வ் பாங்கு ஒரு புதிய இலாகாவை (துறை) ஏற்படுத்தியது. நாளடைவில் கட்டுப்பாடுகளைக் கடுமையாக்கினர். அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்வதால் கிடைக்கும் டாலர்ச் செலாவணி ஒரு சிறப்பான கட்டுப்பாட்டுக்குட்பட்டது. ஏற்றுமதிப் பொருளுக்கு டாலர் ஸ்டெர்லிங் வீதப்படி அமெரிக்கச் செலாவணியைப் பெறுவதே இதன் நோக்கமாகும்.

நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளுக்குட்படாத நாடுகளின் செலாவணிகளை மக்கள் விருப்பம்போல் வாங்கவும் விற்கவும் செய்யலாம். இந்த நாடுகள் ஸ்டெர்லிங் (பகுதி) நாடுகள் (Sterling area) என்று சொல்லப்பட்டன. கனடா, நியூபௌண்ட்லாந்து, ஹாங்காங் முதலியவை நீங்கலாக ஆங்கிலேயப் பேரரசின் கீழிருந்த எல்லா நாடுகளும் இந்த ஸ்டெர்லிங் பகுதிக்குட்பட்டவை. சில

நாடுகளைப் புதியதாக இப்பகுதியில் சேர்த்தனர். ஏற்றுமதிகள் மூலமாகப் பெறும் அயல் நாட்டுச் செலாவணியை மக்கள் விருப்பம் போல் பயன்படுத்த முடியாது. இதை எப்படிப் பயன்படுத்துவ தென்பதை ரிசர்வ் பாங்கு முடிவுசெய்யும். அமெரிக்கச் செலா வணியின் பயன் இந்த விதிக்குட்பட்டது. பொருள் ஏற்றுமதி செய்வதால் கிடைக்கும் அன்னிய நாட்டுச் செலாவணியை ரிசர்வ் பாங்கு பெற்றது. குறிப்பிட்ட சில பொருள்களை இறக்குமதி செய்யச் சிலருக்கு ரிசர்வ் பாங்கு அமெரிக்கச் செலாவணியைக் கொடுத்தது. இதற்குக் காரணம் அமெரிக்கச் செலாவணி உலகெங்கும் தேவைப் பட்டது. தேவைக்கேற்ற அளவில் அச்செலாவணி கிடைக்க வில்லை. அமெரிக்கப் பாங்குகளில் இந்தியர்கள் வைத்திருந்த டெபாசிட்டுப்பணத்தையும், டாலர் பத்திரங்களையும் அரசாங்கம் கைப்பற்றிக்கொண்டு, அதற்குப் பதிலாக இந்திய நாணயத்தை அவர்களுக்குக் கொடுத்தனர். பொன் ஏற்றுமதியும் இறக்குமதியும் கட்டுப்பாட்டுக்குட்பட்டது. உலோக ஏற்றுமதிக்கு ரிசர்வ் பாங்கின் அனுமதிச் சீட்டு வேண்டும். இந்தியச் செலாவணியையும் எவரும் வெளிநாடுகளுக்கு எடுத்துச்செல்ல முடியாது. இந்தியாவிலுள்ள அயல் நாட்டினர் தங்கள் வருமானம், இலாபம் முதலியவற்றைத் தங்கள் நாட்டு நாணயமாக மாற்ற முடியாது. 1943-44-க்குப் பிறகு இந்தக் கட்டுப்பாடுகளை ஓரளவு தளர்த்தினர். ஸ்டெர்லிங் பகுதிகளல்லாத பகுதிகளில் மக்கள் பிரயாணம் செய்வதையும் தடை செய்தனர். இப்படி மக்கள் பிரயாணம் செய்வதால் ரூபாய் நாணயங் களைக் கொடுத்து அவற்றிற்குப் பதிலாக மற்றச் செலாவணி களைப் பெறுவர். இதனால் ரூபாயின் மதிப்பு தாழ்வடையும். மேலும், டாலர் போன்ற செலாவணிகள் முக்கியமான உபயோகங்களுக்குத் தேவைப்பட்டமையால் அவற்றைப் பிரயாணங்கள் போன்ற வற்றிற்குப் பயன்படுத்தக்கூடாது. இந்தியர்கள் மற்ற நாட்டினருக்கு அளிக்கும் ரூபாய்த் தொகையையும், மற்ற நாடுகளிலிருந்து பெறும் செலாவணித் தொகையையும் கட்டுப்பாடு செய்ததால் ரூபாயின் மதிப்பைக் காப்பாற்ற முடிந்தது. டாலர் போன்ற செலாவணிகளைச் சிக்கனமாக நாம் பயன்படுத்த முடிந்தது.

நாட்டிலுள்ள எல்லாச் சாதனங்களையும் போர் நிமித்தமாகப் பயன்படுத்தவேண்டும். மற்ற முக்கியமல்லாத உபயோகங்களி லிருந்து இவைகளைத் திருப்பிப் போருக்குப் பயன்படுமாறு செய்ய வேண்டும். அயல் நாட்டுச் செலாவணியையும் போர் நிமித்தமான செலவுகளுக்காகப் பயன்படுத்தவேண்டுமென்ற நோக்கத்துடன் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை அமுலில் கொண்டுவந்தனர். இந்தக் கட்டுப்பாட்டின் மூலம் அரசாங்கம் சிக்கனமாகச் செலவு செய்ய முடிந்தது. ஆனால், இந்தக் கட்டுப்பாடுகள் அயல்நாட்டுச்

செலாவணியைப் பயன்படுத்துவோருக்குப் பல தொல்லேகளைக் கொடுத்தன. வேண்டியபொழுது அயல்நாட்டுச் செலாவணி கிடைக்காமல் போகலாம். கிடைப்பது தாமதமாகலாம். நேர்மையாக வர்த்தகம் செய்பவர்களுக்கு அயல்நாட்டுச் செலாவணி கிடைக்காமல் போகலாம். சிலருக்குப் பாங்கு சலுகைக் காட்டலாம். கட்டுப்பாடுகளைச் சிலர் மீறுவதற்கு வழிகளும் இருந்தன. இந்த இடர்ப்பாடுகள் எல்லாவிதக் கட்டுப்பாடுகளிலும் உள. இத்தனை குறைகளிருந்தபோதிலும் நாணயமாற்றுக் கட்டுப்பாடு போர் நிகழ்ந்த காலத்தில் இன்றியமையாததாகிவிட்டது.

தற்காலத்திய போருக்கும் பணவீக்கத்துக்கும் (Inflation) நெருங்கிய தொடர்புண்டு. பணவீக்கம் ஏற்படும்பொழுது விலேகள் உயரும். விலேயுயர்வு ஓரளவுக்கு உட்பட்டிருந்தால் அதனுல் உற்பத்தி பெருகும்; நாடு நலனடையும். இலாபம் அதிகரிக்க உற்பத்தி பெருகும். வேலேயில்லாதவர்களுக்கு வேலே கிடைக்கும். பயனில்லாத மற்ற உற்பத்திச் சாதனங்களும் பயன்படுத்தப்படும். ஆனுல், ஓரளவுக்குமேல் விலேகளுயர்வது சமுதாயத்துக்கு நல்லதல்ல. உற்பத்தி பெருகாமல் விலேகள் மட்டும் உயர்ந்தால் பணவீக்கம் ஏற்படும். சமுதாயத்தில் சிலருக்கு விலேயுயர்வு நல்லதாக இருக்கலாம். ஆனுல், பலருக்கு இது பெருத்த தொல்லேகளைக் கொடுக்கும். போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது பணவீக்கம் ஏற்படுவது இயற்கை.

1939-இல் உலகப்போர் தொடங்கியபொழுது பொருளாதார மந்தத்தின் விளைவுகளிலிருந்து மீளவில்லே. உற்பத்திச் சாதனங்கள் முழுவதும் பயன்படுத்தப்படவில்லே. வேலேவாய்ப்புக்கள் பெருக வேண்டியிருந்தன. உற்பத்தி பெருகுவதற்கும், வேலேவாய்ப்பு அதிகரிக்கவும் இடமிருந்தன. உள்நாட்டுத் தேவையும் அயல்நாட்டுத் தேவையும் அதிகரிக்கவே உற்பத்தி பெருகிற்று. போதிய அளவு போக்குவரவு வசதி இல்லாததால் வியாபார முன்னேற்றம் தடைப்பட்டது. நாட்டின் உற்பத்திக்கும் வியாபாரத்திற்குமேற்ற அளவு செலாவணி வெளியீடு பெருகியிருந்தால் பணவீக்கம் ஏற்பட்டிருக்காது. ஆனுல், செலாவணி வெளியீடு வேண்டிய அளவுக்கு மேல் அதிகரித்தது. ஆகவே, நம் நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டது. விலேவாசியும் உயர்ந்தது. போர் தொடங்குவதற்குமுன் விவசாயிகளின் நிலேமை மோசமாயிருந்தது. இப்பொழுது அவர்கள் வருவாய் பெருகியது. போர் தொடங்கி மூன்ருண்டுகளுக்குப்பிறகு செலாவணிப் பெருக்கம் அதிகம் தேவைப்பட்டது. உற்பத்தி அதிகரித்த போதிலும், மக்கள் அதிகப் பொருளேப் பயன்படுத்த முடியவில்லே. மேலும் மேலும் பொருள்களே மக்கள் உபயோகத்திலிருந்து

மீண்டும் போருக்காகப் பயன்படுத்திக்கொண்டனர். எனவே, உற்பத்திப்பெருக்கம் இருந்தபோதிலும் பற்ருக்குறை நாடெங்கும் பரவியது. ரிசர்வ் பாங்குக்குக் கிடைத்த ஸ்டெர்லிங்கைக் காப்பு நிதியாகப் பயன்படுத்திக்கொண்டு செலாவணி வெளியீட்டைப் பெருக்கினர். உற்பத்தியில் மிகச் சிறிய அளவே மக்களுக்குக் கிடைத்தது. இதன் விளைவாக விலைகளுயர்ந்தன; பற்ருக்குறை அதிகரித்தது; மக்கள் வாழ்க்கைத்தரம் தாழ்வடைந்தது. உற்பத்திப் பெருக்கும் பற்ருக்குறையும் நம் நாட்டில் ஒரே சமயத்தில் நிலவின.

போர் நிமித்தமாக இங்கிலாந்து இந்தியப் பொருள்களைப் பெற்றுக்கொண்டு ஸ்டெர்லிங் செலாவணியைக் கொடுத்தது. வரி மூலமாகவும், கடன் மூலமாகவும் அரசாங்கம் பெற்ற ரூபாயைக் கொண்டு இப்பொருள்களை வாங்க முடியாததால் ரிசர்வ் பாங்கைக் கொண்டு செலாவணித் தாள்களை அச்சிட்டு அவற்றைப் பயன் படுத்திக்கொண்டனர். இந்தியப் பொருள்களுக்காக இங்கிலாந்து செலுத்திய தொகை ஸ்டெர்லிங் நிதியாக (Sterling Balances) வளர்ந்தது. இந்த ஸ்டெர்லிங் நிதியைக் காப்பாக வைத்துக் கொண்டு ரிசர்வ் பாங்கு செலாவணித் தாள்களை அச்சிட்டது. இப்படி வெளியிட்ட செலாவணியை ஆணைச் செலாவணி (Fiat Money) என்று சொல்லலாம். நாணயப் புழக்க வேகம் (Velocity of circulation of money) குறைந்ததால் பணவீக்கம் ஓரளவு குறைந்ததென்பது சரியல்ல. இதைப்பற்றிய புள்ளி விவரங்கள் நம்பத் தகுந்தவையல்ல.

பணவீக்கமும் விலையுயர்வும் போருக்கு இன்றியமையாதன. ஆனல், பணவீக்கம் சமுதாயத்தைக் கடுமையாகத் தாக்கும். தொழிலதிபர்கள், வியாபாரிகள் முதலியவர்கள் விலை உயர்வால் நன்மையடைவார்கள். தொழிலாளிகளும் நடுத்தர வகுப்பினரும் பாதிக்கப்படுவார்கள். இவர்களுடைய உண்மையான வருமானம் (Real income) குறையும். பெருநிலக்கிழார்களுடைய வருவாய் பெருகியது. விலையுயர்வு அவர்களுக்கு நன்மையாகவே இருந்தது. அவர்கள் நிலைமை போருக்குமுன் இருந்ததைவிடப் பன்மடங்கு சிறப்படைந்தது. விலையுயர்வு சிறு நிலக்கிழார்களுக்கு ஓரளவு நன்மையளித்தது. கூலி வேலை செய்யும் விவசாயத்தொழிலாளி களின் வருமானமும் வாழ்க்கைத்தரமும் தாழ்வடைந்தன.

பணவீக்கத்தை உடனடியாகக் குறைக்கவேண்டும். ஆனல், அதன் முக்கியத்தை ரிசர்வ் பாங்கு உணரவில்லை. அரசாங்கத்தினர் நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டதையே மறுத்தனர். போர்

நிமித்தமாக வெளியிட்ட ஆணைச் செலாவணியே பணவீக்கத்துக்குக் காரணமென்றும், இதைக் குறைக்கத் தகுந்த நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்றும் பலர் வற்புறுத்தினர். 1943-இல் அரசாங்கம் இப்பிரச்சினையைப் பரிசீலனை செய்து தகுந்த நடவடிக்கைகளைச் சிபாரிசு செய்வதற்காக ஓர் அதிகாரியை நியமித்தனர். 1943-இல் தான் அரசாங்கம் நாட்டில் பணவீக்கம் இருப்பதாக ஏற்றுக் கொண்டது. போர்ச்செலவுக்கு வேண்டிய நிதியை வரி, கடன், பணவீக்கம் முதலியவை மூலம் அரசாங்கம் பெற்றது. பணவீக்கத்தின் கொடுமைகளைக் குறைக்கவேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு. இதை 1943-க்குப் பிறகு உணர்ந்தனர்.

1940-இலிருந்து விலைகள் படிப்படியாக உயர்ந்துகொண்டே சென்றன. உள்நாட்டுத் தேவையும் அயல்நாடுகளின் தேவையும் விலையுயர்வுக்குக் காரணம். 1942-க்குப்பிறகு செலாவணிப் பெருக்கம் மேலும் விலைகளை உயர்த்தியது. நிலைமை, ஊக வாணிகத்தால் மேலும் மோசமாயிற்று. போரின் விளைவாகப் போக்கு வரவு வசதிகள் குறைந்தன. பணவீக்கத்தால் மக்கள் படும் இன்னல்களைக் குறைக்க, அரசாங்கம் பொருளுற்பத்தி, வியாபாரம் முதலியவற்றைச் சில கட்டுப்பாடுகளுக்குட்படுத்தியது. இதன் விளைவாக 1943-க்குப்பிறகு விலைவாசிகள் ஓரளவு தாழ்வடைந்தன. விலைக்கட்டுப்பாட்டை (Price control) அரசாங்கம் செம்மையான முறையில் செயற்படுத்த முயற்சி செய்தனர். உணவு, துணி முதலிய பண்டங்களைப் பங்கீடு செய்வதற்குப் புதிய முறைகளை வகுத்தனர். ஆனால், பணவீக்கத்தின் கடுமையையும் பற்றுக்குறையையும் அரசாங்கம் முற்றிலும் ஒழிக்கமுடியவில்லை.

முதல் உலகப்போர் தொடங்கியவுடன், மக்கள் செலாவணித் தாள்களைக் கொடுத்து ரூபாய் நாணயங்களைப் பெற்றனர். இரண்டாவது போர்க்காலத்தில் அவர்கள் இந்தியச் செலாவணி முறையில் வைத்த நம்பிக்கையை இழக்கவில்லை. தேவைக்கு மேல் ரூபாய் நாணயங்களை ஒருவரும் வைத்திருக்கக்கூடாதென அரசாங்கம் அறிக்கை விடுத்தது. ரூபாய் நாணயங்களைச் சிலர் பதுக்குவதைத் தடை செய்வதே இந்த அறிக்கையின் நோக்கம். ஒரு ரூபாய்த் தாள்கள் வெளியிட்டனர். ரூபாய் நாணயத்தின் வெள்ளிக் கலவையும் குறைந்தது. பழைய நாணயங்களுக்குப் பதிலாக அரசாங்கம் புதிய நாணயங்களை வெளியிட்டது.

போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது இந்தியா, ரூபாய் ஸ்டெர்லிங் திட்டத்தைப் (Sterling Exchange Standard) பின்பற்றியது. இத்திட்டம் 1931-இலிருந்து 1947 வரை இயங்கியது.

1947-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் நம்நாடு பன்னாட்டு நாணய நிதியில் (International Monetary Fund) சேர்ந்தது. அதன் பலனாக, நமது செலாவணி முறையும் மாறுபாடடைந்தது. ரூபாயின் மதிப்பை அமெரிக்க நாணயமான டாலருடனும், பவுனுடனும் இணைத்தனர். ரூபாயை மக்களிடம் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக ரிசர்வ் பாங்கு பொன்னையோ, வேறு எந்தச் செலா வணியையோ கொடுக்கவேண்டியதில்லை. இத்திட்டத்தில் பொன் நாணயத் திட்டத்தின் எல்லா நன்மைகளும் உண்டு. அதைவிடச் சிக்கனமானது. மேலும், பொன்னைப் பயன்படுத்தாமலே பொன் நாணய முறையின் நலன்களைப் பெறலாம். ரூபாயின் மதிப்பைப் பொன்னுடன் இணைத்ததால் பன்னாட்டு நாணய நிதியின் அங்கத் தினர்களாகிய மற்ற நாடுகளின் செலாவணிகளுடனும் மறைமுக மாக ரூபாயின் மதிப்பை இணைத்தனர். நிதியில் அங்கம் வகிக்கும் நாடுகள் தங்கள் நாணயங்களின் மதிப்பை விருப்பம்போல் மாற்றிக் கொள்ளக்கூடாது. நிதியின் அங்கீகாரம் பெற்றபின்புதான் எந்த வித மாறுதலும் செய்யலாம். ஒரு நாடு அதன் செலாவணியின் புற மதிப்பைக் (external value) காப்பாற்றமுடியாவிடில், நிதி வேண்டிய செலாவணியைக் கடனாகக் கொடுத்துதவும். இந்த உதவியைக் கொண்டு நிலைமையைச் சமாளிக்க வேண்டும். கடனுதவி போதாவிடில், அதாவது ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலை குலைந்திருந்தால், அதை ஒழுங்குபடுத்துவதற்குச் செலாவணியின் புறமதிப்பை மாற்றவேண்டும். செலாவணியின் மதிப்பை மாற்றுவதற்கு இதுபோன்ற உண்மையான காரணங்கள் இருந்தால், நிதியின் அனுமதியுடன் அதை மாற்றலாம். நிதியில் சேர்ந்த நாடுகளின் செலாவணிகள் மதிப்பு மாருமலிருக்கும். ஆனல், வேண்டும்பொழுது மதிப்பை மாற்றிக்கொள்ள வசதியுண்டு.

இந்தியா பன்னாட்டு நாணய நிதியில் சேர்ந்தவுடன் இதற்கு வேண்டிய மாறுதல்களை ரிசர்வ் பாங்குச் சட்டத்தில் புகுத்தினார்கள். காப்பு நிதியில் ஸ்டெர்லிங் பத்திரங்களைத் தவிர மற்றப் பத்திரங்களையும் வைத்துக்கொள்ளலாமென்று முடிவுசெய்தனர். ரூ. 1 = 1 ஷி. 6 பெ. = 30·225 செண்டு (அமெரிக்க நாணயம்) என்ற மதிப்பை நிதி ஏற்றுக்கொண்டது. ரூபாயின் மதிப்பு 1949-ஆம் ஆண்டு வரை மாருமலிருந்தது. 1947-க்குப் பிறகு வளர்ந்த இந்தச் செலாவணி முறையை ஒரு புதிய மறைமுகப் பொன்திட்டம் என்று சொல்லலாம். இதைப் பொன் சமன்பாட்டுத் திட்டம் (Gold parity standard) என்று சொல்லலாம்.

இந்தியா, விடுதலையடைந்த பிறகு, உற்பத்தியைப் பெருக்கி மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தத் திட்டங்கள் வகுத்தது. இத்

திட்டங்களைச் செயல்படுத்த ஏராளமான நிதி தேவைப்பட்டது. செலாவணித்தாள் வெளியீட்டை நெகிழ்ச்சியுடையதாகச் செய்தனர். ரிசர்வ் பாங்குக்கு மற்றப் பாங்குகளை அதிகமாகக் கட்டுப்பாடுசெய்ய அதிகாரத்தையும் கொடுத்தனர். விகிதக் காப்பு முறையை (Proportional Reserve System) நீக்கிக் குறைந்த பட்சக் காப்பு முறையைக் (Minimum Fiduciary Reserve System) கொணர்ந்தனர். இந்தக் குறைந்தபட்சக் காப்பு நிதியில் 400 கோடி ரூபாய் பெறுமானமுள்ள அயல்நாட்டுப் பத்திரங்களும், 115 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொன்னும் இருத்தல்வேண்டு மென்று முடிவு செய்தனர். பொன்னை ஒரு தோலா 62·50 ரூபாய் என்ற விலையில் மதிப்பீடு செய்தனர். இந்த விலையைப் பன்னாட்டு நாணய நிதி அங்கீகாரம் செய்தது. மத்திய அரசாங்கத்தின் அனுமதியுடன் 300 கோடி ரூபாய் மதிப்புள்ள அயல்நாட்டுப் பத்திரங்கள் வைத்திருந்தால் போதுமென்று முடிவுசெய்தனர். ஆனால், ஆறுமாத காலமே இப்படிச் செய்யலாம். வேண்டுமானால், மீண்டும் மூன்று மாத காலத்துக்கு இதற்கு அனுமதி பெற்றுக் கொள்ளலாம். ரிசர்வ் பாங்கு அதிகச் செலாவணித்தாள்களை அச்சிட முடியும். 1956-57-இல் அயல்நாட்டுச் செலாவணியில் ஒரு நெருக்கடி ஏற்பட்டது. 1957-இல் ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றியமைத்தனர். இதன்படி, பாங்கு 200 கோடி ரூபாய்க்குக் குறையாத மதிப்புள்ள தங்க உலோகம், நாணயம், அயல்நாட்டுப் பத்திரங்கள் முதலியவற்றைக் காப்பு நிதியில் வைத்திருக்க வேண்டும். காப்பு நிதியை அடிக்கடி மாற்றுவதும் குறைப்பதும் தவறு என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், தற்காலத்திய செலாவணி முறையில் காப்பு நிதியின் தேவை குறைந்திருக் கின்றது. ஆகையால், அரசாங்கம் காப்பு நிதி பற்றிய சட்டத்தை நிலைமைக்கேற்றபடி மாற்றுதல் தவறல்ல. இப்படி மாற்ருவிடில் செலாவணி முறையில் வேண்டிய நெகிழ்ச்சி இருக்காது. 1957-இலிருந்து இந்திய நாணய முறையைத் தசம முறையில் (Decimal system) மாற்றியமைத்தனர்.

# 2

# செலாவணிப் பிரச்சினைகள்

## 6. இரண்டாது உலகப்போருக்குப்பின் இந்தியச் செலாவணி முறை

உலகப்போர் பல பிரச்சினைகளை எழுப்பியது. இவற்றுள் சில பிரச்சினைகள் எல்லா நாடுகளுக்கும் பொதுவானவை. இந்தியாவின் பொருளாதார, செலாவணிச் சிக்கல்களைப் புரிந்து கொள்ள, உலகத்தின் நிலைமையை எவ்வாறு போர் தாக்கியது என்பதைச் சற்றுப் பார்க்கவேண்டும். போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது உற்பத்திச் சாதனங்களை அளவுக்கு மீறிப் பயன்படுத்தி, உற்பத்தியை எவ்வளவு பெருக்க முடியுமோ அவ்வளவு ஐரோப்பிய நாடுகள் பெருக்கின. ஐரோப்பிய நாடுகள் போரில் நேர்முகமாக ஈடுபட்டிருந்தன. பழுதான உற்பத்திச் சாதனங்களைப் புதுப்பிக்கவில்லை. போர்க்காலத்தில் புதிய இயந்திரங்களை வாங்கவில்லை. ஆகையால், விவசாயமும், தொழிலும் கடுமையாகத் தாக்கப்பட்டன. ஐரோப்பாவில் உற்பத்தி குறைந்தது. மார்ஷல் திட்ட (Marshall Aid) உதவி பெற்றும் ஐரோப்பிய நாடுகள் முன்னேற முடியவில்லை. உலகில் பல நாடுகளில் விலைகள் உயர்ந்தன. 1951-இல் கொரியாவில் தொடங்கிய போர், விலைவாசியை உயர்த்திப், பொருளுற்பத்திக்கு ஊக்கமளித்தது. இரண்டாவது உலகப்போருக்குப்பின் உலக நாடுகளெல்லாம் பணவீக்கத்துக்கும் விலை உயர்வுக்கும் இலக்காயின. தேவைக்கேற்றபடி உற்பத்தி பெருகாததே இதற்கு முக்கிய காரணமாகும். சில நாடுகளின் நிலைமை மற்ற நாடுகளை விட மோசமாக இருந்தது. பொதுவாக, உலகப்போர் உற்பத்தி செய்யும் சக்தியை எல்லா நாடுகளிலும் குலைத்துவிட்டது. இதற்கு அரசியல் காரணங்களுமிருந்தன. செலாவணிப்பெருக்கமும் இதற்கொரு முக்கியமான காரணமாகும்.

ஸ்டெர்லிங் பகுதியைச் சேர்ந்த நாடுகளுக்குச் சில தனிப்பிரச்சினைகள் எழுந்தன. இந்தியாவும் இப்பகுதியில் சேர்ந்த நாடுதான். போர் இந்த நாடுகளைக் கடுமையாகத் தாக்கியதால், அயல்நாட்டு உதவியும் பொருள்களும் இவைகட்குத் தேவைப்பட்டன. இந்த நாடுகள் அமெரிக்கப் பொருள்களை நாடின. இப்பொருள்களை வாங்குவதற்கு வேண்டிய டாலர் நாணயங்கள் அதிகமாகக் கிடைக்காததால் இடர்ப்பாடுகள் நேர்ந்தன. ஐரோப்பிய மீட்சித் திட்டத்தின்படி (European Recovery Programme) அமெரிக்கா ஐரோப்பிய நாடுகளுக்கு உதவி செய்ததால், டாலர் நெருக்கடியை (Dollar problem) ஒருவாறு சமாளித்தன. ஆனால், மீண்டும் இப்பிரச்சினை எழுந்ததால் மற்ற நடவடிக்கைகள் எடுக்கவேண்டியதாயிற்று. அமெரிக்காவிலிருந்துவரும் இறக்குமதியைக் குறைக்கவேண்டியதாயிற்று. டாலர் நெருக்கடியைத் தீர்க்க 1949-இல் ஒரு மகாநாட்டைக் கூட்டினர். நிலைமை எந்த விதத்திலும் முன்னேறவில்லை.

அயல்நாட்டு வர்த்தகத்துக்குச் செலாவணியின் புறமதிப்பு (External value) அதிகமாக மாறுமலிருக்கவேண்டும். இரண்டாவது உலகப்போருக்குமுன் உலக நாடுகள் பல்வேறு பொன் முறைகளைப் பின்பற்றி, அவைகள் மூலம் தங்கள் நாட்டுச் செலாவணியின் மதிப்பு மாறுமலிருக்கும்படி செய்தன. போர் உலகப் பொருளாதார, அரசியல் நிலைமையை மாற்றியதால், பழைய பொன் திட்டத்தை மீண்டும் அமுலில் கொண்டுவர ஏற்ற சூழ்நிலை உலகிலில்லை. ஆகையால், புதிய ஏற்பாடு ஒன்று செய்யவேண்டியதாயிற்று. 1944-ஆம் ஆண்டு ஜூலை மாதம் பிரெட்டன் உட்ஸ் (Bretton Woods) என்ற இடத்தில் கூடிய மகாநாடு இந்தப் பிரச்சினையை ஆலோசித்து ஒரு முடிவிற்கு வந்தது. இந்த மகாநாட்டில் உருவாகிய திட்டந்தான் பன்னாட்டு நாணய நிதி என்பது. செலாவணி பற்றிய சிக்கல்களைத் தீர்ப்பதில் உலக நாடுகளிடையே ஒற்றுமையை வளர்ப்பதும், அயல் நாட்டுக்கொடுப்பல் நிலையை ஒழுங்குபடுத்துவதற்கு வேண்டிய உதவி செய்வதும், பன்னாட்டு வாணிகத்தைப் பெருக்குவதும் இந்த நிதியின் முக்கியமான நோக்கங்களாகும். இதில் அங்கம் வகிக்கும் நாடுகள் ஒரு குறிப்பிட்ட தொகையை நிதிக்குச் செலுத்தவேண்டும். நிதியை நிருவாகம்செய்ய ஒரு நிருவாகக் குழுவை நிறுவினர். இதில் சேர்ந்த ஒவ்வொரு நாடும் அதன் நாணயத்தின் புறமதிப்பை நிதியின் அனுமதியில்லாமல் மாற்றக்கூடாது. ஆனால், முக்கியமான காரணங்களிருந்தால் நிதியின் அங்கீகாரம் பெற்றுச் செலாவணியின் மதிப்பைத் திருத்தியமைக்கலாம். நாணயமாற்றுக் கட்டுப்பாட்டைப் பல நாடுகள் நேர்மையற்ற முறையில் சுயநலத்துக்காகப் பயன்படுத்திவந்தன. இதுபோன்ற ஒழுங்கற்ற முறைகளை நிதி வன்மையாகக் கண்டித்தது.

குறிப்பிட்ட சில உண்மையான காரணங்களால் செலாவணிக் கட்டுப்பாடு (Exchange Restriction) ஒரு நாட்டுக்குத் தேவையாக இருக்கலாம். இதுபோன்ற நெருக்கடியான வேளைகளில் நிதி, செலாவணிக் கட்டுப்பாட்டை அனுமதித்தது. ஒரு நாட்டுக்குத் தேவையான அன்னிய நாட்டுச் செலாவணியை நிதியிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். இப்பழக்கம் சில விதிகளுக்குட்பட்டிருந்தது. ஒரு நாடு அன்னிய நாடுகளுக்குக் கொடுக்கவேண்டிய தொகையைச் சாதாரணமாக ஏற்றுமதி மூலம் செலுத்துவது வழக்கம். உற்பத்தியும் ஏற்றுமதியும் பாதிக்கப்படுமாயின் இப்படிச் செய்வது கடினம். நிதியின் உதவியை இதுபோன்ற காலங்களில் நாடலாம். இவ்வுதவியைத் தற்காலிகமாகத்தான் பெறலாம். எப்பொழுதுமே நிலைமையைச் சமாளிக்க இவ்வுதவியை நாடமுடியாது. ஆகவே, அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் ஒரு நாட்டிற்கு அதிகமாகத் துண்டுவிழுந்தால் அதை ஒழுங்குபடுத்துவதற்கு வேறு ஏற்பாடுகள் செய்யவேண்டும். இந்தியா நிதியில் சேர்ந்ததைப் பற்றியும் பொன் சமன்பாட்டுத்திட்டத்தைப் பின்பற்றியதையும் முன்பே குறிப்பிட்டோம்.

இரண்டாவது உலகப்போருக்குப்பின் உலகப் பாங்கு ஆரம்பமாயிற்று. இதில் அங்கம் வகிக்கும் நாடுகள் செலுத்திய தொகையை மூலதனமாகக் கொண்டு இதை ஆரம்பித்தனர். பொருளாதார முன்னேற்றத்திற்காகச் சில குறிப்பிட்ட திட்டங்களுக்கு மூலதனம் கொடுத்துதவுவது, இந்தப் பாங்கின் நோக்கம். இவ்வுதவியைப் பாங்கில் அங்கத்தினராகச் சேர்ந்த நாடுகளுக்குமட்டுமே கொடுத்தனர்.

இந்தியாவின் நிலைமையைப்பற்றி இப்பொழுது சிறிது பார்ப்போம். இந்தியா போரில் நேரிடையாக ஈடுபடவில்லை. எனினும், அதன் விளைவுகள் ஐரோப்பிய நாடுகளை எப்படித் தாக்கினவோ அதேபோல் இந்தியாவையும் தாக்கின. தன் சக்திக்குமேல் நம் நாடு இங்கிலாந்துக்கு உதவியதால், பணவீக்கம், பற்றுக்குறை, விலை உயர்வு முதலியவற்றிற்கு இலக்காகியது. தற்காலத்திய போருக்கும் பழைய காலப் போருக்கும் வேறுபாடுண்டு. போர் நடக்கும்பொழுது நாட்டின் பொருளாதார அமைப்பு முற்றிலும் மாறிவிட்டது. போர்க் காலத்திய பொருளாதாரம் மாறி, சமாதானகாலப் பொருளாதாரம் உருவாகவேண்டும். இந்த மாறுபாடு நிகழும்பொழுது சில பிரச்சினைகள் எழும். பணவீக்கம் குறையுமென்றும் விலைகள் தாழ்வடையுமென்றும் பலர் எதிர்பார்த்தனர். போருக்கான செலவுகள் நாட்டின் வருமானத்தைப் பெருக்கியது. போர் முடிந்தவுடன் விவசாய நாடாகிய இந்தியாவில் பணச்சுருக்கம் ஏற்படுமென்றும், விலைகள் குறையுமென்றும் பலர் கருதினர். போர் நிலைமையிலிருந்து

சமாதானத்திற்கு இந்தியா செல்லும்பொழுது, இந்த மாறுபாடுகள் ஏற்படலாமென்று கருதி, இவைகள் நாட்டைப் பாதிக்காமலிருக்க வேண்டிய ஏற்பாடுகளை 1946-ஆம் ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தில் அரசாங்கம் சேர்த்தது. வரவுசெலவுத் திட்டத்தில் துண்டு விழாதென்றும், விவசாயப் பொருள்களின் விலை குறையுமென்றும் எதிர்பார்த்தனர். ஆனால், எதிர்பார்த்தபடி எதுவும் நடக்கவில்லை. விலைகள் குறையாமல் அதே நிலையிலிருந்தன. பற்றுக்குறையும் நீடித்தது. வேலை வாய்ப்புக்கள் மிகுதியாக இருந்தன. தொழிலாளிகள் கூலி உயர்வுக்காக நாடெங்கும் வேலை நிறுத்தம் செய்தனர். ஆனால், சிறிது காலதாமதமாகவே அவர்கள் கூலி உயர்ந்தது. போருக்குப் பின் நாட்டில் நிலவிய நிலைமையை உற்றுநோக்கினால், பொருளாதாரம் எந்த விதத்திலும் மாறவில்லை என்பது தெளிவாகும்.

போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது இங்கிலாந்தின் சார்பில், இந்திய அரசாங்கம் பொருள்களை நம் நாட்டில் வாங்கியது. இங்கிலாந்தில் ரிசர்வ் பாங்குக் கணக்கில் ஸ்டெர்லிங் நிதி வளர்ந்தது. இதைக் காப்பாக வைத்துக்கொண்டு செலாவணித் தாள்களை வெளியிட்டனர். போருக்குப்பிறகும் இப்பழக்கத்தை நீட்டித்தனர். செலாவணித் தாள் வெளியீடு அதிகரித்தது. இந்திய அரசாங்கத்தின் செலவுக்காகச் செலாவணித் தாளை அதிக அளவில் வெளியிட்டனர். 1947-ஆம் ஆண்டு பல புதிய அரசியல் சமூகச் சிக்கல்கள் எழுந்தன. இவற்றிற்கு முடிவு காணும் வகையில் அரசாங்கம் அதிகமாகச் செலவு செய்ய நேர்ந்தது. எனவே, பணவீக்கத்தைக் குறைக்க முடியவில்லை. போர் முடிந்ததும் பாதுகாப்புச் செலவு குறைந்தது. எனினும், அரசாங்கத்தின் மற்றச் செலவுகள் குறையவில்லை. ஆண்டுதோறும் வரவு செலவுத் திட்டத்தில் பற்றுக்குறை ஏற்பட்டது. 1950-51-இல் 45 கோடி ரூபாய் பற்றுக்குறை ஏற்பட்டது. இராணுவச் செலவு பெருகியது. பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளால் நமது செலவு மேலும் அதிகரித்தது. நிருவாகச் செலவும் அதிகரித்தது. வரவு செலவில் ஏற்பட்ட பற்றுக்குறையைச் செலாவணித் தாள் வெளியீட்டின் மூலம் சமாளித்தனர். ஆகையால், போர் முடிந்தபின்பும் பழைய நிலைமை மீட்கப்படவில்லை.

போர் நடந்து கொண்டிருக்கும்பொழுது பணவீக்கமும் அதன் பலனாக விலையுயர்வும் ஏற்பட்டதைத் தடைசெய்யக் கட்டுப்பாடுகளை (controls) அமுலில் கொணர்ந்தனர் என்று முன்பு குறிப்பிட்டோம். உணவு தானியக் கொள்கைக் குழுவினர் சிபாரிசுப்படி 1947-இல் அரசாங்கம் இக்கட்டுப்பாடுகளை நீக்கியது. உணவு தானியங்களை ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்கு எடுத்துச்

செல்வதையும், அவற்றின் வழங்கலையும் (Supply), தேவையையும் (demand), பாதிக்கும் இயற்கைச் சக்திகளையும் கட்டுப்பாடுகள் தடை செய்தன. இதனால் ஒரு செயற்கைப் பற்றுக்குறை ஏற்பட்டது. இக்கட்டுப்பாடுகளை நீக்கினால் விலையும் குறையும், பற்றுக்குறையும் நீங்குமென்று அரசாங்கம் 1947-இல் கட்டுப் பாடுகளை நீக்கியது. உடனே விலைகள் உயர்ந்தன. அரசாங்கம் தன் கொள்கையை மாற்றிக்கொண்டு 1948-இல் மீண்டும் கட்டுப் பாடுகளை அமுலில் கொண்டுவந்தது. விலைகள் உயர்ந்ததோடல் லாமல் பற்றுக்குறையும் இருந்தது. மக்கள் அதிகமான பொருள் களை விரும்பினதால் அவர்கள் தேவை பெருகியது. ஆனால், உற்பத்தி பல காரணங்களால் குறைந்தது. இயந்திரங்கள் புதுப் பிக்கப்படாததாலும் போர்க்காலத்தில் இவற்றிற்கு அதிகவேலை கொடுத்ததாலும் தொழிலுற்பத்தி குன்றியது ; விவசாய உற்பத்தியும் குறைந்தது. உணவு பற்றுக்குறை நாட்டுப் பிரச்சினைகளுள் மிக முக்கியமானதாயிற்று. பர்மா இந்தியாவிலிருந்து பிரிந்ததிலிருந்து நமது நாட்டில் தன் நிறைவு (self-sufficiency) இல்லை. 1947-இல் பாகிஸ்தான் பிரிந்தவுடன் நிலைமை மேலும் மோசமாயிற்று. விவசாயப் பொருள்கள் விளையும் பகுதிகளான கிழக்கு வங்காளம், மேற்கு பஞ்சாப் முதலிய இடங்களைப் பாகிஸ்தான் பெற்றதால் நமது உணவு உற்பத்தி குறைந்தது. மேலும், பருத்தி, சணல் போன்ற சில முக்கியமான கச்சாப் பொருள்கள் விளையும் பகுதிகளை இந்தியா இழந்ததால் இவற்றிலும் பற்றுக்குறை ஏற்பட்டது. அயல் நாடுகளி லிருந்து உணவுப் பொருள் இறக்குமதி செய்யவேண்டியதாயிற்று. 1946-இல் பருவமழை சரிவரப் பெய்யாததால் பற்றுக்குறை விரி வடைந்தது. 1948-இல் உணவு தானிய இறக்குமதிக்காக 150 கோடி ரூபாய் செலவு செய்தனர். கட்டுப்பாடுகளை நீக்கிய பிறகு, 1947-இலிருந்து விலைகள் தடையின்றி உயர்ந்தன. நமது அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையும் சீர்கேடடைந்தது. இந்தியா விடுதலை யடைந்த பின்னர் அரசினர் நாட்டின் பொருளாதார நிலைமையைச் சீர்படுத்தவும், உற்பத்தியைப் பெருக்கவும் பல ஆக்க வேலைகளை ஆரம்பித்தனர். இதனால், அரசாங்கத்தின் செலவுகள் மிகுதி யடைந்தன. விலைகளும் உயர்ந்தன. பணவீக்கத்தின் கொடு மையை நாட்டில் எல்லோரும் உணர்ந்தனர். அரசாங்கத்தின் முதலீடும் செலாவணிப் பெருக்கமும் விலையுயர்வுக்கு முக்கியமான காரணங்களாகும்.

1950-இல் கொரியாப் போர் தொடங்கியதிலிருந்து நிலைமை மேலும் கடுமையாயிற்று. 1948-இல் பணவீக்கத்தையும், விலையுயர்வையும் கட்டுப்பாடுசெய்ய அரசாங்கம் முயற்சி செய்தது. ஆனால், இது பயனளிக்கவில்லை. 1945-இல் மொத்தத

குறியீட்டெண் (Wholesale Index) 244·1 ; இந்த எண் 1948-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 343·6 ஆக உயர்ந்தது. நாட்டுப் பிரிவினையாலும், கொரியாப் போராலும் நிலைமை மோசமாகியது. போர்க்காலத்திய பணவீக்கத்துக்கும், போருக்குப்பின் ஏற்பட்ட பணவீக்கத்துக்கும் வேறுபாடிருந்தது. போர்க்காலத்தில் அடக்கச் செலவு அதிகரிக்கவில்லை ; விலைகள் மட்டும் உயர்ந்தன. ஆகையால், இலாபம் அதிகரித்தது. ஆனால், போருக்குப்பின் அடக்கச் செலவு உயர்ந்ததால் இலாபம் குறைந்தது. உற்பத்தியும் குறைந்தது. பணவீக்கம் நடுத்தர மக்களைத் தாக்கியது. இவர்கள் வருமானம் அதிகமாகாததால் இவர்களுடைய வாழ்க்கைத்தரம் பாதிக்கப்பட்டது. விலையுயர்வு (ஓரெல்லைக்குட்பட்டிருந்தால்) நன்மை பயக்கும். எல்லை மீறிய விலையுயர்வு சமுதாயத்துக்குக் கேடு விளைவிக்கும். ஆகையால், 1948-இல் அரசாங்கத்தினர் பணவீக்கத்தையும் உயர்ந்த விலைகளையும் கட்டுப்பாடுசெய்ய வேண்டுமென்ற முடிவுக்கு வந்தனர். தொழிலதிபர்கள் பொருளாதார வல்லுநர்கள் முதலியோருடன் இப்பிரச்சினையைக் கலந்து ஆலோசித்து, ஒரு முடிவுக்கு வந்தனர். மீண்டும் கட்டுப்பாடுகளை அமுலில் கொண்டு வரலாமென்று முடிவுசெய்தனர். பணவீக்கத்தைக் குறைப்பதற்கேற்ற வரவுசெலவுத் திட்டம் தயார் செய்ய வேண்டும். புழக்கத்திலிருக்கும் அதிகப்படியான செலாவணியைக் குறைப்பதற்குச் சிறுசேமிப்புத் (Small savings) திட்டத்தை நாட்டில் புகுத்தினர். பங்குதாரர்களுக்குக் (share-holders) கொடுக்கும் இலாப ஈவு ஒரு குறிப்பிட்ட தொகைக்கு (ஆறு சதவீதம்) மேல் உயரக்கூடாது. மக்கள் சேமிப்பைப் பெருக்க வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தனர். ஆனால், அரசாங்கம் இதில் வெற்றி பெறவில்லை. தொழிலுற்பத்தியைப் பெருக்க அரசாங்கம் ஏற்ற முயற்சி செய்தது. இந்த நடவடிக்கைகளுள் மிகச் சிறந்தவை கட்டுப்பாடுகளும் பங்கீட்டு முறையுமே. உடனடியாக நிலைமையில் முன்னேற்றம் இருந்தபோதிலும், இந்த நடவடிக்கைகள் நிரந்தரமான பயனை அளிக்கவில்லை. உணவு இறக்குமதி, அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையை நமக்குப் பாதகமாக்கியது. விலைகளும் குறையவில்லை. பணவீக்கம் நடுத்தர மக்களைக் கடுமையாகத் தாக்கியது. நாட்டுப் பிரிவினையால் ஏற்பட்ட விளைவுகள், பொருளாதாரச் சிக்கல்கள், அரசியல் பிரச்சினைகள் முதலியவற்றை நன்றாக ஆலோசித்து அரசாங்கம் அவற்றிற்கு முடிவுகாண வேண்டியதாயிற்று.

போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது இந்திய அரசாங்கம் இங்கிலாந்தின் சார்பில் அதிகப் பணத்தைக் கொடுத்துப் பண்டங்கள் வாங்கியது. போர் நிமித்தமான செலவும் அதிகரித்தது. இச்

செலவுக்கு வேண்டிய தொகையை வரி, கடன் முதலிய சாதாரண வழிகளில் பெற முடியாததால் ரிசர்வ் பாங்கைச் செலாவணித் தாள்களை அச்சிடச்செய்து அவற்றை அரசாங்கம் பெற்றுக் கொண்டது. இங்கிலாந்தில் ஸ்டெர்லிங் நிதி வளர்ந்தது. இந்த விதமாக நம் ஸ்டெர்லிங் நிதி வளர்ந்ததென்பதை முன்பே குறிப்பிட்டோம். செலாவணித் தாள் வெளியீடு பணவீக்கத்தையும், விலை உயர்வையும் ஏற்படுத்தியதால், மக்களுடைய உண்மையான வருமானம் (Real Income) குறைந்தது. போருக்குப்பிறகு இந்த ஸ்டெர்லிங் நிதியை இந்தியாவின் பயனுக்குக் கொடுக்கவேண்டும். இங்கிலாந்து இந்த நிதியிலுள்ள தொகையைக் குறைக்கவேண்டுமென்று அதற்குப் பல காரணங்கள் கொடுத்தது. இரண்டாவது போரில் இந்தியாவுக்கும் ஒரு முக்கியமான பங்குண்டு. போர் முடிவதற்குமுன் கிழக்கிந்திய நாடுகள் ஜப்பானுடைய தாக்குதலுக்கு இலக்காயின. இந்தியாவைக் காப்பாற்றுவதற்காக இங்கிலாந்து அதிகமான பொருட்செலவு செய்தது. போரை வெல்வதில் இந்தியாவுக்குப் பொறுப்பும் பங்குமுண்டு. ஆகையால், ஸ்டெர்லிங் நிதியில் ஒரு பகுதியைத் தள்ளுபடி செய்யவேண்டுமென்று இங்கிலாந்து அரசாங்கம் வற்புறுத்தியது. ஆனல், இக்கூற்று தவருனது. இந்தியா தன் சக்திக்குமேல் போர் நிமித்தமாகச் செலவு செய்தது. இந்தியர் பொருள்களை உயர்ந்த விலையில் இங்கிலாந்துக்குக் கொடுத்தனர். இதனல், ஸ்டெர்லிங் தொகை அதிகமானதால் அதைக் குறைக்கவேண்டுமென்றனர். ஆனல், இங்கிலாந்து அரசாங்கம் நியமித்த பாராளுமன்றக்குழு (Parliamentary committee) இந்தியப் பொருள்களைச் சரியான விலைக்கே கொடுத்ததென்பதை ஒத்துக்கொண்டது. பொருள்களை உயர்ந்த விலைக்குக் கொடுத்து அதிக லாபம்பெற நாம் முயற்சி செய்தோமென்பது தவறு. ஆகையால், ஸ்டெர்லிங் நிதியைக் குறைப்பதற்கு ஏற்ற காரணம் எதுவுமில்லை. இங்கிலாந்து நாட்டில் போருக்குப் பின் பொருளாதார நிலைமை மிக மோசமாக இருந்தது. உற்பத்தி குறைந்துவிட்டது. ஆகையால், ஸ்டெர்லிங் தொகையைத் திருப்பிக் கொடுப்பது கடினமான காரியமாகையால், இந்தியா இத்தொகையைக் குறைத்துக் கொள்ளவேண்டுமென்று வாதாடினர். இங்கிலாந்து போரில் நேரிடையாக ஈடுபட்டிருந்ததென்பதும், அதன் பொருளாதாரம் போரால் கடுமையாகத் தாக்கப்பட்டதென்பதும் உண்மையே. ஆனல், இந்தியாவின் நிலைமை அதைவிட மோசமாக இருந்தது. எனினும், பல துன்பங்களையும் தொல்லைகளையும் மேற்கொண்டு, இந்தியா இங்கிலாந்திற்குப் போர்க்காலத்தில் உதவியளித்தது. ஆகையால், ஸ்டெர்லிங் நிதியைக் குறைப்பதற்கு இந்தியா ஒத்துக்கொள்ளவில்லை.

1947-க்குமுன் ஸ்டெர்லிங் நிதியை இந்தியா விருப்பம்போல் பயன்படுத்திக் கொள்ளலாம். இத்தொகையை ஸ்டெர்லிங் பகுதி நாடுகளின் செலாவணியாகவோ டாலராகவோ மாற்ற முடியும். ஆனால், இந்த நிலை வெகு நாட்களுக்கு நீடிக்கவில்லை. 1946-இல் இங்கிலாந்து அமெரிக்காவுடன் ஒரு கடன் ஒப்பந்தம் செய்துகொண்டது. அதன்படி ஸ்டெர்லிங் நிதியை மூன்று பகுதிகளாகப் பிரித்தனர். ஒரு பகுதியை இந்தியா வேண்டுமளவு பயன்படுத்திக்கொள்ளலாம்; எந்தச் செலாவணியாகவும் மாற்றிக் கொள்ளலாம். மற்றொரு பகுதியைப் பல தவணைகளில் பயன்படுத்திக்கொள்ளலாம். மூன்றாவது பகுதியை இங்கிலாந்திற்குக் கொடுக்கவேண்டிய கடன், போர் நிமித்தமான செலவு முதலியவைகளுக்காகத் தள்ளுபடி செய்யவேண்டும். 1947-இல் ஸ்டெர்லிங் நிதிபற்றிய ஏற்பாடு ஒன்றை இங்கிலாந்தும் இந்தியாவும் ஏற்றுக்கொண்டன. இந்த ஏற்பாடு 1947-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31-ஆம் தேதி வரை அமுலிலிருந்தது. இந்திய ரிசர்வ் பாங்கு, ஸ்டெர்லிங் நிதியை இங்கிலாந்து மையப் பாங்கின் இரண்டு கணக்குகளில் வைத்துக்கொள்ள வேண்டும். இரண்டாவது கணக்கிலிருந்த மொத்த ஸ்டெர்லிங் நிதியின் மதிப்பு 116 கோடி பவுன். முதல் கணக்கிலிருக்கும் தொகையை நடைமுறைச் செலவுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதை எந்தச் செலாவணியிலும் மாற்றிக் கொள்ளலாம். இரண்டாவது கணக்கிலுள்ள தொகையை இப்படிப் பயன்படுத்திக்கொள்ள முடியாது. முதல் கணக்கில் சேர்த்த 650 லட்சம் பவுனில், 350 லட்சத்தை நடைமுறைச் செலவுக்கும், மீதத்தைக் கணக்கில் இருப்புத் தொகையாக வைப்பதற்கும் கொடுத்தனர். முதல் கணக்கிலுள்ள தொகையை உலகில் எந்தப் பகுதியிலும் செலவு செய்யலாம். அதாவது, அத்தொகையை எந்தச் செலாவணியாக வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம். இரண்டாவது கணக்கிலுள்ள தொகையை நடைமுறைச் செலவுக்குப் பயன்படுத்தக்கூடாது. அதைக் குறிப்பிட்ட சில உபயோகங்களுக்கே பயன்படுத்தலாம்.

1948-இல் மீண்டும் இங்கிலாந்தும் இந்தியாவும் ஸ்டெர்லிங் பற்றிய ஒப்பந்தம் ஒன்றைச் செய்துகொண்டன. இதற்காக இந்தியத் தூதுக் குழு ஒன்று இங்கிலாந்திற்குச் சென்றது. முதல் கணக்கில் இந்தியா பயன்படுத்தியதுபோக மீதம் எட்டுக்கோடி பவுன் இருந்தது. இதைத் தவிர 1948-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல், மூன்று ஆண்டுகளுக்கு நமது பயனுக்காக எட்டுக்கோடி ரூபாயை ஒதுக்கினர். இங்கிலாந்திற்குச் சொந்தமான தளவாடங்களை இந்தியா 133 கோடி ரூபாய்க்கு வாங்கிக்கொண்டது. இந்தியாவில் பணியாற்றிய பிறகு ஓய்வு பெறும் ஐரோப்பியர்

களுக்குக் கொடிக்கவேண்டிய ஊதியத்திற்காக ஒரு தொகையை இங்கிலாந்திற்குக் கொடுத்தது. பாதுகாப்புச் செலவில் இந்தியா விற்குச் சேர்க்கவேண்டிய தொகையை இங்கிலாந்து கொடுத்தது. நமக்குச் சேரவேண்டிய ஸ்டெர்லிங் தொகை 1040 கோடி ரூபாய் பெறுமானமுள்ளது. பணவீக்கத்தைக் குறைப்பதற்காக அரசினர் 1948-இலிருந்து இறக்குமதியை அதிகரித்தனர். இதனல் நமது ஸ்டெர்லிங் நிதி குறைந்தது. 1949-இல் இந்தியா மேலும் அதிகமான ஸ்டெர்லிங்கை உபயோகிக்கவேண்டுமென்று கேட்டது. ஆனல், இங்கிலாந்து அதற்கு இசையவில்லே. மீண்டும் 1949-இல் இரு நாடுகளும் ஸ்டெர்லிங் பயன்பற்றிய புது ஒப்பந்த மொன்றைச் செய்து கொண்டன. இந்த ஒப்பந்தம் இரண்டு ஆண்டுகளுக்கு அமுலில் இருந்தது. நமது செலவுக்காக ஆண்டுக்கு ஐந்துகோடி பவுன் வீதம் இரண்டு ஆண்டுகளுக்கு ஸ்டெர்லிங் நிதியிலிருந்து பவுன் கொடுக்கப்பட்டது. 1951-இல் இரு நாடுகளும் மீண்டும் ஒரு புதிய ஒப்பந்தம் செய்துகொண்டன. இந்த ஒப்பந்தம் 1957-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 30-ஆம் தேதி வரை அமுலிலிருந்தது. இந்த ஒப்பந்தப்படி இரண்டாவது கணக்கிலிருந்து முதற் கணக்குக்கு 310 கோடி பவுனே மாற்றினர். இத்தொகையைச் செலாவணித்தாள்காப்புநிதியாகப் பயன்படுத்திக் கொள்வதற்காக மாற்றினர். ஆண்டுதோறும் இரண்டாவது கணக்கிலிருந்து முதற் கணக்குக்கு 3·5 கோடி ரூபாயை மாற்றினர். சில விதிகளே வகுத்து இந்த மாற்றத்தை அவைகளுக்குட் படுத்தினர். நடைமுறைச் செலவுக்கு வேண்டிய தொகையை இந்த ஒப்பந்தத்துக்குப் பிறகு நாம் பெறமுடியவில்லே.

மக்களின் நுகர்ச்சிப் பொருள்களேயும், உணவுப் பொருள் களேயும் பெரும்பாலும் இந்த நிதியைக்கொண்டே நாம் பெற்ருேம். ஆகையால், ஸ்டெர்லிங் நிதியை நமது பொருளாதார முன்னேற்றத் திற்குப் பயன்படுத்த முடியவில்லே. மேலும், அவ்வப்பொழுது நடை முறைச் செலவுக்காக ஒதுக்கிய தொகையும் போதவில்லே. இவ்வொப் பந்தங்களேக் குறுகிய காலத்துக்கே செய்ததால் நீண்டகாலத் திட்டங்கள் வகுத்து அவற்றைச் செயலாற்றுவதற்கு நிதியை நாம் பயன்படுத்த முடியவில்லே. ஸ்டெர்லிங் நிதியைப் பெருக்க இந்தியா அரும்பாடுபட்டது. ஆனல், இத்தொகையைச் சரியான முறையில் நாம் உபயோகிக்க முடியாமற் போயிற்று. பழைய ஒப்பந்தங்களின் குறைபாடுகளேப் புதிய ஒப்பந்தங்கள் செய்யும்பொழுது நீக்கினர். ஸ்டெர்லிங் தொகைக்குக் கொடுத்த வட்டி வீதம் மிகக் குறைவு. சராசரி 0·78 சதவீதத்துக்கு மேல் வட்டியை உயர்த்தவில்லே. போர்ச் செலவுக்காகவும், ஓய்வு பெற்ற ஆங்கிலேய அலுவலர்கள் ஊதியத்துக்காகவும் மிகுதியான தொகையை ஒதுக்கினர். இது

ஸ்டெர்லிங் நிதி பற்றிய ஒப்பந்தங்களின் பெரிய குறையாகும். 1960-இல் ஸ்டெர்லிங் தொகை 143 கோடி ரூபாயளவுக்குக் குறைந்ததில் வியப்பொன்றுமில்லை.

ஆங்காங்கே நாம் மேலே குறிப்பிட்டபடி நமது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை போருக்குப்பின் பாதகமாக இருந்தது. இந்தியா நேரிடையாகப் போரில் கலந்து கொள்ளாவிடினும், அதன் பொருளாதாரத்தைப் போர் குலைத்துவிட்டது. நாட்டுப் பிரிவினை, நிலைமையை மேலும் மோசமாக்கியது. உற்பத்தி குறைந்ததாலும் அயல்நாட்டுப் பொருள்கள் மிகுதியாகத் தேவைப்பட்டதாலும் நமது கொடுப்பல் நிலை நமக்குப் பாதகமாயிற்று. 1949-இல் மற்ற நாடுகளுக்கு நாம் செலுத்தவேண்டிய தொகை (அவர்கள் நமக்குச் செலுத்தவேண்டியது போக எஞ்சியது) 146·6 கோடி ரூபாய். இதற்கு முக்கிய காரணம், 1948-இல் நாம் பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்ய எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளுள் ஒன்றாகிய இறக்குமதிக் கொள்கையேயாகும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சரிபடுத்துவதற்காக நாம் இறக்குமதியைப் பல தடைகளுக்குட்படுத்தினோம். இதன் பலனாகக் கொடுப்பல் நிலையிலிருந்த பற்றுக்குறை குறைந்தது. 1949-இல் இங்கிலாந்து நாணய மதிப்பைக் குறைத்தது. அதையொட்டி இந்திய ரூபாயின் மதிப்பையும் குறைத்தனர். 1950-இல் நிலைமை சற்று முன்னேறியது; ஏற்றுமதிப் பொருள்களின் விலை உயர்ந்தது; இறக்குமதி ஓரளவு குறைந்தது. கொரியாவில் போர் தொடங்கியதும் இதற்குக் காரணமாகும். 1949-ஆம் ஆண்டுக்குப் பிறகு நம்நாட்டுப் பருத்தித் துணி ஏற்றுமதி முன்னேறியது. நாணயத்தின் மதிப்பைக் குறைத்ததே இதற்கு முக்கிய காரணம்.

### ரூபாயின் மதிப்பு

இரண்டாவது உலகப்போருக்குப்பின் ரூபாயின் மதிப்பு ஒரே நிலையிலிருந்ததா அல்லது மாறியதா, அப்படி மாறினால் எந்த அளவு மாறியது என்பதைப்பற்றி இங்குக் கவனிப்போம். ஒரு நாட்டின் செலாவணிக்கு உள்நாட்டில் எவ்வளவு சக்தி (பொருள் வாங்கும் சக்தி) இருக்கின்றதோ, அதே சக்தி வெளிநாட்டிலும் இருந்தால் அதன் மதிப்பு சரியானதென்று சொல்லலாம். அதாவது, ஒரு செலாவணியின் அக மதிப்பும் (Internal value) புறமதிப்பும் (External value) ஒன்றாக இருத்தல்வேண்டும். ஒரு செலாவணியின் புறமதிப்பை, அதன் உண்மையான மதிப்பை விட உயர்த்தினால் இறக்குமதி அதிகரிக்கும்; ஏற்றுமதி குறையும். பொன்

ஏற்றுமதியாகும். புற மதிப்பை உண்மையான மதிப்பைவிடக் குறைத்தால் ஏற்றுமதி அதிகரிக்கும் ; இறக்குமதி குறையும். செலாவணிக்கு உண்மையான மதிப்பைக் கொடுத்தால் நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலே (Balance of payments) சரியாக இருக்கும் ; சாதகமாகவும் இருக்காது ; பாதகமாகவும் இருக்காது. செலாவணியின் புற மதிப்பு அடிக்கடி மாறிஞல் நாட்டின் வர்த்தகம் நல்ல முறையில் நடைபெருது. செலாவணியின் புற மதிப்பைப்பற்றி எந்த நாட்டினரும் நன்கு ஆலோசித்த பிறகே ஒரு முடிவுக்கு வரவேண்டும்.

1927-இலிருந்து ரூபாயின் புறமதிப்பு 1 ஷி. 6 பென்சுக்குச் சமானமாக இருந்தது. இரண்டாவது உலகப்போருக்குமுன் இந்த மதிப்பைக் குறைக்கவேண்டுமென்று மக்கள் விரும்பினரென்றும், காங்கிரஸ் கட்சியும் இதைக் கோரியதென்றும், அரசாங்கம் இதற்குச் செவிசாய்க்கவில்லேயென்றும் பார்த்தோம். போருக்குப் பின் 1949-இல் மீண்டும் இந்தப் பிரச்சினே எழுந்தது. இங்கிலாந்து நாட்டின் இறக்குமதி பெருகிற்று. ஏற்றுமதி படிப்படியாகக் குறைந்தது. டாலர் நிதியும் பொன்னும் நாளடைவில் குறைந்துகொண்டே வந்தது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலே கேவலமான நிலேயை அடைந்தது. டாலர் நாடுகளுடன் இங்கிலாந்து சரிவர வாணிகம் நடத்த முடியவில்லே. அமெரிக்கப் பொருள்களே வாங்குவதற்கு வேண்டிய டாலர்ச் செலாவணியை இங்கிலாந்து பெறுவது கடினமாயிற்று. கையிலிருந்த டாலர் நிதியையும், பொன்னேயும் உபயோகிக்கவேண்டியதாயிற்று. ஸ்டெர்லிங் பகுதியின் (Sterling area) டாலர் நிதி (Dollar reserves) குறைந்துகொண்டே வந்தது. இங்கிலாந்து செலாவணியின் மதிப்பைக் குறைக்குமென்று எல்லோரும் கருதினர். உண்மையாக இங்கிலாந்தைவிட அமெரிக்காவில் பண்டங்களின் விலேகள் குறைவாக இருந்தன. இதனுல், இங்கிலாந்தின் ஏற்றுமதி தடைப்பட்டது. இந்த நிலேயில் நாணய (மறைமுக) மதிப்புக் குறைப்பு (Devaluation) இன்றியமையாதது. நாணயத்தின் மதிப்பை அரசினர் குறைக்கப் போகின்றனர் என்பது வெளியானுல், அயல் நாட்டினர் இங்கிலாந்திலிருந்து பொருள் வாங்குவதைத் தாமதம் செய்வர். ஏனெனில், பவுன் மதிப்பு குறைந்தபின், அயல் நாட்டினர் தங்கள் செலாவணிக்குப் பதிலாக, முன்பு பெற்றதைவிட அதிகமாகப் பவுனேப் பெறமுடியும். ஆகவே, அவர்கள் இங்கிலாந்தின் பொருள்களே உடனடியாக வாங்காமல் நாணயத்தின் மதிப்பை இங்கிலாந்தில் அரசினர் குறைப்பதற்காகக் காத்துக்கொண்டிருப்பர். அமெரிக்கர் நாணய மதிப்புக் குறைப்பை எதிர்பார்த்து இப்படிச் செய்தனர். இதனுல், இங்கிலாந்தின் ஏற்றுமதி மேலும் குறைந்தது. எனவே, பன்னுட்டு நாணய நிதியின் அனுமதி பெற்று, 1949-ஆம் ஆண்டு செப்டம்பர் 18-ஆம் தேதி

6

இங்கிலாந்து 30·5 சதவீதம் பவுன் மதிப்பைக் குறைத்தது. முன்பு 4·43 டாலருக்குச் சமமாயிருந்த ஒரு பவுன் இப்பொழுது 2·80 டாலருக்குச் சமமாயிற்று. பலர் எதிர்பார்த்ததைவிடப் பவுன் மதிப்பை அதிகமாகவே குறைத்தனர்.

மறைமுக மதிப்புக் குறைப்பைச் சிறிது விளக்கவேண்டும். பொன்நாணயத் திட்டத்தையோ, வேறு எந்தத் திட்டத்தையோ பின்பற்ருத இருநாடுகளின் செலாவணிகளின் வீதமதிப்பை மாற்றி யமைத்தால், அவற்றுள் ஒரு செலாவணியின் மதிப்பு குறையும். இதை நேரிடை மதிப்புக் குறைப்பு (Exchange depreciation) என்று சொல்வதுண்டு. இருநாடுகள் பொன் திட்டத்தைப் பின்பற்றினுல் அவற்றுள் ஒரு நாடு தன் செலாவணியின் வீதமதிப்பைக் குறைப் பதற்குப் பொன் விலையை உயர்த்தவேண்டும். பொன் விலையை உயர்த்தி, அதன் மூலம் செலாவணியின் புறமதிப்பைக் குறைக்க வேண்டும். இப்படிச் செய்வதை மறைமுக மதிப்புக் குறைப்பு (Devaluation) என்று சொல்லலாம். இங்கிலாந்து பன்னுட்டு நாணய நிதியில் அங்கம் வகித்ததால் பொன் சமன்பாட்டு முறையைப் (Gold parity standard) பின்பற்றியது. ஆகையால், மறைமுகமாகவே பவுனின் மதிப்பைக் குறைத்தது.

இங்கிலாந்தைப் பின்பற்றிக் காமன்வெல்த் நாடுகளும் தங்கள் செலாவணியின் மதிப்பைக் குறைத்தன. இந்தியாவும் மற்ற நாடுகளைப் பின்பற்றி ரூபாயின் மதிப்பைக் குறைத்தது. ஆனுல், பாகிஸ்தான் தன் செலாவணியின் மதிப்பை மாற்றவில்லை. இதனுல், அந்த நாட்டுக்குப் பெரிய தொல்லைகள் ஏற்பட்டதால், 1955-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இந்தியச் செலாவணியின் அளவுக்கு அதன் நாணயத்தின் மதிப்பைக் குறைத்தது.

ரூபாயின் மதிப்பைக் குறைப்பதற்குப் பல முக்கியமான காரணங்கள் இருந்தன. இந்தியாவின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மோசமாக இருந்தது. முன்பு குறிப்பிட்டதுபோல் இறக்குமதி அதிகமாயிற்று. ஆனுல், ஏற்றுமதி குறைந்தது. இந்தியாவில் பொருள்களின் விலைகள் உயர்ந்தன. 1947-இலிருந்து 1949-வரை குறியீட்டெண் (Index number) உயர்ந்துகொண்டே சென்றது. புழக்கத்திலிருக்கும் செலாவணி குறைந்தபோதிலும் விலைகள் குறையவில்லை. 1948-இலிருந்து 1949-ஆம் ஆண்டு வரை அமெரிக்காவுடன் நாம் கொண்டுள்ள வாணிகத் தொடர்பு மோசமான நிலைமைக்கு வந்தது. அந்த நாட்டுக்கு நாம் செலுத்த வேண்டிய தொகை அதிகமாயிற்று. இறக்குமதிக்கும் ஏற்றிமதிக்கும் உள்ள வேறுபாட்டை நீக்க, அரசினர் அமெரிக்காவிலிருந்து வரும்

இறக்குமதியைக் குறைத்தனர். ஆனால், ஏற்றுமதியைப் பெருக்க முடியவில்லை. நாணயத்தின் மதிப்பைக் கட்டாயம் குறைக்கவேண்டியிருந்தது. ஆனால், சிலர் ஏற்றுமதி குன்றியதற்கு வேறு காரணங்கள் இருந்தனவென்றும், நாணய மதிப்பைக் குறைப்பதால் நிலைமை முன்னேறுதென்றும் கருதினர். ஜெர்மனி போன்ற நாடுகளில் நாம் பண்டங்கள் விற்பனை செய்யும் வாய்ப்பை இழந்ததாலும், நாட்டுப் பிரிவினையாலும், சணல், பருத்தி போன்ற தொழில்கள் பாதிக்கப் பட்டமையாலும், பொதுவாக உற்பத்தி குறைந்ததாலும் நமது ஏற்றுமதி குறைந்தது. நாணயத்தின் மதிப்பைக் குறைத்து ஏற்றுமதியைப் பெருக்கமுடியாதென்று இவர்கள் கருதினர். நாணயத்தின் மதிப்பைக் குறைத்து, அதன் மூலம் இந்தியப் பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்க்கமுடியாதென்பது உண்மையே. எனினும், செலாவணியின் மதிப்பைக் குறைப்பதால் ஓரளவு நிலைமை முன்னேறும் என்பதை எவரும் மறுக்கமுடியாது.

இதைத் தவிர, ரூபாயின் மதிப்பைக் குறைப்பதற்கு மற்றக் காரணங்களும் இருந்தன. இப்படிக் குறைப்பதால் ஸ்டெர்லிங் நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வரும் இறக்குமதியைக் குறைக்கலாம். அமெரிக்காவிலிருந்து வரும் இறக்குமதியையும் ஓரளவு குறைக்கலாம். 1949-இல் பவுன் மதிப்பைக் குறைத்ததால் ரூபாயின் மதிப்பையும் குறைக்கவேண்டியதாயிற்று. இப்படிக் குறைக்காவிடில் பவுன்-ரூபாய் வீதம் மாறும். அதாவது, ரூபாயின் மதிப்பு உயரும். நம்நாட்டின் ஏற்றுமதி இதனால் குறையும். நமது ஏற்றுமதி வர்த்தகத்தில் 75 சதவீதம் நாணயத்தின் மதிப்பைக் குறைத்த ஸ்டெர்லிங் நாடுகளுடன் இருந்ததால், ரூபாயின் மதிப்பைக் கட்டாயம் குறைக்கவேண்டியதாயிற்று. அப்படிச் செய்யாவிடில், நமது பண்டங்களை அயல் நாடுகள் அதிக விலைகொடுத்து வாங்க வேண்டும். சில பொருள்களை உற்பத்தி செய்வதிலும், அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதிலும் சில நாடுகள் இந்தியாவுடன் கடுமையாகப் போட்டியிட்டன. உதாரணமாக, தேயிலை ஒரு முக்கியமான ஏற்றுமதிப் பொருள். நாம் செலாவணியின் மதிப்பைக் குறைக்காவிடில் சிலோன் நாடு இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு தனது ஏற்றுமதியைப் பெருக்கிக்கொள்ளும். ஆகையால், நமது அயல்நாட்டு வர்த்தகத்தை, முக்கியமாக ஏற்றுமதியைக் காப்பாற்ற நாணயத்தின் மதிப்பைக் குறைத்தல் வேண்டும். இறக்குமதியைக் கட்டுப்பாடுகள், தடைகள் முதலியவற்றின் மூலம் குறைக்கலாம். ஆகையால், ரூபாயின் மதிப்பைக் குறைக்கவேண்டாமென்று சிலர் கருதினர். ஆனால், நமது ஏற்றுமதி வியாபாரம் குறையாமலிருக்க, ரூபாயின் மதிப்பைக் குறைக்க வேண்டியதாயிற்று. இந்தியா ஸ்டெர்லிங் நிதியைப் பயன்படுத்தும்பொழுது ரூபாயின் மதிப்பைக்

குறைப்பதால், குறைந்த அளவு பொருள்களை இங்கிலாந்திலிருந்து பெறும். ஆதலின், செலாவணியின் மதிப்பைக் குறைத்தல் சரியல்ல என்றனர். செலாவணியின் மதிப்பைக் குறைப்பதால் ஏற்படும் நலன்களையும், குறைக்காததால் ஏற்படும் கெடுதிகளையும், சீர்தூக்கிப்பார்த்து அரசினர் ரூபாயின் மதிப்பைக் குறைத்தல் சரியென்ற முடிவுக்கு வந்தனர்.

1949-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20-ஆம் தேதி ரூபாயின் மதிப்பை 30·225 செண்டிலிருந்து 21 செண்டாக மாற்றினர். இங்கிலாந்து இதே அளவு பவுன் மதிப்பைக் குறைத்ததால் ரூபாய்-பவுன் மதிப்பு மாறவில்லை. மற்றக் காமன் வெல்த் நாடுகளும் இங்கிலாந்தைப் பின்பற்றின. 30·5 சதவீதத்துக்கு மேல் ரூபாயின் மதிப்பைக் குறைக்காதது தவறென்றும், ரூபாய்-டாலர் மதிப்புத்தான் மாறியதேயன்றி ரூபாய்-பவுன் மதிப்பு மாறவில்லை என்றும் சிலர் அரசினர் கொள்கையைக் குறை கூறினர். இதனால், போதிய அளவு நமது ஏற்றுமதி பெருகாதென்பது இவர்கள் கருத்து. ஆனால், ஓரளவுக்குமேல் ரூபாயின் மதிப்பைக் குறைப்பது சரியல்ல. அதனால் பல கேடுகள் விளையும். உதாரணமாக, இறக்குமதிப் பொருள்களின் விலை உயரும். ஆகையால், அரசினர் செய்தது முற்றிலும் சரியானது.

ரூபாயின் மதிப்பு குறைந்ததன் பலனாக நமது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை சற்று முன்னேறியது. 1948-49-இல் நமது அயல்நாட்டு வர்த்தகத்தில் 183·45 கோடி ரூபாய் பற்றுக்குறை இருந்தது. 1949-ஆம் ஆண்டில் இறுதியில் இப்பற்றுக்குறை நீங்கி, அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை நமக்குச் சாதகமாகத் திரும்பியது. ஏற்றுமதி நிலையில் முன்னேற்றமிருந்தது. இந்தியா ரூபாயின் மதிப்பைக் குறைத்த பிறகு, சில பொருள்களை வாங்கலா மென்று தாமதம் செய்த அமெரிக்கர்கள் 1949-க்குப்பிறகு நமது பொருளை அதிகமாக வாங்கினர். அரசினர் இறக்குமதியைக் கட்டுப்பாடுசெய்தனர். ஆகையால், ரூபாயின் மதிப்பைக் குறைத்த தால் நிலைமை முன்னேறியதென்று கருதுவது தவறு. மற்ற காரணங்களுள் இதுவும் ஒன்றாகும். டாலர் பகுதிகளுக்கு நாம் செய்யும் ஏற்றுமதி ஓரளவு அதிகரித்தது. இதற்கு ரூபாயின் மதிப்பைக் குறைத்தது முக்கிய காரணமாகும். ஸ்டெர்லிங் பகுதி களுக்கும் நாம் அதிகமான பொருள்களை ஏற்றுமதி செய்யமுடிந்தது. 1949-க்குப்பிறகு டாலர் பகுதிகளில் விலைவாசி உயர்ந்ததால் இந்தியப் பொருள்களை ஸ்டெர்லிங் பகுதியிலுள்ளவர்கள் அதிகமாக விரும்பினார்கள். ஆகையால், நமது ஏற்றுமதி அதிகரித்தது. ஆனால், இந்த நிலைமை அதிக நாள் நீடிக்கவில்லை. செலாவணி

மதிப்பை மாற்றியதால், மற்ற ஸ்டெர்லிங் பகுதி நாடுகளைப்போல் இந்தியா அதிகமான நலன்களைப் பெறவில்லை.

பாகிஸ்தான் அதன் செலாவணியின் மதிப்பைக் குறைக்க வில்லை. ஆகையால், இந்திய ரூபாயின் மதிப்பு பாகிஸ்தான் ரூபாயின் மதிப்பைவிடக் குறைந்தது. நம் ஆலைகளுக்கு வேண்டிய சணல், பருத்தி போன்ற முக்கியமான கச்சாப் பொருள்களைப் பாகிஸ்தானிலிருந்து நாம் பெறவேண்டும். 1949-க்குப்பிறகு நாம் இப்பொருள்களை உயர்ந்த விலை கொடுத்து வாங்கவேண்டிய தாயிற்று. இதனால், இந்தியா பாகிஸ்தான் வர்த்தகம் தடைப் பட்டது. மேலும், கச்சாப் பொருள்கள் கிடைக்காததால் நமது உற்பத்தியும் ஏற்றுமதியும் தடைப்பட்டன. ஆகையால், செலாவணி மதிப்பை மாற்றியதால் இந்தியா மற்ற நாடுகளைப்போல் பலனடைய வில்லை. மற்ற ஸ்டெர்லிங் நாடுகளில் எதிர்பார்த்தபடி முன்னேற்ற மிருந்தது. 1949-இல் ஜூன் மாதம் ஸ்டெர்லிங் பகுதியின் பொன், டாலர் இருப்பு சுமார் 168 கோடி டாலர். 1950-ஆம் ஆண்டு ஜூன் மாதம் இத் தொகை சுமார் 242 கோடிக்கு உயர்ந்தது. ஆனால், இந்தியாவில் மட்டும் நிலைமை முன்னேறவில்லை.

ரூபாயின் மதிப்பைக் குறைத்தபொழுது 1949-இல் அரசினர் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஒரு திட்டத்தையும் வகுத்தது. அயல்நாட்டுச் செலாவணியின் உபயோகத்தைக் குறைப்பதற்காக ஒரு புதிய வர்த்தகக் கொள்கையைக் கையாண் டனர். வரவுசெலவுத் திட்டத்தில் செலவைக் குறைத்தனர். முக்கிய மான பண்டங்களின் விலையைக் குறைக்க முயற்சி செய்தனர். அயல் நாட்டுப் பொருள்களைக் குறைந்த விலையில் வாங்கவும் முயற்சி செய்தனர். மக்களுடைய சேமிப்பை அதிகமாக்க வேண்டு மென்பதை உணர்ந்தனர். ஆனால், பணவீக்கமும் விலை உயர்வும் குறையவில்லை. இறக்குமதி குறைந்தமையும், ரூபாயின் மதிப்பு இறங்கினமையும் விலைகளை உயர்த்தின. 1949-க்குப் பிறகு உணவுப் பற்றுக்குறை இருந்தது. அதிக விலை கொடுத்து உணவுப் பொருள் களை அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டியிருந்தது.

ரூபாயின் மதிப்பைக் குறைத்தது தவறு என்றும், மீண்டும் அதை உயர்த்தவேண்டுமென்றும் சிலர் கருதினர். பண வீக்கத்தைக் கட்டுப்பாடுசெய்வது கடினம். வரிகள் புதியதாக விதிக்க வழியில்லை. சேமிப்பு மூலமாகப் புழக்கத்திலிருக்கும் உபரிப் பணத்தை மீட்க முடியவில்லை. பண்டங்கள் விற்பனையில் ஊக வாணிகம் அதிகமாக இருந்ததால் விலைகள் உயர்ந்தன. இதைக் கட்டுப்பாடுசெய்வது கடினம். இந்தியாவில் பாங்குச் செலா

வணியைக் கட்டுப்பாடுசெய்து, அதன் மூலம் விலைவாசிகளைக் குறைத்தல் இயலாத காரியமாகும். ஏனெனில், மையப்பாங்கு முறை நம் நாட்டில் சரியாக வளர்ச்சி பெறவில்லை. ஆகையால், பண வீக்கத்தைக் குறைக்க ரூபாயின் மதிப்பை உயர்த்துவதைத் தவிர வேறு வழியில்லை என்று டாக்டர் ஜான் மத்தாய் போன்றவர்கள் கருதினர்.

ஆனால், சர். சிந்தாமன் தேஷ்முக் ரூபாயின் மதிப்பை உயர்த்துவதற்குத் தகுந்த சூழ்நிலை இல்லையென்று கூறினர். இப்படி உயர்த்துவதால் இந்தியாவுக்கு எந்த நலனும் கிட்டாதென்றும், இப்படிச் செய்தால் இந்தியாவின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப்படுமென்றும் பாராளுமன்றத்தில் கூறினர். மேலும், ரூபாயின் மதிப்பை மற்ற நாடுகளுடன் ஆலோசிக்காமல் உயர்த்து வது சரியல்ல. இப்படி உயர்த்தினல், பாகிஸ்தான் உடனே அதன் செலாவணியின் மதிப்பை உயர்த்தும். ஆகையால், செலாவணியின் மதிப்பை மாற்றுதல் சரியல்லவென்று அரசாங்கம் முடிவு செய்தது. 1955-ஆம் ஆண்டு பாகிஸ்தான் தனது ரூபாயின் மதிப்பை (இந்திய ரூபாய் போல்) குறைத்தது. ஆகையால், இந்தியாவின் தொல்லைகள் ஓரளவு குறைந்தன.

### பேரரசின் டாலர் நிதி (Empire Dollar Pool)

ஸ்டெர்லிங் பகுதியிலுள்ள செலாவணிகளின் புறமதிப்பைப் பற்றிப் பேசும்பொழுது, பேரரசின் டாலர் நிதியைப்பற்றிக் குறிப்பிட வேண்டும். போருக்குமுன் ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் மற்ற உலக நாடுகளுக்குச் செலுத்தவேண்டிய தொகைகளை ஸ்டெர்லிங் நாணயங்கள் மூலமே செலுத்தினர். அவர்கள் கணக்குகளையெல் லாம் ஸ்டெர்லிங் செலாவணியில் லண்டனில் வைத்துக் கொண்ட னர். இந்த நாடுகளின் செலாவணிகளை ஸ்டெர்லிங்குடன் இணைத் திருந்தனர். இரண்டாவது போருக்குப் பிறகும் இந்த ஏற்பாடு நீடித் தது. ஆனல், போருக்குப்பின் இருந்த நிலைமைக்கேற்றவாறு சில மாறுதல்களடைந்தது. போருக்குப்பின் பல நாடுகள் அமெரிக்கப் பண்டங்களை நாடின. டாலர்ச் செலாவணிக்கு உலகெங்கும் தேவை எழுந்ததாலும், தேவைக்கேற்றபடி அதிகமான டாலர் கிடைக்காத தாலும், ஸ்டெர்லிங் நாணயத்தை முன்போல் டாலராக மாற்ற முடிய வில்லை. ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் ஒரு டாலர் நிதியை ஏற்படுத் தின. ஒவ்வொரு நாடும் இயன்ற அளவு இந்த டாலர் நிதியைப் பெருக்கவேண்டும். அமெரிக்காவுக்கு ஏற்றுமதியை அதிகரித்து, டாலர்ச் செலாவணிபெற்று அதை இந்த நிதியில் சேர்க்கவேண்டும்.

மற்ற நாடுகளைப்போல் இந்தியாவும் இந்த நிதியில் சேர்ந்தது. டாலர் போன்ற மற்ற கடினச் செலாவணிகளும் (Hard currencies) இதே நிலையிலிருந்தன. மற்ற மென்மைச் செலாவணிகள் (Soft currencies) எளிதில் கிடைத்தன. 1939-இலிருந்து இந்தியாவின் ஏற்றுமதி நல்ல முறையில் வளர்ச்சி பெற்றதால் நாம் டாலர்ச் செலாவணியை மிகுதியான அளவில் பெறமுடிந்தது. ஆனால், 1944-க்குப் பிறகு அமெரிக்காவுக்கு நமது ஏற்றுமதி குறைந்தது. டாலர் பற்றுக்குறையுமேற்பட்டது. ஆகையால், நிதியிலிருந்து இந்தியா டாலர்ச் செலாவணியைப் பெற்று உபயோகிக்க வேண்டியதாயிற்று.

போருக்குப்பின் உலக நாடுகளின் பொருளாதார நிலைமை எவ்வாறு சீர்கேடடைந்ததென்பதைப் பார்த்தோம். ஸ்டெர்லிங் பகுதியைச் சேர்ந்த நாடுகளனைத்தும், தங்கள் நாட்டில் உற்பத்தி குன்றியதால் டாலர் பகுதியிலிருந்து பொருள்களை நாடின. பல நாடுகள் உணவுபோன்ற முக்கியமான பண்டங்களைப் போதிய அளவு உற்பத்திசெய்யவில்லை. உற்பத்திச் செலவு தங்குதடையின்றி உயர்ந்தது. அமெரிக்கா மற்ற நாடுகளுக்கு உதவிசெய்யக்கூடிய நிலையில் இருந்தது. ஆகையால், ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் அமெரிக்கப் பண்டங்களை நாடின. அந்நாடுகள் வர்த்தக மூலம் கிடைத்த டாலரைவிட மிகுதியான தொகையை உபயோகித்தன. ஐரோப்பிய நாடுகளுக்கு உதவிசெய்யவேண்டுமென்று மார்ஷல் திட்டம் போன்றவற்றை அமெரிக்கா செயற்படுத்தியது. எனினும், ஸ்டெர்லிங் பகுதியின் நிலைமை சற்றும் முன்னேறவில்லை. இதிலிருந்து இரண்டாவது போர் எவ்வளவு தூரம் உலகைத் தாக்கியதென்பது தெளிவாகின்றது.

இந்தியா விடுதலையடைந்த பிறகு டாலர் நிதியை விட்டு விலகியது. இந்தியாவும் இங்கிலாந்தும் நிதிபற்றிய ஒப்பந்தம் ஒன்று செய்துகொண்டன. டாலர் நிதியிலிருந்து விலகியது இந்தியாவிற்கு நல்லதென்று சிலர் கருதினர். ஆனால், அமெரிக்காவிற்கு நாம் செய்யும் ஏற்றுமதி குறைந்தது. நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு நமது அயல்நாட்டு வர்த்தகம் பாதிக்கப்பட்டது; டாலர் நெருக்கடியும் ஏற்பட்டது. ஆகையால், பல நாடுகளின் விருப்பத்துக்கிணங்கி மீண்டும் டாலர் நிதியை ஆரம்பித்தனர். இந்தியா மீண்டும் நிதியில் சேர்ந்தது. ஸ்டெர்லிங் பகுதி நாடுகளுக்கு டாலர் எளிதில் கிடைக்கவில்லை. நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்காக நிதியில் சேர்ந்த ஸ்டெர்லிங் நாடுகள், டாலர் நாட்டிலிருந்து 25 சதவீதம் இறக்குமதியைக் குறைத்துக் கொள்ளவேண்டுமென்று முடிவுசெய்தனர். ஆனால்,

அமெரிக்காவிலிருந்து நாம் ஏராளமான பொருள்களை வாங்க வேண்டியிருந்ததால் நமது இறக்குமதியைக் குறைத்துக்கொள்ள முடியவில்லை. இயந்திரங்கள், மூலதனப்பொருள்கள் முதலியன நமக்கு வேண்டியிருந்தன. ஆகையால், நாம் மற்ற நாடுகளை, டாலர் உபயோகத்தைக் குறைத்துக்கொண்டு நம் நாட்டிற்கு அதிக டாலரைக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள வேண்டியதாயிற்று. டாலர் நிதி போன்ற ஏற்பாடுகள் தடையற்ற உலக நாடுகளின் வர்த்தகத்திற்கு ஏற்றதல்லவென்றும் அதை நீக்க வேண்டுமென்றும் கருதலாம். ஆனால், ஸ்டெர்லிங் நாடுகளுடைய மோசமான நிலைமையையும், இரண்டாவது போருக்குப்பின் அமெரிக்காவின் பொருளாதார வலிமையையும் கவனித்துப் பார்த்தால், பேரரசின் ஸ்டெர்லிங் நிதி ஏற்பாடு சரியானதே என்ற முடிவுக்கு நாம் வரவேண்டும்.

## 7. பொருளாதாரத் திட்டங்களும், செலாவணிக் கொள்கையும்.

ஒரு நாட்டின் பொருளாதாரம் இயற்கையாகவே விவசாயம், தொழில், வாணிகம் முதலிய துறைகளில் முன்னேறலாம். பல காரணங்களால் இவ்வியற்கை முன்னேற்றம் தாமதமாகலாம். ஆதலால், முன்னேற்றத் திட்டங்களை வகுத்து அவற்றை அரசாங்கம் செயலாற்றலாம். ஒரு காலத்தில் பொருளாதாரத் திட்டங்களைக் கண்டு சிலர் நகைத்ததுண்டு. ஆனால், இப்பொழுது இத்திட்டங்கள் சாதாரணமாகிவிட்டன. உலகில் பல நாடுகள் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களை வகுத்துச் செயற்படுத்துகின்றன. இந்தியா விடுதலையடைந்தபிறகு, நாட்டின் பொருளுற்பத்தியைப் பெருக்குவதற்கும், மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் இந்திய அரசாங்கம் ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்துச் செயலாற்ற ஆரம்பித்தது.

பொருளாதாரத் துறையில் இந்தியா ஒரு பின்தங்கிய நாடு. பொருளாதாரம் விரிவடையும்பொழுது பல சிக்கல்கள் எழும். செலாவணியும் பாங்குச் செலாவணியும் எந்த அளவு பெருக்க வேண்டுமென்பதை அரசினர் முடிவு செய்யவேண்டும். திட்டத்தைச் செயலாற்றும்பொழுது ஏற்படும் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். திட்டத்துக்குவேண்டிய நிதியை அரசாங்கம் பெற வேண்டும். 1950-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் திட்டக்குழுவை நியமனம் செய்தனர். முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1951-ஆம் ஆண்டு அமுலில் வந்தது. நாட்டிலுள்ள உற்பத்திச் சாதனங் களைப்பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்து இச்சாதனங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்த ஒரு திட்டம் வகுத்தனர். தனியார் துறையிலுள்ளவர்கள் இலாப நோக்கத்துடன் இச்சாதனங்களைக் குறுகிய காலத்தில் பயன்படுத்தி, உற்பத்தியைப் பெருக்குவார் களென்று நம்பமுடியவில்லை. அதற்குவேண்டிய மூலதனம் இல்லாததே இதற்குக் காரணம். எனவே, ஐந்தாண்டுத் திட்டங்களை அரசினர் வகுத்தனர். திட்டத்தைச் சரிவரச்

செயலாற்றுவதற்கேற்ற முறையில் செலாவணி நிருவாகம் அமைய வேண்டும். உணவுப் பற்ருக்குறையை நீக்கிச் சுயதேவைப் பூர்த்தியை வளர்ப்பது முதல் திட்டத்தின் முக்கியமான நோக்கமாகும். இரண்டாவது திட்டத்தில் நாட்டின் வருமானத்தைப் பெருக்கவும், கனரகத் தொழில்களை வளர்க்கவும் ஏற்பாடுகள் செய்தனர். முதல் திட்டத்தில் விவசாயத்திற்கும், நீர்ப்பாசனத்திற்கும் முக்கிய இடமளித்தனர். உணவுப் பொருள், கச்சாப் பொருள்கள் முதலியவற்றின் உற்பத்தியைப் பெருக்கவேண்டும். இரண்டாவது திட்டத்தில் தொழிலுற்பத்திக்கு முக்கிய இடமளித்தனர். மேலும், வருமானத்திலும், செல்வத்திலும் மக்களிடையே இருக்கும் வேறுபாடுகளைக் குறைப்பதும், நாட்டின் வருமானத்தைப் பெருக்குவதும் இரண்டாவது திட்டத்தின் நோக்கங்களாகும். முதல் திட்டத்திற்கு மொத்தம் 2,069 கோடி ரூபாய் ஒதுக்கினர். இத்தொகையை 2,378 கோடிக்கு உயர்த்தினர். ஆனுல், இதில் 85 சதவீதத்தையே பயன்படுத்தினர். இரண்டாவது திட்டத்தில் அரசினர் செய்யும் செலவு 4,800 கோடி ரூபாயென்றும், தனியார் துறையில் 2,400 கோடி ரூபாய் செலவு செய்வதென்றும் முடிவு செய்தனர். வரிகளை விதிப்பது, கடன்வாங்குவது, அயல்நாட்டினரின் உதவியை நாடுவது, சேமிப்பை அதிகரிப்பது முதலிய எல்லா வழிகளிலும் இரண்டாவது திட்டத்திற்கு வேண்டிய நிதியைத் திரட்டினர். இவற்றுடன் பற்ருக்குறை நிதியாக்கம் (Deficit financing) என்ற முறையையும் கையாண்டு அரசினர் திட்டத்திற்குவேண்டிய நிதியைப் பெற்றனர்.

அரசாங்கம் திட்டங்களுக்கு வேண்டிய நிதியைத் திரட்டும்பொழுது, அதற்கேற்றபடி செலாவணி நிருவாகத்தை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. கீழ்க்கண்ட முறையில் முதல் திட்டத்திற்கு வேண்டிய நிதியைத் திரட்டுவதென்று முடிவு செய்தனர்.

(1) நடைமுறை (அரசாங்க) வருமானத்திலிருந்து கிடைக்கும் தொகை ... 568 கோடி ரூபாய்

(2) ரயில்வேயிலிருந்து கிடைக்கும் தொகை... 170 ”

(3) மக்களிடமிருந்து கடனுகப் பெறும் தொகை ... 115 ”

(4) சிறுசேமிப்பு மூலம் கிடைக்கும் தொகை... 270 ”

| | | | |
|---|---|---|---|
| (5) டெபாசிட்டு போன்ற மற்ற மூலங்களிலிருந்து கிடைக்கும் தொகை | ... | 135 | கோடி ரூபாய் |
| (6) அயல் நாடுகளின் உதவி | ... | 156 | ” |
| | | 1414 | ” |
| பற்றுக்குறை | ... | 655 | ” |
| | | 2069 | ” |

மொத்தத் தொகையை 2,069 கோடி ரூபாயிலிருந்து 2,378 கோடியாக உயர்த்தியதும் பற்றுக்குறை மேலும் அதிகமாயிற்று. 290 கோடி ரூபாய் பெறுமானமுள்ள ஸ்டெர்லிங் நிதியை முதல் திட்ட காலத்தில் பயன்படுத்துவதென்று அரசினர் முடிவு செய்தனர். இரண்டாவது திட்டத்திற்கு ரூ. 4,800 கோடி ரூபாய் செலவு செய்வதென்று முடிவுசெய்தனர். இத்தொகையில் கடன், சிறு சேமிப்பு இவற்றின் மூலம் 1,200 கோடி ரூபாய் கிடைக்குமென்று திட்டமிட்டனர். 800 கோடி ரூபாய் அயல் நாடுகளிலிருந்து உதவியாகப் பெறுவதென்று முடிவுசெய்தனர். பற்றுக்குறை நிதியாக்கம் 1,200 கோடி ரூபாயளவிலிருக்கலாமென்றும் திட்டத்தில் கண்டிருந்தது.

## பற்றுக்குறை நிதியாக்கம்

பற்றுக்குறை நிதியாக்கம் என்பதன் பொருளையும் அதன் விளைவுகளையும் இங்குக் காண்போம். அரசாங்க வரவுசெலவுத் திட்டத்தில் பற்றுக்குறை ஏற்பட்டால், அதாவது வரவை விடச் செலவு அதிகமானல், அரசினர் மையப் பாங்கிலிருந்து கடனாக நிதியைப் பெறும். வருமான மூலதன வரவுசெலவுத் திட்டங்களில் ஏற்படும் பற்றுக்குறையைத் தீர்ப்பதற்கு மையப் பாங்கிடம் நிதியை அரசினர் பெறலாம். மையப் பாங்கு அரசாங்கத்திடம் பத்திரங்களைப் பெற்று அவைகளைக் காப்பாக வைத்துக்கொண்டு வேண்டிய அளவு செலாவணித்தாள்களை அச்சிடும். மக்கள் செலவு வருமானத்தைவிட அதிகமானல் பாங்குச் செலாவணியைப் பெருக்கலாம். இப்படிச் செய்வதும் பற்றுக்குறை நிதியாக்கமேயாகும். இரண்டாவது உலகப்போர் நடக்கும் பொழுது, இந்திய அரசாங்கத்தின் செலவு, வரவை விட மிகுதியாக இருந்ததால் இம்முறையைக் கையாண்டனர். இந்தியாவில் அரசினர் இங்கிலாந்தின் சார்பில் பொருள்கள் வாங்கவேண்டியதாயிற்று.

வரிவசூல், கடன் முதலியவற்றின் மூலம் அரசாங்கம் வேண்டிய தொகையைப் பெறமுடியவில்லை. எனவே, ஸ்டெர்லிங்கைக் காப்பு நிதியாகப் பயன்படுத்தி, ரிசர்வ் பாங்கு இந்தியாவில் செலாவணித்தாள்களை அச்சிட்டதென்று முன்பே பார்த்தோம். இதன் பலனாக இந்தியாவில் விலைவாசிகள் உயர்ந்தனவென்பதையும் பார்த்தோம். போருக்குப்பின் அரசினர் இம்முறையை அதிகமாகக் கையாளவில்லை.

மீண்டும் திட்டத்தைச் செயலாற்றுவதற்காக இம்முறையைப் பயன்படுத்தவேண்டியிருந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இம்முறையைக் கையாண்டு சுமார் 440 கோடி ரூபாய் அளவுள்ள பற்றுக்குறையைச் சமாளித்தனர். மத்திய அரசாங் கத்தின் பற்றுக்குறை 1954-55-க்குப் பிறகு அதிகரித்தது. 1955-56-இல் மாநிலங்களில் பற்றுக்குறை அதிகமாயிற்று. பற்றுக் குறை நிதியாக்கம் மூலம் இரண்டாவது திட்டத்திற்கு 1,200 கோடி ரூபாய் நிதி திரட்டுவதென்று திட்டக்குழுவினர் முடிவுசெய்தனர். 1956-இலிருந்து மைய, மாநில அரசாங்கங்களின் வரவு செலவுத் திட்டத்தில் ஆண்டுதோறும் பற்றுக்குறை ஏற்பட்டது. வேண்டிய நிதியைப் பல மூலங்களிலிருந்து பெற அரசினர் முயன்றனர். ஆனால், இதில் அரசினர் முழு வெற்றி பெறாததால் மொத்தச் செலவை 4,800 கோடி ரூபாயிலிருந்து 4,500 கோடியாக மாற்றினர். பற்றுக்குறை நிதியாக்கம் எந்த விதத்திலும் நமது பொருளாதாரத்தைப் பாதிக்காமலிருப்பதற்கு வேண்டிய ஏற்பாடு களையும், நடவடிக்கைகளையும் அரசினர் எடுத்துக்கொள்வர் என்று நிதி மந்திரி உறுதி கூறியிருக்கிறார். திட்டத்தைச் செயலாற்ற ஓரளவு பற்றுக்குறை நிதியாக்கம் தேவைதான்.

மூன்றாவது திட்டத்தின் மொத்தச் செலவு 10,200 கோடி ரூபாய். முதலீட்டை 11 சதவீதத்திலிருந்து 14 சதவீதம் உயர்த்துவ தென்று முடிவுசெய்திருக்கின்றனர். திட்டத்திற்கு வேண்டிய செலவில் 1,650 கோடி ரூபாயை அரசினர் வரிகள் மூலம் பெற்றுக் கொள்வர். 850 கோடி ரூபாய் கடன் மூலம் கிடைக்கும். அயல் நாடுகளிலிருந்து உதவியாக 2,200 கோடி ரூபாய் பெறவேண்டும். 550 கோடி ரூபாய் பற்றுக்குறை நிதியாக்கம் மூலம் பெறுவதென்று திட்டக்குழுவினர் முடிவு செய்தனர். இரண்டாவது திட்டத்தை விட மூன்றாவது திட்டத்தில் பற்றுக்குறை நிதியாக்கத்தைக் குறைத்து விட்டனர். இதற்குக் காரணம், இப்படிச் செய்வதால் பண வீக்கம் ஏற்பட்டு விலைவாசிகள் உயர்ந்துவிடுமென்ற எண்ணமே. இந்த முறையைக் கையாண்டதால் இரண்டாவது திட்ட காலத்தில் விலைகள் உயர்ந்தனவென்பது பலர் கருத்து.

இப்பொழுது பற்றுக்குறை நிதியாக்கத்தால் விலைகள் உயர்ந்தன என்ற கூற்றைப் பரிசீலனை செய்வோம். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நம் நாட்டில் உணவு உற்பத்தி அதிகரித்தது. இதற்குக் காரணம், குறித்த காலத்தில் வேண்டிய அளவு பருவமழைகள் பொழிந்தன. தொழிலுற்பத்தியும் பெருகியது. ஆகையால், திட்டம் ஆரம்பித்தபொழுது இருந்ததைவிட விலைவாசிகள் திட்டம் முடியும்பொழுது குறைந்தன. 1952-53-ஐ மூல ஆண்டாகக் கொண்டு தயாரித்த மொத்தக் குறியீட்டெண் 1955-இல் 92-ஆக இருந்தது. ஆனால், இந்த நிலை தொடர்ந்து நீடிக்கவில்லை. 1956-57-இல் விலைவாசிகள் $13\frac{1}{2}$ சதவீதம் உயர்ந்தன. 1957-58-இல் வேண்டிய அளவு பருவமழைகள் பொழியாததால் விவசாய உற்பத்தி குறைந்தது. உணவுப் பொருள்களின் விலை உயர்ந்தது. 1957-இல் மொத்தக் குறியீட்டெண் 109. 1959-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் இது 113. 1960-ஆம் ஆண்டு இந்த எண் 123·0 ஆகிவிட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இப்படி விலைகள் உயர்ந்துகொண்டே சென்றதால் மூன்றாவது திட்டதில் பற்றுக்குறை நிதியாக்கத்தைக் குறைத்தனர். இந்த விலை உயர்வால் நடுத்தர வகுப்பினர் பல தொல்லைகளுக்கு இலக்காயினர். விவசாய உற்பத்தியைப் பெருக்கினாலன்றி நிலைமை முன்னேறாதென்று அரசினர் உணர்ந்தனர். மூன்றாவது திட்ட காலத்தில் விலைவாசிகள் மேலும் உயராமலிருக்க வேண்டுமென்று பற்றுக்குறை நிதியாக்கத்தைக் குறைத்துவிட்டனர்.

பற்றுக்குறை நிதியாக்கமே விலை உயர்வுக்குக் காரணமென்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்ளவில்லை. 1956-இலிருந்து ஐந்தாண்டுகளில் மொத்தக் குறியீட்டெண் 20 சதவீதத்துக்கு மேல் உயர்ந்தது. விலைகளும் உயர்ந்தன. ஆனால், இதற்குப் பற்றுக்குறை நிதியாக்கத்தைத் தவிர மற்றக் காரணங்களுமுண்டு என்ற கருத்தை இங்கு ஆராய்வோம். நாட்டில் பொருளுற்பத்தி பெருகுவதற்கு ஓரளவு விலைவாசிகள் உயரவேண்டும். ஆனால், அளவு மீறி விலைகள் உயர்ந்தால் அரசினர் விலைகளைக் குறைப்பதற்குவேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். இதற்குத் தகுந்த செலாவணிக் கொள்கையைப் பின்பற்றவேண்டும். விலையுயர்வுக்கு இருவகைக் காரணங்கள் இருக்கலாம். தேவை அதிகரிப்பதால் விலைவாசிகள் உயரலாம். மற்றக் காரணங்களாலும் விலைகள் உயரலாம். ஒரு நாட்டில் உண்மையான பணவீக்கமிருந்தால் மக்கள் மேலும் மேலும் அதிகமான பண்டங்களை வாங்குவர். அவர்கள் தேவை பெருகும். அதன் காரணமாக விலைகள் உயரும். மக்கள் தேவையைத் தவிர, மற்றக் காரணங்களால் விலை உயர்வு ஏற்பட்டால், அரசினர் செலாவணிக் கொள்கை மூலம் இதைக் கட்டுப்பாடுசெய்யக் கூடாது. இப்படிச் செய்தால் உற்பத்தி குறையும்.

குறியீட்டெண் தயாரிக்கும்பொழுது பல பொருள்களின் விலைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு தயார் செய்கின்றனர். மொத்தக் குறியீட்டெண் இரண்டாவது திட்ட காலத்தில் உயர்ந்த தென்பதைப் பார்த்தோம். இது பணவீக்கத்தால் ஏற்பட்ட உயர் வாக இருந்தால் ஒரே காரணத்தால், அதாவது மக்கள் தேவை மிகுதி யடைந்ததால், உயர்ந்திருக்கும். 1960-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் உணவுப் பொருள்களின் மொத்தக் குறியீட்டெண் 115. ஆனால், சில தானியங்களின் குறியீட்டெண் நூற்றுக்கும் குறைவாயிருந்தது. ஆகையால், மக்கள் தேவை மிகுதியால் விலைகள் உயர்ந்தன என்று சொல்ல முடியாது. அப்படித் தேவை அதிகரித்திருந்தால் எல்லா உணவுப் பொருள்களின் விலைகளும் உயர்ந்திருக்கும். எந்தத் தானி யங்களின் குறியீட்டெண் குறைந்ததோ அவற்றின் உற்பத்தி அதி கரித்திருந்தால், மக்கள் தேவையால் விலைகள் உயர்ந்தன என்ற கூற்றை ஒப்புக்கொள்ளலாம். ஆனால், அவற்றின் உற்பத்தி பெருக வில்லை. இந்த நிலையில் விலைகளைக் குறைக்க அரசினர் ஏதேனும் செய்திருந்தால் முக்கியமான பண்டங்களின் உற்பத்தி குறைந்திருக் கும். அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதாலும், உற்பத்தி குறை வதாலும் பண்டங்களின் விலைகள் உயரலாம். இதனால், குறியீட் டெண்ணும் உயர்வதால், உடனே நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டு விட்டதென்று கூறலாகாது. பணவீக்கமும் அதன் பலனாக விலை யுயர்வும் ஏற்பட்டால் மக்கள் எல்லாப் பண்டங்களையும் மிகுதியாக வாங்குவார்கள். பொதுவாக நாட்டில் எல்லாப் பொருள்களும் அதிக அளவில் தேவைப்படும். தொழிற்சாலைகளில் உற்பத்திசெய்யும் பொருள்களின் விலை முதலில் உயரும். இதன்பின் கச்சாப் பொருள் களின் விலை உயரும். ஆகையால், மொத்தக் குறியீட்டெண் உயர்ந்ததைப் பணவீக்கத்தின் அறிகுறியென்று நாம் கொள்ள முடியாது. பணவீக்கம் ஏற்பட்டால் கச்சாப் பொருள் விலையுயர்வு மூலம் மற்றப்பொருள்களின் விலைகள் உயரமாட்டா. மற்றத் தொழிற் சாலைப் பண்டங்களின் விலைகள் உயர, அவற்றைத் தொடர்ந்து விவ சாயப் பொருள்களின் விலைகள் உயரும். 1956-இல் உணவு தானியங்களின் விலைகள் 14·5 சதவீதம் உயர்ந்தன. ஆனால், மற்றத் தொழிற்சாலைப் பண்டங்களின் விலைகள் அதிகம் உயரவில்லை. இவற்றின் உற்பத்தியும் அதிகமாகவில்லை. ஆகையால், நாட்டில் பணவீக்கம் ஏற்படவில்லை என்பது தெளிவாகின்றது. முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடியும்பொழுது இருந்த குறைந்த விலை வாசிகள், மீண்டும் பழைய நிலைக்கு வந்தனவென்று சொல்லலாம்.

1959-இல் தானியங்களைத் தவிர மற்ற உணவுப் பொருள்களின் விலைகளும் உயர்ந்தன. கச்சாப் பொருள்களின் விலைகள் 16 சத வீதம் உயர்ந்தன. தொழிற்சாலைப் பண்டங்களின் விலைகள் 10

சதவீதம் உயர்ந்தன. நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டால் அதைத் தொடர்ந்து சில அறிகுறிகள் காணப்படும். 1959-இல் இவைகள் இல்லாததால் பணவீக்கம் ஏற்படவில்லை என்று சொல்லலாம். பணவீக்கம் ஏற்படும் பொழுது மக்களுடைய வருவாய் பெருகும். இதை அவர்கள் பொருள்கள் வாங்குவதற்குப் பயன்படுத்துவார்கள். ஆகையால், மேலும் மேலும் அதிகமாகப் பொருள்களை அவர்கள் வாங்குவதால் தேவை மிகுதியாகும்; உற்பத்தி அதிகரிக்கும்; உற்பத்திச் சாதனங்களையும் அதிகமாகப் பயன்படுத்துவார்கள். உடன் துய்த்தற்குரிய பொருள்களை (Consumers' Goods) மக்கள் மிகுதியாக வாங்குவதால் உற்பத்தியாளர்களிடம் இருக்கும் இப் பொருள்களை அவர்கள் எளிதில் விற்பனை செய்துவிடுவார்கள். உற்பத்தியாளர்களிடமிருக்கும் கையிருப்புச் சரக்குகள் (stocks) குறைந்துவிடும். இந்த நிலையில் தொழிற்சாலைகள் இயன்ற அளவு உற்பத்தியைப் பெருக்கும். அதாவது, இயந்திரங்களை எந்த அளவுக்குப் பயன்படுத்தமுடியுமோ அந்த அளவுக்குப் பயன் படுத்துவார்கள். ஆனால், 1959-இல் நம் நாட்டில் இயந்திரங்களை முழு அளவுக்குப் பயன்படுத்தவில்லை. அதாவது, வேண்டுமானால் இவ்வியந்திரங்களை மேலும் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கி யிருக்கலாம். சாதாரணமாகப் பொருள்களின் தேவை அதிகமாகும் பொழுது உற்பத்தியைப் பெருக்க எல்லாச் சாதனங்களையும் முற்றிலும் பயன்படுத்துவது இயற்கை. இந்தியாவில் தொழிலுற் பத்தி அதிகரித்ததற்கு, மக்களின் தேவை மிகுதியானது ஒரு காரணமாகும். ஆனால், பணவீக்கத்தைத் தொடர்ந்து தேவை மிகுதி யாகவில்லை. 1950-இல் சில முக்கியமான பொருள்களின் உற்பத்தி குறைந்திருந்தது. 1959-இல் குறைந்த உற்பத்தி மீண்டும் பழைய நிலைக்கு வந்தது. 1958-இல் உள்நாட்டுத் தேவை மிகக் குறைவாக இருந்தது. 1959-இல் நிலைமை சற்று முன்னேறியது. இந்த நிலையைப் பணவீக்கத்தின் விளைவென்று சொல்லுவது முற்றிலும் தவறு.

பணவீக்க காலத்தில் உடன் துய்த்தற்குரிய பண்டங்களை மக்கள் அதிகம் வாங்குவதால் உற்பத்தியாளர்களிடம் இருக்கும் இச் சரக்குகள் குறைந்துவிடுமென்று மேலே குறிப்பிட்டோம். சோப்பு, வனஸ்பதி, பருத்தித் துணி முதலிய சாதாரணமாக மக்கள் பயன் படுத்தும் பண்டங்கள் 1956-இல் இருந்ததை விட 1959-இல் விற்பனையாகாமல் உற்பத்தியாளர்களிடம் இருந்தன. பணவீக்க காலத்தில் இப்படிக் கையிருப்புச் சரக்குகள் மிகுதியாக இருக்க மாட்டா. அரசினர் நியமித்த ஒரு குழு, உணவுப் பொருள்களின் விலைகள் உயர்ந்ததால் பாதிக்கப்பட்ட மக்கள், துணி வாங்க முடியாம லிருந்தனரென்றும், எனவே, கையிருப்புச் சரக்குகள் மிகுதியாகி

விட்டன என்றும் முடிவு செய்தனர். பணவீக்க காலத்தில் மக்களுடைய வருமானம் அதிகமாகும். அவர்கள் எல்லாப் பொருள் களையும் அதிகமாக வாங்குவார்கள். ஆனால், 1959-இல் உணவுப் பொருள்களின் விலைகள் உயர்ந்ததால், அவர்கள் மற்றப் பண்டங்கள் வாங்குவதைக் குறைத்துக் கொள்ளவேண்டியதாயிற்று. பண வீக்கத்தின் உண்மையான அறிகுறிகள் மக்களின் வருவாய் பெருகுவதும், அதன் பலனாக அவர்கள் பொதுவாக எல்லாப் பொருள்களையும் அதிக அளவில் வாங்குவதுமேயாகும். 1959-இல் மக்கள் வருவாயும் பெருகவில்லை; அவர்கள் தேவையும் அதிகமாகவில்லை. ஆகையால், இரண்டாவது திட்ட காலத்தில் பற்றுக்குறை நிதியாக்கம் பணவீக்கத்தை ஏற்படுத்தியதென்றும், அதனால் விலைகள் உயர்ந்தனவென்றும் சொல்வது சரியல்ல.

இரண்டாவது திட்ட காலத்தில் விலைகள் உயர்ந்தமைக்குப் பணவீக்கம் காரணமல்ல. இதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் சிலவற்றை இங்குப் பார்ப்போம். அரசினர் திட்ட காலத்தில் விதித்த மறைமுக வரிகள் விலைவாசியை உயர்த்தின. இந்த வரிகளை வியாபாரிகள் மக்களிடமிருந்து வசூல் செய்வதால், பொருள் வாங்கும்பொழுது அவர்கள் அதிக விலை கொடுத்து வாங்கவேண்டும். சாதாரணமாகப் பொருள்கள்மீது விதிக்கப்படும் மறைமுக வரிகளை வியாபாரிகள் மக்கள்மீது சுமத்தமுடியும். இப்படிச் செய்வதால் விலைகள் உயரும். இந்த மறைமுக வரிகள் விலை உயர்வுக்கு ஒரு முக்கியமான காரணமாகும். இதைத் தவிர இறக்குமதிப் பண்டங்களின் விலைகளும், போக்குவரவுச் செலவு களும் உயர்ந்ததால் மற்றப் பொருள்களின் விலைகள் அதிகரித்தன.

இரண்டாவது திட்ட காலத்தில் அரசினர் பற்றுக்குறை நிதியாக்கம் செய்தனர். ஆனால், இதில் பெருந்தொகையை உள் நாட்டில் செலவு செய்யவில்லை. திட்டத்தைச் செயலாற்றுவதற்கு அயல்நாட்டுச் செலாவணி எதிர்பார்த்ததற்குமேல் அதிகம் வேண்டியிருந்தது. ஆகையால், அரசினர் அயல் நாடுகளிலிருந்து பொருள் இறக்குமதி செய்யும் வகையில் அதிகமாகச் செலவு செய்தனர். பணவீக்கத்தின் காரணமாக மக்கள் தேவை அதிகரித்தது. அதனால், இறக்குமதியும் அதிகரித்தது என்று கருதக் கூடாது. ஏனெனில், உடன் துய்த்தற்குரிய பொருள்களை நாம் அதிகமாக வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவில்லை. அரசாங்கம் இறக்குமதி செய்த உணவுப் பொருள்கள் மட்டுமே உடன் துய்த்தற்குரிய பொருள்களாக இருந்தன. இரண்டாவது திட்ட காலத்தில் நாம் பெரும்பாலும் முதலீட்டுப் பொருள்களையே வெளி நாடுகளிலிருந்து பெற்றோம். எனவே, பற்றுக்குறைச் செலாவணி

(அதாவது பற்ருக்குறையைச் சமாளிப்பதற்காக அதிகமாக வெளியிடப்பட்ட செலாவணி) புழக்கத்தில் வரவில்லே. ஆகையால், பற்ருக்குறை நிதியாக்கம் இந்தியாவில் பணவீக்கத்தை ஏற்படுத்த வில்லே. இந்த நிதியைப் பயன்படுத்தி நாம் அயல்நாடுகளிலிருந்து முதலீட்டுப்பொருள்கள் பெற்ருேம். ஆகவே, விலேயுயர்வுக்கு வேறு காரணங்கள் இருந்தன. செலாவணிப் பெருக்கம் ஏற்படாம லிருந்தாலும் விலேகள் உயர்ந்திருக்கும். பல பொருள்களின் அடக்கச்செலவு உயர்ந்தது; விலேகளும் உயர்ந்தன. இப்படி விலேகள் உயர்ந்த சமயம் செலாவணிப் பெருக்கம் ஏற்படாமலிருந் தால் உற்பத்தி குறையும். இரண்டாவது திட்ட காலத்தில் நாட்டுக்குச் செலாவணிப் பெருக்கம் வேண்டியிருந்தது. மக்கள் குறைந்த அளவு பொருள்களே உபயோகித்திருப்பர். அவர்கள் தேவை குறைந்திருக்கலாம். உற்பத்தியும் இதன் பலனுகக் குறைந் திருக்கும். செலாவணிப் பெருக்கம் இவற்றையெல்லாம் தடை செய்தது என்றுகூடச் சிலர் கருதினர்.

பணவீக்கத்தையும் விலேயுயர்வையும் தடைசெய்யவேண்டு மென்ற நோக்கத்துடன் அரசினர் மூன்ருவது திட்டத்தில் பற்ருக் குறை நிதியாக்கத்தைக் குறைத்துவிட்டனர். வரிகள், சேமிப்பு இவற்றின் மூலம் வேண்டிய நிதியைத் திரட்டுவதென்று முடிவு செய்தனர். ஆனுல், மறைமுக வரிகள் விலேகளே உயர்த்துமென் பதில் எந்த ஐயமுமில்லே. ஆகையால், எந்த நோக்கத்துடன் செலா வணிப் பெருக்கத்தைக் குறைக்கவேண்டுமென்று அரசினர் திட்டம் வகுத்தனரோ அது ஈடேருமல் போகலாம். மேலும், வேண்டிய அளவு செலாவணியைப் பெருக்காததால் உற்பத்தி குறையலாம். பணவீக்கத்தைத் தடைசெய்யவேண்டுமென்ற நோக்கத்துடன் பாங்குச் செலாவணியையும் கட்டுப்பாடுசெய்வதென்று திட்டக் குழுவினர் முடிவுசெய்துவிட்டனர். மறைமுக வரிகள் கட்டாயமாக விலேகளே உயர்த்தும். பணவீக்கம் ஏற்பட்டுவிட்டதென்று பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடுசெய்தால் வர்த்தகமும் தொழிலும் பாதிக்கப்படும்.

மேற்கூறிய கருத்துக்களில் ஓரளவு உண்மை இருக்கின்றது. விலே உயர்வைத் தடைசெய்யவேண்டுமானுல், மறைமுக வரிகளே அதிகமாக விதிக்கக்கூடாது. பற்ருக்குறை நிதியாக்கம் பண வீக்கத்தை ஏற்படுத்தலாம். ஆனுல், நமது பொருளாதாரம் குறுகிய காலத்தில் முன்னேறவேண்டுமானுல், ஓரளவு விலேயுயர்வு ஏற்படும். இதை மக்கள் ஏற்றுக்கொண்டால்தான், பொருளாதார முன்னேற்றத் தில் பயனேப் பெறலாம். உற்பத்தி பெருகவேண்டுமானுல் விலே வாசிகள் ஓரளவு உயரவேண்டும். ஆனுல், அளவுக்கு மீறி விலேகள்

உயருவது சமுதாயத்திற்கு நல்லதல்ல. இப்படி விலைகள் உயர்ந்தால் அவற்றைக் கட்டுப்பாடுசெய்யவேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு. மூன்றுவது திட்டத்தில் அரசினர் மிகக் குறைந்த அளவே பற்றுக்குறை நிதியாக்கம் செய்வர். ஆகையால், அதன் காரணமாகப் பணவீக்கம் ஏற்படாது. திட்டத்தைச் செயற்படுத்தும் பொழுது அதனால் பணவீக்கம் ஏற்படலாம். பணவீக்கம், விலைவாசி, ரூபாயின் மதிப்பு இவற்றைக் கட்டுப்பாடுசெய்ய மூன்று முறைகளைப் பின்பற்றலாம். அவை முறையே நிதிக்கொள்கை முறை (Fiscal Policy), சாதாரண பங்கீடு (Ration), விலைக்கட்டுப்பாடுகள் (Price control) போன்றவை, செலாவணிக் கொள்கை முறை (Monetary policy) ஆகும். இவற்றுள் எவை சிறந்தவை என்றும் இந்தியாவில் இம்முறைகளை எப்படிப் பின்பற்றுகிறார்களென்றும் பின்வரும் அதிகாரங்களில் காண்போம்.

முதல் இரண்டு திட்டங்களை அரசினர் 1951-இலிருந்து 1961 வரை செயலிற்கொண்டுவந்தனர். இந்தப் பத்தாண்டுகளில் நமது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையும், வர்த்தகமும் எப்படி இருந்தன என்பதை இங்குக் காண்போம். 1948-49-இலிருந்து 1951-52-வரை நாட்டில் விலைகள் உயர்ந்தன. பற்றுக்குறையும் இருந்தது. இரண்டாவது திட்டத்தைவிட முதல் திட்டத்தில் குறைந்த அளவு செலவுக்கு ஏற்பாடு செய்திருந்தனர். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் 667 கோடி ரூபாய் பற்றுக்குறை ஏற்படலாமென்று கருதினர். ஆனால், முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சுமார் 131 கோடி ரூபாய்தான் நடைமுறைக் கணக்கில் பற்றுக்குறை ஏற்பட்டது. திட்டம் ஆரம்பமானதும் இரண்டு ஆண்டுகள் இறக்குமதி அதிகமாக இருந்தது. ஆனால், 1952-இலிருந்து விலைகள் குறைந்தன; இறக்குமதியும் ஏற்றுமதியும் குறைந்தன.

முதல் திட்ட காலத்தில் நமது இறக்குமதியும் ஏற்றுமதியும் ஒரேவிதமாக மாறுதலடைந்தன. 1951-52-இல் நமது ஏற்றுமதியின் மதிப்பு 730 கோடி ரூபாய்க்கு உயர்ந்தது. இதற்கு முக்கிய காரணங்கள் 1949-இல் ரூபாயின் மதிப்பைக் குறைத்ததும், கொரியாவில் நடந்த போருமாகும். இதற்குப்பின் 1953-54-இல் ஏற்றுமதி 540 கோடி ரூபாய்க்கு இறங்கிவிட்டது. எங்கும் விலைகள் இறங்கியதால் நமது ஏற்றுமதி குறைந்துவிட்டது. முதல் திட்டம் முடிவு பெறும் ஆண்டு மீண்டும் நமது ஏற்றுமதி பெருகியது. முதல் திட்ட காலத்தில் அயல்நாட்டு வர்த்தகத்தில் ஏற்பட்ட பற்றுக்குறை 524 கோடி ரூபாய். ஆனால், மொத்தமாக நமது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் நடைமுறைக் கணக்கில் ஏற்பட்ட பற்றுக்குறை 131 கோடி ரூபாய்.

இரண்டாவது திட்டம் ஆரம்பிக்கும்பொழுது நிலைமை நன்றாக இருந்தது. ஆனால், இந்த நிலை நீடிக்கவில்லை. நமக்குப் போதிய அளவு அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கவில்லை. இரண்டாவது திட்டத்தில் தொழில் முன்னேற்றம் முக்கிய இடம் பெற்றது. இதற்கு வேண்டிய இயந்திரங்களை அயல்நாடுகளிலிருந்து நாம் பெற வேண்டும். இதற்குத் தேவையான அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கவில்லை. நடைமுறைக் கணக்கில் நாம் எதிர்பார்த்ததைவிட அதிகமாகப் பற்றுக்குறை ஏற்பட்டது. புலனாகாத வகையில் (Invisible Items) நமது வருமானம் அதிகமானபோதிலும், பற்றுக் குறையும் மிகுதியடைந்தது. ஏற்றுமதி நிலையும் எதிர்பார்த்ததைவிட மோசமாக இல்லை. எனினும், பற்றுக்குறை ஏற்பட்டது. இதற்குக் காரணம் நாம் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ததேயாகும். இரண்டாவது திட்டம் வகுக்கும்பொழுது, உணவு உற்பத்தி நிலை நாட்டில் முன்னேறியிருந்தது. ஆகையால், இரண்டாவது திட்ட காலத்தில் உணவுப் பொருள் மிகுதியான அளவில் இறக்குமதி செய்யவேண்டாமென்று திட்டக் குழுவினர் கருதினர். ஆனால், அரசினர் செய்துகொண்ட உடன்படிக்கைப்படி (P. L. 480 Agreement) உணவுப் பொருள் இறக்குமதி செய்தனர். மேலும், இறக்குமதிப் பொருள்களின் விலை உயர்ந்திருந்ததாலும் பற்றுக்குறை அதிகமாயிற்று. இரண்டாவது திட்ட காலத்தில் நமது ஏற்றுமதி குறைந்தது. ஆனால், விலைகளுயர்ந்ததால் ஏற்றுமதியின் மதிப்பு குறையவில்லை. ஜப்பான் நாட்டின் போட்டியால் இந்தியாவின் பருத்தித்துணி ஏற்றுமதி குறைந்தது. தேயிலை ஏற்றுமதியில் சிலோனுடன் நாம் போட்டியிட்டோம். பாகிஸ்தான் சணல் பொருள்கள் ஏற்றுமதியில் இந்தியாவுடன் போட்டியிட்டது. இப்படி அயல்நாடுகளின் போட்டியால் நமது ஏற்றுமதி குறைந்தது. எனவே, நமது நடைமுறைக் கணக்கிலும் (Current account), மூலதனக் கணக்கிலும் (Capital account) பற்றுக்குறை ஏற்பட்டது. 1956-இலிருந்து 61-வரை நமது மொத்தப் பற்றுக்குறை 2,072 கோடி ரூபாய்.

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் பற்றுக்குறையோ உபரியோ ஏற்படாமல் இருக்காது. ஆனால், நடைமுறைக் கணக்கில் உள்ள குறையை மூலதனக் கணக்கு மூலம் நீக்கலாம். இவ்விரண்டிலும் பற்றுக்குறை ஏற்பட்டால், நாட்டின் அயல்நாட்டுச் செலாவணி இருப்பு (Foreign Exchange Reserves) குறையும். அயல் நாடுகளிலிருந்து நம் நாடு தனியார் துறை மூலதனத்தை அதிகம் பெறவில்லை. 1954-55-இல் இந்தியாவிற்குக் கிடைத்த மூலதனம் 8 கோடி ரூபாய்தான். 1956-இலிருந்து 1959 வரை 14 கோடி ரூபாய் கிடைத்தது. விடுதலையடைந்தவுடன் நாம் அயல்

நாட்டு மூலதனத்தை அதிகம் விரும்பவில்லை. அயல்நாட்டினரும் இந்தியாவின் கொள்கை எப்படியிருக்குமோவென்று அஞ்சி, நம் நாட்டில் முதலீடு செய்வதைக் குறைத்தனர். ஆகையால், அயல் நாட்டு மூலதனம் பற்றுக்குறையை நீக்க உதவவில்லை. அயல்நாடு களின் உதவியும், நமது அயல்நாட்டுச் செலாவணி இருப்பும் நல்ல பயனளித்தன. இவைகளைவிட நமது ஸ்டெர்லிங் நிதியே நிலைமை யைச் சமாளிக்கப் பேருதவியாக இருந்தது. முதல் திட்ட காலத்தில் நமது மொத்தப் பற்றுக்குறை 330 கோடி ரூபாய். இதில் 126 கோடி ரூபாய் மதிப்புள்ள ஸ்டெர்லிங்கைப் பயன்படுத்தினேம். எஞ்சிய 204 கோடி ரூபாய் பற்றுக்குறையை, அயல்நாட்டு உதவியைப்பெற்றுச் சமாளித்தோம்.

இரண்டாவது திட்ட காலத்தில் நமது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் 2,072 கோடி ரூபாய் பற்றுக்குறை ஏற்பட்டது. முதல் இரண்டு ஆண்டுகள் அயல்நாட்டுச் செலாவணி இருப்பைக் கொண்டு நிலைமையைச் சமாளித்தோம். அதற்குப்பிறகு நம்மிட மிருந்த இருப்பு குறைந்ததால் இப்படிச் செய்யமுடியவில்லை. ஆகையால், மற்ற நாடுகளின் உதவியைக்கொண்டே நிலைமையைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. ஆதாரத் தொழில்களை (Basic Industries) விரைவில் வளர்க்க மூன்ருவது திட்டத்தில் ஏற்பாடுகள் செய்துள்ளனர். ஆகையால், இரண்டாவது திட்டத்திற்கு அயல் நாட்டுச் செலாவணி வேண்டும். ஐரோப்பிய நாடுகளில் தொழில் முன்னேற்றதிற்கு இருந்த வசதிகள் நம் நாட்டில் இல்லை. ஆகையால், திட்டங்களைச் செயலாற்றுவது இந்தியாவில் எளிதல்ல. நாட்டுப் பிரிவினைக்குப்பிறகு நமக்குக் கிடைக்கும் கச்சாப் பொருள்கள் போதவில்லை. மேலும், நமது ஏற்றுமதி குறைந்துவிட்டது. பருத்தித் துணி, தேயிலை, சணல் போன்ற பொருள்களை ஏற்றுமதி செய்வ தில் மற்ற நாடுகள் போட்டியிடுகின்றன. நமது பொருள்களை வழக்க மாக வாங்கிவந்த பல நாடுகள் மற்ற நாடுகளிலிருந்து இப்பொருள் களை வாங்க ஆரம்பித்துவிட்டன. நமது சணல் பொருள்களை வாங் கும் அமெரிக்கா நாட்டில் சணலுக்குப் பதிலாக வேறு பொருள்களை உபயோகிக்க ஆரம்பித்துவிட்டனர். மேலும், பாகிஸ்தானிலிருந்து நம் தேவைக்கு வேண்டிய கச்சாச் சணல் கிடைக்கவில்லை. இதைப் போல் தேயிலை ஏற்றுமதியிலும் மற்ற நாடுகள் இந்தியாவுடன் கடுமையாகப் போட்டியிடுகின்றன. ஐரோப்பிய நாடுகள், ஐரோப்பியப் பொது மார்க்கெட்டை (European Common Market) ஏற்படுத்தி யுள்ளனர். இதில் இங்கிலாந்து சேர்ந்தால் நமது ஏற்றுமதி மேலும் குறைந்துவிடும். இப்பொழுது நமது ஏற்றுமதியில் ஒரு கணிசமான அளவை இங்கிலாந்திற்கு அனுப்புகிறோம். ஐரோப்பியப் பொது மார்க்கெட்டில் காமன்வெல்த் நாடுகளுக்குச் சலுகைகள் கிடைக்கா

விடில் நமது ஏற்றுமதி பாதிக்கப்படும். ஆகையால், மூன்றுவது திட்டத்தைச் செயலிற் கொண்டுவரவேண்டிய அளவு அயல்நாட்டுச் செலாவணி இந்தியாவுக்குக் கிடைப்பது கடினம். மேற்கூறியபடி, இந்தியாவின் ஏற்றுமதி குறைந்ததால், இரண்டாவது திட்ட காலத்தில் வேண்டிய அளவு நமக்கு அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கவில்லை. இந்த நெருக்கடியைச் சமாளிப்பதற்கு ஷெனுய் (B. R. Shenoy) என்பவர் 1957-இல் ரூபாயின் மதிப்பைக் குறைக்கவேண்டுமென்ருர். இந்தியாவில் பொருள்களின் விலை உயர்ந்துவிட்டது. ஆகையால், ரூபாயின் மதிப்பு குறைந்துவிட்டது. ரூபாயின் அகமதிப்பையும் (Internal value), புற மதிப்பையும் (External value) ஒன்றுக்கவேண்டும். அதாவது, ரூபாயின் புற மதிப்பைக் குறைக்கவேண்டும் என்பது ஷெனுய் அவர்களின் கருத்து. இப்படிச் செய்வதால் இந்தியப் பொருள்களின் விலை குறையும்; நமது ஏற்றுமதி அதிகமாகும்; இறக்குமதியும் குறையும். ஆனல், ஏற்றுமதி குறைந்ததற்கு வேறு காரணங்கள் இருந்தன. ஆகையால், ரூபாயின் மதிப்பைக் குறைப்பதால் ஏற்றுமதியைப் பெருக்க முடியாது. மேலும், இப்படிச் செய்வதால் இறக்குமதிப் பண்டங்களின் விலை உயரும். ஆகையால், ரூபாயின் மதிப்பைக் குறைத்து அன்னிய நாட்டுச் செலாவணி நெருக்கடியைச் (Foreign exchange crisis) சமாளிக்க முடியாது. ஆகையால், அரசினர் முக்கியமல்லாத பொருள்கள் இறக்குமதி செய்வதைக் கட்டுப்பாடு செய்தனர். மேலும், ஏற்றுமதியைக் கூடியவரையில் அதிகரிக்க ஏற்பாடுகள் செய்தனர். மூன்றுவது திட்ட காலத்தில் அயல்நாட்டு மூலதனத்தை நாம் அதிக அளவில் பெற்றுல் திட்டத்திற்கு வேண்டிய அயல்நாட்டுச் செலாவணியைப் பெறலாம். அயல் நாடுகளுக்குச் சென்று திரும்பிய இந்தியத் தொழிற்குழு (Indian Industrial delegation) மற்ற நாடுகளிலிருந்து இந்தியா எளிதில் மூலதனம் பெறலாமென்பதை விளக்கினர்.

மூன்றுவது திட்டத்தில், 2,200 கோடி ரூபாய் அயல்நாடுகளிலிருந்து உதவியாகப் பெறுவதென்று முடிவுசெய்துள்ளனர். இந்தத் தொகையைவிட அதிகமாகவே அயல்நாட்டுச் செலாவணி மூன்றுவது திட்டத்திற்குத் தேவைப்படும். கிட்டத்தட்ட 3,000 கோடி ரூபாய் அயல்நாட்டுதவி வேண்டும். நமது மொத்த முதலீட்டில் ஒரு பெரும் பகுதி அயல்நாட்டுச் செலாவணியிலிருக்கும். ஆனல், நமது ஏற்றுமதி பல காரணங்களால் குறைந்து கொண்டே வருவதாலும், ஸ்டெர்லிங் நிதி வேண்டிய அளவு இல்லாததாலும், நமக்கு வேண்டிய அளவு அயல்நாட்டுச் செலாவணி கிடைப்பது கடினம். இந்தக் காரணத்தைக் கொண்டு நமது மூன்றுவது திட்டத்தை மாற்றி, மொத்தச் செலவைக்

குறைப்பது சரியல்ல. இந்தியாவின் மக்கள் தொகையையும், பொருளாதாரப் பிற்போக்கையும் கவனிக்கும்பொழுது மூன்ருவது திட்டம் மிகப் பெரிய திட்டமென்ருே நம் சக்திக்கு மீறியதென்ருே சொல்ல முடியாது. ஆகவே, திட்டத்திற்கு வேண்டிய செலாவணியை எப்படிப் பெறுவதென்பதை ஆராய்ச்சி செய்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

திட்டத்தில் சேர்த்திருக்கும் முதலீட்டுக்கு அயல்நாட்டுச் செலாவணி இன்றியமையாதது. கனரகத் தொழில்களையும், அடிப்படைத் தொழில்களையும் ஏற்படுத்த அயல்நாட்டுச் செலாவணி மட்டும் போதாது. அயல்நாட்டு வல்லுநர்களின் உதவியும் வேண்டும். அயல்நாடுகளின் உதவியை எதிர்பார்க்காமல் உள்நாட்டில் கிடைக்கும் பொருள்களையும், மூலதனத்தையும்கொண்டு ஏன் நமது திட்டத்தைச் செயலாற்றக்கூடாதெனக் கேட்கலாம். இப்படிச் செய்வதற்கு நமது மூன்ருவது திட்டத்தை மாற்றியமைக்கவேண்டும். மேலும், உள்நாட்டு உற்பத்திச் சாதனங்களைச் சரிவரப் பயன்படுத்த கனரகத் தொழில்களும், அடிப்படைத் தொழில்களும் நாட்டில் வளரவேண்டும். நமது பொருளாதார முன்னேற்றத்திற்கும் அடிப்படைத் தொழில்கள் நல்ல வளர்ச்சி பெறவேண்டும். ஆகையால், அயல்நாட்டுதவியை இப்பொழுது பெருவிடினும் இக்காரணத்திற்காக, பிறகு பெற வேண்டியிருக்கும். எனவே, அயல்நாடுகளின் உதவியையும் செலாவணியையும் நாம் பெறுவதற்கு வழிகளைத் தேடவேண்டும்.

நாம் இறக்குமதி செய்யும் அயல்நாட்டு மூலதனப் பொருள்கள் எதிர்பார்த்த அளவுக்குமேல் விலை அதிகமாக இருக்கலாம். இறக்குமதிப் பொருள்களின் விலையுயர்வு இரண்டாவது திட்ட காலத்தில் ஏற்பட்ட அன்னிய நாட்டுச் செலாவணி நெருக்கடிக்கு ஒரு காரணம். மூன்ருவது திட்டத்திற்கு எவ்வளவு அன்னிய நாட்டுச் செலாவணி வேண்டும் என்பதைச் சரியாகக் கணக்கிட முடியவில்லை. நாம் எதிர்பார்த்ததைவிட அதிகமான தொகை தேவைப்படலாம். இயந்திரங்களைத் தவிர விவசாயத்திற்கு வேண்டிய உரம் போன்ற பொருள்களையும் நாம் இறக்குமதி செய்ய வேண்டும். இப்பொருள்களை வேண்டிய அளவு இந்தியாவில் உற்பத்தி செய்யவில்லை.

இரண்டாவது திட்ட காலத்தில் நாம் ஸ்டெர்லிங் நிதியை உபயோகிக்க முடிந்தது. ஆனுல், இப்பொழுது நமது அயல்நாட்டுச் செலாவணி இருப்பு மிகக் குறைந்துவிட்டது. உலகப் பாங்கு பொருளாதாரத்துறையில் பிற்போக்கான நாடுகளுக்கு உதவியளிக்க

ஓர் ஏற்பாடு செய்திருக்கின்றது. இந்தியாவிற்கு உதவி செய்வதற்காக ஏற்படுத்திய நிறுவனம் 1,100 கோடி ரூபாயளவு உதவியளிப்பதென முடிவுசெய்துள்ளது. மேலும், நாம் குறைந்த வட்டியுடன் நீண்ட காலக் கடனுதவியைப் பெறலாம். குறித்த சில உபயோகங்களுக்காகக் கடனுதவியைப் பெறுவதை விட, நமது தேவைக்கும் விருப்பத்திற்கும் ஏற்றபடி நாம் பெறும் உதவியைப் பயன்படுத்த உரிமை வேண்டும்.

திட்ட காலத்தில் நாம் பெறும் கடன் தொகைகளை அயல் நாடுகளுக்கு வட்டியுடன் கொடுக்கவேண்டும். ஆகையால், அவற்றை உடனடியாகப் பயனளிக்குமாறு பயன்படுத்தவேண்டும். தனியார் துறையில் பெறும் மூலதனத்தை இலாப நோக்கத்துடன் பயன்படுத்துகின்றனர். அதேபோல் அரசினரும் உடனடியாகப் பயனளிக்கும் வகையில் நாம் பெறும் உதவியைப் பயன்படுத்த வேண்டும். இப்படிச் செய்யாவிடில், கடன் தொகையைத் திருப்பிக் கொடுப்பது கடினம். நமது ஏற்றுமதி மூலமே இத்தொகையை நாம் திருப்பிக்கொடுக்கவேண்டும். ஆனால், நமது ஏற்றுமதியின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கின்றது. நாம் சில புதிய பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டும். நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு இந்தியாவின் நிலைமையையும், இரண்டாவது போருக்குப்பின் உலக நிலைமையையும் கவனிக்கும்போது, நமது ஏற்றுமதியின் அமைப்பையே மாற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. எதிர் காலத்தில் எஃகு உற்பத்தியைப் பெருக்கி, ஏற்றுமதி செய்வதற்கு நல்ல வாய்ப்பு இருக்கின்றது. இதுபோன்ற புதிய பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டும்.

பொருளாதாரத் துறையில் பின்தங்கிய நாடுகள் முன்னேற அயல்நாட்டு மூலதனம் வேண்டும். நமது நாட்டில் போதிய அளவு மூலதனம் இல்லை. அயல்நாட்டு மூலதனம் நம் தேவையைப் பூர்த்திசெய்வதோடு நமக்கு வேண்டிய அயல்நாட்டுச் செலா வணியையும் அளிக்கும். 1950-1951-இல் இந்தியாவில் சுமார் 450 கோடி ரூபாய் மதிப்புள்ள அயல்நாட்டு மூலதனமிருந்தது. இதில் மிகச் சிறிய பகுதியையே தொழில் வளர்ச்சிக்காகப் பயன் படுத்தினர். ஆங்கிலேயர்கள் ஆட்சிக் காலத்தில் ரயில்வே, தேயிலை, சணல் முதலிய தொழில்களில் அயல்நாட்டினர் மூலதனத்தைப் பயன்படுத்தினர். உடனடியாக இலாபம் கொடுக்கக்கூடிய தொழில் களிலேயே அன்னியர்கள் மூலதனத்தைப் பயன்படுத்தினர். ஆகையால், இந்தியாவின் தொழில் முன்னேற்றத்திற்கு அயல்நாட்டு மூலதனம் அதிகம் பயன்படவில்லை. எனினும், ரயில்வே

போன்ற சில முக்கிய தொழில்கள் நம்நாட்டில் வளர்ச்சிபெற அயல்நாட்டு மூலதனம் பேருதவியளித்தது என்பதை நாம் உணர வேண்டும்.

1947-க்குப்பின் அயல்நாட்டு மூலதனத்தை நாம் அதிகமாகப் பெறவில்லை. விடுதலைக்குப்பின் இந்தியாவின் கொள்கை எப்படி மாறுமோ என்று அஞ்சி, அன்னிய நாட்டினர் நம்நாட்டில் முதலீடு செய்வதைக் குறைத்துவிட்டனர். மேலும், இந்தியாவில் அதிக இலாபம் பெற வாய்ப்புக்களில்லாததால் அயல்நாட்டினர் முதலீடு செய்வதைக் குறைத்துக்கொண்டனர். ஆனால், நமது அரசாங்கம் அன்னியர்கள் நம்நாட்டில் முதலீடு செய்வதை வரவேற்கின்றது. தொழில்கள் எவ்வாறு வளரவேண்டும் என்பதை அரசினர் முடிவு செய்யவேண்டியதால், அயல்நாட்டு மூலதனத்தின் உபயோகத்தைப் பற்றிய முடிவுக்கு வரவேண்டும். அன்னியர்கள் இந்தியாவில் முதலீடு செய்வதை இந்திய அரசாங்கம் ஆதரித்தது. அயல் நாட்டினர் இந்தியாவில் நடத்தும் தொழிலுக்குத் தனிச் சட்டங்களும் விதிகளும் வகுக்கவில்லை. அரசினர் அயல்நாட்டினர் நடத்தும் தொழிலைத் தங்கள் நிருவாகத்தின்கீழ்க் கொண்டு வந்தால் முதலீடு செய்தவர்களுக்கு நஷ்டஈடு கொடுப்பதாக உறுதி மொழி அளித்தது. 1958-இல் அயல்நாட்டு முதலீடு மிகக் குறைந்த அளவை எட்டியது. 1·7 கோடி ரூபாயே முதலீடு செய்தனர். 1957-ஆம் ஆண்டின் முதலீடு 16·8 கோடி ரூபாய். முதலீடு செய்த தொகையில் பெரும்பகுதியை அயல்நாட்டினர் 1958-இல் திரும்பப்பெற்றனர்.

### முடிவுரை

இந்தியச் செலாவணியின் வரலாற்றையும் அதன் பிரச்சினைகளையும் இதுவரை கவனித்தோம். ஒரு சிறந்த செலாவணி முறை எளியதாயும், நெகிழ்ச்சியுடையதாயும், தானாக இயங்கும் சக்தியுடையதாயும் இருத்தல் வேண்டும் என்று சொல்வதுண்டு. செலாவணியின் அகமதிப்பும் புறமதிப்பும் அதிகமான மாறுதல்களடையாமலிருக்கவேண்டும். சாதாரணமாக இந்த மதிப்புக்களிடை வேறுபாடு ஏற்படாது. ஆனால், சில காரணங்களால் வேறுபாடு ஏற்பட்டால் செலாவணியின் அகமதிப்பை நிலைநாட்டவேண்டும். அதாவது, அதன் புறமதிப்பைவிட அகமதிப்பே முக்கியமாகும். ஒரு நாட்டின் பொருளாதார நிலை, அதாவது நாட்டின் உற்பத்தி விலைவாசிகள், வேலை வாய்ப்புக்கள் முதலியன, செலாவணியின் அகமதிப்போடு இணைந்திருக்கின்றன. ஆகையால், செலாவணியின் அகமதிப்பைச் சிறந்த முறையில் நிலைநாட்டவேண்டும்.

முதல் உலகப்போருக்குமுன் சிறந்த செலாவணி முறை தானுக இயங்கும் சக்தியுடையதாக இருக்கவேண்டுமென்று பலர் கருதினர். பொன் திட்டம் இத்தன்மையுடையதாதலால், உலக நாடுகளெல்லாம் பொன் திட்டத்தைப் பின்பற்ற வேண்டுமென்று விரும்பின. ஆனுல், இப்பொழுது நிருவகிக்கப்படும் முறையே சிறந்ததென்று எல்லோரும் ஒப்புக்கொள்வர். உலகத்தின் பொருளாதார நிலையும் கோட்பாடு களும் மாறிவிட்டன. 1893-இல் தடையற்ற முறையில் வெள்ளி ரூபாய் நாணயங்கள் அச்சிடலே அரசினர் கைவிட்டனர். அந்த ஆண்டிலிருந்து இந்தியச் செலாவணிமுறை அரசினர் நிருவாகத்திற் குட்பட்டது. இந்தியச் செலாவணி முறையையும் பாங்குச் செலா வணி முறையையும் இப்பொழுது ரிசர்வ் பாங்கு நிருவாகம் செய்கின்றது.

இந்தியச் செலாவணிமுறை நெகிழ்ச்சியுடையதாக இருக்க வேண்டும். வர்த்தகமும் உற்பத்தியும் அதிகமாகுங் காலங் களில் செலாவணிப் பெருக்கம் தேவை. மற்றச் சமயங்களில் செலாவணியைச் சுருக்கவேண்டும். வெகுநாட்கள் வரை, மாருத நம்பிக்கை வெளியீட்டு முறையை (Fixed Fiduciary system) நாம் பின்பற்றினேம். அதாவது, ஓரளவே நாம் பத்திரங்களைக் காப்பு நிதியாக வைத்துக்கொண்டு செலாவணித்தாள் வெளியிடமுடியும். அதற்கு மேல் வெளியிடும் செலாவணித்தாள்களுக்குச் சமமான மதிப்புள்ள பொன், காப்பு நிதியிலிருக்கவேண்டும். இந்த முறை நெகிழ்ச்சியற்றது. வேண்டியபடி செலாவணிச் சுருக்கமோ பெருக்கமோ செய்ய முடியாது. ஆனுல், இம்முறையை நாம் புறக்கணித்து விகிதக்காப்பு முறையைப் பின்பற்றுகிறேம். 1956-ஆம் ஆண்டிலிருந்து இரண்டாவது திட்டத்திற்கு வேண்டிய செலா வணிப் பெருக்கம் செய்வதற்காகக் குறைந்தபட்சக் காப்பு முறையை இந்தியா பின்பற்றுகிறது. ஆகவே, இந்தியச் செலாவணி முறை வேண்டிய அளவு நெகிழ்ச்சியுடையதாக இருக்கின்றது.

ஜார்ஜ் ஓ. ஹோஸ்கின் என்பவர் உலக நாடுகளின் செலா வணிப் பிரச்சினையைத் தீர்க்க ஓர் ஏற்பாட்டைச் சிபாரிசு செய் கின்ருர். அவ்வேற்பாட்டை இங்குக் காண்போம். உலக நாடு களின் பொதுச் செலாவணி பொன்னுகும். அது வேண்டிய அளவு கிடைக்கவில்லை. பல நாடுகளுக்குக் குறிப்பிட்ட சில அயல்நாட்டுச் செலாவணிகள் வேண்டும். இவற்றைக்கொண்டு அவர்கள் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சரிப்படுத்தவேண்டும். இப்பொழுது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள பற்றுக் குறையை நீக்கப் பன்னுட்டு நாணய நிதி உதவுகின்றது. இந்த நிதி ஓரளவுக்குமேல் எந்த நாட்டுக்கும் உதவிசெய்ய முடியாது.

பொன்னைப் பயன்படுத்தாமல் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குப் பணம் எளிய முறையில் செலுத்த வசதிவேண்டும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் தற்காலிகமாக ஏற்படும் பற்றுக்குறையை நீக்குவதற்கு வசதி வேண்டும். பொன்னை எல்லா நாடுகளும் பெற்றுக்கொள்ளத் தயாராக இருப்பதால், அதை அகில உலகச் செலாவணி என்று சொல்லலாம். இந்தச் செலாவணி, வேண்டிய அளவு உலக நாடுகளுக்குக் கிடைப்பதில்லை. பன்னாட்டு நாணய நிதி ஓரளவுக்குமேல் உதவியளிக்க முடியாது. இதில் அங்கம் வகிக்கும் நாடுகள் தாங்கள் செலாவணிகளிலேயே சந்தாவைச் செலுத்துகின்றனர். இந்த நிதியிலிருக்கும் உலகச் செலாவணியைக்கொண்டு இந்த நிதி தன் பணியைச் சரிவரச் செய்வது கடினம். பல நாடுகளுக்கு, தேவைக்கு வேண்டிய அளவு இந்த நிதி, அயல்நாட்டுச் செலாவணி கொடுப்பது கடினம். ஆகையால், நிதியிலுள்ள தொகையை அதிகப்படுத்துவதென்று முடிவுசெய்திருக்கின்றனர். இதற்காக அங்கத்தினர்களிடமிருந்து அதிகமான அளவில் சந்தாவைப் பெறுவதென்று முடிவுசெய்திருக்கின்றனர். இப்படிச் செய்வதால் நிதியின் குறைபாடுகளை நீக்கமுடியாது. 1961-இல் இங்கிலாந்து நாடு நிதியின் உதவியை நாடியது. ஆனால், நிதி உடனடியாக வேண்டிய அளவு டாலர்ச் செலாவணியைக் கொடுத்துதவ முடியவில்லை. பல நாடுகளின் உதவியைப் பெற்று அவற்றின் செலாவணியை டாலராக மாற்றி இங்கிலாந்திற்கு உதவி செய்தது. நிதி இதற்காக 50 கோடி டாலர் பெறுமானமுள்ள பொன்னையும் விற்கவேண்டியதாயிற்று. நிதி இப்படிக் குறைபாடுகளையுடையது.

இந்தக் குறைபாடுகளை நீக்கி, நிதியைச் சிறந்த முறையில் இயங்குமாறு செய்யவேண்டுமானால், அதை ஒரு அகில உலகப் பாங்காக மாற்றியமைக்க வேண்டும். தங்கத்தைப் போல் டாலர்ச் செலாவணியையும் எல்லா உலக நாடுகளும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கின்றன. ஏனெனில், டாலரை எந்தச் செலாவணியாகவும் மாற்றலாம். உள்நாட்டில் பாங்குகள் செலாவணியாக்கம் (Credit creation) செய்வதுபோல் இந்த உலகப் பாங்கும் உலகச் செலாவணியை ஆக்கவேண்டும். இப்பொழுது நிதியிலிருக்கும் தொகையைக் கொண்டே மற்ற நாடுகளுக்கு உதவிசெய்ய வேண்டும். மேலும், நிதியில் உலகச் செலாவணியாகிய டாலரோ பொன்னோ அதிகமில்லை. இதில் அங்கம் வகிக்கும் எல்லா நாடுகளுடைய செலாவணியையும் நிதி கொண்டுள்ளது. பன்னாட்டு நாணய நிதி ஓர் எளிய முறையாக இருந்தபோதிலும் மிகப் பெரிய குறைபாடுடையது. ஆகையால், மேற்கொள்ளும் பணியைச் செவ்வனே செய்ய இதற்கு ஆற்றல் கிடையாது.

உலகச் செலாவணியைச் (World currency) சிருட்டி செய்யும் பாங்கு ஒன்று இல்லாததால் ஒவ்வொரு நாடும் மையப் பாங்கில் பொன் வைத்திருக்கவேண்டும். ஏனெனில், பொன்தான் இப்பொழுது உலகில் எங்கும் ஏற்றுக்கொள்ளப்படும் பொதுச் செலாவணியாகும். ஆனால், உலக நாடுகளின் தேவைக்கு வேண்டிய அளவு பொன் உற்பத்தியாகவில்லை. ஆகையால், அங்கத்தினர்கள் செலுத்தும் சந்தாவை உயர்த்திப் பன்னாட்டு நாணய நிதியின் தொகையை மிகுதியாக்குவதுமட்டும் போதாது. இந்த நிதியை ஒரு பாங்காக மாற்றியமைக்கவேண்டும். மையப் பாங்குகளுக்கும் மற்றப் பாங்குகளுக்கும் எவ்விதமான தொடர்பு இருக்கின்றதோ அவ்விதமான தொடர்பை உலக பாங்குக்கும் மற்ற நாடுகளின் மையப் பாங்குகளுக்கும் ஏற்படுத்தவேண்டும். இதுபோன்ற முறையைத்தான் கீன்ஸ் பிரபு (Lord Keynes) சிபாரிசு செய்தார். உலக நாடுகளின் மையப் பாங்குகள் தங்களிடம் உள்ள பொன்னை இந்தப் பாங்கிடம் ஒப்படைக்கவேண்டும். (சாதாரண பாங்குகள் மையப் பாங்கிடம் தங்கள் காப்பு நிதித் தொகைகளை ஒப்படைக்கின்றன.) உலகப் பாங்கு இந்தத் தொகைக்குச் சமமான உலகச் செலாவணியைப் பலநாடுகளின் டெபாசிட்டுகளாக வைத்துக்கொள்ளும். கீன்ஸ் பிரபு உலகச் செலாவணியைப் "பான்சர்" (Bancer) எனக் கூறலாமென்றார். சில நாடுகள் அதிகமான அளவு உலகச் செலாவணியை வேண்டலாம். ஆகையால், உலகப் பாங்குக்குச் செலாவணி சிருட்டி செய்யும் அதிகாரத்தைக் கொடுக்கவேண்டும். அதாவது, அதனிடமுள்ள காப்பு நிதிக்குச் சமமான மதிப்பைவிட அதிகமாக உலகச் செலாவணியை அது சிருட்டி செய்யவேண்டும். காப்பு நிதியைப்போல் சுமார் பத்துமடங்கு மதிப்புள்ள செலாவணியை இந்தப் பாங்கு சிருட்டிசெய்ய இதற்கு உரிமை கொடுக்கவேண்டும்.

இப்படிச் செய்வதால் உலகச் செலாவணியின் பற்றுக் குறையையும், பன்னாட்டு நாணய நிதியின் குறைபாடுகளையும் உடனடியாக அகற்றலாம். இந்தப் பாங்கு அதிகமாக உலகச் செலாவணியை வேண்டும் நாடுகளுக்குக் கடனுதவியளிக்கலாம். ஒரு நாட்டுக்குக் கொடுக்கும் கடன் தொகை மற்ற நாடுகளின் டெபாசிட்டாவதால் உலகப் பாங்கின் மொத்த இருப்பு குறையாது. பழைய முறைகளைப் பின்பற்றும் சில பிற்போக்கான நாடுகள் உடனடியாகத் தங்களிடம் இருக்கும் பொன்னைக் கொடுக்க மறுக்கலாம். ஆனால், நாளடைவில் எல்லா நாடுகளும் இந்த முறையின் எளிமையையும், சிக்கனத்தையும் உணர்ந்து உலகப் பாங்கை மேலும் மேலும் நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளும். இந்த முறையைப் பின்பற்றுவதால் உலோகங்களில் செய்யும் ஊகவாணிகம் குறையும்; இதனால் பல நன்மைகள் விளையும்.

2

# பாங்கு முறை

## 1. பாங்குகளின் வளர்ச்சி

### சுதேச பாங்குகள் (Indigenous Banks)

மிகத் தொன்மையான காலத்திலேயே இந்தியாவில் பாங்கு முறை இருந்தது. அக்காலத்திய நிலைக்கேற்றவாறு இந்த முறை அமைந்திருந்தது. இந்தியாவிலுள்ள பழைய காலத்துப் பாங்குகளுக்கும், தற்காலத்திய பாங்குகளுக்கும் பல வேறுபாடுகள் உள. இந்திய பாங்குகளைச் சுதேச பாங்குகள் (Indigenous Banks) என்று அழைப்பதுண்டு. இந்தச் சுதேச பாங்குகள் கூட்டுப்பங்கு முறையில் (Joint stock basis) அமையவில்லை. ஆகையால், சுதேச பாங்குதாரர்களே (Indigenous Bankers) முழுப் பொறுப்பையும் ஏற்க வேண்டும். அதாவது, பாங்கின் சார்பில் அவர்கள் ஏற்கும் பொறுப்பு வரையற்றது (Unlimited liability). இவர்கள் தங்களிடம் இருந்த மூலதனத்தைக் கொண்டே தொழில் நடத்தி வந்தார்கள். மக்களிடமிருந்து டெபாசிட்டுத் தொகை பெறவில்லை. ஆகையால், செக்குகளைப் (Cheques) பயன்படுத்தவில்லை. தற்கால பாங்குகளைப்போல் இவர்கள் செலாவணித்தாள்களை வெளியிடவில்லை.

ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ரொக்கம் அனுப்பவும், உள்நாட்டு வர்த்தகத்திற்கு நிதியளிக்கும் வகையிலும், ஹூண்டி (Hundi) எனப்படும் உண்டியல்களைப் பயன்படுத்தினர். நெடுங்கால கெடுவுள்ள உண்டியல்கள் புழக்கத்திலிருந்தன. இந்த உண்டியல்கள் தற்கால வாணிக உண்டியல்களைப்போல்வன. இந்தச் சுதேச

பாங்குதார்கள் இப்பொழுதுபோலவே அக்காலத்திலும் பாங்குத் தொழிலுடன் வியாபாரத் தொழிலையும் நடத்திவந்தனர். உதாரணமாக, இந்தப் பாங்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த ஜகாத் சேத் குடும்பத்தினர் சூரத்திலுள்ள அரேபியர்களுடன் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தார்கள். மக்கள், பொருள்களை நல்ல முறை பாதுகாப்பை முன்னிட்டு, அவர்களிடம் அக்காலத்தில் கொடுத்துவந்தனர். உண்டியல்களை மாற்றல் அல்லது தள்ளுபடி செய்தலே (discounting hundis) இவர்கள் செய்துவந்த முக்கியதொழிலாகும். பணம் கடன் கொடுப்பவர்களைப் போலல்லாமல் (Money lenders), இந்தப் பாங்குதார்கள் நல்லமுறையில் தங்கள் தொழில் பற்றிய கணக்குகளை (accounts) எழுதி வந்தார்கள். இன்றுகூட, இவர்கள் இதே முறையைத்தான் பின்பற்றுகின்றனர்.

கிழக்கிந்தியக்கம்பெனியார் இந்தியர்களை ராணுவத்தில் சேர்த்து, அவர்கள் உதவியைக்கொண்டே தங்கள் ஆதிக்கத்தை நம் நாட்டில் நிலைநாட்டினர். இந்திய ராணுவத்திற்கு வேண்டிய நிதியைக் கம்பெனியார் இவர்களிடமிருந்து பெற்றனர். 1800-இல் கம்பெனியார் பரோடாவிலுள்ள ஷராப்புக்களிட மிருந்து (Shroffs) 25 இலட்ச ரூபாய் கடனுகப் பெற்றனர். முகலாயர்கள் காலத்திலும் அரசர்களுக்கு இந்தச் சுதேச பாங்குதார்கள் கடனுதவியளித்தனர். மன்னர்களுக்கும் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கும் உதவியளித்த இந்தப் பாங்குதார்கள் இந்திய அரசியலிலும், வரலாற்றிலும் முக்கிய இடம் பெற்றனர். இவர்களுக்கும் தொழில் நடத்துவதற்கு அரசினர் ஆதரவு வேண்டியிருந்தது. முகலாயர்கள் காலத்தில் மக்கள் அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டிய தொகையை இந்தப் பாங்குதார்கள் வசூல் செய்தனர். வரிசெலுத்துவதிலும், செலுத்திய தொகையைத் தலைநகரத்திற்கு அனுப்புவதிலும் உண்டியல்களைப் பயன்படுத்தினர். அரசர்கள் சார்பில் ரூபாய் நாணயங்கள் வெளியிடுவதையும் இவர்கள் மேற்கொண்டனர். உதாரணமாக, முகலாயர்கள் காலத்தில் மூர்ஷிதாபாத் நாணயச்சாலை ஜகாத் சேத் குடும்பத்தினரிடம் இருந்தது. வங்காளத்தில் வரிவசூல் நிருவாகமும் அவர்கள் வசமிருந்ததால், அவர்கள் வெளியிடும் "சிக்கா ரூபாயையே" மக்கள் வரித்தொகை செலுத்தப் பயன்படுத்தவேண்டுமென்று வற்புறுத்தினர். மக்கள் தேவைக்கு வேண்டியபடி பல பகுதிகளிலுள்ள நாணயங்களை மாற்றும் தொழிலையும் இவர்கள் மேற்கொண்டனர். தற்காலத்தில் அரசினர் பாங்குத் தொழிலுக்கு வேண்டிய சட்டங்களை இயற்றியிருக்கின்றனர். இப்படிப்பட்ட சட்டதிட்டங்கள் இல்லாத அக்காலத்தில் மக்கள் நேர்மையும் நாணயமுமே இத்தொழிலுக்கு அடிப்படையாக இருந்தன. நேர்மையற்ற முறையில் இத்தொழிலை நடத்தியவர்கள்

நன்ருகத் தண்டிக்கப்பட்டனர் என்பதற்கு வரலாற்றில் பல சான்றுகள் இருக்கின்றன. இந்த முறையில் இந்தியாவில் சுதேச பாங்குகள் இயங்கிவந்தன.

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் இந்தச் சுதேச பாங்குதார்களுடைய உதவியைப் பயன்படுத்திக்கொண்டபோதிலும், கல்கத்தா, பம்பாய் முதலிய இடங்களில் ஏஜென்சி நிலேயங்களே (Agency Houses) நிறுவிப் பாங்குத் தொழிலும் செய்ய ஆரம்பித்தனர். ஆகையால், சுதேச பாங்குகளின் தொழில் குன்றியது. முகலாயப் பேரரசு வீழ்ச்சியடைந்தபின் நாடெங்கும் அரசியல் குழப்பமும் அமைதியின்மையும் தாண்டவமாடின. இந்த நிலேயில் சுதேச பாங்குகள் தேய்வுற்றன. சில அரசர்கள் இந்தப் பாங்குகளுக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகையைத் திருப்பிக்கொடுக்க மறுத்தனர். 1835-இல் இந்தியா முழுமைக்கும் ஒரே நாணயத்தை வெளியிட்டதால், இவர்கள் நாணய மாற்றுத் தொழிலே இழந்தனர். மேலும், தற்கால முறையில் தொழில் நடத்தும் பாங்குகள் இந்தியாவில் தோன்றியதும், பழைய பாங்குகளுக்கு ஒரு போட்டி ஏற்பட்டது. கூட்டுப்பங்குப் பாங்குகளே எதிர்த்து இவர்கள் தொழில் நடத்த முடியவில்லே. ஆகையால், இப்பாங்குகளின் தொழில் குன்றியது. ஆனல், இவை நம் நாட்டிலிருந்து மறையவில்லே. இன்னும் பாங்குத் தொழிலின் ஒரு பெரும்பகுதி இவர்கள் வசமிருக்கின்றது. ஆகவே, இந்தியாவில் தற்காலத்திய முறையைப் பின்பற்றும் பாங்குகள் ஒரு பகுதியாகவும், சுதேச பாங்குகள் மற்ருெரு பகுதியாகவும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதபடி இயங்கிவருகின்றன. சுதேச பாங்குதார்களின் தொழிலேப்பற்றிப் பின்வரும் அத்தியாயங்களில் பார்ப்போம்.

### இக்காலத்திய பாங்கு முறை

18-19-ஆம் நூற்ருண்டுகளில் கல்கத்தாவிலும், பம்பாயிலும் ஏஜென்சி நிலேயங்களே (Agency Houses) ஆரம்பித்தனர். இந்த நிலேயங்கள் தற்காலத்திய முறையில் பாங்குத் தொழிலே நடத்தி வந்ததுடன் வியாபாரத்திலும் ஈடுபட்டிருந்தன. பல ஆங்கிலேயர்கள் கம்பெனி ஊழியர்களாகப் பணியாற்றுவதைவிட, சொந்தமாக வியாபாரம் செய்வதையே விரும்பினர். பல கூட்டுப்பங்குப் பாங்குகள் பிறகு ஆரம்பிக்கப்பட்டன. 1860-க்குமுன் இந்தப் பாங்குகள் வரம்பற்ற பொறுப்பின் (Unlimited liability) அடிப்படையிலேயே இயங்கி வந்தன. ஏஜென்சி நிலேயங்கள் விவசாயப் பொருள்களே வியாபாரத்திற்காக ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குக் கொண்டு

செல்லவேண்டிய நிதியுதவி செய்தன. செலாவணித்தாள்களையும் வெளியிட்டன. அலெக்சாண்டர் கம்பெனி என்ற ஏஜென்சி நிலையம் 1770-இல் ஹிந்துஸ்தான் பாங்கை நிறுவினர். இந்தப் பாங்கு செலாவணித்தாள்களை வெளியிட்டன. 1832-க்குப் பிறகு இந்த பாங்கு நீடித்து இயங்கவில்லை. வங்காளப் பாங்கு, ஜெனரல் பாங்கு ஆப் இந்தியா என்ற இரு பாங்குகளை ஆரம்பித்தனர். இலாபம் பெருத காரணத்தால் 1791-இல் இந்திய பாங்கை நிறுத்தி விட்டனர். மைசூர்ப் போரால் ஏற்பட்ட கலவரத்தின் காரணமாக வங்காள பாங்கையும் மூடவேண்டியதாயிற்று. இந்தப் பாங்குகளைக் கிழக்கிந்தியக் கம்பெனி, பட்டயங்கள் (Charters) மூலம் அங்கீகரித்தது. இந்தப் பாங்குகள் செலாவணித் தாள்களை வெளியிட்டன. அக்காலத்தில் அரசாங்க அலுவலகங்கள் ஏற்றுக்கொண்ட செலாவணித்தாள்களையே மக்கள் ஏற்றுக்கொண்டனர். முக்கியமான நகரங்களிலேயே இந்தச் செலாவணித்தாள்கள் புழக்கத்திலிருந்தன. வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் கம்பெனியார் செலாவணித்தாள்களை வெளியிட முயன்றனர். ஆனால், இந்த முயற்சி பயனளிக்கவில்லை. 1806-இல் கல்கத்தா பாங்கு என்ற பெயரில் நிறுவி, அது கம்பெனியாரிடமிருந்து 1809-இல் ஒரு பட்டயம் பெற்றது. 1809-இலிருந்து இதை வங்காள பாங்கு என்றழைத்தனர். இதற்குச் செலாவணித்தாள் வெளியிடும் உரிமை வழங்கினர். கம்பெனியார் இதற்கு மூலதனத்தில் ஐந்தில் ஒரு பங்கை (500,000 பவுன்) அளித்து இதன் நிருவாகக் குழுவில் மூன்று அங்கத்தினர்களை நியமனம் செய்யும் உரிமையைப் பெற்றனர். இந்தப் பாங்கு நாளடைவில் கிளைகள் ஆரம்பிக்க உரிமைபெற்றது.

1683-இல் சென்னையில் ஆரம்பித்த ஒரு பாங்கு மக்களிடம் டெபாசிட்டுத் தொகையைப் பெற்று இயங்கிவந்தது. இது தள்ளுபடித் தொழிலையும் (Discount Business) மேற்கொண்டது. 1724-இல் பம்பாயில் ஆரம்பமான பாங்கு ஒன்று 8 லட்ச ரூபாய் பெறுமானமுள்ள செலாவணித்தாளை வெளியிட அனுமதிபெற்றது. பம்பாயைவிட கல்கத்தாவே பாங்குத் தொழிலுக்குச் சிறந்ததாக இருந்தது. பம்பாயிலும், சென்னையிலும் மாநில பாங்குகளை முறையே 1840, 1843-ஆம் ஆண்டுகளில் ஆரம்பித்தனர். கம்பெனியார் இந்தப் பாங்குகளுக்கும் மூலதனம் அளித்து, அவற்றின் நிருவாகக் குழுவின் அங்கத்தினர்களில் சிலரை நியமனம் செய்யும் உரிமை பெற்றனர். இந்த மூன்று மாநில பாங்குகளின் மூலதனத்தின் பெரும் பகுதி ஆங்கிலேயர்களுடையதே. கம்பெனியாரின் நிதி நிருவாகம் இவர்களிடம் இருந்தது. 1829-30-இல் பல ஏஜன்சி நிலையங்கள் திவாலாயின. இவை ஏராளமான தொகையை இழந்தன. இதற்குப் பிறகு ஆரம்பமான 12 பாங்குகளில் 1860-க்குள் ஆறு

திவாலாயின. இவைகளில் சில நேர்மையற்ற முறையில் தொழில் செய்ததால் கவிழ்ந்தன. 1809, 1840, 1843-ஆம் ஆண்டுகளில் ஆரம்பமான மாநில பாங்குகள் இந்திய பாங்கு முறை வரலாற்றில் முக்கியமான இடம் பெற்றுள்ளன.

19-ஆம் நூற்றுண்டில் இந்தியாவில் பாங்குகள் குறிப்பிடத் தக்க வளர்ச்சி பெறவில்லை. அவற்றின் மூலதனமும் டெபாசிட்டுத் தொகையும் பெருகவில்லை. அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் தொடங்கியதும் இங்கிலாந்து இந்தியப் பருத்தியை நாடியது. பருத்தி வியாபாரத்தில் ஊகவாணிகம் ஓங்கி வளர்ந்தது. பல புதிய பாங்குகளை நிறுவினர். ஆனால், இந்தப் பாங்குகள் நீடித்து இயங்க வில்லை. நம் நாட்டில் 19-ஆம் நூற்றுண்டில் பாங்கு முறை சரியாக வளராததற்கு முக்கிய காரணம், நமது பொருளாதாரம் முன்னேறுமல் நிலையாக இருந்ததேயாகும். அடிக்கடி பஞ்சமும் பற்றுக்குறையும் ஏற்பட்டதால், விவசாயமும் வாணிகமும் செழித் தோங்கவில்லை. இதன் காரணமாகப் பாங்குகள் நல்ல வளர்ச்சி பெறவில்லை. அமெரிக்க உள்நாட்டுப் போர் தொடங்கியதும் விலை வாசி உயர்ந்திருந்தது. அதன்பின் விலைகள் குறைய ஆரம்பித்து விட்டன.

பாங்கு முறை நன்றுக வளரவேண்டுமானுல் மக்களிடம் பாங்குப் பழக்கங்கள் (Banking habits) பரவ வேண்டும் முதலில் அவர்கள் செலாவணித் தாள்களைப் பயன்படுத்தவேண்டும். அதன்பின் டெபாசிட்டு முறை வளர, செக்கைப் (Cheque) பயன்படுத்தவேண்டும். மேல்நாடுகளில் கூட்டுப்பங்கு பாங்குகள் செலாவணித்தாள்களை வெளியிட்டன. ஒவ்வொரு பாங்கும் அதன் செலாவணித்தாள் புழக்கத்தை மிகுதிப்படுத்த முயற்சி செய்ததால் பாங்குகளிடம் ஒரு நல்ல போட்டி வளர்ந்தது. இதனுல் செலா வணித்தாள்களின் புழக்கம் விரிவடைந்தது. பாங்கு முறையும் நன்றுக வளர்ச்சியடைந்தது. இதே விதமாக இந்தியாவிலும் 1861 வரை பாங்குகள் செலாவணித்தாள்களை வெளியிட்டன. ஆனுல், 1861-இல் இயற்றிய சட்டம் செலாவணித்தாள் வெளியீட்டை அரசாங்க நிருவாகத்தின்கீழ்க் கொண்டுவந்தது. இதனுல் பாங்கு முறையின் வளர்ச்சி தடைப்பட்டது. 1900-இல் இந்தியாவிலிருந்த பெரிய பாங்குகள் ஒன்பது.

மாநில பாங்குகள் சில கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருந்தன. புற உண்டியல்களை (Foreign Bills) அவைகள் வாங்கவோ விற்கவோ கூடாது. அவர்கள் கொடுக்கும் கடன் ஆறு மாத கெடுவுக்குமேல் இருத்தல் கூடாது. வீடு, மனை போன்ற அசையாப்

பொருள்களை ஈடாகப் பெற்றுக்கொண்டு கடன் கொடுத்தல் கூடாது. 1900-இலிருந்து கூட்டுப்பங்குப் பாங்குகள் எப்படி வளர்ச்சிபெற்றன என்பதை இங்குக் காண்போம். இந்த வளர்ச்சியை நாம் புள்ளிவிவரங்கள் மூலம் தெரிந்துகொள்ள வேண்டும். இப்புள்ளிவிவரங்கள் கிடைக்காததால் பாங்குகளின் மொத்த டெபாசிட்டுத் தொகையையும், மூலதனத்தையும் கொண்டே நாம் 20-ஆம் நூற்றுண்டில் பாங்குகளின் முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் தெரிந்துகொள்ளவேண்டும். 1900-இலிருந்து 1914-க்குள் இந்தப் பாங்குகளின் மொத்த டெபாசிட்டுத் தொகை முன்பு இருந்ததை விட 57 கோடி ரூபாய் மிகுதியடைந்தது. 1920-க்குள் மேலும் 139 கோடி ரூபாய் டெபாசிட்டில் சேர்ந்தது. ஆனால், 1920-இல் விலைகள் உயர்ந்தன. எவ்வளவு தூரம் இவ்விலையுயர்வு இதற்குக் காரணமென்றும், எவ்வளவு தூரம் உண்மையான வளர்ச்சியினல் இந்தத் தொகை மிகுதியடைந்ததென்றும் சொல்ல முடியாது. முதல் உலகப்போருக்குப்பின் பணவீக்கமும் விலையுயர்வும் இருந்தன. 1922-க்குப்பின்புதான் விலைகள் குறைய ஆரம்பித்தன. ஆகையால், அந்த ஆண்டுக்குப்பின் டெபாசிட்டுத் தொகையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றமில்லை.

1813-இல் இயற்றிய சட்டம் ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில் குடியேற உரிமையளித்தது. இதற்குப் பின்பே ஆங்கிலேயர் மூலதனத்துடன் பல பாங்குகள் தோன்றின. இந்தப் பாங்குகள் வரையற்ற பொறுப்பின் அடிப்படையில் இயங்கின. பாங்குத் தொழிலுடன் மற்ற வாணிகத் தொழிலை இணைத்ததாலும், நேர்மையற்ற முறையில் தொழில் நடத்தியதாலும் பல பாங்குகள் 1829-இலிருந்து 1833-க்குள் திவாலாயின. 1860-இல் இயற்றிய சட்டம் வரையிட்ட பொறுப்பை (limited liability) அங்கீகரித்தது.

1930-இல் ஒரு பெரிய பொருளாதார மந்தம் உலகைத் தாக்கியது. விலைகள் படிப்படியாகக் குறைந்தன. 1931-இல் மொத்த டெபாசிட்டுத் தொகை குறைந்தது. ஆனால், விரைவில் மீண்டும் இத்தொகை பெருகியது.

மக்கள் தங்கள் சேமிப்பைப் பலவழிகளில் பயன்படுத்தலாம். பாங்கு டெபாசிட்டு முறை இவற்றில் ஒன்று. மக்கள் மற்ற வழிகளில் மிகுதியாகத் தாங்கள் பணத்தைப் (சேமிப்பை) பயன்படுத்தினல், பாங்குகள் டெபாசிட்டுகளைப் பெறும் வாய்ப்பு குன்றிவிடும். இந்தியாவில் மக்கள் சேமிப்பைப் பயன்படுத்திப் பொன்,

வெள்ளி முதலிய உலோகங்களை வாங்குவது இயல்பு. அரசாங்கம் மக்களிடம் கடன் பெறுவது எல்லா நாடுகளிலும் உள்ள சாதாரண வழக்கம். மக்கள் சேமிப்பில் ஒரு பெரும் பகுதியை இந்தியாவில் அரசினர் கடனாகப் பெறுகின்றனர். 1920-இலிருந்து இந்தக் கடன் தொகை ஆண்டுதோறும் மேலும் மேலும் மிகுதியடைந்து கொண்டேவந்தது. இதற்கு அடுத்தபடியாகக் கூட்டுப்பங்குக் கம்பெனிகளின் முதலும் ஆண்டுதோறும் மிகுதியடைந்து கொண்டேவந்தது. முதல் உலகப்போருக்குப்பின் தபால் துறையின் சேவிங்ஸ் டெபாசிட்டுத் (Post Office Savings deposit) தொகையும் மிகுதியடைந்தது. கூட்டுப்பங்குப் பாங்குகளின் டெபாசிட்டுத் தொகையில் முன்னேற்றமிருந்தபோதிலும் இந்தப் பாங்குகள் மக்கள் சேமிப்பை ஈர்ப்பதில் மற்றத் துறைகளின் போட்டியைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. இந்த சேவிங்ஸ் டெபாசிட்டில் குறைந்த வருவாயுள்ளவர்கள் தங்கள் சேமிப்பை முதலீடு செய்கின்றனர். இங்கிலாந்துபோன்ற மேலை நாடுகளில் இந்தச் சிறுசேமிப்பு மொத்தச் சேமிப்பில் மிகச் சிறிய பகுதியாகும். இங்கிலாந்தைவிட இந்தியாவில் இது முக்கியமான இடம் பெற்றிருக்கின்றது. ஆகையால், பாங்குகள் இந்தச் சிறுசேமிப்பைப் பெற முயற்சி செய்து வருகின்றன. 1931-இல் பாங்குகளின் டெபாசிட்டுகள் குறைந்ததற்குப் பொருளாதார மந்தமும் பணச் சுருக்கமும் காரணங்களாகும்.

சில முக்கியமான நகரங்களிலேயே கூட்டுப்பங்குப் பாங்குகள் பணியாற்றின. புதிய இடங்களில் பாங்குத் தொழிலை ஆரம்பிப்பதைவிடப் பழைய இடங்களிலேயே கவனம் செலுத்திவந்தனர். வர்த்தகம் மிகுதியாக உள்ள லாகூர், அமிர்தசரஸ், கான்பூர், இலக்குமணபுரி (Lucknow), டில்லி முதலிய நகரங்களிலும், சென்னை, பம்பாய், கல்கத்தா, ரங்கூன் போன்ற துறைமுகங்களிலும் தொழிலைப் பெருக்குவதில் கவனம் செலுத்தினர். ஐந்து இலட்சம்பேர் கொண்ட 2,300 ஊர்கள் நம் நாட்டில் 1916-இல் இருந்தன. இவற்றில் 140 ஊர்களில் மட்டும் பாங்குகள் இருந்தன. 1926-இல் 339 ஊர்கள் பாங்கு வசதிகளைப் பெற்றன. 1279 ஊர்கள் இந்த வசதிகளை 1916-ஆம் ஆண்டு பெற்றன. இம்பீரியல் பாங்கு பல இடங்களில் கிளைகளை ஆரம்பித்தது. டெபாசிட்டுகள் பெற வசதியிருந்த இடங்களிலும், பணத்தை முதலீடு செய்வதற்கு வாய்ப்புக்களிருந்த இடங்களிலும், பாங்குகள் கிளைகளை ஆரம்பித்தன. ஆனால், இந்தியாவில் சில முக்கியமான இடங்களில் கூட்டுப்பங்குப் பாங்குகள் கிளைகளை வெகுகாலமாக நிறுவனம் செய்யவில்லை. குறிப்பாகச் சுதேச சமஸ்தானங்களில் பாங்குகளின் தொழில் மிகுதியாகப் பெருகவில்லை. புதிய பாங்குகளை நிறுவனம்

செய்வதிலும் கிளைகளை ஆரம்பம் செய்வதிலும், கூட்டுப்பங்குப் பாங்குதார்கள் நாட்டின் பல பகுதிகளின் நிலைமையையும், தேவையையும் மனத்திற் கொண்டு முடிவுக்கு வரவில்லை. பாங்குகள் கிளைகளை ஆரம்பிப்பதில் புதிய இடங்களைத் தேர்ந்தெடுக்காமல் மற்றப் பாங்குகள் கிளைகளை ஆரம்பித்த இடங்களையே பயன்படுத்தின. ஆகையால், சில முக்கியமான ஊர்களில் பல பாங்குகளிடை போட்டியும், மற்ற ஊர்களில் பாங்கு வசதிகளில்லாமலும் இருந்தன. 1936-இல் 514 இடங்களில் பாங்கு வசதிகள் இருந்தன. இவற்றில் 194 ஊர்களில் இம்பீரியல் பாங்கும், "பேரைந்து" எனப்படும் ஐந்து முக்கியமான பாங்குகளும், சென்னையிலுள்ள இந்தியன் பாங்கும் கிளைகளைக் கொண்டிருந்தன. பாங்குகள் இல்லாத புதிய ஊர்களில் பாங்குகளை ஆரம்பிப்பதைவிட ஒரு சில இடங்களில் கிளைகளை ஆரம்பம் செய்வதிலேயே இந்திய பாங்குகள் கவனம் செலுத்தின. 1916-இலிருந்து 1920-க்குள் 198 கிளைகளை ஆரம்பித்தன. 1930-இலிருந்து 1936-க்குள் 512 புதிய கிளைகள் தோன்றின. ஆகையால், பாங்கு முறை சரியானபடி இந்தியாவில் பரவவில்லை.

இந்திய பாங்கு முறை வளர்ச்சியிலுள்ள இக்குறை 1938-க்குப் பிறகு ஓரளவு நீங்கியது. ஷெடியூல் பாங்குகளின் அலுவலகங்கள் 1938-இல் 1,128 இடங்களிலிருந்தன. 1945-இல் 2,933 இடங்களில் அலுவலகங்கள் இருந்தன. 1916-இலிருந்து 1936-க்குள் மொத்தக் கிளைகள் நான்குமடங்கு பெருகின. 1937-முதல் 1945 வரை மீண்டும் மொத்தக் கிளைகள் இரண்டு மடங்கு பெருகின. 1921-முதல் 1928-க்குள் இம்பீரியல் பாங்கு 100 கிளைகளை ஆரம்பித்தது. 1934-முதல் 1945-க்குள் இதன் கிளைகள் 202-இலிருந்து 433-க்கு அதிகரித்துவிட்டன. 1916-இல் நாணய மாற்றுப் பாங்குகள் (Exchange Banks) 45 கிளைகளைக் கொண்டிருந்தன. 1945-இல் இந்தப் பாங்குகளுக்கு 81 கிளைகளிருந்தன. கிளைகளை நல்ல திட்டத்துடன் ஆரம்பம்செய்யாததால், சில இடங்களில் வேண்டியதிற்குமேல் மிகுதியான பாங்குகள் இருந்தன.

புதிய கிளைகளை ஆரம்பித்துத் தொழிலைப் பெருக்குவதால் பாங்குகள் வலிமை பெறுகின்றன. வேண்டாத மாறுதல்களுக்குட் படாமல் ஒரே நிலையிலிருக்கும் தன்மையையும் பெறுகின்றன. 1926-இலிருந்து 1936-க்குள் பாங்குகளின் ஒவ்வொரு கிளைக்கும் சராசரி டெபாசிட்டுத் தொகை 29·4 லட்ச ரூபாயிலிருந்து 17·7 லட்சத்திற்குக் குறைந்துவிட்டது. இதற்குக் காரணம், புதிய இடங்களில் பாங்குகளை நிறுவாமல் சில குறிப்பிட்ட ஊர்களிலேயே எல்லாப் பாங்குகளும் கிளைகளை ஆரம்பித்ததாகும். பல இடங்களில்

வியாபாரம், தொழில், மக்கள் தேவை இவற்றிற்கேற்ப பாங்கு வசதிகள் பெருக வில்லே. ஆனால், எல்லாப் பாங்குகளின் கிளேகளும் சராசரி டெபாசிட்டுத் தொகையை ஒரே விதமாக இழக்கவில்லே. 1920-இலிருந்து 1930-க்குள் இம்பீரியல் பாங்கின் கிளேகள் மிகுதியான டெபாசிட்டுத் தொகைகளேப் பெற்றன. நாணயமாற்றுப் பாங்குகளின் கிளேகளின் டெபாசிட்டுத் தொகையும் மிகுதியடைந்தது. ஆனால், கூட்டுப்பங்குப் பாங்குகளின் கிளேகளுடைய சராசரி டெபாசிட்டுத் தொகை 1926-இலிருந்து 1930-க்குள் 13 லட்ச ரூபாயிலிருந்து 9 லட்சத்திற்குக் குன்றியது. அடுத்த ஆறு ஆண்டுகளிலும் இப்படியே இத்தொகை குறைந்தது.

1936-இல் பாங்குகளின் கிளேகள் சராசரி 8·5 லட்ச ரூபாய் கொண்டிருந்தன. ஆனால், கூட்டுப்பங்குப் பாங்குகளிடம் இருந்த டெபாசிட்டுத் தொகையின் பெரும்பகுதி முக்கியமான ஐந்து அல்லது ஆறு பாங்குகளிடமே இருந்தது. பாங்குகளிடமிருந்த மொத்த நிதியில் சுமார் நான்கில் மூன்று பங்கு பெரிய பாங்குகளிடமே இருந்தது. இவைகளேக் கணக்கிலிருந்து நீக்கினால், மற்றப் பாங்குகளின் கிளேகளுடைய சராசரி டெபாசிட்டுத் தொகை சுமார் 3·5 லட்சம்தான் இருக்கும். நாடெங்கும் பல சிறிய பாங்குகள் இயங்கி வந்தன.

இந்தியாவில் எல்லாப் பாங்குகளும் பரவலாக மக்களிடம் டெபாசிட்டுத் தொகையைப் பெறவில்லே. சில பெரிய பாங்குகளே மக்கள் டெபாசிட்டுத் தொகையின் பெரும்பகுதியைப் பெற்றன. 1941-ஆம் ஆண்டு இம்பீரியல் பாங்கும், 16 நாணயமாற்றுப் பாங்குகளும், "பேரைந்து" பாங்குகளும் நாட்டின் டெபாசிட்டுத் தொகையில் 87 சதவீதத்தைப் பெற்றிருந்தன. மொத்த டெபாசிட்டுத் தொகையில் 67 சதவீதம் "பேரைந்து" களிடமிருந்தது. நாட்டின் ஏழு பாங்குகளிடம் 71 சதவீதம் இருந்தது.

டெபாசிட்டுத் தொகை இப்படிப் பல பாங்குகளில் குவிந்ததற்குப் பல காரணங்கள் உள. டெபாசிட்டுத் தொகைகளே மக்களின் தேவைக்கேற்பத் திருப்பிக்கொடுக்கப் பாங்குகள் எப்பொழுதும் தயாராக இருக்கவேண்டும். டெபாசிட்டு மார்க்கெட்டில் பல பகுதிகளுண்டு. இவற்றில் சில பகுதிகளிலிருந்துமட்டும் டெபாசிட்டுத் தொகையைப் பெறுதல் சிறந்ததல்ல. இப்பகுதிகளில் சில மாறுதல்கள் ஏற்படலாம். இதன் காரணமாக, மக்கள் மிகுதியான டெபாசிட்டை மீட்க முயற்சி செய்தால் பாங்குகளின் நிலே மோசமடையும். ஆகையால், பெரிய பாங்குகளே நிருவாகம் செய்பவர்கள் முன்னேற்பாட்டுடன் டெபாசிட்டுத் தொகையை மார்க்கெட்டின் பல பகுதிகளிலிருந்து பெற்றனர். அதாவது, பெரிய

பாங்குகள் வியாபாரத் துறையிலிருக்கும் பல பகுதிகளுடன் தொடர்பு கொண்டன. இந்தியாவின் பல பகுதிகளில் வட்டிவீதம் வேறு பட்டிருந்தது. வட்டி வீதம் அதிகமாக இருந்த பகுதிகளில் கிளைகளை ஆரம்பித்துப் பாங்குத் தொழில் நடத்தியது இதற்கு மற்றொரு காரணமாகும். மேலும், பாங்குகளிடை தொழிலைப் பெருக்குவதில் போட்டி வளர்ந்தது. 1921-இலிருந்து 1930-க்குள் இம்பீரியல் பாங்கு 100 கிளைகள் ஆரம்பித்தது. மற்றப் பெரிய பாங்குகளும் புதிய கிளைகளை ஆரம்பித்து மிகுதியான டெபாசிட்டுத் தொகையைப் பெற்றன. இக்காரணங்களால் டெபாசிட்டுத் தொகை சில பெரிய பாங்குகளில் குவிந்தன.

இந்தியாவில் பாங்குகளின் டெபாசிட்டுத் தொகைகள் பற்றிய குவியல் நிலையைப் (Concentration) பார்த்தோம். ஆனால், பாங்குகள் நாட்டில் பரவலாயும் இருக்கின்றன. பல ஊர்களில் கிளைகளின்றி ஆங்காங்கே தனித்தனியாக இயங்கும் பாங்குகள் இருக்கின்றன. இந்தப் பரவல் நிலைக்கும் பல காரணங்கள் உள. ஒரு பெரிய பாங்கின் கிளைகள் தலைமை அலுவலகத்தின் ஆதிக்கத்துக் குட்பட்டுப் பணியாற்றவேண்டும். இவை, சில குறிப்பிட்ட செயல் முறைகளைப் (Procedure) பின்பற்றவேண்டும். இம்முறைகள் எளியதாகவும் சிக்கனமாகவும் இருக்கவேண்டுமென்பதில்லை. பல ஊர்களில் தனித்தனியாக இயங்கும் பாங்கின் அலுவலர்கள் ஆங்காங்கே உள்ள மக்களையும் அவர்கள் நாணயத்தையும், அவர்களைப்பற்றிய மற்ற விவரங்களையும் நன்குகத் தெரிந்துகொண்டு எளிய முறையில் அவர்களுக்குப் பாங்கு வசதிகள் அளிப்பதால், மக்கள் இவ்வசதிகளைப் பெரிதும் பயன்படுத்திக்கொள்கின்றனர். பல கிளைகளைக்கொண்ட பெரிய பாங்குகள் இதுபோன்ற முறையில் பணிபுரிய முடியாது. இது இந்தியாவில் பாங்கு வசதிகள் பரவலாக இருப்பதற்கு ஒரு முக்கியமான காரணமாகும்.

மேல்நாடுகளைப்போல் இந்தியாவில் சிறு பாங்குகளைப் பெரிய பாங்குகளுடன் இணைப்பது கடினம். இவ்விணைப்புக்குச் சிறு பாங்குகளின் பாங்குதார்களும், ஆங்காங்கே இந்தப் பாங்கு வசதிகளைப் பெறும் மக்களும் உடன்படமாட்டார்கள். மேலும், பெரிய பாங்குகள் சுதேச சமஸ்தானங்களில் அதிகமாகத் தொழிலைப் பெருக்கவில்லை. ஆகையால், சிறு பாங்குகள் பல ஊர்களில் மக்களின் தேவைக்கேற்ற முறையில் பணியாற்றின. பாங்குமுறை நம் நாட்டில் பரவலாகப் பெருகிற்று. பெரிய பாங்குகள்கூட நாட்டின் சில பகுதிகளிலேயே தொழிலைப் பெருக்குவதில் கவனம் செலுத்தின. உதாரணமாக, பஞ்சாப் நேஷனல் பாங்கு (Punjab National Bank), அலகாபாத் பாங்கு (Allahabad Bank of India), இந்தியன் பாங்கு முதலியவை

குறுகிய வட்டாரங்களிலேயே தங்கள் தொழிலைப் பெருக்கிவந்தன. சுதேச சமஸ்தானங்களிலுள்ள சில பாங்குகள் சமஸ்தான எல்லையை மீறித் தொழிலைப் பெருக்கவில்லை. ஆனால், இம்பீரியல் பாங்கும், செண்ட்ரல் பாங்கும் இந்தியா முழுவதும் கிளைகளை ஏற்படுத்தின.

மேலே குறிப்பிட்ட பெரிய பாங்குகளையும் சிறிய பாங்குகளையும் தவிர, ஒரு லட்ச ரூபாயைவிடக் குறைந்த மூலதனமுடைய பல மிகச் சிறிய பாங்குகள் நாட்டில் உள. இவற்றைத் தவிர, சுதேச பாங்குகளும் இருக்கின்றன.

### நாணயமாற்றுப் பாங்குகள்

கிழக்கிந்தியக் கம்பெனியார் காலத்தில் தோன்றிய பாங்குகளில் சில பட்டயுங்களாலும், சில சட்டத்தாலும் அங்கீகரிக்கப் பட்டவை. இவற்றைத் தவிர, அயல்நாட்டுப் பாங்குகள் இந்தியாவில் 1853-க்குப்பிறகு கிளைகளை ஆரம்பம் செய்தன. 1853-க்கு முன் இந்தப் பாங்குகள் இந்தியாவில் கிளைகள் ஆரம்பிப்பதைக் கிழக்கிந்தியக் கம்பெனியாரும், ஏஜன்சி நிலையங்களும் 1853-வரை எதிர்த்தன. அந்த ஆண்டு ஆங்கிலேய அரசாங்கத்தின் பட்டயத்தின்கீழ் மூன்று பாங்குகளை இந்தியாவில் நிறுவினர். இதில் "பட்டயம் பெற்ற இந்திய ஆஸ்திரேலிய சீன பாங்கு" (Chartered Bank of India, Australia and China) மட்டுமே நீடித்துப் பணியாற்றியது. 1863-இல் இந்திய நேஷனல் பாங்கு (National Bank of India) தோன்றியது. இங்கிலாந்தைப்போல் மற்ற நாடுகளும் இந்தியாவில் கிளைகள் ஏற்படுத்தின. இந்தப் பாங்குகள் நாணய மாற்றுத் தொழிலை மேற்கொண்டன.

### பாங்கு முறை விசாரணை

1929-இல் இந்திய அரசாங்கம் பாங்கு முறையைப் பரிசீலனை செய்ய ஒரு குழுவை நியமனம் செய்தது. இக்குழு மூன்று படிகளில் வேலை செய்தது. முதல் படியில் பத்து மாநிலக் குழுக்கள், விவசாயக் கூட்டுறவுப் பாங்குகள், நில அடமான பாங்குகள், மற்றக் கடன் வசதியளிக்கும் நிலையங்கள் முதலியவற்றைப் பற்றிய விசாரணை நடத்தி முடிவுக்கு வந்தனர். 19 சுதேச சமஸ்தானங்களும் மாநிலங்கள் போலவே குழுக்களை நியமித்தனர். இரண்டாவது படியில் ஓர் அகில இந்தியக்குழு மாநிலக் குழுக்களின் முடிவுகளையெல்லாம் திரட்டி, அவற்றைப் பரிசீலனை செய்து, இதற்கு மேல்

தேவைக்கேற்றபடி விசாரணையை நடத்தி, அதன் முடிவுகளை அரசின ரிடம் கொடுக்கவேண்டும். மூன்றுவது படியில் ஒரு மையக் குழு இந்த முடிவுகளையெல்லாம் பரிசீலனை செய்யும். இக்குழுவினர் அயல்நாட்டு வல்லுநர்களின் உதவியைப் பெற்றனர். மாநிலக் குழுவினர் அவர்கள் வேலையை 1930-இல் முடித்தனர். அடுத்த ஆண்டு மையக் குழுவினர் தம் பணியை முடித்து, பெரும்பான்மை யோர் முடிவுகளையும், சிறுபான்மையோர் முடிவுகளையும் அரசின ரிடம் கொடுத்தனர்.

இரண்டாவது உலகப்போர்க்காலத்திலும், அதன்பின்னும் பாங்கு முறை இந்தியாவில் எப்படி மாறுதல்கள் அடைந்ததென்று இங்குக் காண்போம். இரண்டாவது உலகப்போர் 1939-இல் தொடங் கியது. 1941-ஆம் ஆண்டுவரை பாங்கு முறை குறிப்பிடத் தக்கபடி வளர்ச்சி பெறவில்லை. 1942-முதல் 1946-வரை இந்திய பாங்குகளின் டெபாசிட்டுத் தொகையும் கிளைகளும் மிகுதி யடைந்தன. போர்த் தொடக்கக் காலத்தில் இந்திய பாங்குகளின் மொத்த டெபாசிட்டுத் தொகை 238 கோடி ரூபாய். இத்தொகை 1946-இல் 1097 கோடி ரூபாயாக உயர்ந்தது. மக்களிடமிருந்து கடன் வசூல் செய்வதில் பாங்குகள் அரசினருக்கு உதவியளித்தன. போர்க்காலத்துப் பொருளாதார நிலைக்கேற்றபடி இந்திய பாங்குகள் இயங்கின. ஆனால், போர் முடிந்தபின் இவை சில தொல்லைகளைச் சமாளிக்க வேண்டியதாயின. ஆகையால், இவற்றின் வளர்ச்சி தற்காலிகமாகத் தடைப்பட்டிருந்தது. 1954-முதல் மீண்டும் வளர்ச்சி தொடக்கமாயிற்று.

போர்க்காலத்தில் இந்திய பாங்குகள் நல்ல முறையில் வளர்ச்சி பெற்றன. தொழில், வாணிகம், உற்பத்தி முதலியன போர்க் காலத்தில் ஓங்கி வளர்ந்தன. பணப் பெருக்கமும் ஏற்பட்டது. இந்த நிலையில் இந்தியாவில் பாங்கு முறை வளர்ந்ததில் வியப் பொன்றுமில்லை. யுனைடெட் கமர்ஷியல் பாங்கு போன்ற சில பெரிய பாங்குகள் இக்காலத்தில் தோன்றின. ஆனால், சிறிய ஷெடியூல் பாங்குகளின் நிலைமை அதிகம் முன்னேறவில்லை. 1941-இலிருந்து 45 வரை நாணய மாற்றுப் பாங்குகள் வைத்திருந்த டெபாசிட்டுத் தொகையின் (மொத்தத்தில்) சதவீதம் 29-இலிருந்து 17 சதவீத மாகக் குறைந்தது. பாங்குகளின் மொத்த டெபாசிட்டுத் தொகை மிகுதியடைந்தது. போர்ச் செலவிற்காக அரசினர் செய்த செலாவணிப் பெருக்கமே இதற்கு முக்கிய காரணமாகும். மேல் நாடுகளைப்போல் டெபாசிட்டுத் தொகையை நம் நாட்டினர் அதிகமாகப் பயன்படுத்தவில்லை. ஏனெனில், செக்கைப் (Cheque) பயன்படுத்தும் பழக்கம் நம் நாட்டில் அதிகம் பரவவில்லை. நடை

முறை டெபாசிட்டுத் தொகை (Current deposit), தவணை டெபா சிட்டுத் தொகையைவிட (Fixed Deposits) விரைவில் மிகுதி யடைந்தது. தவணை டெபாசிட்டுகளின் வட்டி, போர்க்காலத்தில் குறைந்திருந்தது. உலோகங்கள், வீடு, நிலம் முதலியவற்றின் விலைகள் உயர்ந்ததால், மக்கள் தங்கள் பணத்தை நடைமுறை டெபாசிட்டாகப் பாங்குகளில் வைத்துக்கொண்டனர். டெபா சிட்டுத் தொகை மிகுதியடைந்ததால், பாங்குகளிடமிருந்த மொத்தத் தொகையில் மூலதனத்தின் சதவீதம் குறைந்தது.

இரண்டாவது உலகப் போர்க்காலத்தில் பாங்குகளின் சொத்துக்களில் (Assets) மாறுதல்கள் ஏற்பட்டன. 1939-இலிருந்து 1944-க்குள் உண்டியல்களும் கடன்களும் (Bills and advances) மொத்தச் சொத்துக்களில் 62 சதவீதத்திலிருந்து 25-க்கு ஆகிவிட்டது. இம்பீரியல் பாங்கின் சொத்தில் இந்தச் சத வீதம் 55-இலிருந்து 20-ஆகக் குறைந்துவிட்டது. ஆகையால், பாங்குகள் அரசாங்கப் பத்திரங்களைச் சொத்தாகப் (Assets) பெற்றன. போர் நிமித்தமாக அரசினர் கடன் வாங்கியதால் பாங்குகளுக்குப் பத்திரங்கள் பெறுவது எளிதாயிற்று. 1946-வரை பணப் பெருக்கத்தின் விளைவுகள் நீடித்தன. ஆகையால், பாங்குகள் ரிசர்வ் பாங்கிடம் நிதியுதவி கோரவில்லை. ஒரு சில சிறிய பாங்குகளே ரிசர்வ் பாங்கின் உதவியை நாடின. ரொக்கமாகக்கூடிய சொத்துக்களை (liquid assets) மிகுதியாகக் கொண்டால் பாங்கு களின் இலாபம் குறையும். ஆனால், டெபாசிட்டர்களுக்குக் கொடுக்கும் வட்டி வீதம் குறைந்ததால், பாங்குகளின் இலாபம் குறையவில்லை.

உலகப்போர் நடந்துகொண்டிருக்கும்பொழுதும் அதன் பின்பும் பாங்குத் தொழில் முன்னேறியது. எனினும், இந்த முன்னேற்றத்தில் சில குறைபாடுகள் இருந்தன. கிளைகளை ஆரம் பிப்பதிலும் புதிய பாங்குகளை நிறுவுவதிலும் சரியான திட்டமும் முன்னேற்பாடுமில்லை. மக்கள் தேவைக்கும், தொழில் வர்த்தகம் முதலியவற்றிற்கும் ஏற்ற முறையில் கிளைகள் தோன்றவில்லை. சில இடங்களில் தேவைக்குமேல் பாங்கு வசதியும் சில ஊர்களில் வேண்டிய வசதி இல்லாமலும் இருந்தன.

போர் முடிந்த பிறகு பாங்குகளின் நிலைமை பழயபடியே மாறியது. தவணை டெபாசிட்டுகள் முன்பு இருந்ததைப் போல் நாளடைவில் மிகுதியடைந்தன. இதனால், பாங்குகளின் நிலைமை முன்னேறியது. முன் போலவே பாங்குகள் கடன் உண்டியல் முதலிய சொத்துக்களை அதிக அளவில் பெற்றன. விலைகள்

உயர்ந்ததாலும், வர்த்தகம் மிகுதியடைந்ததாலும், பழயபடி தனி யார் துறையில் ஏற்றுமதியும் இறக்குமதியும் செய்தமையாலும், போர்க்கால மாறுதல்கள் மறைந்து, பழய நிலே மீட்சி பெற்றது. பாங்குகள் தங்கள் தொகையை முதலீடு செய்வதற்கு, போருக்குப் பின்பும் அரசாங்கத்தை எதிர்பார்க்கவேண்டியதாயிற்று. போர்க் காலத்திலும் அதன்பின்பும் பாங்குத் தொழிலில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் இருந்தது. பலர் போரை அடுத்துப் பணச்சுருக்கம், உற்பத்திக் குறைவு, வேலே வசதிக் குறைவு முதலியன ஏற்படு மென்று அஞ்சினர். எனினும், போர் முடிந்தபின்பும் நிலேமை அப்படியே நீடித்தது. ஆனல், வங்காளத்தில் 1940-இல் சில ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள் (Non-Scheduled Banks) நிருவாகத்தின் குறையினுல் தொல்லேகளுக்கு இலக்காயின, ஆனல், நெருக்கடியை நல்லமுறையில் சமாளித்துவிட்டனர்.

1947-இல் நாட்டுப் பிரிவினே பாங்குகளே ஓரளவு பாதித்தது. பஞ்சாப் நேஷனல் பாங்கு மேற்குப் பஞ்சாபிலுள்ள பல கிளேகளேக் கிழக்குப் பஞ்சாபிற்கு மாற்றிக்கொண்டது. பிரிவினேயையொட்டி ஏற்பட்ட வகுப்புக் கலவரங்கள் இந்தப் பாங்கைப் பாதித்தன. மேற்குப் பஞ்சாபிலுள்ள கிளேகளே மூடவேண்டியதாயிற்று. இந்திய அரசாங்கமும், ரிசர்வ் பாங்கும் இந்தப் பாங்குக்கு வேண்டிய உதவியைக் கொடுத்தன. இந்த உதவி அளித்தபோதிலும், பிரிவினேயின் காரணமாகச் சில மிகச் சிறிய பாங்குகள் திவாலாயின. இவைகள் ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகளே. சில ஷெடியூல் பாங்குகளும் தொல்லேகளுக்கு இலக்காயின. ஆனல், இவைகள் ரிசர்வ் பாங்கு உதவியைக்கொண்டு நிலேமையைச் சமாளித்தன. இதன்பின் ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பில் இந்தப் பாங்குகள் நல்ல முறையில் பணியாற்றியதால், நெருக்கடியான நிலேமை ஏற்பட வில்லே. திட்டமும் முன்னேற்பாடுமற்ற முறையில் கிளேகள் ஆரம்பிக்கும் பழக்கத்தை ரிசர்வ் பாங்கு கட்டுப்பாடுசெய்தது.

போர்க்காலத்தில் டெபாசிட்டுத் தொகை ஆண்டுதோறும் மிகுதியடைந்துகொண்டு வந்தது. 1946-க்குப் பின்பும் மிகுதி யடைந்தது. ஆனல், குறைந்த அளவிலேயே அதிகரித்தது. அரசினர் போர் நிமித்தமாகச் செய்த செலவுகளே இதற்குக் காரணம். விலேகள் உயர்ந்ததால் வர்த்தகத்திற்கு மிகுதியான நிதி தேவைப்பட்டது. ஆகையால், 1948-இல் பாங்குகளின் சொத்துக் களில் உண்டியல்களும் கடனும் மிகுதியடைந்தன. தவணே டெபா சிட்டுகளும் குறைந்ததால் பாங்குகளுக்கு அதிக இலாபம் கிடைத்தது. ஆனல், அவற்றின் ரொக்க இருப்பு (Cash) குறைந்தது. இரண்டாவது போர்த் தொடக்கத்திலிருந்து 1948-

வரை பாங்குத் தொழில் விரிவடைந்தது. 1949-இலிருந்து 1953-வரை இத்தொழில் மேலும் விரிவடையவில்லை. 1948-இல் 96 ஷெடியூல் பாங்குகள் இருந்தன. இந்த எண்ணிக்கை 1953-இல் 89 ஆகக் குறைந்துவிட்டது ; பாங்குகளின் செலவு மிகுதியடைந்தது. வருவாயும் குன்றியதால், பல புதிய பாங்குகள் தம் கிளைகளில் சில வற்றை மூடி, செலவில் சிக்கனத்தைக் கையாண்டன. ஆனால், பொதுவாகப் பாங்குகள் 1940-க்குப்பின் முன்னேற்றமடைந்தன. 1949-இல் பாங்குக் கம்பெனிகள் சட்டத்தை (Banking companies Act) இயற்றினர். இதன்பின் ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பில் நம் நாட்டுப் பாங்குகள் நல்லமுறையில் பணியாற்றிவருகின்றன. 1948-இல் ஷெடியூல் பாங்குகளிடமும், ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகளிடமும் (Non-Scheduled Banks) மொத்தம் 1,118 கோடி ரூபாயிருந்தது. 1953-இல் இத்தொகை 969 கோடி ரூபாயாகி விட்டது. உற்பத்தி, தொழில், அயல் நாட்டு வர்த்தகம் முதலியவை பாதிக்கப்பட்டதால் மொத்த டெபாசிட்டுத் தொகை குன்றியது. ஆனால், பாங்குகளின் சொத்துக்களில் (Assets) உண்டியல்களும், கடனும் (மற்றவர்கள் பாங்குகட்குக் கொடுக்க வேண்டியவை) மிகுதியாயின.

1953-ஆம் ஆண்டு வரை பாங்குகளின் முன்னேற்றம் தடைப் பட்டிருந்தது. 1954-இல் மீண்டும் இத்தொழில் விரிவடையத் தொடங்கியது. அவற்றின் தொழிலும் இலாபமும் பெருகின. பெரிய ஷெடியூல் பாங்குகளின் நிலையில் குறிப்பிடத்தக்க முன்னேற்ற மிருந்தது. ஆனால், சிறிய பாங்குகளின் இன்னல்கள் முற்றிலும் தீர்ந்தபாடில்லை. இந்தப் பாங்குகளைப் பெரிய பாங்குகளுடன் இணைப்பது நலமென்று கருதி, இதற்கு வேண்டிய ஏற்பாட்டை இந்திய பாங்குக் கம்பெனிச் சட்டத்தில் 1950-இல் சேர்த்தனர். 1951-இல் பாரத் பாங்கைப் (Bharat Bank) பஞ்சாப் நேஷனல் பாங்குடன் இணைத்தனர். ஆனால், சிறிய பாங்குகள் எல்லா வற்றையும் இப்படிப் பெரிய பாங்குகளுடன் இணைப்பது கடினம்.

1959-ஆம் ஆண்டின் இறுதியில் பாங்குகளின் அலுவல கங்கள் கீழ்க்கண்டவாறு இருந்தன :—

| | | |
|---|---|---|
| ஸ்டேட் (State Bank of India) | ... | 823 |
| ஷெடியூல் பாங்குகள் | ... | 3036 |
| ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள் | ... | 926 |

டெபாசிட்டுத் தொகை 1957-58-இல் மிகுதியடைந்தது. தவணை டெபாசிட்டுத் தொகை, நடப்பு டெபாசிட்டைவிட விரைவில் மிகுதியடைந்தது. 1950-இல் ஷெடியூல் பாங்குகளின் சொத்துக்களில் கடனும், பத்திர முதலீடும் (Investments) கிட்டத் தட்ட சமனுக இருந்தது. டெபாசிட்டில் 47·5 சதவீதம் கடனுகவும் 48·9 சதவீதம் பத்திர முதலீடாகவும் இருந்தன. 1951-இல் கடன் 60 சதவீதமாயிற்று. பத்திர முதலீடு 42 சதவீதமாயிற்று. வர்த்தகம் பெருகும்பொழுது கடனும் உண்டியல்களும் மிகுதி யடையும். பத்திர முதலீட்டில் அரசினர் பத்திரங்களே முதன்மை யான இடம் பெற்றன.

## இன்று பாங்குகளின் நிலைமை

1961-ஆம் ஆண்டில் தொழிலும் வர்த்தகமும் பெருகியதால் மக்கள் பாங்குச் செலாவணியை மிகுதியாக வேண்டினர். இந்தியா விலுள்ள பாங்குகளுக்குத் தங்களிடமுள்ள பணத்தை நல்ல முறை யில் பயன்படுத்த அரிய சந்தர்ப்பம் கிடைத்தது. டெபாசிட்டுத் தொகை, குறிப்பாக நடப்பு டெபாசிட்டுத் தொகை சுமாரான அளவில் பெருகியது. பாங்குகளுடைய வருமானமும் பெருகியது. அவை கடன்தொகைக்கு உயர்ந்த வட்டிவீதம் பெற்றன. அவர் களுடைய தொழில் பெருகியதோடல்லாமல் மிகுதியான வருமானம் கொடுக்கக்கூடிய சொத்துக்களையும் (Assets) பெற்றனர். அதிக வருமானம் கொடுக்காத சொத்தாகிய பத்திர முதலீட்டைப் பாங்குகள் குறைக்கமுடிந்தது. புதிய கிளைகளை ஆரம்பித்ததால் நிருவாகச் செலவு மிகுதியடைந்தது. எனினும், பாங்குகள் பெற்ற இலாபம் அதிகரித்தது. ஏனெனில், கடன்களும் உண்டியல்களும் அதிகமான வருவாயை அளித்தன.

1961-இல் பணப்பெருக்கம் மிகுதியாக இல்லை. வர்த்தகம் பெருகும் காலத்தில் பணப்பெருக்கம் இருந்தது. செலாவணிப் புழக்கமும் பாங்குச் செலாவணியும் அதிகரித்தன. வர்த்தகம் ஓங்கும் காலத்தில் (Busy season) இப்படிப் பணப்பெருக்கம் ஏற்படு வது இயற்கை. ஆனுல், மந்தகாலத்தில் (Slack season) பணச் சுருக்கம் ஏற்பட்டது. பாங்குச் செலாவணியை ரிசர்வ் பாங்கு கட்டுப்பாடுசெய்வதில் உற்பத்தி பாதிக்காதபடி செய்தது. பாங்குச் செலாவணிக் கட்டுப்பாடு செம்மையாக இருந்தது. செலாவணி, பாங்குச் செலாவணி இவற்றை அதிகம் கட்டுப்பாடு செய்ய வேண்டுமா அல்லது கட்டுப்பாடுகளைக் குறைக்க வேண்டுமா என்பதைப் பற்றி நாம் நிலையான முடிவிற்கு வராததால், வட்டிவீதம்

இந்தியாவில் வேண்டியபடி உயரவில்லை. இதனுல், அமைப்பற்ற பணமார்க்கட்டு (Unorganised money market) பெருக, அமைப்புள்ள பணமார்க்கட்டின் (Organised money market) வளர்ச்சி குன்றியது. இதன் காரணமாக, அவைகளிடமிருந்த ரொக்கமும் குறைந்தது.

பாங்கு முறையை இந்தியாவில் எப்படி வளர்க்கவேண்டுமென்பதை இங்குக் காண்போம். விரிவடையும் பொருளாதாரத்திற்கு ஏற்ற முறையில் பாங்குகள் வளர்ச்சி பெறவேண்டும். பொருளாதார முன்னேற்றத்துக்கேற்ற முறையில் வேண்டிய மாறுதல்களைப் புகுத்த வேண்டும். நாட்டின் உற்பத்திச் சாதனங்களைச் செம்மையாகப் பயன்படுத்தி, உற்பத்தியைப் பெருக்கவேண்டும். பொருளாதாரத் துறையில் பின்தங்கிய நாடாகிய இந்தியாவில் உற்பத்திப் பெருக்கம் மிக முக்கியமானது. உற்பத்திப் பெருக்கத்திற்கும், உற்பத்திச் சாதனங்களின் பயன்பாட்டுக்கும் வேண்டிய நிதியை அளிக்க வேண்டிய பொறுப்பு பாங்குகளுடையது. உற்பத்திச் சாதனங்களை நாம் முற்றிலும் பயன்படுத்தாதற்கு ஒரு காரணம் நமது நிதியின் பற்ருக்குறையாகும். நமது திட்டங்களுக்கு வேண்டிய நிதியைத் திரட்டுவது பாங்குகளின் முக்கியமான நோக்கம். அமைப்பற்ற பணமார்க்கட்டுகள் பெறும் நிதியைக் குறைத்து, அதை அமைப்புள்ள பணமார்க்கட்டுக்குத் திருப்பவேண்டும். மக்களிடம் சேமிப்புப் புழக்கத்தை வளர்த்து, முதலீட்டுக்கு வேண்டிய பணத்தைப் பெற வேண்டும். அரசினருக்கு வேண்டிய நிதியைக் கடன் மூலம் வசூல் செய்தல் பாங்குகளின் பொறுப்பு.

மற்ற நாடுகளில் பாங்கு முறை எப்படி வளர்ச்சி பெற்றதென்பதை நோக்கும்பொழுது, இந்தியா அன்னியநாடுகளிடமிருந்து தெரிந்துகொள்ளவேண்டிய உண்மைகள் பல தெளிவாகின்றன. ஆங்கிலேய, அமெரிக்க பாங்கு முறைகளிலிருந்து நாம் சில உண்மைகளைத் தெரிந்துகொள்ளலாம். இங்கிலாந்தில் பல சிறிய பாங்குகள் இருந்தன. இவைகளையெல்லாம் பெரிய பாங்குகளுடன் இணைத்ததால் "கிளைபாங்கு முறை" (Branch-banking) இங்கிலாந்தில் உருவாயிற்று. இணைப்பு இயக்கம் 19-ஆம் நூற்ருண்டில் ஆரம்பமாயிற்று. முதல் உலகப்போருக்கு முன் இவ்வியக்கம் பெற்ற வெற்றியின் காரணமாக, இங்கிலாந்தில் "பேரைந்துகள்" (Big Five) தோன்றின. கிளைபாங்கு முறையைப் பின்பற்றுவதால், பாங்குகளுக்கு ஏற்படும் ஆபத்தையும் இன்னல்களையும் குறைக்கலாம். எனவே, இந்தியாவும் இம்முறையைப் பின்பற்றலாம். டெபாசிட்டர்களுடைய நலனைக் கருதி ரிசர்வ் பாங்கு, சிறிய பாங்குகளின் இணைப்பை வரவேற்கின்றன. இப்படிச்

செய்வதால் சிறிய பாங்குகள் வலிமை பெறும். 1950-க்குமுன் ஒரு பாங்கு மற்றொன்றுடன் இணையவேண்டுமானால், அது தானாகக் கலைய (Voluntary liquidation) வேண்டும். 1950-இல் பாங்குக் கம்பெனிச் சட்டத்தை மாற்றியமைத்தனர். இதன்படி ஒரு பாங்கைக் கலைக்காமலே மற்றொன்றுடன் இணைக்கலாம். 1950-க்குப்பின் ஒரு சில பாங்குகள் மற்றப் பெரிய பாங்குகளுடன் சேர்ந்தன. ஆனால், இணைப்பு முறையை எல்லோரும் விரும்புவதில்லை. முக்கியமாகப் பாங்குகளின் நிருவாகக் குழுவிலிருக்கும் இயக்குநர்கள் (Directors) இதை விரும்புவதில்லை. அவர் தம் பாங்கு மற்றப் பாங்குகளுடன் சேர்வதால் அவர்கள் முக்கியத்துவத்தை இழக்க நேரிடும் என்று அஞ்சி, அவர்கள் இணைப்பை எதிர்க்கின்றனர். எனவே, ரிசர்வ் பாங்கு கட்டாயப்படுத்தினாலன்றிச் சிறிய பாங்குகள் இணைப்பை ஏற்றுக் கொள்ளமாட்டா. 1960-இல் பாங்குக் கம்பெனிச் சட்டத்திற்கு ஒரு திருத்தம் கொண்டுவந்தனர். இதன்படி, கட்டாயமாக இணைப்பு முறையை அமுலில் கொண்டுவர ரிசர்வ் பாங்கு அதிகாரம் பெற்றது. ஆனால், அதிகாரத்தைப் பயன்படுத்தாமல் சிறிய பாங்குகளை இணைப்பதே சிறந்த கொள்கையாகும்.

டெபாசிட்டு இன்சூரன்சுத் திட்டத்தை (Deposit Insurance scheme) இந்தியாவில் அமுலில் கொண்டு வந்தால் பாங்கு முறை நன்றாக வளரும். இந்தத் திட்டம் அமெரிக்காவில் நல்ல பயனளித்திருக்கின்றது. பொருளாதார மந்தத்தைத் தொடர்ந்து அமெரிக்காவில் பல பாங்குகள் கவிழ்ந்தன. 1933-இல் இயற்றிய சட்டம், பெடரல் டெபாசிட்டு இன்சூரன்சுக் கார்ப்பரேஷனை (Federal Deposit Insurance Corporation) உருவாக்கியது. இத்திட்டப்படி பாங்குகள் டெபாசிட்டுத் தொகையை இன்சூர் செய்தனர். இப்படிச் செய்வதால் பாங்கு மோசமான நிலையை அடைந்து கவிழ்ந்தாலும், டெபாசிட்டர்கள் தங்கள் பணத்தைத் திரும்பப் பெறுவதில் எந்த இடையூறும் இருக்காது. மேலும் டெபாசிட்டு இன்சூரன்சு கார்ப்பரேஷன், பாங்குகளுடைய தொழிலை உற்று நோக்கி அதன் முறைகளையும், சொத்து, பொறுப்பு முதலியவற்றையும் பரிசீலனை செய்துபார்க்கும். ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பும், இன்சூரன்சு டெபாசிட்டுக் கார்ப்பரேஷனுடைய மேற்பார்வையும் பாங்குகளின் வளர்ச்சிக்கு மிகச் சிறந்தவை. இந்த மேற்பார்வைக்கும் கண்காணிப்புக்கும் உட்பட்ட பாங்குகளுக்கு ஆபத்தும் தொல்லைகளும் ஏற்படமாட்டா. இந்த முறை, பாங்குகளின்வளர்ச்சியைத் தூண்டுவதுடன், டெபாசிட்டர்களுடைய நலன்களையும் சிறந்த வழியில் காப்பாற்றும். சிறந்த தொழில் முறையைப் பின்பற்றாத பாங்குகள் நாட்டிலிருக்க முடியாது. நல்ல முறையில் தொழில் செய்யாவிடில் எந்தப் பாங்கும் டெபாசிட்டுத் தொகையை

இன்சூரன்சு செய்யமுடியாது. ஆகையால், வலிவற்ற சிறிய பாங்குகள் தாமாகவே மறைந்துவிடும். டெபாசிட்டு இன்சூரன்ஸ் திட்டம் அமுலில் வந்தால், மக்கள் பாங்கு முறையில் நம்பிக்கை கொள்வர். அயல்நாட்டினரும் நமது பாங்குகளைப் பயன்படுத்திக் கொள்வர். மற்ற நாடுகளில் நாம் கிளைகளை ஆரம்பிக்கலாம். ஆகையால், இந்தியாவில் இத்திட்டத்தை அமுலில் கொண்டுவர வேண்டும். 1961-ஆம் ஆண்டின் இறுதியில் டெபாசிட்டு இன் சூரன்ஸ் திட்ட மசோதாவைச் சட்டசபை அங்கீகரித்தது. சிறிய பாங்குகளைப் பெரிய பாங்குகளுடன் இணைப்பதிலும் ரிசர்வ் பாங்கு ஊக்கமாக வேலை செய்துவருகின்றது. 1960-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் நாட்டில் 94 ஷெடியூல் பாங்குகள் இருந்தன. இந்த எண்ணிக்கை 1961-அக்டோபரில் 84-க்குக் குறைந்தது. இதிலிருந்து இணைப்பு வேலை எப்படி நடைபெற்றுக்கொண்டிருக் கின்றதென்பதை நாம் ஊகிக்கலாம்.

பாங்குகளுக்கு வலிமை கொடுக்க டெபாசிட்டு இன்சூரன்சு திட்டத்தையும் இணைப்பு முறையையும் தவிர, வேறு சில வழி களையும் ரிசர்வ் பாங்கு கையாளுகின்றது. பாங்குகளின் செலுத்திய மூலதனத்தை (Paid-up capital) அதிகரிக்க ஏற்பாடுகள் செய்யும். பாங்குகளின் சொத்துக்கள் இப்பொழுது இருப்பதைவிட மேலும் ரொக்கமாகக் கூடியதாக இருக்கவேண்டும்.

நமது பாங்குகள் கிராமங்களிலும் நாட்டுப்புறங்களிலும் பரவ வேண்டும். நமது பாங்குகள் விவசாயிகளுக்கு வேண்டிய அளவு உதவவில்லை. எனவே, அவர்கள் நிதியுதவிக்கு மற்றவர்களை நம்ப வேண்டியிருக்கின்றது. ஆகையால், ஸ்டேட் பாங்கின் கிளைகளை ஆரம்பம் செய்து ரிசர்வ் பாங்கின் சார்பில் அவற்றை விவசாயத் திற்கு வேண்டிய உதவியளிக்கும்படி செய்துவருகின்றனர். திட்டமிட்டபடி 1955-இலிருந்து ஸ்டேட் பாங்கு 400 கிளைகளைப் புதியதாக ஆரம்பித்துவிட்டது.

சிறுதொழில்களுக்கு வேண்டிய நிதியுதவி செய்ய பாங்குகள் முன்வரவேண்டும். மக்கள் பெருக்கம் அதிகமாகவும், வேலைவாய்ப் புக்கள் குறைவாகவும் இருக்கும் நம்நாட்டில் சிறு தொழில்கள் முன்னேறினால், வேலை வசதிகள் மிகுதியடையும். இத்தொழில்கள் தற்சமயம் வேண்டிய நிதியுதவியைச் சுதேச பாங்குதார்களிடம் அதிக வட்டி கொடுத்துப் பெறுகின்றனர். 1956-முதல் இதற்காகத் தயாரிக்கப்பட்ட திட்டமொன்று அமுலில் இருந்து வருகின்றது.

பாங்குகளின் வேலை செம்மையான முறையில் நடக்கவேண்டு மானுல், அதற்கு நல்ல தேர்ச்சிபெற்ற அனுபவம் வாய்ந்த ஊழியர்கள் தேவை. இந்திய பாங்குகளில் பணிபுரியும் ஊழியர் களுக்குத் தகுந்த பயிற்சியளிக்க ரிசர்வ் பாங்கு 1954-இல் ஒரு பயிற்சிக் கல்லூரியை (Bankers' Training College) ஆரம்பித்தது. இதைத் தவிர, பயிற்சிக் கூடங்களும் ஆரம்பமாக வேண்டும். பாங்கு வேலைகளையும், பின்பற்ற வேண்டிய முறைகளைப் பற்றியும் இந்தப் பயிற்சிக் கூடங்கள் ஊழியர்களுக்கு நல்ல அறிவு புகட்ட வேண்டும்.

இந்திய பாங்குகளின் நிருவாகச் செலவு அதிகமாக இருப்ப தால், மற்றத் தொழில்கள் பெறும் அளவு பாங்குகள் இலாபம் பெறுவ தில்லை. இலாபத்தைப் பெருக்குவதற்காகப் பாங்குகள் கொடுக்கும் கடனுக்கு வட்டியை உயர்த்துவது சரியல்ல. டெபாசிட்டுத் தொகைக்கு அவர்கள் கொடுக்கும் வட்டியைக் குறைக்கவும் முடியாது. ஆகையால், நிருவாகச் செலவைக் குறைக்கவேண்டும். மேல்நாடுகளைப்போல் கணக்கிடுவதற்கு இயந்திரங்களைப் பயன் படுத்தவேண்டும். இயந்திரமுறை கணக்குவைப்பு (Mechanised accounting) சிக்கனமானதுடன் விரைவில் வேலையைச் செய் வதற்கும் உதவும். ஆனுல், வேண்டிய இயந்திரங்களைப் பெறுவ தற்கு மிகுதியான செலவு செய்யவேண்டும். மேலும், பாங்குத் துறை அளிக்கும் வேலைவாய்ப்புக்கள் குன்றிவிடும். எனவே, பாங்கு ஊழியர்கள் இதை விரும்பமாட்டார்கள். ஆதலால், இந்த முறையைப் படிப்படியாக நம் நாட்டில் புகுத்த வேண்டும்.

—o—

## 2. ஸ்டேட் பாங்கு

1862-ஆம் ஆண்டு வரை மாநில பாங்குகளை அரசினர் நேரடியாகக் கண்காணித்து வந்தனர். மற்றப் பாங்குகளைப் போல் இந்தப் பாங்குகளும் 1862-வரை செலாவணித்தாள்களை அச்சிட்டன. 1866-இல் செலாவணித்தாள் நிருவாகத்தை அரசினர் மேற்கொண்டனர். இந்த மாநில பாங்குகள் அரசாங்கத்தின் சில கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருந்தன. இந்த மாநில பாங்குகள் பல கிளைகளைத் தொடங்கிய போதிலும், இவற்றுள் வேண்டிய அளவு தொடர்பு இல்லாததால் இந்தியாவிற்கு ஒரு பொதுப் பாங்கு வேண்டுமென்பதைப் பலர் உணர்ந்தனர். ஆனால், இதை அரசினர் ஆதரிக்கவில்லை. மாநில பாங்குகளை இணைக்கவேண்டுமென்று பலர் கருதினர். இந்தியாவிற்கு ஒரு மையப் பாங்கு வேண்டுமா என்பதை ஆலோசனை செய்ய ஒரு குழுவை நியமனம் செய்ய வேண்டுமென்று சேம்பர்லின் குழுவினர் 1913-இல் சிபாரிசு செய்தனர். இந்திய பாங்கு முறையின் குறைபாடுகளை 1913-இலிருந்து 1917-வரை ஏற்பட்ட நெருக்கடி விளக்கியது. தனித்தனியாக இயங்கும் பல பாங்குகளைக் கண்காணிக்க ஒரு பொதுப் பாங்கு தேவை என்பதைப் பலர் உணர்ந்தனர். அரசினரும் மாநில பாங்குகளும்கூட இந்தியாவிற்கு ஒரு பொதுப் பாங்கு வேண்டுமென்பதை உணர்ந்தனர். 1920-இல் மூன்று மாநில பாங்குகளையும் இணைத்து இம்பீரியல் பாங்கு ஏற்படுத்துவதற்காக ஒரு சட்டம் இயற்றினர்.

இச்சட்டப்படி 1921-ஆம் ஆண்டு இம்பீரியல் பாங்கை இந்தியாவில் நிறுவினர். மூன்று மாநில பாங்குகளையும் ஒன்று சேர்த்து இம்பீரியல் பாங்கை ஆரம்பித்தனர். 1955-இல் இந்த இம்பீரியல் பாங்கு ஸ்டேட் பாங்காக மாறியது. அதன் அனுமதிக்கப்பட்ட மூலதனம் $11\frac{1}{4}$ கோடி ரூபாய். இதில் $3\frac{3}{4}$ கோடி ரூபாய் முற்றிலும் செலுத்தப்பட்ட மூலதனம். அதன் காப்பு நிதி

6·07 கோடி ரூபாய். 1931-ஆம் ஆண்டு வரை இந்தப் பாங்கு கொடுத்த இலாப ஈவு 16 சதவீதமாக இருந்தது. 1931-இலிருந்து இது 12 சதவீதமாயும், 1946-இல் 14 சதவீதமாயும், பிறகு 16 சதவீதமாயும் மாறியது. பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய இடங்களில் வட்டாரக் குழுக்களை (Local Boards) அமைத்தனர். இம்பீரியல் பாங்கின் நிருவாகம் ஒரு மையக் குழுவினரிடம் ஒப்புவிக்கப்பட்டது. பாங்கின் நிருவாகத்திற்கு வேண்டிய துணை விதிகளை வகுத்தனர். மையக் குழுவினர் ஒரு நிருவாக இயக்குநரையும் (Managing Director), உதவி நிருவாக இயக்குநரையும் ஐந்தாண்டுக்காலத்திற்குத் தேர்ந்தெடுத்தனர். வேண்டுமென்றால் மீண்டும் ஐந்தாண்டுகளுக்கு இவர்கள் பணி நீடிக்கலாம். வட்டாரக் குழுக்களின் தலைவர்கள், உப தலைவர்கள் நிருவாக இயக்குநர், கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமனம் செய்யப்பட்ட இரண்டுக்கு மேற்படாத அங்கத்தினர்கள், ஒவ்வொரு வட்டாரக் குழுவும் தேர்ந்தெடுத்த அங்கத்தினர்கள், உதவி நிருவாக இயக்குநர், வட்டாரக் குழுவின் செயலாளர்கள், கவர்னர் ஜெனரல் நியமனம் செய்யும் அரசாங்க அலுவலர் ஒருவர் முதலியவர்கள் மையக் குழுவில் அங்கம் வகித்தனர். ஒவ்வொரு வட்டாரக் குழுவும் மையக் குழுவுக்கு ஓர் அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கும். கவர்னர் ஜெனரல் அவர்கள் நியமனம் செய்த அங்கத்தினர்கள் ஓராண்டுக்காலமே பணியாற்றலாம். ஆனால், அவர்களைக் கவர்னர் ஜெனரல் மீண்டும் நியமிக்கலாம். இக்குழுவை அடிக்கடி கூட்டுவது கடினமாக இருந்ததால், இதன் வேலையை ஒரு சிறிய குழுவினரிடம் ஒப்புவித்தனர். 1935-ஆம் ஆண்டு வரை அரசினர் சில மையக்குழு அங்கத்தினர்களைக் "கவர்னர்களாக" நியமனம் செய்தனர். பங்குதார்கள் தேர்ந்தெடுத்த கவர்னர்களும் இக்குழுவில் அங்கம் வகித்தனர்.

அரசினருக்கு இம்பீரியல் பாங்கு, வேண்டிய பாங்கு வசதியளித்தது. அவர்களுடைய தொகைகளை டெபாசிட்டாக ஏற்றுக்கொண்டது. அரசாங்கத்தின் சார்பில் இந்தப் பாங்கு செலுத்த வேண்டிய தொகைகளையெல்லாம் செலுத்தியதுடன், மக்களிடமிருந்து அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய தொகைகளையும் வசூல் செய்தது. அரசினர் நாட்டின் கடன் நிருவாகத்தையும் இதனிடம் ஒப்புவித்தனர். இந்தச் சலுகைகளை ஏற்றுக்கொண்டு இம்பீரியல் பாங்கு ஐந்து ஆண்டுகளுக்குள் 100 கிளைகளை நிறுவனம் செய்ய வேண்டும். 1926-க்குள் இந்தப் பாங்கு 100 கிளைகளை ஆரம்பித்து விட்டது. இது நாட்டின் பொதுப் பாங்காகப் பணியாற்றியதால், சில சட்டதிட்டங்களுக்குட்பட்டு வேலைசெய்தது. நாட்டின் நிதியைக்

காப்பற்றுவதும், பாங்கு வசதிகளைப் பெருக்குவதும் இச்சட்டங்களின் நோக்கங்களாகும். 1926-இல் ஹில்ட்டன் யங் குழுவினர் இந்தியாவில் ஒரு மையப் பாங்கு ஆரம்பிக்கவேண்டுமென்றும், இம்பீரியல் பாங்கை மையப் பாங்காகப் பயன்படுத்திக்கொள்வது சரியல்லவென்றும் முடிவு செய்தனர். 1935-இல் ரிசர்வ் பாங்கு தோன்றியபின் அது மையப் பாங்கின் பொறுப்புக்களை மேற்கொண்டதால், இந்தப் பாங்கு மற்றக் கூட்டுப்பங்குப் பாங்குகளைப் போலவே பணிபுரிய ஆரம்பித்தது. எனினும், இது மற்றப் பாங்குகளைவிட நம் நாட்டில் ஒரு முக்கியமான இடம் பெற்றிருந்தது.

நாட்டின் கூட்டுப்பங்குப் பாங்குகளுள் மிகப் பெரியது இம்பீரியல் பாங்கு. பாங்கு டெபாசிட்டுத் தொகையிலும், தொழிலிலும் ஒரு பெரிய பங்கு இதன் பொறுப்பிலிருந்தது. 1926-இல் இதன் கிளைகளின் எண்ணிக்கை நாணயமாற்றுப் பாங்குகளின் கிளைகளைப்போல் இரண்டு மடங்குகளுக்கு மேலிருந்தது. இவ்வளவு விரிவடைந்த தொழிலைக்கொண்ட இம்பீரியல் பாங்கு மற்றப் பாங்குகளுக்கு ஒரு வழிகாட்டியாக இருந்ததில் வியப்பொன்றுமில்லை. இது அரசாங்கத்துடன் கொண்ட தொடர்பும், அரசினர் நிதியைப் பயன்படுத்திய காரணமும், இதன் செல்வாக்கை உயர்த்தின. ஆரம்ப காலத்தில் இந்தச் செல்வாக்கு இதன் வளர்ச்சிக்குப் பேருதவியாக இருந்தது.

1935-வரை இம்பீரியல் பாங்கு மற்றச் சாதாரண கூட்டுப் பங்குப் பாங்காகப் பணிபுரிந்ததோடல்லாமல் நாட்டின் மையப் பாங்காகவும் இயங்கியது. அரசினருக்கு வேண்டிய பாங்கு வசதிகளையளித்தது. இதனுடன் மற்றப் பாங்குகளுக்கும் இந்த வசதிகளையளித்தது. அதாவது, இது மற்றப் பாங்குகளின் பாங்காகவும் (Bankers' Bank) இருந்தது. மற்றப் பாங்குகளுக்குப் பணம் செலுத்தும் வசதியை அளித்து, செக்குத் தீர்வகங்களையும் (Clearing Houses) ஏற்படுத்தியது. நாட்டில் பணம் அதிகமாகத் தேவைப்படும்பொழுது, இந்தப் பாங்கு அரசினரிடமிருந்து 12 கோடி ரூபாய் மதிப்புள்ள செலாவணித் தாள்களைப்பெற்றுப் பண மார்க்கட்டுக்கு (Money Market) உதவியளிக்கலாம்.

1920-ஆம் ஆண்டுச் சட்டப்படி இம்பீரியல் பாங்கு கீழ்க்கண்டவற்றை ஈடாகப் பெற்றுக் கொண்டு கடன் கொடுக்கலாம்: (1) அரசினர் உதவியைக்கொண்டு ஆரம்பித்த சில ரயில்வே கம்பெனியின் பத்திரங்கள் (2) சட்ட பூர்வமான மாவட்டக் கழகங்களின் பத்திரங்கள் (3) பொருள்கள் (4) முற்றிலும், செலுத்தப்பட்ட (Fully paid-up) டிபஞ்சர்களும் (debentures)

பங்குகளும் (shares) (5) உண்டியல்கள். 1935-வரை இந்தப் பாங்கு சாதாரண பாங்குத் தொழிலையும் மையப் பாங்குத் தொழிலையும் மேற்கொண்டது வியக்கத்தக்கதாகும். ஏனெனில், அமைப்பிலும், நோக்கங்களிலும் இவ்விரண்டு பாங்குகளுக்கும் வேறுபாடுகள் உண்டு. சாதாரண கூட்டுப்பங்குப் பாங்குகள் இலாப நோக்குடன் வேலைசெய்வது இயற்கை. ஆனால், மையப் பாங்கு நாட்டின் நலனைக் காப்பதற்காக அமைந்துள்ளது. மேலும், சாதாரண கூட்டுப்பங்குப் பாங்குகளைக் கண்காணித்து, அரசாங்கத்தின் செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்துவது மையப் பாங்கின் முக்கியமான பொறுப்பாகும். பொருளாதார வீக்க காலத்தில் (Boom) வட்டியை உயர்த்த வேண்டும்; மந்த காலத்தில் (depression) வட்டியைக் குறைத்தல் வேண்டும். ஆனால், இப்படிச் செய்தால் இலாபம் குன்றுமென்று சாதாரண பாங்குகள் பொருளாதார வீக்கத்தையும் மந்தத்தையும் கட்டுப்பாடுசெய்ய முன்வராது. மேலும், கூட்டுப்பங்குப் பாங்குகளின் பணத்தை டெபாசிட்டாக மையப் பாங்கு பெற்றுக்கொள்ளும். ஆகையால், சாதாரண பாங்குத் தொழில் செய்யும்பொழுது மற்றப் பாங்குகளுடன் மையப் பாங்கு போட்டியிடுவது சரியல்ல.

இந்தப் பாங்கின் பொறுப்புக்களையும் (Liabilities), சொத்துக்களையும் (Assets) கவனித்தால் பொறுப்புக்களில் மிக முக்கியமானது டெபாசிட்டுத் தொகை என்பது தெளிவாகத் தெரியும். அரசினரிடமும், மற்றத் தனிப்பட்டவர்களிடமும், டெபாசிட்டுத் தொகையைப் பெற்றுக்கொள்ளும். பத்திர முதலீடு (Investments), கடன், ரொக்கக் கடன் (Cash credit) உண்டியல்கள், ரிசர்வ் பாங்கில் வைத்திருக்கும் ரொக்கம் முதலியன இதன் முக்கியமான சொத்துக்களாகும். இந்தப் பாங்கை நிறுவனம் செய்யும்பொழுது இது பல கிளைகளுடன் நாடெங்கும் மக்களுக்கும் அரசினருக்கும் வேண்டிய பாங்கு வசதிகளையளிக்கும் என்று எதிர்பார்த்தனர். மற்றப் பாங்குகளை விட இதற்கு அதிக வசதிகளுண்டு. ஆகையால், உள்நாட்டு வர்த்தகத்திற்கு இது நிதியுதவி செய்யலாம். தன்னிடமுள்ள நிதியைத் தாராளமாக உண்டியல்களைத் தள்ளுபடிசெய்யப் பயன்படுத்தலாம். விவசாயத்திற்கும், வர்த்தகத்திற்கும் நிதியளிப்பதில் மற்றப் பாங்குகளுக்கும் இது வேண்டிய உதவி செய்யலாம். இந்தியாவில் தற்காலத்திய பாங்கு முறையை வளர்ப்பதில் இது ஒரு வழிகாட்டியாக இருக்கும். ஏராளமான நிதியைக் கொண்டதால் இது பணமார்க்கட்டுக்கு (Money market) அவ்வப்பொழுது வேண்டிய உதவியளிக்கலாம். அரசினர் சிறிது காலம் சென்றபின் செலாவணித்தாள் நிருவாகத்தையும் இதனிடம் ஒப்புவிக்கலாமென்று முடிவு செய்திருந்தனர். அப்படிச் செய்தால் இந்தியச்

செலாவணி முறை எளிமையையும், நெகிழ்ச்சியையும் பெறு மென்று எதிர்பார்த்தனர்.

அரசினரும் மக்களும் எதிர்பார்த்தபடியே, இந்தப் பாங்கு நல்ல முறையில் நாட்டிற்குப் பணிபுரிந்தது. 1920-இல் 70 கிளைகளைக் கொண்ட இந்தப் பாங்கின் தொழில் 1928-க்குள் கணிசமான அளவில் விரிவடைந்தது. 1928-இல் இதன் மொத்தக் கிளைகள் 202. 1945-இல் கிளைகளின் எண்ணிக்கை 433 ஆகிவிட்டது. இதன் சொத்துக்கள் மையப் பாங்கின் சொத்துக்களைப்போல் ரொக்க நிலை (liquid) யுடனிருந்தன. இந்தப் பாங்கு, தள்ளுபடி வீதத்தைக் (rate of discounting) குறைத்ததால், சுதேச பாங்கு களும் குறைக்கவேண்டியதாயிற்று. ஆனால், சுதேச பாங்குகள் தாங்கள் கொடுக்கும் கடனுக்கு அதிக வட்டி வசூல் செய்ய முடிந்தது. ஏனெனில், இம்பீரியல் பாங்கு இவற்றுடன் போட்டி யிடவோ, இவற்றின் தொழிலைக் குறைக்கவோ முடியாது. சுதேச பாங்குகளும், இம்பீரியல் பாங்கும் செய்யும் தொழில் முறை வேறுபட்டிருந்ததால் வட்டிவீதம் குறையவில்லை. ஆனால், மற்றக் கூட்டுப்பங்குப் பாங்குகளுடன் இது போட்டியிட்டது. பணத்தை ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குக் குறைந்த செலவில் அனுப்புவதற்கு வேண்டிய வசதிகளை அளித்தது.

பாங்குத் தொழிலைச் சிறந்த முறையில் நடத்துவதில் வழிகாட்டி யாக இருந்ததோடல்லாமல், மற்றப் பாங்குகளுக்கு வேண்டிய உதவியையும் அவ்வப்போது அளித்தது. உதாரணமாக, டாடா இண்டஸ்ட்ரியல் பாங்கு, பெங்கால் நேஷனல் பாங்கு, இந்தியா வின் சென்ட்ரல் பாங்கு (Central Bank of India) முதலிய வற்றிற்கு நெருக்கடியான நிலையில் வேண்டிய உதவியளித்தது. கூட்டுப்பங்குப் பாங்குகளுக்கும், நாணயமாற்றுப் பாங்குகளுக்கும் நிதியுதவியளித்தது. ஆனால், இது மற்றப் பாங்குகளுடன் கடுமை யாகப் போட்டியிடுமென்று பலர் அஞ்சினர். ஆகையால், கூட்டுப்பங்குப் பாங்குகள் இதன் நிறுவனத்தையும் தொழில் பெருக்கத்தையும் விரும்பவில்லை. அலகாபாத் பாங்கு ஹில்ட்டன் குழுவினரிடம் இம்பீரியல் பாங்கின் போட்டியைப்பற்றி எடுத் துரைத்தது. இந்தப் போட்டி நேர்மையற்றதென்று வாதாடியது. ஆனால், இம்பீரியல் பாங்கு, மற்றப் பாங்குகளைவிட டெபாசிட்டர் களுக்குக் குறைந்த வட்டி வீதமே கொடுத்தது. இதை நேர்மை யற்ற போட்டியென்பது தவறு. மக்கள் இந்தப் பாங்கிடம் கொண்ட நம்பிக்கையே இது குறைந்த வட்டியுடன் அதிக டெபா சிட்டுத் தொகையை ஈர்த்ததற்குக் காரணமாகும். அரசாங்கத்தின் தொகைகளை டெபாசிட்டாகக் கொண்ட காரணத்தால் இம்பீரியல்

பாங்கு வட்டியைக் குறைத்துத் தொழிலைப் பெருக்கி, அதிக இலாபமடைந்ததென்று குறைகூறினர். இக்கூற்றும் உண்மை யானதல்ல. ஏனெனில், அரசாங்கத்தின் டெபாசிட்டுத் தொகை யைவிட மக்களிடமிருந்து பெற்ற தொகையே அதிகமாக இருந்தது. மேலும், பாங்கு வசதியே இல்லாத பல இடங்களில், இம்பீரியல் பாங்கு கிளைகளை நிறுவியதால், இந்த இடங்களில் எந்த விதப் போட்டியும் இல்லை. மேலும், இந்தப் பாங்கு அரசினர் விதித்த பல கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருந்ததுடன், அரசாங்கத்துக்குச் செய்த பணிகளுக்காக ஊதியம் பெறவில்லை. இம்பீரியல் பாங்கு மிகுதியான இலாபத்தைப் பெற்றது உண்மையே. இதற்கு, இது மக்கள் நம்பிக்கையைப் பெற்றுக் குறைந்த வட்டியில் அதிகமான டெபாசிட்டுத் தொகையைப் பெற்றதே முக்கியமான காரணமாகும். இது மிகுதியான அளவில் நடைமுறை டெபாசிட்டை பெற்றது. இந்த நடைமுறை டெபாசிட்டுக்கு வட்டி கொடுக்கவில்லை.

இம்பீரியல் பாங்கின் போட்டியைப்பற்றிக் குறைகூறிய பாங்குகள் இந்தியன் பாங்கு, அலகாபாத் பாங்கு, பஞ்சாப் நேஷனல் பாங்கு முதலியன. இவை ஒரு சில பகுதிகளிலேயே தங்கள் தொழிலை நடத்தின. நாடெங்கும் இம்பீரியல் பாங்கு போலவே கிளைகளை அமைத்துத் தொழில் நடத்திய செண்ட்ரல் பாங்கை விட இந்தப் பாங்குகள் அதிக இலாபமடைந்தன.

ஆனால், நாளடைவில் இந்த நிலை மாறி, இம்பீரியல் பாங்கு மற்றப் பாங்குகளின் தலைமை பாங்காக வளர்ச்சிபெற்றது. இவ் வளர்ச்சி விரைவில் ஏற்படாததற்குக் காரணமுண்டு. மற்றப் பாங்குகள் இதன் உதவியை நாடுவது தம் வலிமையற்ற தன்மையைக் காட்டுமென்று அஞ்சின. ஆனால், இந்த அச்சம் நாளடைவில் மறைந்தது. இதன் உதவியை வேண்டும்பொழு தெல்லாம் நாடியதுடனல்லாமல், பல பாங்குகள் இதனிடம் டெபா சிட்டுத் தொகைகளை வைத்திருந்தன. இப்படி இம்பீரியல் பாங்கில் டெபாசிட்டுத் தொகை வைத்திருப்பது, அவர்கள் தொழிலில் நல்ல பயனையளித்தது. ரிசர்வ் பாங்கு தோன்றிய பின்பும் இம்பீரியல் பாங்கு, நாட்டின் பாங்குத் தொழில் துறையில் ஒரு சிறந்த இடம் பெற்றிருந்தது. அரசினரின் டெபாசிட்டுத் தொகையை ரிசர்வ் பாங்குக்கு மாற்றியபோதிலும், இதன் மொத்த டெபாசிட்டுத் தொகை குன்றவில்லை. ரிசர்வ் பாங்குக்கும் பணமார்க்கட்டுக்கும் ஒரு தொடர்பை இந்தப் பாங்கு ஏற்படுத்துகிறது. இதைப் பின் வரும் அதிகாரத்தில் பார்ப்போம்.

மையப் பாங்கின் பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டு இயங்கிய இம்பீரியல் பாங்கை இந்தியாவின் மையப் பாங்காக அங்கீகாரம்

செய்யாமல், ரிசர்வ் பாங்கு என்ற ஒரு புதிய பாங்கை அரசினர் ஏன் அமைத்தனர் என்பதை இங்குக் காண்போம். இம்பீரியல் பாங்கு ஒரு கூட்டுப்பங்குப் பாங்காகச் சிறந்த பணி ஆற்றிவந்தது. மையப் பாங்குக்கும் கூட்டுப்பாங்குக்கும் நோக்கங்களில் வேறுபாடுண்டு. இம்பீரியல் பாங்கு, கூட்டுப்பங்குப் பாங்குகளின் அலுவல்களை விட்டுக்கொடுக்காமல் மையப் பாங்காகப் பணி புரிய முடியாது. மையப் பாங்கின் சொத்துக்கள் ரொக்க நிலையுடையதாக இருத்தல் வேண்டும். ஆனால், சாதாரண பாங்குகள் சொத்துக்களை ரொக்க நிலையில் வைத்திருந்தால் இலாபமடைய முடியாது. சாதாரண பாங்குகள் மக்களிடம் டெபாசிட்டுத் தொகையைப் பெற்றுக்கொள்ளாமல் பணியாற்றமுடியாது.

மேலும், மற்றப் பாங்குகள் நெருக்கடியான சந்தர்ப்பங்களில் மையப் பாங்கின் உதவியை நாடுவது இயற்கை. இந்தச் சமயங்களில் இம்பீரியல் பாங்கு வேண்டிய உதவியளிக்க முடியாத நிலையிலிருக்கலாம். டெபாசிட்டர்களுக்கு இம்பீரியல் பாங்கு இந்தச் சந்தர்ப்பங்களில் வேண்டிய தொகையை மீட்கவேண்டும். மற்றப் பாங்குகளுக்கு நிதியுதவி அளிக்க முடியுமென்று சொல்ல முடியாது. மற்றப் பாங்குகளுடன் போட்டியிடும் நிலையிலுள்ள இந்தப் பாங்கு, மையப் பாங்கின் பணிகளைச் செம்மையான முறையில் செய்ய முடியாது. அரசாங்கத்தின் நிதியை நிருவாகம் செய்யும் பாங்கு, சாதாரண பாங்குகளின் பணிகளை மேற்கொள்ளக்கூடாது. இம்பீரியல் பாங்கு வெளியீட்டுத்துறை (Issue Department), பாங்குத் துறை (Banking Department) என்று இரண்டு துறைகளை ஏற்படுத்தி, மையப் பாங்கின் பொறுப்புக்களை வெளியீட்டுத் துறையும், சாதாரண பாங்கு வேலையைப் பாங்குத் துறையும் மேற்கொள்ளும்படி செய்யலாமென்று சிலர் கருதினர். இப்படிச் செய்வதால் மையப் பாங்குக்கு வேண்டிய தகுதியை இம்பீரியல் பாங்கு பெற்றுவிடாது. மையப் பாங்காகச் சிறந்த முறையில் பணியாற்றவேண்டுமானால், இந்தப் பாங்கு சாதாரண பாங்கின் பொறுப்புக்களைக் கைவிடவேண்டும். பல கிளைகளுடன் சிறந்த முறையில் நாட்டுக்குத் தொண்டாற்றும் இந்தப் பாங்கு, தன் பணிகளை விட்டுக்கொடுத்தல் சரியல்ல. இப்படிச் செய்தால் இதன் பொறுப்புக்களை, மற்றப் பாங்குகள் ஏற்றுக்கொள்ள பல நாள் செல்லும். ஆகையால், அரசினர் ரிசர்வ் பாங்கை நிறுவினர்.

இம்பீரியல் பாங்குக்குச் சென்னை, கல்கத்தா, பம்பாய் முதலிய இடங்களில் தலைமை அலுவலகங்கள் இருந்தன. ஆகையால், அதன் நிருவாகச் செலவு அதிகமாக இருந்தது. இதன் நிருவாகம் பெரும்பாலும் ஐரோப்பியர்களிடம் இருந்ததால், ஐரோப்பியர்

களுக்குச் சிறப்பான சலுகைகள் காட்டினர். ஆகையால், இந்திய மக்கள் இதன் மூலம் வேண்டிய அளவு பயனடையவில்லை. நாணய மாற்றுப் பாங்குகளுடன் நெருங்கிய தொடர்புகொண்டு, அவற்றிற்குக் கூட்டுப்பங்குப் பாங்குகளைவிட அதிகச் சலுகை அளித்தது. நாணயமாற்றுப் பாங்குகளையும் பெரும்பாலும் ஐரோப்பியர்களே நிருவாகம் செய்துவந்தனர். அதன் சொத்துக் களில் ரொக்கக்கடன் மிகுதியடைந்தது. உண்டியல்கள் வேண்டிய அளவு அதிகரிக்கவில்லை. பாங்கு முறையும், பாங்குப் பழக்கமும் நாட்டில் முன்னேறுவதற்கு ஓர் உண்டியல் மார்க்கட்டு (Bill Market) இன்றியமையாதது. உண்டியல் மார்க்கட்டு பெருக வேண்டிய ஏற்பாடுகளை இம்பீரியல் பாங்கு செய்யவில்லை. உண்டியல் மார்க்கட்டு வளர்ச்சி பெற்ருல் நாட்டின் வர்த்தகம் செழிக்கும்.

1934-க்குப் பின் இம்பீரியல் பாங்கு அரசினர் பாங்காகப் பணிபுரியவில்லை. இதன் நிருவாகத்தில் அரசினர் கொண்ட பங்கு மறைந்தது. ஆயினும், அரசாங்கம் இதனுடன் கொண்ட தொடர்பை முற்றிலும் கைவிடவில்லை. நாட்டிலுள்ள பாங்குகளில் முதன்மை இடம்பெற்ற இந்தப் பாங்குடன் அரசினர் ஓரளவு தொடர்புகொள்ள விரும்பியது இயற்கை. 1934-க்குப்பின் இதற்குக் கொடுத்த சிறப்புச் சலுகைகள் நீடிக்கவில்லை. நிறு வனம் செய்யும்பொழுது ஏற்படுத்திய கட்டுப்பாடுகளையும் தளர்த் தினர். ஆகையால், இந்தப் பாங்கு நாணயமாற்றுத் தொழிலை (Foreign Exchange business) மேற்கொள்ளலாம். அன்னிய நாடுகளில் கிளைகளையும் ஆரம்பிக்கலாம். கடனுக்கு ஈடாக அசையாப் பொருள்களையும் மற்றப் பொருள்களையும் பெற்றுக் கொள்ளலாம். இவை பற்றிய கட்டுப்பாடுகள் மறைந்தன. நகர சபைகள் வெளியிடும் பத்திரங்களை ஈடாகப் பெற்றுக் கொள்ளலாம். ரிசர்வ் பாங்கின் சார்பில் அந்தப் பாங்கு இல்லாத இடங்களில் இம்பீரியல் பாங்கு பணியாற்றலாம் என்று முடிவு செய்தனர்.

இம்பீரியல் பாங்கு நாட்டிற்குச் சிறந்த முறையில் தொண்டாற்ற, அதன் நிருவாகத்தில் சில சீர்திருத்தங்கள் வேண்டியிருந்தன. நிருவாகச் செலவு குறைய வேண்டும். இந்தியர்களையே உயர்ந்த பதவிகளில் நியமனம் செய்யவேண்டும். ஐரோப்பிய வர்த்தக நிலையங்களுக்குச் சிறப்பான சலுகைகள் காட்டக்கூடாது. உண்டியல் மார்க்கட்டை வளர்க்கவேண்டும். விவசாயப் பொருள் களை ஈடாக ஏற்றுக்கொண்டு கடனளிக்கவேண்டும். கூட்டுறவுப் பாங்குகளுக்குக் கடன்வசதி அளிக்கவேண்டும். அயல்நாட்டு வாணிகத்திற்கு வேண்டிய நிதியளிக்கவேண்டும். பொன், வெள்ளி

உலோகங்களை ஏற்றுக்கொண்டு, கடன் வசதியளிக்க வேண்டும். ஜெர்மனிய பாங்குகளைப்போல் தொழில்களுக்கு ஓரளவு நிதியுதவி செய்யவேண்டும்.

**ஸ்டேட் பாங்கு**

நம் நாடு விடுதலையடைந்தவுடன் இம்பீரியல் பாங்கை நாட்டுடைமையாக்க (nationalise) முடிவுசெய்தனர். அதாவது, பங்குதாரர்களுக்கு ஈடு கொடுத்துவிட்டு, பாங்கின் நிருவாகத்தை அரசினரே ஏற்றுக்கொள்ள முன்வந்தனர். ஆனால், பாகிஸ்தான், பர்மா, சிலோன் முதலிய இடங்களில் இதன் கிளைகள் இருந்ததால், இதன் நிருவாகத்தை அரசினர் ஏற்றுக்கொள்வதில் சில சிக்கல்களிருந்தன. பாங்கின் நிருவாகக் குழுவினர் அதை நாட்டுடைமையாக்கக் கூடாதென்று முறையிட்டனர். அனுபவம் பெற்ற அலுவலர்களும், நிருவாகக் குழுவினரும் பாங்கைச் சிறந்த முறையில் கண்காணித்து வந்தனர். ஆனால், அரசினர் கண்காணிப்பில் அது சிறந்த முறையில் தொண்டாற்றுமென்று சொல்ல முடியாது. இந்தியாவிலுள்ள கூட்டுப்பங்குப் பாங்குகளில் இம்பீரியல் பாங்கு தலை சிறந்தது; பாகிஸ்தான், பர்மா, சிலோன் முதலிய நாடுகளில் கிளைகள் கொண்டது. இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியுதவி செய்யும் வலிமைபெற்ற ஒரே பாங்காகிய இம்பீரியல் பாங்கின் நிருவாகத்தை அரசினர் ஏற்றுக்கொள்வது நல்லதல்ல என்று வாதாடினர். இம்பீரியல் பாங்கைச் சிக்கனமான முறையில் நிருவாகம் செய்தனர். மக்களுடைய நம்பிக்கையும் நல்லெண்ணமுமே இதற்குக் காரணம். ரிசர்வ் பாங்கின் பதிலியாகப் பணியாற்ருவிடினும், அரசாங்கத்தின் டெபாசிட்டுத் தொகையைப் பெருவிடினும், இது மற்றப் பாங்குகளைவிடச் சிறந்த முறையில் மக்களுக்குப் பணிபுரிய முடியும். ரிசர்வ் பாங்கின் பதிலியாக அரசினர் நிதியைப் பெற்றுக்கொள்ளும் சலுகையை விட்டுக் கொடுக்கவும் இந்தப் பாங்கு தயாராக இருந்தது. ஆகையால், இதன் நிருவாகத்தை அரசினர் ஏற்றுக்கொள்ளக் கூடாதென்று நிருவாகக் குழுவினரும், பங்குதாரர்களும் முறையிட்டனர்.

ஆனால், 1949-இல் அரசினர் உடனடியாக இந்தப் பாங்கின் நிருவாகத்தை ஏற்றுக்கொள்ளவேண்டாமென்று முடிவு செய்தனர். இதன் நிருவாகம் பெரும்பாலும் ஐரோப்பியர் வசமே இருந்ததாலும், இது அன்னியர்களுக்குச் சில சிறப்புச் சலுகைகள் காட்டியதாலும் மக்கள் இதை வெறுத்தனர். இதன் நிருவாகத்தை அரசினர் ஏற்றுக்கொள்வதை வரவேற்றனர். ஆனால், 1947-க்குப்பிறகு

நாளடைவில் இந்த நிலைமை மாறியது. படிப்படியாக இந்தியர்களை உயர்ந்த பதவிகளில் நியமனம் செய்தனர். அன்னியர்களுக்குக் காட்டும் சலுகை குறைந்துவிட்டது. கிராமாந்தர பாங்கு விசாரணைக் குழு (Rural Banking Enquiry committee) இதன் முன்னேற்றத்திற்கான சில சீர்த்திருத்தங்களைச் சிபாரிசு செய்தது. இது நடெங்கும்பல கிளைகளை ஆரம்பிக்கவேண்டும். ரிசர்வ் பாங்கு இல்லாத இடங்களில் இம்பீரியல் பாங்கு அதன் பதலியாகப் பணியாற்ற வேண்டும். அரசினர் இந்தப் பாங்குடன் கொண்ட தொடர்பின்காரணமாக இதைச் சில கட்டுப்பாடுகளுக்குட் படுத்தலாம்.

ஆனால், அதிகமான கிளைகளை எதிர்பார்த்தபடி இந்தப் பாங்கு ஆரம்பிக்கவில்லை. புதிய கிளைகள் இதன் அடக்கச் செலவை அதிகரிக்கும். ஆகையால், இலாபம் குன்றும். ஆனால், நமது கிராமங்களிலும் சிற்றூர்களிலும் வாழும் மக்களுக்குப் பாங்கு வசதியளிக்க வேண்டும். இலாப நோக்கத்துடன் வேலைசெய்யும் இம்பீரியல் பாங்கு, வேண்டிய இடங்களில் கிளைகளை ஆரம்பித்துப் பாங்கு வசதிகளைக் கிராமாந்தர மக்களுக்கு அளிக்குமென்று எதிர்பார்க்க முடியாது. ஆகையால், இதன் நிருவாகப் பொறுப்பை அரசினரே எடுத்துக்கொள்ளவேண்டுமென்று அகில இந்தியக் கிராமாந்தர கடன் விசாரணைக் குழுவினர் (All India Rural Credit Survey.) வற்புறுத்தினர். இதன் சிபாரிசுகளை 1954-ஆம் ஆண்டு வெளியிட்டனர். அரசினர் இந்தச் சிபாரிசுகளை ஏற்றுக்கொண்டு 1955-இல், ஸ்டேட் பாங்குச் சட்டத்தை (State Bank of India Act) இயற்றினர். இம்பீரியல் பாங்கு அரசினர் பாங்காக மாறியது.

1955-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதி ஸ்டேட் பாங்கு தோன்றியது. இதன் அனுமதிக்கப்பட்ட மூலதனம் 20 கோடி ரூபாய். வெளியிட்ட மூலதனமாகிய 5·625 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பங்குகளை, ரிசர்வ் பாங்குக்குக் கொடுத்தனர். முற்றிலும் செலுத்தப்பட்ட பங்குகளுக்கு (Fully paid-up shares) ரூ. 1,765-10-0 என்ற வீதத்திலும், ஒரு பகுதி செலுத்தப்பட்ட பங்குகளுக்கு (Partly paid-up shares) ரூ. 431-12-4 என்ற வீதத்திலும் ஈடு கொடுத்தனர். வெளியிட்ட மூலதனத்தை மைய நிருவாகக் குழு அதிகமாக்கலாம். ஆனால், மொத்தப் பங்கில் 55 சதவீதத்துக்குக் குறையாமல் ரிசர்வ் பாங்கு வசம் இருக்கவேண்டும். 12·5 கோடிக்கு மேல் வெளியிட்ட மூலதனத்தை அதிகமாக்க அரசினர் உத்தரவு வேண்டும். அரசினர் அனுமதியுடன் ஸ்டேட் பாங்கு மற்ற அரசாங்கத் தொடர்புகொண்ட பாங்குகளை அதன் நிருவாகத்தின்கீழ்க் கொண்டு வரலாம். இதன் தலைமை

அலுவலகம் பம்பாயில் இருக்கின்றது. இதைத்தவிர, சென்னையிலும், கல்கத்தாவிலும் வட்டார அலுவலகங்கள் உள. ஐந்தாண்டுகளுக்குள் இந்தப் பாங்கு 400 புதிய கிளைகளை ஆரம்பிக்கவேண்டும். ரிசர்வ் பாங்கு அனுமதியின்றி ஒரு கிளையையும் மூடக்கூடாது.

இதன் நிருவாகக் குழுவில் ஆறு அங்கத்தினர்களை ரிசர்வ் பாங்கைத் தவிர மற்றப் பங்குதார்கள் தேர்ந்தெடுப்பார்கள். முதன் முதலில் அரசினர் ஆறு அங்கத்தினர்களையும் நியமனம் செய்தனர். குழுவின் தலைவரையும் (Chairman), துணைத் தலைவரையும் (Vice Chairman) அரசினர் நியமனம் செய்வார்கள். இரண்டுக்கு மேற்படாத நிருவாக இயக்குநர்களையும், எட்டு இயக்குநர்களையும் அரசினர் நியமனம் செய்வர். இவர்கள் நாட்டின் பல பகுதிகளின் சார்பில் பணியாற்றுவார்கள். இவர்கள் கூட்டுறவு, வாணிகம், தொழில் முதலியவற்றின் நலன்களையும் தேவைகளையும் மனத்தில் கொண்டு, பணியாற்ற வேண்டும். தலைவர், துணைத்தலைவர், நிருவாக இயக்குநர்கள் முதலியவர்களைக் குறிப்பிட்ட காலத்துக்கே பணியாற்ற நியமித்தனர். இதைத் தவிர, வட்டார அலுவலகங்கள் இருக்கும் இடங்களில் வட்டாரக் குழுக்களும் அமைக்கப்படலாம். மையக்குழுவின் கட்டளைகளை நிறைவேற்றுவதே வட்டாரக் குழுவின் பணியாகும். மற்றப் பாங்குகளின் நிருவாகக்குழுவில் அங்கம் வகிப்பவர்களும், அரசாங்க அலுவலர்களும், ஸ்டேட் பாங்கின் நிருவாகக் குழுவிலும் வட்டாரக் குழுவிலும் அங்கத்தினராயிருக்க முடியாது.

இந்திய அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பணத்தை வசூல் செய்தல், அவர்கள் சார்பில் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்துதல், அரசாங்க டெபாசிட்டுத் தொகையை ஏற்றுக் கொள்ளுதல் முதலிய அலுவல்களை இந்தப் பாங்கு, ரிசர்வ் பாங்கு இல்லாத இடங்களில் செய்யும். அதாவது, ரிசர்வ் பாங்கின் பதிலியாகப் பணியாற்ற வேண்டும். மற்றப் பாங்குகளைப் போல் பத்திரங்கள், பங்குகள், டிபஞ்சர்கள், பொருள்கள், உண்டியல்கள் முதலியவற்றை அடைமானமாகப் பெற்றுக்கொண்டு கடன் கொடுக்கலாம். சில குறிப்பிட்ட டிபஞ்சர்கள், பத்திரங்கள் முதலியவற்றையே அடைமானமாகப் பெற்றுக்கொள்ளலாம். பொன், வெள்ளி உலோகங்களை வாங்கவும், விற்கவும் செய்யலாம். டெபாசிட்டுத் தொகையையும், பத்திரங்கள், நகை முதலிய பொருள்களையும் (பத்திரமாக வைத்துக்கொள்வதற்காக) மக்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். சாதாரணமாகக் கூட்டுப்பங்குப் பாங்குகள் மேற்கொள்ளும் மற்ற அலுவல்களையும், பொறுப்புக்களையும் ஸ்டேட் பாங்கு மேற்கொள்ளலாம். ரிசர்வ் பாங்கின் பங்குகளுக்குக்

கிடைக்கும் இலாபத்தை ஒரு புதிய நிதியில் (Integration and Development Fund) சேர்த்து அதைப் பாங்கு அடையும் நஷ்டத்தை ஈடு செய்வதற்காகப் பயன்படுத்தவேண்டுமென்று சட்டத்தில் கண்டிருந்தது.

பாங்கின் அன்றாட வேலையில் அரசினர் தலையிடாரென்று நிதி மந்திரி உறுதிமொழி கூறியிருக்கின்றார். மேலும், மற்றப் பாங்குகளைப்போல் சிக்கனமாகவும், இலாப நோக்கத்துடன் ஸ்டேட் பாங்கு வேலை செய்யவேண்டுமென்று கருதினர். எவரும் தம் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி, இந்தப் பாங்கின் வேலையில் தலையிடாமல் இருக்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். சட்ட சபை அங்கத்தினர்கள் இதன் நிருவாகக் குழுவில் அங்கம் வகிக்க முடியாது. அரசினர் ரிசர்வ் பாங்கு மூலமே இந்தப் பாங்குக்கு தம் ஆணைகளை அனுப்பும். ஸ்டேட் பாங்கு நிறுவனம் செய்ததிலிருந்து இதுகாறும் சிறந்த முறையில் தொண்டாற்றியிருக்கின்றது. அரசினர் தலையீட்டால் இதன் கொள்கையும், போக்கும் எந்த விதத்திலும் பாதிக்கப்படவில்லை. மற்றப் பாங்குகளுக்கு உதவியளிப்பதிலும், கிளைகளைப் பெருக்கி எதிர்காலத்தில் விவசாயத்துக்கு வேண்டிய உதவி செய்வதிலும், எதிர்பார்த்தபடி சிறந்த முறையில் வேலை செய்யும் என்பதில் ஐயமேதுமில்லை. இதன் நிருவாகத்தை அரசினர் மேற்கொண்டதால், இது எந்த விதத்திலும் தன் வலிமையை இழக்கவில்லை.

அகில இந்திய கிராமாந்தர விசாரணைக் குழுவினர் அரசினருடன் தொடர்புகொண்ட மற்றப் பாங்குகளை ஸ்டேட் பாங்குடன் இணைக்கவேண்டுமென்று சிபாரிசு செய்தனர். இதுபற்றிய மசோதா ஒன்றை (ஸ்டேட் பாங்குத் துணைப்பாங்குகள் சட்டம்) 1959-இல் இயற்றினர். பிக்கானிர் பாங்கு (The Bank of Bikaner), இந்தூர் பாங்கு (The Bank of Indore), ஜெய்ப்பூர் பாங்கு (The Bank of Jaipur), மைசூர் பாங்கு (The Bank of Mysore), திருவாங்கூர் பாங்கு (The Travancore Bank), ஹைதராபாத் ஸ்டேட் பாங்கு (The State Bank of Hyderabad), பாட்டியாலா பாங்கு (The Bank of Patiala), சௌராஷ்டிரா பாங்கு (The Bank of Saurashtra) முதலிய எட்டுப் பாங்குகள் இந்தச் சட்டத்திற்குட்பட்டன.

ரிசர்வ் பாங்கு 1957-இல் ஒரு குழுவை நிறுவி, ஸ்டேட் பாங்கு, கூட்டுறவுப் பாங்குகளுக்கும் விவசாயத்துக்கும் நிதியுதவி அளிப்பதைப் பரிசீலனைசெய்ய ஏற்பாடு செய்தது. குழுவின் சிபாரிசுகளையொட்டி, ஸ்டேட் பாங்கு சில பத்திரங்களை ஏற்றுக்கொண்டு

கடனுதவியளிக்கின்றது. நில அடைமானப் பாங்குகளின் டிபஞ்சர்களையும் ஏற்றுக்கொள்கின்றது. ஸ்டேட் பாங்கு, கூட்டுறவுப் பாங்குகளுக்குப் பணம் செலுத்துவற்கு வேண்டிய வசதிகளையும் அளிக்கின்றது.

1957-இல் ஸ்டேட் பாங்குச் சட்டத்தை மாற்றியமைத்தனர். இதன்படி தனியார் துறையில் உள்ள தொழிலகங்களுக்கு இடைக்காலக்கடன் கொடுக்கலாம். இதற்குமுன், ஆறு மாதத்திற்கு மேற்பட்ட தவணைக் கடன் கொடுக்க முடியாது. சுதந்தர இந்தியாவில் ஸ்டேட் பாங்கு, முன்பு பின்பற்றிய கொள்கைகளைக் கைவிட்டு, பாங்குத் தொழில்மட்டும் செய்யாமல், நாட்டு முன்னேற்றத்திற்கு வேண்டிய சில புதிய பொறுப்புக்களையும் மேற்கொண்டிருக்கின்றது.

இந்தியாவில் தொழில் செய்யும் வாணிகப் பாங்குகளுள் ஸ்டேட் பாங்கு மிகப் பெரியது. 1959-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் அதன் டெபாசிட்டுத் தொகை 581 கோடி ரூபாயாக இருந்தது. மற்றப் ஷெடியூல் பாங்குகளின் மொத்த டெபாசிட்டுத் தொகை 1767 கோடி ரூபாயாக இருந்தது. ஆனால், பாங்கு கொடுத்த கடன் தொகை (advances) அதிகரிக்கவில்லை. 1959-இல் ஸ்டேட் பாங்கின் இலாபம் மொத்தம் 187 கோடி ரூபாயாகும். 1958-ஆம் ஆண்டைவிட ஏழு கோடி ரூபாய் அதிகமான இலாபத்தைப் பெற்றது. எதிர்காலத்தில் இந்தப் பாங்கு நமது திட்டங்களைச் செயலாற்றுவதில் சிறந்த பங்கை ஏற்று நாட்டுக்குத் தொண்டாற்றுமென்று எதிர்பார்க்கலாம்.

## 3. இந்தியக் கூட்டுப்பங்குப் பாங்குகள்

சுதேச பாங்குகள், கூட்டுறவுப் பாங்குகள், நில அடைமான பாங்குகள், கூட்டுப்பங்குப் பாங்குகள் என்ற பலவகைப் பாங்குகள் உள. இவற்றுள் கூட்டுப்பங்குப் பாங்குகளை வாணிகப் பாங்குகள் (Commercial Banks) என்றும் சொல்வதுண்டு. நாட்டின் வாணிகத்திற்கு வேண்டிய நிதியளிப்பதே இவற்றின் முக்கியமான தொழில் ஆகும். இந்தியக் கூட்டுப்பங்குப் பாங்குகளின் அமைப்பு, தொழில்முறை முதலியவற்றைப்பற்றி இந்த அதிகாரத்தில் காண்போம்.

இந்தப் பாங்குகள் இந்தியக் கம்பெனிச் சட்டத்தின்கீழ்ப் (Indian Companies Act) பதிவு செய்யப்பட்டவை. இவை 1949-இல் இயற்றிய பாங்குக் கம்பெனிச் சட்டத்திற்கும் உட்பட்டவை. இவைகளுள் மிகப்பெரிய பாங்காகிய செண்ட்ரல் பாங்கு (Central Bank of India) 1911-ஆம் ஆண்டு ஆரம்பமாயிற்று. 1912-இல் அதன் காப்பு நிதி, டெபாசிட்டுத் தொகை மூலதனம் முதலியன மொத்தமாக 77 இலட்ச ரூபாய் இருந்தது. 1938-இல் இந்தத் தொகை 31 கோடி ரூபாயாக உயர்ந்தது. 1923-இல் டாடா இண்டஸ்டரியல் பாங்கை இதனுடன் இணைத்தனர். இம்பீரியல் பாங்கைப்போல நாடெங்கும் கிளைகளைக்கொண்ட பாங்கு இது ஒன்றே. ஆரம்பகாலத்திலிருந்து பல நெருக்கடியான நிலைகளைக் கடந்து இந்தப் பாங்கு முன்னேறியது. பலர் வேண்டுமென்றே இதன் முன்னேற்றத்தைத் தடைசெய்ய முயன்றபோதிலும், இது எல்லா இடையூறுகளையும் வெற்றிகரமாகச் சமாளித்தது. மற்றப் பெரிய பாங்குகளைவிடக் குறைந்த வட்டி வீதத்தையே இது டெபாசிட்டர்களுக்குக் கொடுத்தது. இந்தப் பாங்கு அலுவலர்களுக்குக் கொடுக்கும் சம்பளம் முதலிய பொதுச் செலவு (Overhead Cost) மற்றப் பாங்குகளின் செலவைவிட அதிகமானது. மொத்த இலாபத்தில் 40 சதவீதம் பொதுச் செலவுக்காக ஒதுக்கப்படும். இதைவிட மிகுதியாகப் பொதுச் செலவைச் செய்வது ஸ்டேட் பாங்கு ஒன்றேயாகும்.

1906-ஆம் ஆண்டு "பாங்க் ஆப் இந்தியா" (The Bank of India) ஆரம்பமாயிற்று, 1912 வரை இது விரைவில் முன்னேறி யது. 1913—பாங்குகளுக்கு ஒரு நெருக்கடியான ஆண்டு. மற்றப் பாங்குகளைவிட நெருக்கடியை இது எளிதில் சமாளிக்க முடிந்தது. மற்றவைகளைப்போல் அதிகமான கிளைகளை இது ஆரம்பிககவில்லை. பம்பாய்ப்பகுதியில் சில முக்கியமான இடங்களிலேயே இது கிளைகளைக் கொண்டுள்ளது. 1921-இல் மொம்பாசா என்ற இடத்தில் ஒரு கிளையை ஆரம்பித்தது. ஆனால், 1923-இல் அதை மூடவேண்டியதாயிற்று. ஆரம்பித்தபின் சில ஆண்டுகள் இது பங்குகளைக் கடனுக்கு அடைமானமாகப் பெறமுடி யாத நிலையிலிருந்தது. இதனால், இலாபகரமான வழிகளில் பணத்தைப் பயன்படுத்தமுடியாத நிலையில் இருந்தது. 1911-இல் பாங்கின் துணை விதிகளை மாற்றினர். இதற்குப்பின் பங்குகளை அடைமானமாகப் பெற்றுக் கடன் கொடுக்க, பாங்குக்கு உரிமை கொடுத்தனர். இந்தப் பாங்கு பெறும் இலாபம் குறைவாக இருந்த போதிலும், இதன் சொத்துக்கள் மற்றப் பாங்கின் சொத்துக்களைவிட ரொக்க நிலையுடையதாக இருக்கின்றது. இதன் சொத்துக்களில் பெரும் பகுதி பத்திர முதலீட்டிலேயே இருக்கின்றது. இதன் மூன்று குறிப்பிடத்தகுந்த அம்சங்கள்:—(1) இது குறைந்த கிளைகளை உடையது (2) சொத்துக்களை ரொக்க நிலையில் வைத்திருக்கின்றது (3) சில முக்கியமான இடங்களிலேயே இதன் தொழில் பரவி இருக்கின்றது. மற்றப் பாங்குகளைவிடச் சிக்கனமான முறையில் இதை நிருவாகம் செய்கின்றனர்.

கூட்டுப்பங்குப் பாங்குகளில் மிகப் பழமையானதாகிய அலகாபாத் பாங்கு 1865-ஆம் ஆண்டு ஆரம்பமாயிற்று. 1880-வரை இதன் முன்னேற்றம் மிகக் குறைவாக இருந்தது. இதன்பின் இதன் தொழில் கணிசமான அளவு பெருகியது. 1922-இல் "பி அண்ட் ஓ பாங்கை" (P & O Bank) இதனுடன் இணைத்தனர். இந்திய ஆஸ்திரேலியச் சீனப் பாங்கு (Chartered Bank of India, Australia and China) இதன் பங்குகளில் பெரும் பகுதியை 1927-இல் வாங்கியது. பத்திர முதலீடுசெய்வதில், இது அரசினர் பத்திரங்களையே பெரும்பாலும் பயன்படுத்தியது. உத்திரப் பிரதேசம், பஞ்சாப் பகுதிகளிலேயே இதன் தொழில் பரவி யிருந்தது. இந்தியாவின் பெரிய பாங்குகளுள் இது மிகக் குறைந்த இலாபத்தையே அடைந்தது.

1895-இல் பஞ்சாப் நேஷனல் பாங்கை ஆரம்பித்தனர். இதன் நிருவாகம் முற்றிலும் இந்தியர்கள் வசமே இருந்தது. 1913-இல் ஏற்பட்ட நெருக்கடி இதன் வலிமையைச் சோதித்தது. இதன்

வசமிருந்த டெபாசிட்டுத் தொகை ஒன்றுக்குப் பாதியாகக் குறைந்துவிட்டது. ஆனால், 1916-க்குள் இதன் நிலைமையில் மீண்டும் முன்னேற்றம் ஏற்பட்டது. இதன் டெபாசிட்டுத் தொகையில் கணிசமான அளவு தவணை டெபாசிட்டாகையால், அது மிகக் குறைந்த அளவு காப்பு நிதியைக்கொண்டுள்ளது. முதல் உலகப் போருக்குமுன் அதன் பத்திர முதலீடு டெபாசிட்டில் 25 சதவீதத்திற்கு மேற்படவில்லை. 1920-இல் இது 35 சதவீதமாயிற்று. பெரும்பாலும் அரசாங்கப் பத்திரங்களையே பயன்படுத்துகின்றனர். இதன் தொழில் பெரும்பாலும் பஞ்சாப் பகுதியிலேயே பரவி இருக்கின்றது. பாங்க் ஆப் பரோடா (Bank of Baroda) 1909-இல் தோன்றியது. அதன் தொழில் பெரும்பாலும் குஜரத், கத்தியவார் பகுதிகளிலேயே பரவி இருக்கின்றது. 1919-இல், இது பம்பாயில் ஒரு கிளையை ஆரம்பித்தது. பரோடா மன்னரின் ஆதரவுடன் இது வளர்ச்சியடைந்தது. ஆனால், சமஸ்தானத்தின் தொகையைப் பாங்கிலிருந்து அரசினர் திரும்பப் பெறுவார்கள் என்ற பேச்சு 1925-இலிருந்து 1933-க்குள் இதன் வலிமையைச் சோதித்தது. இதன் மொத்த இலாபம் குறைவாக இருந்தது. பாங்கின் சொத்துக்கள் ரொக்க நிலையில் இருப்பதே இதற்குக் காரணம். இந்தப் பாங்கு அதிகமான கிளைகளை ஆரம்பிக்கவில்லை. குஜரத்-கத்தியவார் பகுதிகளில் இது மேலும் தொழிலைப் பெருக்க வழியில்லை. ஆகையால், இந்தியாவின் மற்றப் பகுதிகளிலேயே கிளைகள் ஆரம்பிக்க வேண்டும்.

1907-இல் இந்தியன் பாங்கை நிறுவனம் செய்தனர். 1925-ஆம் ஆண்டு வரை இது கணிசமான அளவு முன்னேறவில்லை. தென்னிந்தியாவில் பாங்குத் தொழிலுக்கேற்ற சூழ்நிலை வளரவில்லை. 1913-ஆம் ஆண்டின் நெருக்கடி இந்தப் பாங்கைப் பாதிக்கவில்லை. 1925-இல் இதன் டெபாசிட்டுத் தொகை ஒரு கோடி ரூபாயை எட்டியது. 1938-இல், இது 3·5 கோடியாக உயர்ந்தது. இந்தப் பாங்கின் வளர்ச்சிக்குக் காரணம், இது தென்னிந்தியாவில் பல கிளைகளை ஆரம்பித்ததேயாகும். இந்தப் பாங்குக்குக் கிடைக்கும் இலாபம் கணிசமான அளவிலிருக்கின்றது. இதன் பத்திர முதலீடு 1920-க்குப்பின் 25 சதவீதம்வரை உயர்ந்தது. பத்திர முதலீட்டுக்கு அரசினர் பத்திரங்களையே பயன்படுத்துகின்றனர். 15-இலிருந்து 20 சதவீதம்வரை, இதனிடம் ரொக்கம் இருக்கின்றது.

1943-இல் யுனைடெட் கமர்சியல் பாங்கை நிறுவினர். ஐந்தாண்டுகளுக்குள் இது வெகுவிரைவில் முன்னேறியது. 1947-இல் இது இந்தியாவில் 58 கிளைகளையும், பாகிஸ்தானில் 24 கிளைகளையும் கொண்டிருந்தது. நாட்டுப் பிரிவினையால் இது பாதிக்கப்பட்டது. 1950-இல் காமில்லா பாங்கிங் கார்ப்பரேஷன், வங்காள

செண்ட்ரல் பாங்கு (Bengal Central Bank), ஹூக்ளி பாங்கு முதலியவைகளை இணைத்து, யுனைடெட் பாங்க் ஆப் இந்தியா (United Bank of India) என்ற பாங்கை நிறுவினர்.

இந்தியாவில் ஷெடியூல் பாங்குகளும், ஷெடியூலில் சேர்க்கப் படாத பாங்குகளும் பல இருந்தபோதிலும், பாங்குத் தொழிலின் பெரும்பகுதி முக்கியமான சில பாங்குகள் வசமே இருக்கின்றது. டெபாசிட்டுத் தொகைகளும் இவைகளிடமே பெரும்பாலும் குவிந்தி ருக்கின்றது. 1952-இல் ஷெடியூல் பாங்குகள் கொண்ட மொத்த டெபாசிட்டுத்தொகை 7,153 மிலியன் ரூபாய். இதில் 5,843 மிலியன் ரூபாய், முதல் 10 பாங்குகளிடம் இருந்தது. 4,405 மிலியன் ரூபாய், முதல் நான்கு பாங்குகளாகிய இம்பீரியல் பாங்கு, செண்ட்ரல் பாங்கு, பஞ்சாப் நேஷனல் பாங்கு, பாங்க் ஆப் இந்தியா முதலிய வற்றிடம் இருந்தது. 1952-இல் முக்கியமான ஷெடியூல் பாங்கு களின் நிலைமையைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் விளக்கும்.

(ரூபாய் மிலியன்களில்)

| பாங்குகளின் பெயர்கள். | மூலதனமும் காப்புநிதியும் | மொத்த டெபாசிட்டுத் தொகை | கடன் | மொத்தக் கிளைகள். |
|---|---|---|---|---|
| இம்பீரியல் பாங்கு | 119 | 2058 | 1071 | 410 |
| செண்ட்ரல் பாங்கு | 70 | 1221 | 485 | 275 |
| பஞ்சாப் நேஷனல் பாங்கு | 17 | 589 | 269 | 294 |
| பாங்க் ஆப் இந்தியா (Bank of India) | 60 | 537 | 283 | 33 |
| யுனைடெட் கமர்சியல் பாங்கு | 27 | 308 | 92 | 79 |
| பாங்க் ஆப் பரோடா (Bank of Baroda) | 23 | 291 | 132 | 52 |
| அலகாபாத் பாங்கு | 14 | 264 | 135 | 84 |
| யுனைடெட் பாங்க் ஆப் இந்தியா (United Bank of India) | 36 | 263 | 125 | 82 |
| இந்தியன் பாங்கு | 12 | 201 | 88 | 77 |
| பாங்க் ஆப் பிக்கானிர் (Bank of Bikaner) | 6 | 111 | 47 | 51 |
| மொத்தம் .. | 384 | 5843 | 2727 | 1437 |

குறிப்பு :—

ரிசர்வ் பாங்கின் இரண்டாவது ஷெடியூலில் சேர்த்துள்ள பாங்கு களை ஷெடியூல் பாங்குகள் என்று அழைப்பது வழக்கம். இந்தியா வில் பதிவுசெய்து இந்தியாவிலேயே பெரும்பாலும் தம் தொழிலை நடத்தும் பாங்குகளை ஷெடியூலில் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால், இந்தப் பாங்குகள் 5,00,000 ரூபாய்க்குக் குறையாத தொகையைக் காப்புநிதி மூலதன நிதிகளில் வைத்திருக்கவேண்டும். மேலும், இந்தப் பாங்குகள் ரிசர்வ் பாங்கின் கண்காணிப்புக்கும், சட்டதிட்டங்களுக்கும் உட்பட்டிருத்தல்வேண்டும்.

1952-இல் 526 வாணிகப் பாங்குகள் இருந்தன. இவற்றின் மொத்த டெபாசிட்டுத் தொகை 9,696 மிலியன் ரூபாய். இதில் 5,843 மிலியன் ரூபாய் முதல் பத்து இந்திய ஷெடியூல் பாங்கு களிடமே இருந்தது. 1938-இலிருந்து இவற்றின் டெபாசிட்டுத் தொகையைப்போல், மிகுதியான அளவு, மூலதனமும் காப்பு நிதியும் அதிகரிக்கவில்லை.

இந்தியக் கூட்டுப்பங்குப் பாங்குகளின் வேலைகளை இங்குக் காண்போம். இவை மக்களிடமிருந்து பணத்தை நடைமுறை டெபா சிட்டு, தவணை டெபாசிட்டு, சேவிங்ஸ் டெபாசிட்டுகளாகப் பெறு கின்றன. இந்தப் பணத்தைக் குறுகியகாலக் கடனாகக் கொடுத்து உள்நாட்டு வர்த்தகத்திற்கு நிதியுதவி செய்வதே இவற்றின் முக்கிய மான அலுவலாகும். பண்டங்களை ஓரிடத்திலிருந்து மற்ற இடங் களுக்கு அனுப்புவதற்கு வேண்டிய நிதியையும் இவை அளிக்கும். தவணை டெபாசிட்டுகளுக்கு 4 அல்லது 5 சதவீதம் வட்டியும், நடை முறை டெபாசிட்டுக்கு 2 அல்லது $2\frac{1}{2}$ சதவீதம் வட்டியும் கொடுத்தன. பொருளாதார மந்தகாலத்தில் இந்த வட்டி வீதங் கள் குறைந்தன. கொடுக்கும் கடனுக்குப் பத்திரங்களை அடைமான மாகப் பெற்றுக்கொண்டன. சிறிய ஊர்களில் தானியங்கள் போன்ற பண்டங்களை அடைமானமாகப் பெற்றுக் கொள்வது வழக் கம். இப்பண்டங்களைப் பாங்குகள், கிடங்குகளில் வைத்துக்கொள் வது வழக்கம். மக்களிடமிருந்து சொத்துக்களையும் அடைமானமாகப் பெறுவது வழக்கம். ஆனால், வீடு போன்ற சொத்துக்களைச் சாதா ரணமாகப் பாங்குகள் அடைமானமாக ஏற்றுக்கொள்ளா. ஏனெனில் அவைகளை எளிதில் விற்கமுடியாது. ஒரு பொருளையும் அடைமான மாகப் பெறாமல் இருவர் கையொப்பங்களைக்கொண்ட வெண்ணிலைக் கடன் பத்திரங்களை (promissory notes) பெற்றுக்கொண்டும் பாங்குகள் கடன் கொடுக்கலாம்.

"ஹுண்டி" என்ற உண்டியல்களை இந்தியாவில் எங்கும் மக்கள் பயன்படுத்தினர். இவற்றின் மூலமாக இந்திய வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியைப் பாங்குகள் அளித்தன. ஆனால், இப்பொழுது இவற்றை அதிகமாகப் பயன்படுத்தவில்லை. இந்த உண்டியல்களை அடைமானமாகப் பெற்றுக்கொடுக்கும் கடன் தொகை மிகக் குறைவானதாகும். ரொக்கக் கடனையும் (Cash credit) அதிகப் பற்றுக் கடனையும் (Over draft) சாதாரணமாக எங்கும் மக்கள் பெறுகின்றனர். இந்தக் கடனுக்கு அடமானமாகப் பங்குகள், பத்திரங்கள், பொருள்கள் முதலியவற்றைப் பெறுவது இயற்கை. ஒருவன் அதிகப் பற்றுக் கடனைப் பெறும்பொழுது எவ்வளவு தொகையைப் பயன்படுத்துகின்றானோ அதற்கு மட்டும் வட்டி கொடுத்தல்வேண்டும். பாங்குகள் ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குப் பணம் அனுப்ப மக்களுக்கு வசதிகள் செய்துகொடுக்கும். இந்த அலுவல்களைத் தவிர, மக்கள் சார்பில் பத்திரங்கள், நகைகள் முதலிய விலையுயர்ந்த பொருள்களைப் பத்திரமாகப் பாங்குகள் வைத்துக்கொள்கின்றன. அவர்களுக்குச் சேரவேண்டிய தொகைகளை வசூல் செய்யவும், அவர்கள் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்தவும் சில பாங்குகள் தயாராக இருக்கின்றன. அவர்களுக்காகப் பங்குகள், பத்திரங்கள் முதலியவற்றை வாங்கவும், பணத்தைத் தகுந்த முறையில் முதலீடு செய்யவும் தயாராக இருக்கின்றன. சில பாங்குகள் "டிரஸ்ட்" (Trust) சொத்துக்களை நிருவாகம் செய்யும் அலுவலை மேற்கொள்கின்றன. ஒரு சில பாங்குகள் அயல்நாட்டு நாணயமாற்று வேலையை (Foreign Exchange business) மேற்கொண்டிருக்கின்றன.

பாங்குத் தொழிலில் பெரும் பகுதி, ஷெடியூல் பாங்குகள் வசமே இருக்கின்றது. இந்தப் பாங்குகள் தாங்கள் பெறும் தொகையை எப்படி முதலீடு செய்கின்றனர் என்பதை இங்குப் பார்ப்போம். முக்கியமான பெரிய பாங்குகளின் டெபாசிட்டுத் தொகை மிகுதியானதுபோல, அவற்றின் முதலும் காப்பு நிதியும் அதிகரிக்கவில்லை. பாங்குகள் தம்மிடமுள்ள தொகையில் ஒரு சிறு பகுதியையே கடனாகக் கொடுக்கப் பயன்படுத்துகின்றன. நகை, உலோகம், அரசினர் பத்திரங்கள், பங்குகள், டிபஞ்சர்கள், பொருள்கள் முதலியவற்றை அடைமானமாகக் கொண்டு கடன் கொடுக்கலாம். சாதாரணமாகத் தானியங்கள், துணி முதலிய பண்டங்களைப் பாங்குகள் அடைமானமாக ஏற்றுக்கொள்ளும். சிறிய பாங்குகள் பெரும்பாலும் நகைகளையே அடைமானமாகப் பெறும். உண்டியல்களைப் பெற்றுக்கொண்டும், பாங்குகள் கடன் கொடுக்கலாம். உண்டியல்களை மிகுதியான அளவில் பாங்குகள் பெற்றால்

அவை வாணிகத்திற்குப் பொருள் உதவி செய்யும். சாதாரணமாகக் கொடுக்கும் கடன்கள் அதிகப் பற்று, ரொக்கக் கடன் போன்றவை.

## இந்திய ஷெடியூல் பாங்குகளின் பத்திர முதலீடு

(டிசம்பர் 31—ஆம் தேதி உள்ளபடி)

*(மில்லியன் ரூபாயில்)*

| | *1951* | | *1952* | |
|---|---|---|---|---|
| | தொகை | மொத்த முதலீட்டில் சதவீதம் | தொகை | மொத்த முதலீட்டில் சதவீதம் |
| **அரசினர் பத்திரங்கள் :** | | | | |
| மத்திய அரசாங்கம் | 2717 | 76 | 2922 | 77 |
| இராச்சிய அரசாங்கம் | 337 | 9 | 345 | 9 |
| மற்றவை | 3 | — | 3 | — |
| **மற்ற முதலீடுகள் :** | | | | |
| மற்ற டிரஸ்டுப் பத்திரங்கள் | 80 | 2 | 88 | 2 |
| தவணை டெபாசிட்டுக்கள் | 3 | — | 24 | 1 |
| கூட்டுப்பங்குக் கம்பெனிகளின் பங்குகள் | 87 | 2 | 73 | 2 |
| கூட்டுப்பங்குக் கம்பெனிகளின் டிபஞ்சர்கள் | 40 | 1 | 36 | 1 |
| நில உடைமை (Real estate) | 54 | 1 | 60 | 2 |
| உலோகங்கள் | — | — | — | — |
| மற்றவை | 6 | 3 | 3 | — |
| **அயல் நாட்டு முதலீடுகள்:** | | | | |
| பாகிஸ்தான் | 133 | 4 | 118 | 3 |
| இங்கிலாந்து | 56 | 2 | 52 | 1 |
| மற்ற நாடுகள் | 62 | 2 | 70 | 2 |

மேல்நாடுகளில் பணமார்க்கட்டு (Money market) நன்ருக அமைந்திருக்கின்றது. உண்டியல் மார்க்கட்டும் (Bill market) நல்லமுறையில் அமைந்திருக்கின்றது. ஆகையால், அங்குள்ள பாங்குகள் தங்கள் சொத்துக்களை ரொக்க நிலையில் வைத்துக் கொள்ளமுடியும். ஆனுல், இந்தியாவில் உண்டியல் மார்க்கட்டு

இல்லாததால் பாங்குகள் பத்திர முதலீட்டையே விரும்புகின்றன; அரசினர் பத்திரங்களையும் மற்றப் பத்திரங்களையும் பயன்படுத்து கின்றன. இப்பத்திரங்கள் குறுகியகாலப் பத்திரங்களாக இருக்க வேண்டும். 1952-இல் நம் நாட்டு ஷெடியூல் பாங்குகளின் முதலீட்டில் 86 சதவீதம் பத்திர முதலீடாக இருந்தது. இவை பெரும்பாலும் அரசினர் பத்திரங்களையே பயன்படுத்தின. ஒரு சிறிய பகுதியைப் பங்குகள், டிபஞ்சர்கள் முதலியவற்றில் முதலீடு செய்கின்றன. இரண்டாவது உலகப்போருக்குப்பின் அவை தம் பணத்தை ஓரளவு கருவூல உண்டியல்களிலும் (Treasury bills), கருவூல டெபாசிட்டு ரசீதுகளிலும் (Treasury Deposit receipts) முதலீடு செய்தன. இந்த முதலீடு அவற்றின் மொத்த அரசினர் பத்திர முதலீட்டில் 5 சதவீதம் இருந்தது. 1945-இலிருந்து 1947 வரை பாங்குகள் கணிசமான தொகையை நீண்டகாலப் பத்திரங்களில் முதலீடு செய்தன. 1947-க்குப்பின் இந்த முதலீடு குறைந்தது. (147-ம் பக்க அட்டவணை காண்க)

மேல்நாடுகளில் நன்ருக அமைந்த பணமார்க்கட்டும் உண்டியல் மார்க்கட்டும் இருப்பதாலும், பாங்கு முறை நல்ல வளர்ச்சி பெற்றிருப்பதாலும், அதிகமான ரொக்கம் தேவையில்லை. இந்தியாவில் நிலைமை வேறுபட்டிருப்பதால், மேல் நாட்டுப் பாங்குகளைவிட நம்நாட்டில் பாங்குகள் அதிகமான ரொக்கம் கொண்டிருக்கின்றன. இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் ரொக்கம் சுமார் 10 சதவீதம். ஆனுல், இந்தியாவில் இது எப்பொழுதும் 15 சதவீதத்துக்குக் குறையாமல் இருக்கும். நமது பாங்குகள் முதலீட்டில் ஒரு சிறிய பகுதி கட்டடங்கள் போன்றவையாக இருக்கின்றது. இந்த முதலீடு பாங்குத் தொழிலோடு தொடர்பு கொண்டதல்ல.

## ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள்

பாங்குகள் செய்யும் தொழிலையும் அவைகள் பெறும் டெபாசிட்டுத் தொகையையும் கவனிக்கும்போது, ஷெடியூல் பாங்குகளே மிகமுக்கியமானவை என்று நாம் முடிவு செய்யவேண்டும். எனினும் எண்ணிக்கையில் ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள் மிகுதியாக இருக்கின்றன. 1952-இல் 443 ஷெடியூலில் சேர்க்கப் படாத பாங்குகளும், 91 ஷெடியூல் பாங்குகளும் இருந்தன. ஷெடியூல் பாங்குகளுக்கு 2800 அலுவலகங்களும், ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகளுக்கு 1300 அலுவலகங்களும் இருந்தன. ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள் வங்காளத்திலும்,

சென்னையிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. 1960-இல் 94 ஷெடியூல் பாங்குகளும், 251 ஷெடியூலில் இல்லாத பாங்குகளும் இருந்தன. இந்தப் பாங்குகள் ஷெடியூல் பாங்குகளைவிட அதிகமான தொகையைக் கடனாகக் கொடுக்கின்றன. அவைகளைவிடக் குறைந்த தொகையைப் பத்திர முதலீட்டில் பயன்படுத்துகின்றன.

இவை தவணை டெபாசிட்டுக்களை அதிகம் பெறுகின்றன. பத்திரமுதலீடு அதிக வருவாயைக் கொடுக்காததால் இவை தம்மிட மிருக்கும் பணத்தில் பெரும் பகுதியைக் கடனாகக் கொடுக்கின்றன. இவைகள் தனிப்பட்டவர்களுக்கே, அதிகமாய்க் கடன் கொடுக் கின்றன. அதாவது, இவர்கள் கொடுக்கும் கடன் வர்த்தகத்திற்கு அதிகம் பயன்படவில்லை. ஷெடியூல் பாங்குகள் இல்லாத சிறிய ஊர் களில், தனிப்பட்டவர்கள் தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள் சிறப்பாய்த் தொண்டாற்று கின்றன. ஆனால், அவற்றின் சொத்துக்கள் மிகக் குறைந்த ரொக்க நிலையுடையதாக இருப்பதால், நெருக்கடியான சந்தர்ப்பங்களை அவை எளிதில் சமாளிக்க முடியாது. ஆகையால், இவற்றை ரிசர்வ் பாங்கு நல்ல முறையில் கண்காணிக்கவேண்டும். இவை நீண்டகாலப் பத்திரங்களில் முதலீடு செய்கின்றன.

குறிப்பு :—

ரிசர்வ் பாங்கில் இரண்டாவது ஷெடியூலில் சேர்க்கப்படாத இந்தப் பாங்குகளைக் கீழ்க்கண்ட நான்கு வகைகளாகப் பிரித்திருக் கின்றனர்கள் :—

'A' வகுப்புப் பாங்குகள்—5,00,000 ரூபாய் முதலையும் காப்பு நிதியையும் கொண்டவை.

'B' வகுப்புப் பாங்குகள்—1,00,000 முதல் 5,00,000 ரூபாய் முதலையும் காப்பு நிதியையும் கொண்டவை.

'C' வகுப்புப் பாங்குகள்—50,000 முதல் 1,00,000 ரூபாய் முதலையும் காப்பு நிதியையும் கொண்டவை.

'D' வகுப்புப் பாங்குகள்—50,000 ரூபாய்க்குக் குறைவான முதலையும் காப்பு நிதியையும் கொண்டவை.

| மொத்த அலுவலகங்கள் | 1959-இல் |
|---|---|
| ஸ்டேட் பாங்கு | 823 |
| மற்ற ஷெடியூல் பாங்குகள் | 3036 |
| ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள் | 926 |

## ஷெடியூல் பாங்குகளின் தொழில்

(இந்தியாவில் மட்டும்) (கோடி ரூபாயில்

| | 1958-59 | 1959-)60 |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் | 35·79 | 35·93 |
| காப்பு நிதி | 33·30 | 32·55 |
| மொத்த டெபாசிட்டு | 1432·81 | 1672·74 |
| ரொக்கம் (பாங்குகள் வசமும் ரிசர்வ் பாங்கிலும்) | 94·95 | 137·00 |
| பத்திர முதலீடு | 570·12 | 672·88 |
| கடன்களும், உண்டியல்களும் தள்ளுபடியும். | 835·59 | 930·52 |

1957-58-இலிருந்து டெபாசிட்டுத் தொகை மிகுதியடைய ஆரம்பித்தது. அரசினர் செலவு மிகுதியடைந்ததும் இறக்குமதிக் கட்டுப்பாடும் இதற்குக் காரணங்களாகும். தவணை டெபாசிட்டுகள் அதிகரித்தன. மொத்த டெபாசிட்டில் இதன் விகிதம் மிகுதியடைந்தது. 1959-இல் மொத்த நடைமுறை டெபாசிட்டில் 50 சதவீதம் தொழில், வாணிகம் போன்ற துறைகளைச் சார்ந்தது. தனியார் துறையைச் சார்ந்தது 21·8 சதவீதமாகும். 11·6 சதவீதம் அரசினரையும், அவர்களுடன் தொடர்பு கொண்ட மற்ற நிலையங்களையும் சார்ந்தது. தவணை டெபாசிட்டில் 19 சதவீதமே தொழில் துறையைச் சார்ந்தது. 10.5 சதவீதம் அரசினரையும், 35·4 சதவீதம் தனியாரையும் சார்ந்தன. பத்திர முதலீட்டுத் தொகை மிகுதியடைந்தது. அரசினர் பத்திரங்களையே பாங்குகள் பெரும்பாலும் பத்திர முதலீட்டுக்குப் பயன்படுத்துகின்றன.

பல இன்னல்களைச் சமாளிக்க வேண்டியிருந்ததால், கூட்டுப் பங்குப் பாங்குகள் சிறந்த முறையில் விரைவில் வளர்ச்சியடையவில்லை. அரசினரும் அரசாங்கத் தொடர்பு கொண்ட மற்ற நிலையங்களும் இந்திய பாங்குகளை வேண்டிய அளவு ஆதரிக்கவில்லை. பல பாங்குகள் நாணயமாற்றுத் தொழிலை நடத்த முடியவில்லை. இதனால் அவை விரைவில் முன்னேறவில்லை. மற்ற நாணயமாற்றுப் பாங்குகளின் போட்டியைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. இந்த நாணயமாற்றுப் பாங்குகள் அதிகமான டெபாசிட்டுத் தொகையைப் பெற்றதால், மற்ற இந்திய பாங்குகளின் தொழில் பாதிக்கப்பட்டது. இந்தியாவில் தொழில் நடத்தும் அன்னியர்கள், இந்திய பாங்குகளை ஆதரிக்காமல், அன்னியர்கள் நடத்தும் பாங்குகளையே ஆதரித்தனர்.

அன்னியர்களுக்குக் கடமைப்பட்டிருக்கும் இந்தியர்களும், இந்தப் பாங்குகளையே ஆதரித்தனர். அரசினர் ஆதரவுடன் பணியாற்றும் இம்பீரியல் பாங்குடன் இவை போட்டியிட வேண்டியதாயிற்று.

அடிக்கடி பல நெருக்கடிகள் ஏற்பட்டதால், பல பாங்குகள் கவிழ்ந்தன. மக்கள் நம்பிக்கை குன்றியதால், பாங்குகள் தம் தொழிலைச் செம்மையான முறையில் நடத்த முடியவில்லை. ஆகையால், அசையாச் சொத்துக்களை அடைமானமாகக்கொண்டு கடன் கொடுப்பதற்கு ஹிந்து, முகமதிய வாரிசுச் சட்டங்கள் இடையூறாக இருந்தன. அரசினர் பத்திரங்கள் ரொக்க நிலையிலிருந்தபோதிலும் அவற்றை அடைமானமாகக் கொடுத்து, இம்பீரியல் பாங்கிலிருந்து எளிதில் கடன் பெறமுடியவில்லை. பல பாங்குகளிடம் வேண்டிய அளவு மூலதனம் இல்லை. மக்களிடமிருந்து டெபாசிட்டுத் தொகையைப் பெற அதிகமான வட்டியைச் சில பாங்குகள் கொடுத்தன. ஆகையால், அவைகள் குறைந்த இலாபத்தை அடைந்தன. பல பாங்குகள் நெருக்கடியான நிலைமைகளைச் சமாளிக்க முடியாத வலுவற்ற நிலையிலிருந்தன. மேலும், அவை தம் தொழில் குறைந்துவிடுமென்று அஞ்சி, கொடுக்கும் கடனுக்கு வட்டியை வேண்டிய அளவு உயர்த்தவில்லை. பாங்குகளிடை நிலவும் கடுமையான போட்டி இத்தொழிலின் வளர்ச்சிக்கு இடையூறாக இருக்கின்றது. பல பாங்குகள் வேண்டிய அளவு காப்பு நிதியைக் கொள்ளவில்லை. வேண்டிய அளவு காப்பு நிதி இருந்தாலன்றி பாங்கு, அவ்வப்போது இழக்கும் தொகையை ஈடுசெய்ய முடியாது. பாங்குகள் வெளியிடும் இருப்பு நிலைக் குறிப்பில் (Balance sheet) அவை இழக்கும் தொகையைக் குறிப்பிடுவது சரியல்ல. இப்படிச் செய்தால் மக்கள் நம்பிக்கை குறையும். அவர்களிடமிருந்து அதிகமான டெபாசிட்டுத் தொகையைப் பாங்குகள் பெறமுடியாது. ஆகையால், இழக்கும் தொகையை ஈடு செய்வதற்குத் தனியாக ஒரு காப்பு நிதியை (Inner Reserves) வைத்திருக்கவேண்டும்.

1947-இலிருந்து பாங்குகளில் பணியாற்றும் ஊழியர்கள் அதிகமான சம்பளம் வேண்டுமென்று போராடுகின்றனர். 1949 வரை இந்தப் போராட்டச் சிக்கல்களை இராச்சிய அரசாங்கங்கள் தீர்த்தன. 1949-இல் இந்திய அரசாங்கம் இதற்காக ஓர் அகில இந்திய உயர் முறை மன்றத்தை (All India Tribunal) நிறுவினர். டெபாசிட்டுத் தொகை அடிப்படையில் இந்த மன்றம் பாங்குகளைச் சில பிரிவுகளாகப் பிரித்துச் சம்பள வீதத்தை முடிவு செய்தனர். ஆனால், டெபாசிட்டுக்குத் தகுந்தாற்போல் இலாபம் அதிகரிப்பதில்லை. ஆகையால், 1949-க்குப் பிறகு சில பாங்குகளுக்கு அடக்கச் செலவு மிகுதியடைந்தது.

இந்தியாவில் உண்டியல்களை அதிகமாகப் பயன்படுத்தவில்லை. உண்டியல் ஏற்பு அகங்களும் (Acceptance Houses), செம்மையாக அமைந்த உண்டியல் மார்க்கட்டும் நம் நாட்டில் இல்லாததால் பாங்குகளுக்குப் போதிய உண்டியல்கள் கிடைக்கவில்லை. ஆகையால், இவை, பெரும்பான்மையான தொகையை அரசினர் பத்திரங்களிலேயே முதலீடு செய்யவேண்டியிருக்கின்றது. பாங்குகள் பெரும்பாலும் ஆங்கில மொழியையே செக்குப் புத்தகங்கள் பற்று வரவுச் சிட்டைகள் (Pass Books) முதலியவற்றிற்குப் பயன்படுத்துவதாலும், பல இந்தியர்கள் இந்த மொழியில் பயிற்சி அடையாததாலும் பலர் பாங்குகள் அளிக்கும் வசதிகளைப் பயன் படுத்திக்கொள்ளமுடியாத நிலையிலிருக்கின்றனர். நம் நாட்டுப் பாங்குகள் ஆங்கில முறையை அப்படியே பின்பற்றுகின்றன. இந்தியாவின் நிலைமைக்கேற்றவாறு பாங்கு முறையை மாற்றியமைத்தாலன்றிச் சுதேச பாங்குதார்கள் செய்யும் தொழில் குறையாது. இந்திய பாங்குகளின் தொழிலும் விரிவடையாது. சில பாங்குகளின் நிருவாக இயக்குநர்கள் போதிய அளவு அனுபவம் பெறுதவர்கள்.

1949-இல் கிராமாந்தர பாங்கு விசாரணைக் குழுவை அரசினர் நியமனம் செய்தனர். இக்குழுவினர் கிராமாந்தர பகுதிகளில் பாங்கு வசதிகள் ஏற்படுத்தவேண்டிய சிபாரிசுகளைச் செய்யவே நியமிக்கப்பட்டனர். கிராமாந்தர பகுதிகளில் பாங்குகளை ஆரம்பிப்பதால் அங்குள்ள மக்களின் சேமிப்பை தொழிலுக்கும் வாணிகத்திற்கும் பயன்படுமாறு செய்யலாமென்று இக்குழுவினர் கருதினர். ஆகையால், வர்த்தகம் மிகுதியாக உள்ள இடங்களில் இம்பீரியல் பாங்கும், மற்றப் பாங்குகளும் கிளைகளை ஆரம்பிக்கவேண்டுமென்றனர். இந்தப் பாங்குகள் முற்போக்காக உள்ள சில ஊர்களில் வாணிகத்திற்கு வேண்டிய நிதியுதவியும் அளிக்கலாம். மிகச் சிறிய இடங்களில் கூட்டுறவு பாங்குகளும் தபால் துறையின் சேவிங்ஸ் பாங்குகளும் பணியாற்றலாம். கிராமாந்தர பகுதிகளில் தோன்றும் பாங்குகளுக்குச் சில சலுகைகளை அரசினர் கொடுக்கவேண்டுமென்று சிலர் கருதினர். இந்தப் பாங்குகளுக்கு நிதியுதவி செய்வதோ அரசினர் பணத்தை டெபாசிட்டுத் தொகையாக அவர்களிடம் கொடுப்பதோ சரியல்ல வென்று குழுவினர் கருதினர்.

ஆகையால், இந்தப் பாங்குகளுக்கு மறைமுகமாகச் சில சலுகைகள் காட்டலாமென்று இக்குழுவினர் முடிவு செய்தனர். கிராமங்களில் போக்கு வரவு வசதிகளை மிகுதியாக ஏற்படுத்தலாம். பாங்குகளுக்குக் கிராமங்களில் கிடங்குகள் கட்டப் பொருளுதவியும்,

அவர்கள் பணத்தைப் பத்திரமாக வைத்துக்கொள்ள கருவூலங்களில் வசதிகளும் செய்து கொடுக்கலாம். கூட்டுறவுப் பாங்குகளுக்கு அரசினர் சில சலுகைகளை அளித்திருக்கின்றனர். இவற்றிற்கு வருமான வரி, ஸ்டாம்பு வரி (Stamp Duty), பதிவுப் பணம் (Registration Fees) முதலியவை கிடையா. மேற்பார்வை, தணிக்கை முதலியவற்றிற்கும் அரசினர் பணம் வசூல் செய்வது கிடையாது. இந்தப் பாங்குகளுக்குச் சேரவேண்டிய பணத்தை வசூல் செய்வதற்கு வேண்டிய வசதிகளையும் அரசினர் செய்து கொடுக்கின்றனர். இதைப் போன்ற சலுகைகளை மேலும் அதிகமாகக் கொடுக்கலாமென்பது குழுவினரின் கருத்து. தபால் சேவிங்ஸ் பாங்கு விதிகளை இந்தப் பாங்குகளுக்குச் சாதகமான முறையில் மாற்றியமைக்கவேண்டும். நாட்டுச் சேமிப்புப் பத்திரங்களைக் (National Savings Certificates) கூட்டுறவுப் பாங்குகள் மூலம் விற்பனை செய்யவேண்டும். ரிசர்வ் பாங்குக்கும் கூட்டுறவுப் பாங்குகளுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படவேண்டும். கிராமாந்தரங்களில் தபால் அலுவலகங்கள் சேவிங்ஸ் பாங்குத் தொழிலை அதிகமாக மேற்கொண்டு மக்கள் சேமித்துவைத்த தொகைகளை வசூல் செய்யவேண்டும்.

1953-இல் ரிசர்வ் பாங்கு, அரசினர் அனுமதியுடன், தனியார் துறைக்கு (Private Sector) நிதியுதவி அளிக்கும் பிரச்சினையை பரிசீலனை செய்ய ஒரு குழுவை, ஏ.டி. ஷராப் (A.D. Shroff) என்பவர் தலைமையில் நியமனம் செய்தது. இக்குழுவினர் வாணிக பாங்குகள் மூலம் ரிசர்வ் பாங்கு, தனியார் துறையிலுள்ள தொழில்களுக்கு நிதியுதவி செய்யலாமென்று முடிவு செய்தனர். பாங்குகள் பங்குகளையும் டிபஞ்சர்களையும் அடைமானமாக ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கலாம். அவைகள் பங்குகளிலும் டிபஞ்சர்களிலும் தம் பணத்தை முதலீடு செய்யலாம். இம்பீரியல் பாங்கும் மற்றப் பாங்குகளும் புதிய பங்குகளில் பாங்குகள் முதலீடு செய்வதற்கு ஓர் ஏற்பாடு செய்யவேண்டுமென்று குழுவினர் முடிவு செய்தனர்.

இந்தியாவில் வாணிகம், வேண்டிய நிதியை எப்படிப் பெறுகின்றது என்பதையும், இதில் கூட்டுப்பங்குப் பாங்குகளின் பங்கையும் இங்குக் காண்போம். விவசாயிகளுக்கு அறுவடை செய்த தானியங்களையும், கச்சாப் பொருள்களையும் சந்தைகளுக்குக் கொண்டு செல்வதற்கு நிதியுதவி தேவையில்லை. ஆனால், நடைமுறைச் செலவுக்கும், விவசாயச் செலவுக்கும் நிதி தேவைப்படும். இந்த நிதியை விவசாயிகள் கிராமத்தில் கடன் கொடுப்பவரிடம் பெறுகின்றனர். அறுவடை முடிந்ததும் இவர்களிடமே விற்பதாக உறுதிமொழி கூறுகின்றனர். இவர்கள் கொடுக்கும்

வட்டி வீதம் 12·5-இலிருந்து 37·5 வரை உயரும். சிலர் ஊரூராகச் செல்லும் வியாபாரிகளிடம் கடன் பெறுகின்றனர். இவர்களும் அறுவடைக்குப்பின் தங்கள் பண்டங்களை இந்த வியாபாரிகளிடம் விற்பதாக ஒப்புக்கொள்கின்றனர். சில பெரிய விவசாயிகள், பெரிய சந்தைகள் உள்ள இடங்களிலிருக்கும் வியாபாரிகளிடம் கடனைப் பெறுகின்றனர். இவர்கள் 6-இலிருந்து 12 சதவீதம் வரை வட்டி கொடுக்கின்றனர். விவசாயப்பொருள்களின் விலை போருக்குப்பின் உயர்ந்தபோதிலும், விவசாயிகள் பொருள்களை அதிக விலையில் விற்க முடியவில்லை. இதற்குக் காரணம், அவர்கள் வேண்டிய நிதியை கிராமத்தில் கடன் கொடுப்போரிடமிருந்து பெறுவதேயாகும். ஆகையால், அவர்களுக்குக் குறைந்த வட்டியில் வேண்டிய நிதியுதவி அளிக்கவேண்டும்.

இந்தப் பிரச்சினையை ஓரளவுக்குக் கூட்டுறவுப் பாங்குகள் தீர்க்க முயற்சி செய்கின்றன. இவை பண்டங்களை அடைமானமாக ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கின்றன. அறுவடைக்குப்பின் பொருளைக் கூட்டுறவுப் பாங்குகள் மூலம் விற்பனை செய்யவேண்டும். ஆனால், இந்தக் கூட்டுறவுப் பாங்குகளை நல்ல முறையில் விவசாயிகள் பயன்படுத்திக்கொள்ளவில்லை. வட்டிவீதம் அதிகமாக இருந்த போதிலும் பழைய கடன் கொடுப்போரிடமே தம் தேவைக்கு வேண்டிய நிதியைப் பெற்றுக்கொள்கின்றனர். இதற்குப் பல காரணங்கள் உண்டு. கிராமங்களில் கடன் கொடுப்பவர்கள் சந்தைகள் இருக்கும் இடங்களிலுள்ள "கச்சா ஆர்கத்தியர்கள்" (Katcha arhatyas) என்னும் வியாபாரிகளிடம் தங்கள் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெறுகின்றனர். இவர்கள் இந்த வியாபாரிகளிடம் தங்கள் வசம் வருகின்ற பொருள்களை விற்பதாக ஒத்துக் கொள்கின்றனர். "பக்கா ஆர்கத்தியர்கள் (Pucca arhatyas)" என்போரிடமிருந்து கச்சா ஆர்கத்தியர்கள் 7·5 சதவீதம் வட்டி கொடுத்துத் தங்கள் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெறுகின்றனர். இந்தப் பக்கா ஆர்கத்தியர்கள், நண்பர்கள், உறவினர் முதலியோரிடம் 6 சதவீதம் வட்டிகொடுத்து நிதியைப் பெறுகின்றனர். இவர்கள் சுதேச பாங்குதார்களிடம் "ஹூண்டி" என்ற உண்டியல்கள் மூலமாகவும் நிதியைப் பெறுகின்றனர். இவர்கள் விவசாயப் பொருள்களை அடைமானமாக பயன்படுத்திப் பாங்கு களிடமும் நிதியுதவி பெறுகின்றனர். பாங்குகள் பொருள்களின் மதிப்பில் 60 சதவீதம் கடன் கொடுக்கின்றன. பாங்குகள் "ஹூண்டி" என்ற உண்டியல்களைத் தள்ளுபடி செய்கின்றன.

விவசாயப் பொருள்களை உற்பத்தியாகுமிடத்திலிருந்து ஏற்று மதியாகும் இடங்களுக்கும், உபயோகிக்கும் இடங்களுக்கும், அனுப்பு

வதற்கு வேண்டிய நிதியை வியாபாரிகள் சுதேச பாங்குதார்களிடமிருந்தே பெரும்பாலும் பெறுகின்றனர். சுதேச பாங்குதார்களிடம் நிதியைப் பெறுவது இவர்களுக்கு எளிதாக இருக்கின்றது. ஆகையால், ரிசர்வ் பாங்கு இவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவேண்டும். எனவே, ரிசர்வ் பாங்கு உண்டியல் மார்க்கட்டை நம் நாட்டில் வளர்க்க முயற்சிசெய்து வருகின்றது. கிடங்குகளைக் (Ware houses) கட்டவும் ஏற்பாடுகள் செய்து வருகின்றது. கிடங்கு ரசீதுகளுடன் உண்டியல்கள் தோன்ற வேண்டும். இந்த உண்டியல்களுக்கு ஒரு நல்ல மார்க்கட்டையும் ஏற்படுத்தல்வேண்டும்.

தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களை உற்பத்தியாளர்கள் மொத்த வியாபாரிகளிடம் விற்பனை செய்கின்றனர். இதற்கு வேண்டிய நிதியைக் கூட்டுப்பங்குப் பாங்குகளும், சுதேசபாங்குகளும் அளிக்கின்றன. உற்பத்தியாளர்கள் மொத்த வியாபாரிகள் மீது நம்பிக்கை கொண்டால் உண்டியல்களைத் தயார் செய்து, அவர்கள் தொடர்புகொண்டுள்ள பாங்குகளுக்குப் பண்டங்கள் அனுப்பிய ரயில்வே ரசீதுகளுடன் அனுப்புவர். உண்டியல்களில் குறிப்பிட்டிருக்கும் தொகையை மொத்த வியாபாரிகள் உற்பத்தியாளர்களுக்குக் கொடுக்கவேண்டும். பாங்குகள் உண்டியல்களை மொத்த வியாபாரி இருக்கும் ஊர்களிலுள்ள கிளைகளுக்கு அனுப்பும். இக்கிளைகள் உண்டியல் தொகையை வசூல் செய்யும். உற்பத்தியாளர்கள் சார்பில் பாங்குகள் தொகையை வசூல் செய்கின்றன. அவை உற்பத்தியாளர்களுடைய உண்டியல்களைத் தள்ளுபடியும் செய்யலாம். வசூல் செய்வதற்குப் பாங்குகள் பெறும் தொகையைவிட, தள்ளுபடி செய்வதற்கு அதிகமாகப் பெறுகின்றன. தள்ளுபடி செய்யும்போது உற்பத்தியாளர்கள், தள்ளுபடி வீதம் (rate of discount) போக, எஞ்சிய தொகையை உடனே பெறலாம். ஆனால், உண்டியல் தொகையை வசூல் செய்யும்பொழுது இப்படி உடனடியாகப் பணம் பெறமுடியாது.

உற்பத்தியாளர்களுக்கு வியாபாரிகளை நன்கு தெரியாவிடில், வியாபாரிகள் தங்கள் பாங்குகளின் பற்றுத் திருமுகம் (Letter of credit) மூலம் அவர்களுடன் தொடர்பு கொள்ளவேண்டும். உற்பத்தியாளர்கள் "ஹுண்டி" என்ற உண்டியல்களைத் தயார் செய்து சுதேச பாங்குதார்களிடம் அவற்றைத் தள்ளுபடிசெய்து கொள்ளலாம். பாங்குகள் பல கிளைகளை ஆரம்பிப்பதற்குமுன் வியாபாரிகள் பெரும்பாலும் சுதேச பாங்குதார்களின் உதவியையே நாடினர். ஆனால் இப்பொழுது பாங்குகளே, இந்தப் பொறுப்பைப் பெரும்பாலும் ஏற்றுக்கொண்டிருக்கின்றன.

## பாங்குகள் பற்றிய சட்டங்கள்

பாங்குகள் மக்கள் நிதியைக் கையாளுவதாலும், நாட்டின் வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியைக் கொடுப்பதாலும் சிறந்த முறையில் தொண்டாற்றவேண்டும். மக்கள் நம்பிக்கையின் அடிப்படையில் இயங்குவதால், இந்த நம்பிக்கை குலையாமலிருக்கவேண்டும். பாங்குகள் திவாலாக ஆரம்பித்தால் பொருளாதாரம் சீர்கேடடையும். ஆகையால், அரசினர் பாங்குகளைக் கண்காணிக்கவேண்டும். இந்த நோக்கத்துடன் பல சட்டங்களை அரசினர் எல்லா நாடுகளிலும் இயற்றியிருக்கின்றனர். ஆங்காங்கே உள்ள சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்றபடி சட்டங்களை இயற்றினர். உதாரணமாக, இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் பாங்குகள் செலாவணித்தாள்களை வெளியிட்டன. இந்த வெளியீட்டை ஒழுங்குபடுத்தவும், கட்டுப்பாடு செய்யவும் இந்த நாடுகளில் சட்டங்கள் இயற்றினர். ஆனால், இந்தியாவில் 1861-இல் அரசினரே செலாவணித்தாள் வெளியீட்டை மேற்கொண்டதால், இது போன்ற சட்டங்கள் தேவைப்படவில்லை. முதல் உலகப்போருக்குப்பின் பல நாடுகளில் நாணய மாற்றுச் சிக்கல்களும் (exchange difficulties), பணம்பற்றிய சிக்கல்களும் எழுந்தன. இவற்றைத் தீர்ப்பதற்காகச் சட்டங்களை இயற்றி, மையப் பாங்குகளுக்கு வேண்டிய அதிகாரத்தைக் கொடுத்தனர். சட்டங்கள் இன்றியமையாதன என்பதைப் பொருளாதார மந்தமும், பாங்கு நெருக்கடியும், கட்டுப்பாடுகளும், எடுத்துக் காட்டிய பிறகு, பல நாடுகள் ஆங்காங்கே உள்ள தேவைக்கேற்ப, சட்டங்களை இயற்றின.

சில நாடுகள் பாங்குகளுக்காக, சிறப்பான சட்டங்களை இயற்றின. சில நாடுகளில் கூட்டுப்பங்குக் கம்பெனிகளுக்காக இயற்றிய சட்டங்களில், பாங்குகளுக்குப் பொருந்தும் சில பகுதிகளைச் சேர்த்தன. 1850-இல் கூட்டுப்பங்குக் கம்பெனிச் சட்டத்தை இயற்றினர். இது தணிக்கை (audit), இருப்பு நிலைக்குறிப்பு (Balance sheet), இலாப-இழப்புக் கணக்கு (Profit and Loss account) முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்தது. 1857-ஆம் ஆண்டுச் சட்டம் வரையிட்ட பொறுப்பை (limited liability) ஏற்றுக்கொண்டது. 1860-க்குப்பிறகு வரையிட்ட பொறுப்பின் அடிப்படையில் பாங்குகளை நிறுவலாம். இப்படி இயற்றிய பல்வேறு சட்டங்களை 1866-ஆம் ஆண்டுச் சட்டத்தில் ஒன்றுபடுத்தினர். இதை 1913-இல் மாற்றியமைத்தனர்.

1913-ஆம் ஆண்டு இயற்றிய சட்டம் பொதுவாக எல்லாக் கூட்டுப்பங்குக் கம்பெனிகளுக்கும் பொருந்தும். இது பாங்குகளின்

தேவைக்கேற்ற முறையில் அமையாததால் அவைகளைச் செம்மையான முறையில் கண்காணிக்கவில்லை. பல பாங்குகள் எவ்விதக் கண்காணிப்புமின்றி இருந்தன. குறையற்ற நல்ல சட்டங்கள் வேண்டுமென்பதைப் பலர் உணர்ந்தனர். பாங்குமுறையை வளர்ப்பதற்கும், பாங்குகள் திவாலாவதைத் தடுப்பதற்கும், டெபாசிட்டர்களுடைய தொகையை நல்லமுறையில் முதலீடு செய்வதற்கும் சட்டங்கள் இன்றியமையாதன.

ஆனல், சட்டங்கள், கட்டுப்பாடுகள் முதலியவை மூலமாகச் செம்மையான பாங்கு முறையை வளர்ப்பதிலும், பாங்குகள் திவாலாகமலிருக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதிலும் நாம் முழு வெற்றி காணமுடியாது. மேலும் அளவுக்கு மீறிய கட்டுப்பாடுகள் தொல்லைகளைக் கொடுக்கும். சந்தர்ப்பத்திற்கும் சூழ்நிலைக்குமேற்றவாறு நடந்து கொள்ள பாங்குகளுக்கு ஓரளவு சுதந்தரம் வேண்டும். ஆனல், 1913-ஆம் ஆண்டுச் சட்டம் குறைபாடுகளுடனிருந்ததால் பாங்குகளைக் கண்காணிக்க ஒரு புதிய சட்டம் தேவையில்லை என்றும், பழய சட்டத்தையே வேண்டியபடி மாற்றியமைத்துக் கொள்ளலாமென்றும், அதில் சில புதிய பகுதிகளையும் சேர்த்துக் கொள்ளலாமென்றும் கருதினர். நிருவாகம், அமைப்பு, தணிக்கை, கலைப்பு (liquidation) முதலியவற்றைப்பற்றிய விளக்கமான ஒரு புதிய சட்டம் இயற்றவேண்டுமென்று மையப் பாங்கு விசாரணைக் குழு (Central Banking Enquiry Committee) சிபாரிசு செய்தது. நேர்மையற்ற நிருவாகம், ஊகவாணிக முதலீடு (Speculative investment), திறமையற்ற இயக்குநர்கள் பணியாற்றுவது முதலியன பாங்குகள் திவாலாவதற்கு முக்கிய காரணங்களாகும். ஆகையால், சிறந்ததொரு பாங்கு முறையை வளர்க்கத் தனிச்சட்டமொன்று வேண்டுமென்று இக்குழுவினர் வற்புறுத்தினர்.

அரசினர் 1936-இல் இந்தியக் கம்பெனிச் சட்டத்தைக் குழுவினர் சிபாரிசுகளை யொட்டி மாற்றியமைத்தனர். பாங்குகளைப் பற்றிய ஒரு தனிப்பகுதியை இதனுடன் சேர்த்தனர். மக்களிடம் டெபாசிட்டுத் தொகையைப்பெற்று, தொழில் செய்யும் நிலையங்கள் எனப் பாங்குகளுக்கு விளக்கம் கொடுத்தனர். இந்த டெபாசிட்டுத் தொகையைச் செக்குகள் மூலம் மக்கள் திரும்பப்பெறலாம். 1936-ஆம் ஆண்டுச் சட்டம் பாங்குகள் மேற்கொள்ளக்கூடிய அலுவல்களை வரையறை செய்தது. இந்த அலுவல்களைத் தவிர, மற்ற எந்த வேலையையும் பாங்குகள் செய்யக்கூடாது. அப்படி எவையேனும் புதிய அலுவல்களைச் செய்யவேண்டுமானல், அவற்றிற்கு அரசினரின் உத்தரவு வேண்டும். பாங்குகளை நிருவாகம் செய்வதற்கு நிருவாகப் பதிலாள்களை (Managing Agents) நியமனம் செய்யக்கூடாது.

பாங்குகளின் இருப்பு நிலைக்குறிப்பு பற்றிய ஏற்பாடு 1936-இல் மாறவில்லை. இந்தியக் கம்பெனிச் சட்டத்தில் பாங்குகளின் இருப்பு நிலை குறிப்புக்காக சிறப்பான ஏற்பாடுகள் எவையும் இல்லை. மற்றப் கம்பெனிகளைப் போலவே பாங்குகளும் இவற்றைத் தயார்செய்ய வேண்டும். 1866-ஆம் ஆண்டுச் சட்டப்படி பாங்குகளும் கம்பெனி களும் ஆண்டில் இருமுறை தம் இருப்பு (assets), பொறுப்பு (liabilities) பற்றிய சிறு குறிப்பை வெளியிடவேண்டும். மற்றத் துணைக் கம்பெனிகளின் (Subsidiary companies) பங்குகளைக்கொண்ட பாங்குகள் இந்தக் கம்பெனிகளின் தணிக்கையான இருப்பு நிலைக் குறிப்புக்களையும், தம் இருப்பு நிலைக்குறிப்போடு ஆண்டுதோறும் வெளியிடல் வேண்டுமென்று 1936-ஆம் ஆண்டுச் சட்டத்தில் கண்டிருந்தது. துணைக் கம்பெனிகள் பாங்குத் தொழிலுக்காக நிறுவப்பட்டனவாக இருக்கவேண்டும்.

பாங்குகளிடம் காப்பு நிதி (Reserve Fund) இருத்தல் வேண்டும். அவை இலாபத்தில் 20 சதவீதத்தைக் காப்பு நிதியில் சேர்த்தபிறகே பங்குதாரர்களுக்கு இலாப ஈவு (dividend)கொடுத்தல் வேண்டும். காப்பு நிதி செலுத்திய மூலதனத்தின் (Paid-up capital) மதிப்பை அடையும் வரை, இப்படிச் செய்யவேண்டும்.

1938-இல் திருவாங்கூர் நேஷனல் பாங்கு திவாலானதை ஒட்டி, பாங்கு நெருக்கடி ஏற்பட்டது. பாங்குகளைச் சிறந்த முறையில் கட்டுப்பாடுசெய்யப் புதிய சட்டம் ஒன்று இயற்றவேண்டு மென்று பலர் உணர்ந்தனர். ஷெடியூலில் சேர்க்கப்படாத பல கூட்டுப்பங்குப் பாங்குகள், 1936-ஆம் ஆண்டுச் சட்டப்படி இயங்க வில்லை. 1936-ஆம் ஆண்டுச் சட்டம் பாங்குகளுக்குக் கொடுத்த இலக்கணத்தைக்கொண்டு இவற்றைப் பாங்குகள் என்று ஏற்றுக் கொள்ள முடியாதென நீதிமன்றம் முடிவுசெய்தது. 1936-ஆம் ஆண்டுச் சட்டம் சிறந்த முறையில் பாங்குகளைக் கண்காணிக்க வில்லை. ஆகையால், டெபாசிட்டர்களுடைய நிதியைச் சரியான முறையில் பாதுகாக்கவில்லை. ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்கு களின் மூலதனமும் காப்பு நிதியும் குறைவாக இருந்தன. பல பாங்குகள் நீண்டகால டெபாசிட்டுகளைப் பெற்றுத் தொழில் நடத்தியதால், தனிப்பட்ட கடன் கொடுப்போருக்கும் (Money lenders) இவைகளுக்கும் அதிக வேறுபாடுகளில்லை. இவை மிகக் குறைந்த தொகையையே நடைமுறை டெபாசிட்டாகக் கொண்டு இருந்தனர்.டெபாசிட்டில் சுமார் 86 சதவீதம் கடனாகக் கொடுக்கப் பட்டிருந்தது. இவற்றின் சொத்துக்கள் மிகக்குறைந்த ரொக்க நிலையைக் கொண்டிருந்ததால், நெருக்கடிக் காலத்தில் இவை நிலைமையைச் சமாளிக்க முடியாதபடி இருந்தன. மொத்த டெபா சிட்டில் மிகக் குறைந்த பகுதியையே பத்திரமுதலீடுசெய்தனர்.

எனவே, சிறந்த கண்காணிப்பும் கட்டுப்பாடும் தேவை என்பதை உணர்ந்து, ரிசர்வ் பாங்கு 1939-இல் அரசினருக்கு ஒரு மசோதாவைத் தயார்செய்து அனுப்பியது. ஆனால், அரசினர் உடனடியாகஒன்றும் செய்ய முடியாத நிலையிலிருந்ததால், தற்காலிகமாக 1942-இல் சட்டத்தை மாற்றியமைத்தனர். இதன்படி பாங்குகளுக்குக் கொடுத்த விளக்கத்தைத் திருத்தியமைத்தனர். பாங்குகள் என்று சொல்லிக்கொண்டு பணியாற்றும் எல்லாக் கம்பெனிகளும் சட்டத்திற்குட்பட்டன. 1944-இல் சட்டத்தை மீண்டும் மாற்றியமைத்தனர். 1937-க்குப்பின் தோன்றிய பாங்குகளின் மூலதனம் சாதாரண பங்குகளைக் கொண்டதாகவே இருக்கவேண்டும். முன்னுரிமைப் பங்குகளைக் கொண்டதாக இருத்தல் கூடாது. பாங்கின் ஒப்பிய முதல் (Subscribed capital), அனுமதிக்கப்பட்ட முதலில் (authorised capital) பாதிக்குக் குறையாமலிருக்க வேண்டும். செலுத்திய முதல், ஒப்பிய முதலில் அரைப் பாகத்திற்குக் குறையாமலிருக்கவேண்டும். இந்த மாற்றங்கள் 1946-இலிருந்து அமுலில் வந்தன. பல பாங்குகள் போதிய செலுத்திய மூலதனம் கொள்ளாததாலும், முன்னுரிமைப்பங்குகளை வெளியிட்டதாலும் இந்தக் கட்டுப்பாடுகள் உடனடியாகத் தேவைப்பட்டன.

1939-இல் தயார் செய்த மசோதாவைச் சில மாற்றங்களுடன் ரிசர்வ் பாங்கு மீண்டும் அரசினருக்கு அனுப்பியது. 1945-இல் அரசாங்கம் 'பாங்கிங் கம்பெனி மசோதா' (Banking Companies Bill) என்ற ஒரு புதிய மசோதாவைச் சட்டசபையில் புகுத்தியது. அதைப் பரிசீலனைசெய்த குழுவினர் சில மாற்றங்கள் வேண்டுமென்று கருதினர். அதை மீண்டும் 1948-இல் சட்டசபை பரிசீலனைசெய்து, 1949-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் சட்டமாக ஏற்றுக்கொண்டது. 1913-ஆம் ஆண்டிலிருந்து இயற்றிய சட்டங்களையெல்லாம் ஒன்று சேர்த்து 1949-இல் பாங்குக் கம்பெனிச் சட்டத்தை இயற்றினர்.

இந்த மசோதா கீழ்க்கண்ட நோக்கங்களைக் கொண்டது :—

(1) செக்குகள் மூலம் திருப்பக்கூடிய டெபாசிட்டுக்களை மக்களிடம் பெற்றுத் தொழில்செய்யும் எல்லாவற்றையும் பாங்குகளாகக் கருதவேண்டும்.

(2) பாங்குத் தொழிலுடன் மற்றத் தொழில்களையும், நடத்துவதைச் சட்ட விரோதமாகச் செய்தல்.

(3) ஒவ்வொரு பாங்கும் குறைந்தபட்ச முதலை வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்தல்.

(4) இலாப ஈவுப் பங்கீட்டை வரையறை செய்தல்.

(5) இந்தியாவில் உள்ள அயல்நாட்டுப் பாங்குகளை இந்திய பாங்குச் சட்டத்திற்குட்படுத்துவது.

(6) இருப்பு நிலைக் குறிப்பைத் தயார்செய்ய வேண்டிய முறையை வரையறுத்தல்.

(7) பாங்குகளின் கணக்குகளை ரிசர்வ் பாங்கின் கண்காணிப்புக்குட்படுத்துவது.

(8) நேர்மையற்ற முறையில் தொழில் நடத்தும் பாங்குகள் மீது நடவடிக்கைகள் எடுக்க ஏற்பாடுகள் செய்தல்.

(9) பாங்குகளுக்கும் மையப் பாங்கிற்கும் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்துவதும், ரிசர்வ் பாங்கின் அதிகாரங்களைப் பெருக்குவதும், இப்படிச் செய்வதால் பாங்குகளுக்கு வேண்டியபோது ரிசர்வ் பாங்கு நிதியுதவி செய்யலாம்.

கூட்டுறவுப் பாங்குகள் நீங்கலாக, மற்ற எல்லாப் பாங்குகளும் 1949-ஆம் ஆண்டுச் சட்டத்திற்குட்பட்டவை. பழைய சட்டத்தில் பாங்குகளின் முக்கியமான தொழில் டெபாசிட்டுத் தொகையைப் பெறுவதே என்றிருந்ததால் பல சிக்கல்கள் எழுந்தன. மற்றத் தொழிலுடன் பாங்குத் தொழிலையும் இணைத்தவர்கள் இச்சட்டத்திற்குட்படவில்லை. 1949-ஆம் ஆண்டுச் சட்டம் பாங்குகள் என்ற பதத்திற்குச் சரியான விளக்கம் கொடுத்ததால் டெபாசிட்டுத் தொகையைப்பெறும் எல்லா நிலையங்களும் இச்சட்டத்திற்குட்பட்டன. இந்த டெபாசிட்டுத் தொகையை டெபாசிட்டர்கள் செக்குகள் மூலம் திரும்பப்பெறலாம். பாங்குகள் தாங்கள் பெற்ற நிதியைப் பத்திர முதலீடு, கடன் கொடுத்தல், உண்டியல்களை தள்ளுபடி செய்தல் முதலியவற்றிற்குப் பயன்படுத்தலாம். பாங்குகள் வர்த்தகத் தொழிலில் ஈடுபடக்கூடாது. சாதாரணமாக, உண்டியல்கள், பத்திரங்கள்போன்ற ரொக்க நிலையுடைய சொத்துக்களையே பாங்குகள் பெறும். ஆனால், இவை நடத்தும் தொழிலின் விளைவாக, வீடு நிலங்கள் போன்ற சொத்துக்கள் இவை வசம் வந்தால், இந்தச் சொத்துக்களை ஏழாண்டுகளுக்குள் விற்பனை செய்துவிடவேண்டும். இல்லையேல், மேலும் ஐந்தாண்டுகள் இவற்றை வைத்துக்கொள்ள ரிசர்வ் பாங்கிடம் அனுமதி பெற வேண்டும். பாங்குகள் ரிசர்வ் பாங்கின் அனுமதியின்றித் தொழில் நடத்தக்கூடாது. அனுமதியளிப்பதற்குமுன், ரிசர்வ் பாங்கு அதைக் கோரும் பாங்கின் நிலைமையை நல்ல முறையில் பரிசீலனை செய்து,

அதன்பிறகே அனுமதியளிக்கும். அயல்நாட்டினர் பாங்குகள் இந்திய பாங்குகளுக்குப் போட்டியாகவோ, விரோதமாகவோ தொழில் நடத்தக்கூடாது. சட்டதிட்டங்களுக்கு உட்பட்டுச் செம்மையான முறையில் தொழில் நடத்தாத பாங்குகள் பெற்ற அனுமதியை, ரிசர்வ் பாங்கு ரத்து செய்யலாம். 1949-ஆம் ஆண்டுச் சட்டம் விரிவாகவும் விளக்கமாகவும் இருந்தது. ரிசர்வ் பாங்கின் அதிகாரங்கள் விரிவடைந்தன.

பாங்குகள் கொள்ளவேண்டிய செலுத்திய முதலைப்பற்றிய விவரங்கள், சட்டத்தில் தெளிவாகக் கண்டிருந்தன. பம்பாய், கல்கத்தா நகரங்களில் அலுவலகங்களைக் கொள்ளாத பாங்குகளிடம் குறைந்த பட்சம் 50,000 ரூபாய் செலுத்திய முதல் இருக்க வேண்டும். இந்தப் பாங்குகளுக்குக் கிளைகள் இருத்தல் கூடாது. பம்பாய், கல்கத்தா நகரங்களில் கிளைகளைக் கொள்ளாத மற்ற இடங்களில் அலுவலகங்கள் கொண்ட பாங்குகளிடம், ஒரு லட்ச ரூபாய் செலுத்திய முதல் இருத்தல் வேண்டும். மேலும், தலைமை அலுவலகம் இருக்கும் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு கிளைக்கும் 10,000 ரூபாய் வீதம் அதிகமான முதல் வேண்டும். மற்ற மாவட்டங்களில் இருக்கும் ஒவ்வொரு அலுவலகத்திற்கும் 25,000 ரூபாய் அதிகமான தொகை வேண்டும். மொத்தம் செலுத்திய முதல் ஐந்து லட்ச ரூபாய்க்கு மேற்படாமலிருக்கவேண்டும். பம்பாய், கல்கத்தா நகரங்களில் அலுவலகங்களைக் கொண்ட பாங்குகள் ஐந்து லட்ச ரூபாய் செலுத்திய முதலும், ஒவ்வொரு கிளைக்கும் 25,000 ரூபாய் வீதம் அதிகமான தொகையையும் கொள்ள வேண்டும். மொத்தம் செலுத்திய முதல் பத்து லட்ச ரூபாய்க்கு மேற்படாமலிருக்கவேண்டும். ஓர் இராச்சியத்திற்கு மேற்பட்ட இடங்களில் அலுவலகங்களைக் கொண்ட பாங்குகளிடம் பம்பாய், கல்கத்தா நகரங்களில் கிளைகளைக்கொண்டிருந்தால், குறைந்த பட்சம் பத்து லட்ச ரூபாய் முதலும், இந்த நகரங்களில் கிளைகளில்லாவிடில் ஐந்து லட்ச ரூபாய் முதலும் இருத்தல்வேண்டும்.

இந்தியாவிலுள்ள அயல்நாட்டினர் பாங்குகளுக்குப் பம்பாய், கல்கத்தா நகரங்களில் கிளைகள் இல்லாவிடில், 15 லட்ச ரூபாய் செலுத்திய முதல் கொள்ளவேண்டும். இந்த நகரங்களில் கிளைகள் இருந்தால் 20 லட்ச ரூபாய் முதல் வேண்டும். இந்தத் தொகைகளை ரிசர்வ் பாங்கில் டெபாசிட்டாகவோ, பத்திரங்களாகவோ வைத்துக் கொள்ளவேண்டும். பாங்குகளுக்குக் கிடைக்கும் இலாபத்தில் 20 சதவீதத்தை ஆண்டுதோறும் காப்பு நிதியில் சேர்க்கவேண்டும். காப்பு நிதியின் மதிப்பு செலுத்திய முதலின் மதிப்புக்குக் குறையாமலிருக்கவேண்டும்.

1934-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச் சட்டப்படி ஷெடியூல் பாங்குகள் தவணை டெபாசிட்டில் ஐந்து சதவீதமும், நடைமுறை டெபாசிட்டில் இரண்டு சதவீதமும் ரொக்கம் வைத்திருக்க வேண்டும். இத்தொகை ரிசர்வ் பாங்கில் டெபாசிட்டாக இருத்தல் வேண்டும். இந்த ஏற்பாடு 1949-க்குப் பின்னும் நீடித்தது. ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகளும் 1949-க்குப்பின் இந்த விதிக்குட்பட்டன. இந்தப் பாங்குகள் தம் நடைமுறை, தவணை டெபாசிட்டுகள் பற்றிய விவரங்களையும், ரொக்க நிலையைப்பற்றிய அறிக்கையையும் அவ்வப்போது ரிசர்வ் பாங்குக்கு அனுப்ப வேண்டும். அயல்நாட்டினர் பாங்குகளின் சொத்துக்களில் 75 சதவீதம் இந்தியாவில் இருக்கவேண்டும். இந்திய பாங்குகள் தம் மொத்தப் பொறுப்பில் (liabilities) 20 சதவீதத்திற்குக் குறையாமல் அனுமதிக்கப்பட்ட பத்திரங்கள், உலோகம், ரொக்கம் முதலிய சொத்துக்களை எப்பொழுதும் வைத்திருக்கவேண்டும்.

பாங்குகள் துணைக் கம்பெனிகளை (Subsidiary companies) ஆரம்பிக்கக்கூடாது. பாங்கு வேலையுடன் தொடர்பில்லாத தொழிலை மேற்கொள்ளக்கூடாது. செலுத்திய முதல், காப்பு நிதி முதலியவற்றில் 30 சதவீதத்திற்கு மேற்பட்ட தொகையை மற்றக் கம்பெனிகளின் பங்குகளில் முதலீடு செய்யக்கூடாது. பாங்குகள் நிருவாகக் குழுவினருக்கும், அவர்கள் தொடர்புகொண்ட கம்பெனிகளுக்கும் தகுந்த அடைமானம் பெறுமல் கடனுதவி அளிக்கக் கூடாது. அதன் பங்குகளையே அடைமானமாகக்கொண்டு கடன் கொடுத்தல் கூடாது. நிருவாகப் பதிலாள்களை (Managing Agents) நியமனம் செய்யக்கூடாது.

இந்தியாவிலுள்ள எல்லாப் பாங்குகளும் ரிசர்வ் பாங்கின் கண்காணிப்புக்குட்பட்டனவாகும். வட்டிவீதம், கடன் கொடுக்கும் கொள்கை முதலியவைபற்றி இந்தப் பாங்குகளுக்கு ரிசர்வ் பாங்கு அவ்வப்போது ஆலோசனைகள் கொடுக்கலாம். ரிசர்வ் பாங்கு, பொதுவாக எல்லாப் பாங்குகளுக்கும் அல்லது சில குறிப்பிட்ட பாங்குகளுக்கும் தேவைக்கேற்ப சில ஆபத்தான தொழில்களை மேற்கொள்ளவேண்டாமென எச்சரிக்கை செய்யலாம். புதிய கிளைகளை ஆரம்பிப்பதற்கோ, பழய கிளைகளை இடம் மாற்றுவதற்கோ ரிசர்வ் பாங்கின் அனுமதிவேண்டும்.

1940-இலிருந்து ரிசர்வ் பாங்கு சில பாங்குகளைத் தணிக்கை செய்ய ஆரம்பித்தது. இந்தப் பாங்குகளின் அனுமதியின் பேரில் அவற்றின் செலுத்திய முதல், காப்பு நிதி, டெபாசிட்டு முதலியவற்றைத் தணிக்கை செய்தது. ரிசர்வ் பாங்கின் மேற்பார்வையும்

தணிக்கையும் ஒரு குறுகிய எல்லைக்குட்பட்டிருந்தன. பல பாங்கு களின் நிருவாகத்தில் ஊழல்களும் குறைகளும் இருந்தன. எனவே, 1949-ஆம் ஆண்டுச் சட்டம் ரிசர்வ் பாங்கின் தணிக்கையைச் சட்டபூர்வமாக்கியது. 1949-க்குப்பின் ஒவ்வொரு பாங்கும் தன் கணக்குப் புத்தகங்களை ரிசர்வ் பாங்கின் தணிக்கையாளர்களுக்குக் கொடுக்கவேண்டும். பாங்குகளுக்கு வேண்டிய உதவியை அளிப் பதும், செம்மையான பாங்கு முறையை நம் நாட்டில் வளர்ப்பதுமே இத்தணிக்கையின் நோக்கங்களாகும்.

பாங்குகளின் கணக்குகளைப் பெற்றுப் பரிசீலனை செய்து, வேண்டுமென்றால் ரிசர்வ் பாங்கு அவற்றை அச்சிட்டு வெளி யிடலாம். 1949-ஆம் ஆண்டுச் சட்டத்தில் பாங்குகளை இணைப் பதற்கும் மூடுவதற்கும் வேண்டிய ஏற்பாடுகளை விளக்கியிருந்தனர். பாங்குகளை மூடவேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை விரைவில் செய்யவேண்டும். இதில் தாமதம் ஏற்பட்டால் டெபாசிட்டுதார்கள் பாதிக்கப்படுவார்கள். எனவே, 1950-இல் இதற்கு வேண்டிய ஏற்பாடுகளை 1949-ஆம் ஆண்டுச் சட்டத்துடன் சேர்த்தனர். நீதி மன்றம் பாங்குகளை மூடுவதற்கு நியமனம் செய்த கலைப்பாளர்களுக்கு (liquidators) ரிசர்வ் பாங்கு ஆலோசனை கூறலாம். கலைப்பு வேலையை (liquidation) மேற் பார்வையிடலாம். 1950-க்குப் பிறகு பாங்குகள் இணைப்பை ரிசர்வ் பாங்கு ஆதரித்து வருகிறது. ரிசர்வ் பாங்கின் அனுமதியைப் பெற்ற இரு பாங்குகளை அதன் பங்குதார்கள் விரும்பினால் இணைக்கலாம். இதற்காகக் கூட்டிய பங்குதார்கள் கூட்டத்தில் மூன்றில் இரண்டு மதிப்புள்ள பங்குகளைக் கொண்டவர்கள், இணைப்புத் திட்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். இணைப்புத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளாத பங்குதார்களுக்கு எப்படி ஈடு செய்யவேண்டும் என்பதை ரிசர்வ் பாங்கு முடிவு செய்யவேண்டும்.

1949-ஆம் ஆண்டுச் சட்டம் ரிசர்வ் பாங்கின் அதிகாரங்களைப் பெருக்கியது. அமெரிக்க ஐக்கிய ரிசர்வ் பாங்குகளைவிட (Federal Reserve Banks) இந்திய ரிசர்வ் பாங்கு அதிகமான அதிகாரங்களைப் பெற்றது. இந்த அதிகாரங்களைச் சரியாகப் பயன் படுத்தாவிடில் இந்திய பாங்கு முறை சீர்கேடடையும். ஆனால், ரிசர்வ் பாங்கு 1949-இலிருந்து தன் பொறுப்புக்களை உணர்ந்து அதிகாரங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்திவருகின்றது. நாட்டில் பல பகுதிகளில் வாணிகத்துக்குச் சிறப்பாய்த் தொண்டாற் றும் பாங்குகள், ஆலோசனைக்கும் நிதியுதவிக்கும் ரிசர்வ் பாங்கை அவ்வப்போது நாடுகின்றன. எதிர்காலத்தில் இந்தப் பாங்குகள்

ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பில் சிறந்த வளர்ச்சியடையுமென்பதில் ஐயப்பாடெதுவுமில்லை.

1913-இலிருந்து பல பாங்குகள் கவிழ்ந்தன. இவற்றின் வீழ்ச்சிக்குக் காரணங்கள் யாவை என்று ஆராய்ந்து பார்த்தால், 1949-ஆம் ஆண்டுச் சட்டத்தின் பயனும், சிறப்பும் தெளிவாகும். 1913-இலிருந்து 1924-க்குள் சுமார் 161 பாங்குகள் கவிழ்ந்தன. இதற்குப் பல காரணங்கள் இருந்தன. (1) மொத்தப் பொறுப்புக் கேற்ற அளவு ரொக்கம் பாங்குகளிடம் இல்லாதது ஒரு முக்கியமான காரணமாகும். (2) மக்களிடமிருந்து டெபாசிட்டுத் தொகையைப் பெறுவதற்காக அதிக வட்டியைப் பல பாங்குகள் கொடுத்தன. (3) அனுமதிக்கப்பட்ட முதல், ஒப்பிய முதல், செலுத்திய முதல் முதலியவற்றிற்கிடையே ஏற்ற விகிதாசாரம் இல்லாமை. (4) நல்ல திறமைபெற்ற நிருவாக இயக்குநர்கள் பாங்குகளை நிருவாகம் செய்ய வில்லை. பல நிருவாக இயக்குநர்கள் நேர்மையற்றமுறையில் நடந்து கொண்டார்கள். நாட்டின் பாங்குகளைக் கண்காணிக்க ஒரு மையப்பாங்கும், சட்டதிட்டங்களும் வேண்டுமென்பதை இந்த அனுபவங்கள் உணர்த்தின.

## 4. நாணயமாற்றுப் பாங்குகள்

இந்தப் பாங்குகள் தம் தலைமை அலுவலகங்களை வெளிநாடுகளில் கொண்டவை. இவை அயல்நாட்டினர் வசம் இருக்கின்றன. ஐரோப்பிய நாடுகள் பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றிய காலம் இத்திட்டத்தைப் பின்பற்ருத நாடுகளாகிய இந்தியா, சீனு முதலிய நாடுகளுடன் வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியுதவி செய்யும் பாங்குகளை நாணயமாற்றுப் பாங்குகள் என்று கூறினர். அயல் நாட்டு வர்த்தகத்திற்கு மட்டும் இந்தப் பாங்குகள் நிதியுதவியளிக்கவில்லை. ஆகையால், இவற்றை நாணயமாற்றுப் பாங்குகள் என்று அழைப்பதைவிட இந்தியாவிலுள்ள அயல்நாட்டினர் பாங்குகள் (Foreign Banks) என்று கூறுவதே பொருத்தமாகும். நம் நாட்டில் கூட்டுப்பங்குப் பாங்குகள் 1900-க்குப்பின் பெரும்பாலும் தொடங்கின. ஆகையால், தொடக்கக் காலத்தில் இந்தப் பாங்குகள் சிறப்பாய்த் தொண்டாற்றின. மற்றப் பாங்குகளை விட இவை அதிக டெபாசிட்டுத் தொகையைக் கொண்டிருந்தன. இரண்டாவது உலகப்போர்க் காலத்தில் இந்திய பாங்குகளின்தொழில் விரிவடைந்ததால், அயல் நாட்டினர் பாங்குகள் இந்திய பாங்கு முறையில் பெற்ற சிறப்பான இடத்தை இழந்தன. 1952-இல் இவற்றின் மொத்த டெபாசிட்டுத் தொகை 1,778 மிலியன் ரூபாய். ஆனால், இம்பீரியல் பாங்கின் டெபாசிட்டுத் தொகை 2,058 மிலியன் ரூபாய். மற்றப் பாங்குகளிடம் 9,560 மிலியன் ரூபாய் பெறுமானமுள்ள டெபாசிட்டுத் தொகை இருந்தது. 1952-இல் இந்தியாவில் இருந்த 17 அயல் நாட்டினர் பாங்குகளில் 15 ஷெடியூல் பாங்குகள், இரண்டு ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகள்; ஷெடியூலில் சேர்க்கப்படாத இரண்டு பாங்குகளும், பாக்கிஸ்தானில் தலைமை அலுவலகங்களைக் கொண்டிருந்தன. நாட்டுப் பிரிவினைக்குப் பின்பே இவை அயல்நாட்டினர் பாங்குகளாக மாறின.

இந்தப் பாங்குகளின் முக்கியமான தொழில் அயல்நாட்டு வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியுதவி செய்வதேயாகும். இவை

ஓரளவு உள்நாட்டு வர்த்தகத்திற்கும் நிதியளிக்கின்றன. மற்றப் பாங்குகளைப்போல் மக்களிடமிருந்து டெபாசிட்டுத் தொகையைப் பெறுகின்றன. 1959-60-இல் 66 கிளைகளைக் கொண்ட 16 அன்னிய நாட்டினர் பாங்குகள் இந்தியாவிலிருந்தன. டெபாசிட்டுத் தொகையில் இவை 6·9 சதவீதம் ரொக்கம் கொண்டிருந்தன. இந்திய பாங்குகள் இவற்றைவிட அதிகமான ரொக்கம் வைத்திருந்தன. மொத்த டெபாசிட்டுத் தொகையில் 86 சதவீதம் கடன் கொடுத்தல், உண்டியல்களைத் தள்ளுபடிசெய்தல் முதலியவற்றிலும் சுமார் 18 சதவீதம் பத்திர முதலீட்டிலும் முதலீடு செய்திருந்தனர். 1959-60-இல் மொத்த டெபாசிட்டுத் தொகையில் சுமார் 12 சதவீதமே இவை கொண்டிருந்தன. இவை செய்த தொழிலும் சுருங்கிவிட்டது. இந்தப் பாங்குகளில் இரண்டு, அயல்நாட்டினர் சுற்றுலாவுக்கு (Tourist Traffic) வேண்டிய நிதியளிப்பதையே முக்கிய தொழிலாகக் கொண்டிருக்கின்றன. இவற்றின் தொழிலில் பெரும்பகுதி அயல் நாடுகளிலேயே அமைந்துள்ளது. தி லாயட் பாங்க் (The Lloyds Bank), தி சார்ட்டர்டு பாங்க் ஆப் இந்தியா, ஆஸ்திரேலியா அண்டு சைனு (The Chartered Bank of India, Australia and China), தி நேஷனல் பாங்க் ஆப் இந்தியா (The National Bank of India), தி மர்க்கண்டைல் பாங்க் ஆப் இந்தியா (The Mercantile Bank of India) முதலியவை முக்கியமான பாங்குகள்.

அயல்நாட்டு வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியளிப்பதே இந்தப் பாங்குகளின் முக்கியமான அலுவலாகும். 1935 வரை இம்பீரியல் பாங்கு இந்தத் தொழிலை மேற்கொள்ளுவதைச் சட்டம் அனுமதிக்கவில்லை. ஆனால், இப்பொழுது இந்தியக் கூட்டுப்பங்குப் பாங்குகள் இத்தொழிலில் ஈடுபடலாம். சில பாங்குகள் புதியதாக இத்தொழிலை நடத்த ஆரம்பம் செய்துவருகின்றன. ஆனால், இத்துறையில் அயல் நாட்டினரோடு நாம் போட்டியிட முடியாது. நம்நாட்டுப் பாங்குகளைவிட அயல்நாட்டினர் பாங்குகள் மிகுதியான முதலுடனும், காப்பு நிதியுடனும் தொழில் நடத்துகின்றன. இலண்டன் நகரிலுள்ள தள்ளுபடி மார்க்கட்டிலிருந்து (Discount Market) இவை வேண்டிய நிதியை எளிதில் பெறமுடியும். முக்கியமான நாடுகளில் நம்நாட்டுப் பாங்குகள் கிளைகளைக் கொள்ளாததால், நாணயமாற்றுத் தொழிலை எளிதில் மேற்கொள்ள முடியவில்லை. மற்ற நாடுகளில் கிளைகளை ஆரம்பித்தால், அவை சில ஆண்டுகள் இலாபமில்லாமல் வேலை செய்யவேண்டும். இலாபமடைவதற்குமுன் பொருள் இழக்கவும் தயாராக இருக்கவேண்டும். இக்காரணங்களால் இந்தியப் பாங்குகள் இத்துறையில் குறிப்பிடத்தக்க அளவு தொழிலைப் பெருக்கவில்லை.

இந்தப் பாங்குகள் பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கும், இறக்குமதி செய்வதற்கும் வேண்டிய நிதியைக் கொடுக்கின்றன. துறைமுகங்களிலிருந்து உள்நாட்டிற்கும், உள்நாட்டிலிருந்து துறை முகத்திற்கும் பொருள்களை அனுப்புவதற்கு வேண்டிய நிதியுதவி யையும் செய்கின்றன. இந்தியாவிலிருந்து ஒருவன் இங்கிலாந் திற்குப் பண்டங்கள் ஏற்றுமதி செய்யும்பொழுது, இங்கிலாந்தில் இறக்குமதி செய்பவன் ஒரு பாங்கில் கடன் ஏற்பாடு செய்கின்றான். இந்தக் கடன் தொகை இந்தியாவில் ஏற்றுமதி செய்பவனுக்கு ஓர் உண்டியலைத் தயார் செய்வதற்கு உதவியாக இருக்கின்றது. இப்படி இந்தியர்கள் ஏற்றுமதிக்காகத் தயார்செய்யும் உண்டியல்கள் பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளும் ஆவணங்களாகவே (Documents of acceptance) இருக்கின்றன. கடன் ஏற்பாடு செய்த வுடன் இந்தியாவில் பொருள் ஏற்றுமதி செய்பவன் ஓர் உண்டி யலைத் தயார்செய்து இங்கிலாந்திற்கு அனுப்புகிறான். இந்த உண்டியலையும் மற்ற இறக்குமதி பற்றிய ஆவணங்களையும் இங்கி லாந்திலுள்ள பாங்கு மூலம் இறக்குமதி செய்பவன் பெற்றுக்கொள் கிறான். ஏற்றுக்கொள்ளப்பட்டபின் இந்த உண்டியல்களை இலண்டன் தள்ளுபடி மார்க்கட்டில் தள்ளுபடி செய்யலாம். இந்தப் பாங்கின் கிளை இந்தியாவில் ஏற்றுமதி செய்தவனுக்குச் செலுத்தவேண்டிய தொகையைச் செலுத்தும். இந்த உண்டியல்கள் சாதாரணமாக மூன்றுமாதத் தவணை உண்டியல்களாகும். இவை பெரும்பாலும் ஸ்டெர்லிங் உண்டியல்கள். பாங்குக்கு உடனடியாகப் பணம் தேவையாக இருந்தால், உண்டியல்களை இலண்டன் தள்ளுபடி மார்க்கட்டில் தள்ளுபடி செய்யலாம். இல்லையேல், தவணைக்காலம் முடியும்வரை அவற்றை வைத்திருந்து, பிறகு பணத்தை வசூல் செய்துகொள்ளலாம். ஐரோப்பிய அமெரிக்க நாடுகளுக்கு ஸ்டெர்லிங் உண்டியல்கள் மூலமே ஏற்றுமதி செய்யப்படுகின்றது. ஜப்பான் நாட்டுக்கு ஏற்றிமதி 'யென்' (Yen) உண்டியல்கள் மூலமாகவும், சீனாவுக்கு ரூபாய் உண்டியல்கள் மூலமாகவும் செய்கின்றனர்.

இறக்குமதி சற்று வேறுபட்ட முறையில் நிதியளிக்கின்றன. இரண்டு மாதத் தவணை உண்டியல்களையும், செலுத்தும் ஆவணங் களையும் (Documents of payments) இதற்குப் பயன்படுத்து கின்றனர். இங்கிலாந்தில் ஏற்றுமதி செய்கின்றவன்தான் இந்தி யாவுக்கு அனுப்பும் பொருள்களைப் பாங்குக்கு அடைமானமாக அனுப்புகின்றான். ஓர் உண்டியலைத் தயார்செய்து ஏற்றுமதிச் சரக்கு ஆவணங்களுடன் (Bill of lading) அதை இந்தியாவில் பாங்குக்கு அனுப்புகின்றான். உண்டியலில் குறிப்பிட்ட தொகை பாங்குக்குச் சொந்தமாகிவிடுகின்றது. இறக்குமதி செய்பவன்

உறுதி ரசீதைப் (Trust receipt) பாங்குக்குக் கொடுத்து, ஆவணங்களைப் பெற்று, இறக்குமதிச் சரக்குகளைப் பெறுகின்றான். இவற்றை விற்பனைசெய்து, பாங்குக்குத் தொகையைச் செலுத்துகின்றான். இங்கிலாந்திலுள்ள பாங்கு இதைத் தள்ளுபடி செய்வதால், ஏற்றுமதி செய்பவன் வேண்டிய தொகையைப் பெறுகின்றான். புதிய இறக்குமதியாளர்களுடைய நாணயத்தையும், தொழிலையும்பற்றிப் பாங்குகள் ஒன்றும் தெரியாத நிலையிலிருந்தால், அவர்களிடம் உறுதி ரசீதைப்பெற்று ஆவணங்களைக் கொடுக்க மறுக்கலாம். இறக்குமதி செய்பவர்கள் சரக்குகளைப் பாங்கின் வசமே விட்டு, அவ்வப்போது விற்பனை செய்தவுடன், சரக்குகளைப் பாங்குகளின் கிடங்குகளிலிருந்து பெற்று, விற்பனைத் தொகையைச் செலுத்தலாம். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை இந்தியாவிற்குச் சாதகமாக இருக்கும்பொழுது, இறக்குமதி உண்டியல்களைவிட ஏற்றுமதி உண்டியல்களே அதிகம் இருக்கும். இந்த நிலையில் பாங்குகள் இந்தியாவிற்குப் பொன், வெள்ளி போன்ற உலோகங்களை அனுப்பும். இந்தப் பாங்குகள் துறைமுகங்களிலிருந்து உள்நாட்டிற்கும், உள்நாட்டிலிருந்து துறைமுகங்களுக்கும் பொருள்களை அனுப்புவதற்கு வேண்டிய நிதியுதவியும் செய்கின்றன. உதாரணமாக, டில்லி போன்ற இடங்களில் உள்ள வியாபாரிகள் அயல் நாட்டுப் பொருள்களை இறக்குமதி செய்யும்பொழுது பொருள்களை டில்லியிலேயே கிடங்குகளில் வைத்துக்கொள்ளவேண்டும். அயல் நாட்டில் பொருள் ஏற்றுமதி செய்தவன் தயார்செய்த உண்டியலை டில்லியிலுள்ள பாங்கின் கிளைக்கு அனுப்புவான். உண்டியல் தொகையை இந்தப் பாங்கு வசூல் செய்யவேண்டும். இந்தப் பாங்குகள் இல்லாத இடங்களுக்குப் பண்டங்களை அனுப்புவதற்கு வேண்டிய நிதியை இந்திய பாங்குகள் கொடுக்கின்றன. சுதேச பாங்குகளும் கொடுக்கின்றன.

அயல்நாட்டு வாணிகத்திற்கு வேண்டிய நிதியுதவி செய்வதே, இந்தப் பாங்குகளின் முக்கியமான தொழில். இவை மற்றப் பாங்குத் தொழில்களையும் மேற்கொள்கின்றன. டெபாசிட்டுத் தொகைகளை மற்றப் பாங்குகளைப் போல் பெற்றுக் கடன் கொடுக்கின்றன. மார்வாரி பாங்கர்களுக்கு (Marvari Bankers) பண்டங்களை அடைமானமாகக் கொண்டு கடன் கொடுக்கின்றன. அவர்களுடைய உண்டியல்களைத் தள்ளுபடி செய்கின்றன. உலோகங்களை இறக்குமதி செய்வதற்குவேண்டி நிதியையும் அளிக்கின்றன.

அயல்நாட்டினர் பாங்குகள் இந்தியாவில் மிகுதியான தொழில் செய்து கணிசமான இலாபம் பெறுகின்றன. ரூபாயின் மதிப்பு நிலையற்றதாயிருந்தால், இந்தப் பாங்குகளின் தொழில்

பாதிக்கப்படும். ஆனால், ஸ்டெர்லிங் நாணயத் திட்டத்தில் இது மாறுமல் இருப்பதால், இவை நல்ல முறையில் தொழில் நடத்து கின்றன. மேலும், உள்நாட்டில் பாங்குத் தொழிலை நடத்துவதாலும் இவை மிகுதியான இலாபம் பெறுகின்றன. இவை சிறந்த முறையில் தொழில் நடத்துவதால், மற்றப் புதிய பாங்குகள் இவை களுடன் போட்டியிடுவது எளிதல்ல. ஆகையால், நாணயமாற்றுத் துறையில் அதிகப் போட்டியில்லாமல் பழைய பாங்குகள் தொழில் செய்கின்றன. இவைகளுடைய எண்ணிக்கை மிகுதியாகவில்லை.

1949-ஆம் ஆண்டு வரை இந்தப் பாங்குகளை அரசினர் எந்த விதத்திலும் கண்காணிக்கவில்லை. இவற்றின் நிருவாகி களும், பங்குதாரர்களும் அயல்நாட்டினர். இவை இருப்பு நிலைக் குறிப்பை அவ்வப்போது வெளியிடவில்லை. ஆண்டுதோறும் இவை அரசினருக்கு அனுப்பும் இருப்புநிலைக் குறிப்பு, இவற்றின் தொழில், டெபாசிட்டுத் தொகை, முதல் முதலிய விவரங்களைத் தெளிவாக எடுத்துக் காட்டவில்லை. இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும், நடத்தும் தொழிலைத் தனித்தனியாக எடுத்துக் காட்டவில்லை. இக்குறைகளைப் பாங்கு விசாரணைக் குழுவினரிடம் பலர் விளக்கினர்.

இவை வேண்டிய அளவு ரொக்கக் காப்பு நிதியுடன் தொழில் செய்யவில்லை. இவற்றை நிருவகிக்கும் அயல்நாட்டினர் இந்தியர் களிடம் டெபாசிட்டுத் தொகையைப் பெற்று நம் நாட்டுப் பாங்கு களுடன் போட்டியிடுவதோடல்லாமல், நம் நாட்டினருக்கு அயல் நாட்டு வர்த்தகத்தில் சலுகைகள் கொடுக்கவில்லை. அயல் நாட்டினர் ஏற்றுக்கொள்ளும் ஆவணங்கள் மூலம் இறக்குமதி செய்தனர். ஆனால், நம் நாட்டினர் இறக்குமதிக்குச் செலுத்தும் ஆவணங்களையே பயன்படுத்த முடிந்தது. அதாவது, இந்தப் பாங்குகள் அயல்நாட்டினருக்கு இறக்குமதிக்கு வேண்டிய கடன் உதவி செய்தனர். நம் நாட்டினர் ரொக்கப்பணம் செலுத்தியே இறக்குமதிசெய்ய முடிந்தது. ஆனால், இப் பாங்கு நிருவாகிகள், அயல்நாட்டு ஏற்றுமதியாளர்கள் உத்தரவின்றி இந்தியர்களுக்கு ஏற்றுமதி ஆவணங்களைக் கொடுக்க முடியாதென்றும், அதற்குப் பதி லாக உறுதி ரசீது மூலம் இந்தியர்களுக்குப் பாங்குகள் வசதிகள் அளிக்கின்றனவென்றும் கூறினர்.

இவை அயல்நாட்டினருக்குக் கொடுத்த சலுகைகளை இந்திய ருக்குக் கொடுக்கவில்லை. இவை மேலும் இன்சூரன்சு (Insurance), தரகு (Brokerage) முதலியவற்றில் அயல்நாட்டுத் தொழிலையே ஆதரிக்கவேண்டுமென்று இந்திய வியாபாரிகளை வற்புறுத்தினர்.

இந்த அயல் நாட்டினர் பாங்குகள் இல்லாவிடில் இறக்குமதி, ஏற்று மதி உண்டியல்களை நம்நாட்டுப் பாங்குகளே பெறும். அவற்றின் தொழில் விரிவடையும். இந்த உண்டியல்கள் ரொக்க நிலையுடைய தால், பாங்குகளிடம் உள்ள பணத்தைச் சிறந்த முறையில் முதலீடு செய்ய நல்ல வாய்ப்பளிக்கும். இந்த உண்டியல்கள் ஸ்டெர்லிங் உண்டியல்களானதால் இந்திய பணமார்க்கெட்டில் இவைகளைத் தள்ளுபடிசெய்ய முடியாது. எனவே, தள்ளுபடி நிலையங்களும் (Discount Houses), பணமார்க்கட்டும் நம் நாட்டில் நல்ல வளர்ச்சி பெறவில்லை.

உள் நாட்டு வர்த்தகம் அயல்நாட்டு வாத்தகத்தைவிடப் பன் மடங்கு மிகுதியாக இருந்ததால், இந்திய பாங்குகளுக்கு நல்ல தொழில் வாய்ப்பு கிடைக்கும் என்று மையப் பாங்கு குழுவினர் கருதினர். ஆனால், இதிலும் அயல் நாட்டினர் பாங்குகள், இந்திய பாங்குகளுடன் போட்டியிட்டன. அயல்நாட்டு வர்த்தகத் தொழி லுக்கு வேண்டியதைவிட மிகுதியான தொகைகளை இவை டெபா சிட்டு மூலம் பெற்றன. ஆகையால், இந்திய பாங்குகளின் தொழில் கணிசமான அளவு குறைந்தது. அவைகளின் வளர்ச்சியும் பாதிக் கப்பட்டது. செக்குத் தீர்வகத்தில் (Clearing House) இந்திய பாங்குகளை முடிந்த வரை அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ள மறுத்தன. இவை இந்திய பாங்குகளுடன் ஒத்துழைக்கவில்லை. அழைப்புக் கடனை (Call money) இவை இந்திய பாங்குகளிடம் பெற்ற அளவு, அவைகளுக்கு வேண்டியபொழுது கொடுக்கவில்லை. இவை இந்தியர்களுக்கு உயர்ந்த பதவிகளைக் கொடுக்கவில்லை. அவர்களுக்கு அயல்நாட்டு வர்த்தகத் துறையிலும், நாணயமாற்றுத் துறையிலும் பயிற்சியையும் கொடுக்கவில்லை. குறைந்த வட்டியில் இவை இந்தியாவில் நிதி திரட்டுகின்றன. இலண்டன் தள்ளுபடி மார்க்கட்டில் குறைந்த வீதத்தில் தள்ளுபடி செய்கின்றனர். ஆனால், இப்படிச் செய்வதன் பயன் இந்தியர்களுக்குக் கிட்டவில்லை.

எல்லா நாடுகளிலும் இந்தப் பாங்குகள் சில கட்டுப்பாடுகளுக் குட்பட்டிருந்தன. இந்தியாவில்மட்டும் இவைகளுக்கு எந்த விதக் கட்டுப்பாடும் இல்லை. ஆகையால், இவைகளைக் கண்காணிக்க ஓர் ஏற்பாடு செய்யவேண்டுமென்று பலர் மையப் பாங்கு விசாரணைக் குழுவினரிடம் முறையிட்டனர். இக்குழுவினர் நாணயமாற்றுப் பாங்குகள் ரிசர்வ் பாங்கின் அனுமதி பெற்றே இந்தியாவில் தொழில் செய்யவேண்டுமென்றும், நாட்டில் பணியாற்றும் எல்லாப் பாங்கு களுக்கும் அனுமதி கொடுக்கவேண்டுமென்றும், புதிய பாங்குகளை அனுமதியின்றி நிறுவக்கூடாதென்றும் முடிவு செய்தனர். இந்த அனுமதியைக் குறிபிட்ட காலத்திற்கே வழங்கவேண்டுமென்றும்,

பாங்குகள் சரிவரப் பணியாற்றினுல் அனுமதியை நீட்டிக்கலாம் என்றும் குழுவினரில் பெரும்பான்மையோர் கருதினர். இந்திய டெபாசிட்டுதார்களுடைய நலன்களைக் காப்பாற்றுவதற்கு இந்தக் கட்டுப்பாடுகள் வேண்டியிருந்தன.

குழுவினர் இந்தப் பிரச்சினையை நன்கு ஆலோசித்துச் சில சிபாரிசுகளைச் செய்தனர். பாங்குகள் ஒவ்வொரு கிளைக்கும் ஒரு குழு ஏற்படுத்தவேண்டும். இந்தக் குழுவினர் ஆங்காங்கே உள்ள வர்த்தக நிலையை ஆராய்ச்சி செய்து, பாங்குகள் யார் யாருக்கு எந்த விதங்களில் கடன்வசதியளிக்கலாமென்பதைப் பாங்குகளுக்கு தெளிவாக எடுத்து விளக்கலாம். இப்படிச் செய்தால், இந்தியர்கள் இந்தப் பாங்குகளை நன்கு பயன்படுத்திக்கொள்ளலாம். அயல்நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்பவர்கள் உண்டியல்களை இந்தியச் செலாவணியிலேயே தயார் செய்யவேண்டுமென்று விரும்பினுல், அப்படிச் செய்வதற்கு இந்தப் பாங்குகள் வசதியளிக்கவேண்டும். இந்தியாவில் ஒரு புதிய மையப் பாங்கை நிறுவனம் செய்தபின், பணமார்க்கட்டும், தள்ளுபடி வசதிகளும் ஏற்படுமென்று பலர் கருதினர். பாங்குகள் பின்பற்றும் முறைகளை மாற்றியமைப்பதற்குமுன் நம்நாட்டிலும் அயல்நாடுகளிலும் உள்ள வியாபாரிகளைக் கலந்தாலோசிக்கவேண்டும். இந்தியாவில் இறக்குமதி செய்பவர்களுடைய உண்டியல்களை இந்தப் பாங்குகள் ஏற்றுக்கொண்டு இவற்றை, இலண்டன் பணமார்க்கட்டில் தள்ளுபடி செய்வதற்கு வசதியளிக்க முயற்சிசெய்யவேண்டும். இந்தியர்களுக்கு நல்ல பயிற்சியளித்து அவர்களை உயர்ந்த பதவிகளில் அமர்த்த வேண்டும்.

ரிசர்வ் பாங்கின் அனுமதியைப்பெற இவை ஆண்டுதோறும் தம் செலவு, சொத்துபற்றிய விளக்கமான அறிக்கையை அந்தப் பாங்குக்கு அனுப்பவேண்டும். இந்தியாவில் செய்யும் தொழிலையும், அயல்நாட்டுத் தொழிலையும் பாகுபாடு செய்து விளக்கமாக அறிக்கையில் காட்டவேண்டும். எல்லாப் பாங்குகளுக்கும் தடையற்ற முறையில் அனுமதி வழங்குதல் சரியல்ல என்று மநு சுபேதார் என்பவர் கருதினுர். இந்தியர்கள் செய்யும் தொழிலை ஆதரிக்க வேண்டுமானுல் அயல் நாட்டினரின் போட்டியைக் குறைக்க வேண்டும். ஆகையால், அனுமதி வழங்கும்பொழுது அயல்நாட்டுப் பாங்குகளைப் பல கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தவேண்டுமென்று இவர் வற்புறுத்தினுர்.

இவருடைய கருத்துக்களை இங்குக் காண்போம். இந்தப் பாங்குகள் தம்தொழிலுக்கு வேண்டிய நிதியில் குறைந்தது பாதியைத்

தம் நாடுகளிலேயே சேகரித்துக்கொள்ளவேண்டும். இந்தியர்களின் அயல் நாட்டு வர்த்தகத்திற்கு வேண்டிய தொகையையே இந்தியாவில் டெபாசிட்டுகள்மூலம் பெற்றுக் கொள்ளலாம். இந்திய முதலுடன் நம் நாட்டில் தோன்றிய பாங்குகளே டெபாசிட்டுத் தொகையப்பெற அனுமதிக்கப்படவேண்டும். இந்தக் கட்டுப்பாடு இல்லாததால் நம்நாட்டில் டெபாசிட்டுத் தொகையைப் பெற்று, இந்திய பாங்குகளுடன் இவை போட்டியிடுகின்றன. இந்திய பாங்குகளைவிடச் சிறந்த முறையில் இவை பணியாற்றுவதால் டெபாசிட்டுக்களை மக்களிடமிருந்து மிகுதியான அளவில்பெற்று விட்டன என்று சொல்ல முடியாது. அயல்நாட்டு வர்த்தகத்தில் சில வசதிகளைப் பெறுவதற்காகவே இந்தியர்கள் இவைகளிடம் டெபாசிட்டுத் தொகையை வைத்துக்கொண்டனர். இப்படிச் செய்வ தால் இந்தப் பாங்குகள் பாதிக்கப்படமாட்டா. தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைத் தங்கள் நாட்டிலேயே திரட்டிக்கொள்ளலாம் என்று மநுசுபேதார் கருதினர். ஆனல், இக்கூற்றினை மையப் பாங்கு விசாரணைக் குழுவினர் ஏற்றுக்கொள்ளவில்லை.

துறைமுகப் பட்டினங்களைத் தவிர மற்ற ஊர்களில் அயல் நாட்டினரின் பாங்குகள் கிளைகளைக் கொள்ளக்கூடாதென்றும் மநுசுபேதார் கூறினர். இவை உள் நாட்டில் பல கிளைகளை ஆரம்பித்ததால் இந்திய பாங்குகளின் தொழில் குறைந்துவிட்டது. இந்தப் பாங்குகள் உள் நாட்டில் கிளைகளை ஆரம்பிக்கக்கூடா தென்று முடிவு செய்தால், இந்தியர்களின் அயல்நாட்டு வர்த்தகம் பாதிக்கப்படுமென்று குழுவினர் அஞ்சினர். ஆகையால், மநுசுபே தாரின் இக்கருத்தையும் குழுவினர் ஏற்றுக்கொள்ளவில்லை.

நம் நாட்டின் அயல்நாட்டு வர்த்தகம் வளரவேண்டுமென்றல், அதற்கு வேண்டிய நிதியுதவி செய்யப் பல பாங்குகள் வேண்டும். இந்த வசதிகளுக்கு நாம் அன்னியர்களையே எதிர்பார்த்திருப்பது சரியல்ல. இந்தியர்கள் இத்துறையில் முன்னேறவேண்டுமென் பதை மையப் பாங்கு விசாரணைக் குழுவினர் உணர்ந்தனர். நீண்ட காலத்திற்கும், போதிய அளவிலும் அன்னிய நாட்டினர் பாங்குகள் இந்தியர்களுக்குக் கடன்வசதி யளிக்கவில்லை. ஜெர்மனி, ஜப்பான்போன்ற நாடுகளில் ஆங்கிலேயர் உதவியை எதிர்ப்பார்க் காமல் மக்கள் பாங்குகளை ஆரம்பித்துத் தாராளமாகக் கடன் வசதி யளித்ததால், அவர்களுடைய அயல்நாட்டு வர்த்தகம் பெருகியது. ஆகையால், இந்தியக் கூட்டுப்பங்குப் பாங்குகளும் விரைவில் நாணயமாற்றுத் தொழிலை ஆரம்பிக்கவேண்டுமென்று குழுவினர் உணர்ந்தனர். இந்திய பாங்குகள் இந்த வேலையைத் தொடங்கிய பின்னர், அரசினரும் அரசாங்கத் தொடர்புகொண்ட மற்ற நிலையங்

களும் இவைகளை ஆதரிக்கவேண்டும். இந்த வேலையை மேற்கொண்ட சில இந்திய பாங்குகள் பல இடையூறுகள் இருந்த போதிலும், சிறந்த முறையில் தொழிலை நடத்தியதால் மற்றப் பாங்குகளும் இத்துறையில் வெற்றி காணலாம். இந்தியர்கள் இத்துறையில் அயல் நாட்டினருடன் போட்டியிட ஆரம்பித்ததிலிருந்து அயல்நாட்டுப் பாங்குகள் உண்டியல் தவணைக் காலத்திற்கு வசூல் செய்யும் வட்டி வீதத்தைக் குறைத்தனர். இந்தப் போட்டியின் விளைவாக முன்னிலும் இவை இந்தியர்களுக்குச் சற்றுச் சாதகமான முறையிலேயே தொழில் நடத்தவேண்டியதாயிற்று. அரசினருடைய நாணயமாற்று வேலையை மேற்கொள்ள வேண்டிய நிதியை இந்திய பாங்குகள் கொண்டிருந்தன. அன்னிய நாட்டினர் பாங்குகள், தங்கள் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெரும்பாலும் இந்தியாவில் டெபாசிட்டுகள்மூலமே பெற்றன. இவைகளைவிட மிகுதியான டெபாசிட்டுத் தொகையைப்பெற்ற இந்திய பாங்குகள் நாணயமாற்றுத் தொழிலை வெற்றிகரமாக நடத்தலாம்.

இந்திய பாங்குகளின் நாணயமாற்றுத் தொழில் படிப்படியாகப் பெருகிக்கொண்டே சென்றதால், இவை பல நாடுகளில் கிளைகளை ஆரம்பித்தன. முன்பு கிளைகள் இல்லாத காரணத்தால் மற்றப் பாங்குகள் மூலம் தம் பணியைச் செய்யவேண்டியிருந்தது. ஆனால், இந்த நிலை இப்பொழுது மாறி வருகின்றது. இதிலிருந்து இந்திய பாங்குகள் எதிர்காலத்தில் எப்படி இத்துறையில் முன்னேறலாம் என்பது தெளிவாகின்றது. அரசினர் இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளுடன் கணிசமான அளவு நாணயமாற்றுத் தொடர்புகொண்டிருக்கின்றனர். இந்திய பாங்குகள் அரசாங்கத்தின் ஆதரவுடன் விரைவில் முன்னேறலாம்.

சிலர், அரசினர் இந்திய நாணயமாற்றுப் பாங்கு ஒன்றை ஆரம்பம் செய்யவேண்டுமென்ற கருத்தை மையப் பாங்குக் குழுவினரிடம் தெரிவித்தனர். இந்தப் பாங்குக்கு மூன்று கோடி ரூபாய் ஒப்பிய முதல் வேண்டுமென்றும் இவர்கள் கருதினர். இம்பீரியல் பாங்கு நாணய மாற்றுத் தொழிலை மேற்கொள்ளவேண்டுமென்று குழுவினர் செய்த சிபாரிசை இவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

சிலர் மையப் பாங்கு விசாரணைக் குழுவினரிடம் "கூட்டுப் பாங்குகளை" (Joint Banks) ஆரம்பிக்கலாமென்று சொன்னார்கள். இந்தியர்களும், இந்தியா வர்த்தகத் தொடர்புகொண்ட மற்ற நாட்டினரும் இந்தப் பாங்குகளை நிருவாகம் செய்யலாம். இந்தப் பாங்குகளை ஆரம்பித்தால், நம் நாட்டினருக்கும் அயல்நாடுகளுக்கும்

உள்ள போட்டி மறைந்து கூட்டுறவு வளரும். இந்தக் கூட்டுறவு முறையை இக்குழுவினர் ஏற்றுக்கொண்டனர்.

ஆனால், மையப் பாங்கு விசாரணைக் குழுவினரது சிபாரிசுகளை அமுலில் கொண்டுவரவில்லை. ஆகையால், 1930-இல் இருந்த நிலைமையில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் எவையும் ஏற்படவில்லை. 1954-இல் ரிசர்வ் பாங்கு வெளியிட்ட புள்ளி விவரங்கள் எப்படி நமது அயல்நாட்டு வர்த்தகம் அன்னியப் பாங்குகள்வசமே இருந்து வருகிறதென்பதைத் தெளிவாகக் காட்டுகின்றது. அயல் நாட்டு வர்த்தகத்தில் 75 சதவீதம் அன்னிய பாங்குகளின் நிதியுதவியைக்கொண்டே நடைபெறுகின்றது. இதில் இந்தியர்களின் பங்கு மிகக் குறைவாக இருக்கின்றது. மொத்த இறக்குமதியில் 22·6 சதவீதமும், ஏற்றுமதியில் 23·1 சதவீதமும் நமது பாங்குகள் மூலம் நடைபெறுகின்றன. இறக்குமதியில் சுமார் 60 சதவீதமும் ஏற்றுமதியில் சுமார் 54 சதவீதமும் ஆங்கிலேயப் பாங்குகள் மூலம் நடைபெறுகின்றன.

அயல்நாட்டுப் பாங்குகள், 1949-ஆம் ஆண்டுப் பாங்குக் கம்பெனிச் சட்டத்திற்குட்பட்டவை. இந்திய டெபாசிட்டர்கள் நலனைக் காப்பாற்றுவதற்காகச் சில சிறப்பான கூறுகளை இந்தச் சட்டத்தில் சேர்த்திருக்கின்றனர். அயல் நாட்டுப் பாங்குகள் குறைந்த பட்சம் 15 லட்ச ரூபாய் செலுத்திய முதலைக் கொண்டிருக்க வேண்டும். பம்பாய், கல்கத்தா நகரங்களில் அலுவலகங்கள் இருந்தால், இவை 20 லட்ச ரூபாய் செலுத்திய முதலைக்கொண்டிருக்க வேண்டும். இந்தப் பாங்குகள் கலைக்கப்பட்டால், இவை ரிசர்வ் பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டுத் தொகையை இந்திய டெபாசிட்டர்களுக்கு இழப்பு ஈடாகக் கொடுக்கப் பயன்படுத்துவர். 1949-ஆம் ஆண்டுச் சட்டப்படி இவை டெபாசிட்டுத் தொகையில் 75 சதவீதம் மதிப்புள்ள சொத்துக்களை இந்தியாவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

## 5. தொழிலுக்கான நிதி

உள்நாட்டு வர்த்தகத்திற்கும் அயல்நாட்டு வர்த்தகத்திற்கும் பாங்குகள் எப்படி நிதியுதவியளிக்கின்றன என்பதை இதுவரை கவனித்தோம். தொழிலுக்கு அவை வேண்டிய அளவு நிதியைக் கொடுக்கவில்லை, தொழிலுக்கு நீண்டகாலக் கடனும், நிதியுதவியும் வேண்டும். குறுகிய காலத்துக்கு டெபாசிட்டுக்களைப் பெற்றுத் தொழில் செய்யும் பாங்குகள், நீண்ட காலக் கடன் கொடுப்பது சரியல்ல. ஜெர்மனியில் பழய காலத்தில் கலப்புப் பாங்கு முறை (Mixed Banking) இருந்தது. அதாவது, பாங்குகள் வர்த்தகத்திற்கு, வேண்டிய குறுகிய காலக் கடனைக் கொடுப்பதோடல்லாமல், தொழிலுக்குவேண்டிய நீண்டகாலக் கடனையும் கொடுக்கும். ஆனால், இது செம்மையான பாங்கு முறையாகாது. சிறந்த பாங்கு முறையில் சொத்துக்கள் ரொக்க நிலையில் இருக்கவேண்டும். வர்த்தகத்திற்கு நிதியளிப்பதே பாங்குகளின் முக்கியமான அலுவலாகும். ஆகையால், மையப் பாங்கு விசாரணைக் குழுவினர் இந்தியாவில் ஒரு தொழில் நிதிக் கார்ப்பரேஷனை (Industrial Finance Corporation) ஆரம்பிக்கவேண்டுமென்று சிபாரிசு செய்தனர்.

கட்டடங்கள், நிலம், இயந்திரங்கள் முதலிய சொத்துக்களைப் பெறுவதற்கும், நடைமுறைச் செலவுக்கும், தொழில்களுக்கும் முதல் வேண்டும். நீண்டகால நிதியுதவியும் வேண்டும். புதிய தொழில்களை ஆரம்பிப்பதற்கும், பழய தொழில்களைப் பெருக்குவதற்கும் நிதி இன்றியமையாதது. பல ஆண்டுகள் தொழிற்றுறையில் ஈடுபட்டிருக்கும் பெரிய நிறுவனங்கள் தங்களுக்கு வேண்டிய நிதியை எளிதில் பெறமுடியும். அவற்றின் இருப்புநிலைக் குறிப்பு, அவை சிறந்த முறையில் அமைந்துள்ளன என்பதை விளக்குவதால், பாங்குகள் அவைகளுக்குக் கடன்வசதி யளிக்கின்றன. அவற்றின் ரொக்கநிலைச் சொத்துக்களை அடைமானமாக ஏற்றுக்கொண்டு நடைமுறைச் செலவுக்கு வேண்டிய நிதியைப் பாங்குகள் கொடுக்கின்றன. இந்தியாவில் தொழில் நடத்தும் ஐரோப்பியர்கள் அன்னிய நாட்டி

னர் பாங்குகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டதால் அவை களிடம் வேண்டிய நிதியைப் பெறுகின்றனர்.

ஆனால், புதியதாகத் தொழில் நிறுவனங்களை ஆரம்பிப்பதற்கு வேண்டிய அளவு நிதி கிடைப்பதில்லை. பழைய தொழில்களுக்குக் கூடச் சில சமயங்களில் போதிய நிதி கிடைப்பதில்லை. நடுத்தர வகுப்பினரும் விவசாயிகளும் தம் சேமிப்பை அரசினர் பத்திரங்கள், வீடுகள், நிலங்கள், நகைகள் முதலிய சொத்துக்களை வாங்குவ தற்கே பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். தொழிற் பத்திரங் களையும் (Industrial securities) பங்குகளையும் வாங்குவதற்கு இவர்களுக்கு வாய்ப்புக்கள் இல்லை. மேலும், இவர்கள் தம் நிதிக்கு எந்தவித ஆபத்தும் வராத முறையில் முதலீடுசெய்ய விரும்பு கின்றனர். சென்னை, கல்கத்தா, பம்பாய் நகரங்களைத்தவிர வேறு இடங்களில் இந்தப் பங்குகளை விற்பனை செய்யவும், வாங்கவும் வசதிகள் கிடையா.

மேல் நாடுகளில் இன்சூரன்ஸ் கம்பெனிகள் போன்ற நிறுவ னங்கள் தம் நிதியில் ஒரு பகுதியைப் பங்குகள் முதலீட்டில் செலவு செய்கின்றன. ஆகையால், தொழில் நிறுவனங்கள் வேண்டிய நிதியைப் பெறுகின்றன. ஆனால், இந்தியாவில் இந்த நிறுவ னங்கள் பெரும்பாலும் தங்கள் பணத்தை அரசினர் பத்திர முதலீட் டிலே செலவு செய்கின்றன. இந்திய முதலீட்டுக் கம்பெனிகள் (Investment companies) தொழிலுக்குப் போதிய நிதியுதவி செய்ய வில்லை. ஆகையால், மேல் நாடுகளைப்போல் நம்நாட்டில் பழைய தொழில் நிறுவனங்களும், புதிய நிறுவனங்களும் தமக்குவேண்டிய நிதியை எளிதில்பெற முடியவில்லை.

இந்தியாவில் தொழில் நிறுவனங்களை ஆரம்பித்தவர்கள் சாதாரணமாகப் பங்குகள், டிபஞ்சர்கள் முதலியவற்றை வெளி யிட்டு அவைமூலம் வேண்டிய முதலைப் பெறுகின்றனர். ஆனால், இவர்கள் மேல்நாடுகள்போல் டிபஞ்சர்களை அதிகமாகப் பயன்படுத்த வில்லை. மையப் பாங்குக் குழுவினரிடம் அயல்நாட்டு வல்லுநர்கள், நம்நாட்டுத் தொழிலகங்கள் தங்களுக்கு வேண்டிய மொத்த முதலை யும், நடைமுறை முதலையும் டிபஞ்சர்கள் மூலம் பெறவேண்டுமென்று கூறுவர். தொழிலகங்கள் கலைக்கப்பட்டால் அவற்றின் சொத்துக் களில் முதல் உரிமை டிபஞ்சர்களைக் கொண்டவர்களுக்கே உரித்தா கும். ஆகையால், டிபஞ்சர்களை வெளியிடும் தொழிலகங்கள் பாங்கு களிடம் எளிதில் நிதியுதவி பெறமுடியாது. மேலும், டிபஞ்சர்கள் மூலம் அவை போதிய தொகையைப் பெறுவது கடினம். ஆகை யால், பெரிய நிறுவனங்களே டிபஞ்சர்கள்மூலம் எளிதில் வேண்டிய நிதியைப்பெற முடியும்.

நம் நாட்டில் பாங்குகள் டிபஞ்சர்களை விற்பனை செய்வதில் ஊக்கம் காட்டவில்லை. அயல்நாடுகளில், குறிப்பாக ஜெர்மனியில் இந்த டிபஞ்சர்கள் பெரும்பாலும் பாங்குகள் மூலமே விற்பனையாகின்றன. தரகர்களும், டிபஞ்சர் விற்பனையில் அக்கறை கொள்ளவில்லை. ஏனெனில், இவைகள் ஊக வாணிகத்துக்கு ஏற்றவையல்ல. டிபஞ்சர்களை விற்பனை செய்யும்பொழுது ஸ்டாம்பு வரி (Stamp duty) செலுத்தவேண்டும். இதனால் பாங்குகள்கூட டிபஞ்சர்களை அதிகமாகத் தம் சொத்துக்களாக வைத்துக்கொள்ளவில்லை. இம்பீரியல் பாங்கு டிபஞ்சர் உபயோகத்தைப் பெருக்கவில்லை. ஆறு மாதத் தவணைக்குமேல் இந்தப் பாங்கு தொழிற் பத்திரங்களையும், பங்குகளையும் அடக்க அடைமானமாகக்கொண்டு கடன் கொடுப்பதைச் சட்டம் அங்கீகரிக்கவில்லை. ஆனால், இப்பொழுது ஸ்டேட் பாங்கு வரையிட்ட பொறுப்பின் அடிப்படையில் அமைந்த தொழிலகங்களின் டிபஞ்சர்களில் நிதியை முதலீடு செய்யலாம். இப்படி முதலீடுசெய்ய மைய நிருவாகக் குழுவின் அனுமதி வேண்டும். நம் நாட்டுப் பாங்குகள் தொழில் நிறுவனங்களுக்கு, ரொக்க நிலைச்சொத்துக்களை அடைமானமாகக்கொண்டு போதிய நிதியைக் கடனாகக் கொடுக்கவில்லை. இவை தொழிலகங்களின் நிலையான முதலையும், அவற்றின் நிருவாகிகளின் நாணயத்தையும் கடன் வசதிகள் கொடுப்பதற்குப் பயன்படுத்தவில்லை. வல்லுநர்கள் மூலம் தொழிலகங்களின் சொத்துக்களை மதிப்பீடுசெய்து, அவற்றைப் பாங்குகள் அடைமானமாகப் பயன்படுத்தவேண்டும். இப்படிச் செய்தாலன்றி, தொழிலகங்கள் போதிய நிதியுதவியைப் பாங்குகளிடம் பெற முடியாது. இந்தியாவில் பாங்குகள், தொழிலுக்கு மிகக் குறைந்த அளவே நிதியுதவி செய்கின்றன. ஆகையால், தொழில் நிறுவனங்கள் மக்களிடமிருந்து நிதியைப்பெறப் பாங்குகளுடன் போட்டியிடவேண்டியிருக்கின்றது.

பாங்குகள் மிகக் குறைந்த அளவிலேயே தொழிலகங்களுக்குக் கடன் வசதியளிக்கின்றன என்று பார்த்தோம். இந்தக் குறைந்த அளவு நிதியையும், அவை குறுகிய காலத்துக்கே கடனாகக் கொடுக்கின்றன. தொழிலுக்கு நீண்டகாலக் கடன் இன்றியமையாதது. இப்படிப் பாங்குகளிடம் பெறும் கடனுக்குத் தொழில் நிறுவனங்கள் உயர்ந்த வட்டிவீதம் கொடுக்கவேண்டியிருக்கிறது. ஆகையால், பம்பாய், ஆமதாபாத் நகரங்களிலுள்ள பஞ்சாலைகள் மக்களிடம் நேரிடையாக டெபாசிட்டுத் தொகைகளைப் பெற்றன. இவை இந்த டெபாசிட்டுத் தொகைக்கு ஆறு முதல் பன்னிரண்டு சதவீதம் வரை வட்டி கொடுத்தன. ஆனால், இப்பொழுது இவை இந்த முறையில் அதிகமான தொகைகளைப் பெறமுடியவில்லை. ஆனால், இந்தப் பஞ்சாலைகளிடமிருந்து மக்கள் மிகுதியான டெபாசிட்டுத் தொகை

யைத் திரும்பப்பெற முயற்சி செய்யும்பொழுது பல தொல்லைகள் எழும். மேலும், தனிப்பட்டவர்கள் நேரடியாகத் தொழிலகங்களுக்கு நிதியுதவி செய்தல் சரியல்ல. ஏனெனில், இவர்கள் இந்த நிறுவனங்களின் நிலைமையைப் புரிந்துகொள்ளமுடியாது. இவை நன்றாக நிருவகிக்கப்படுகின்றனவா, இலாபம் பெறுகின்றனவா என்பதை மக்கள் புரிந்துகொள்ள முடியாது. எனவே, மக்களின் சேமிப்பைத் திரட்டிப் பாங்குகள் தொழிலுக்குக் கொடுக்கவேண்டும்.

நிருவாக ஏஜன்சி முறை (Managing Agency System) என்பது நம்நாட்டிலே தோன்றியது. நிருவாக ஏஜண்டுகள் கூட்டுப் பங்குக் கம்பெனிகளை ஆரம்பிக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து இந்தக் கம்பெனிகளின் பங்குகளில் கணிசமான பகுதியை வாங்கிக் கம்பெனிகளை ஆரம்பிக்கின்றனர். இவர்கள் மிகுதியான நிதியைக் கொண்டவர்கள். கம்பெனிகளின் நிருவாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்கின்றனர். கம்பெனியின் சரக்குகளை விற்பனை செய்வதும் அதற்காகக் கச்சாப் பொருள்களை வாங்குவதும் இவர்கள் பொறுப்பு. இவர்கள் கம்பெனிக்கு வேண்டிய நிதியைக் கொடுக்கின்றனர். இவர்கள் உறுதிகொடுப்பதால் (undertaking), கம்பெனியின் பங்குகளும் டிபஞ்சர்களும் மார்க்கட்டில் விற்பனையாவதுடன், பாங்குகளும் இவற்றை அடைமானமாக ஏற்றுக்கொண்டு நடைமுறைச் செலவுக்கான தொகையைக் கம்பெனிகளுக்குக் கொடுக்கின்றனர். ஆகையால், கூட்டுப்பங்குக் கம்பெனிகளை ஆரம்பிப்பதிலும், தொழிலுக்கு வேண்டிய நிதியுதவியளிப்பதிலும், நிருவாக ஏஜண்டுகள் நாட்டுக்குச் சிறந்த தொண்டு செய்திருக்கின்றனர் என்பதை நாம் மறுக்க முடியாது.

எனினும், இந்த நிருவாக ஏஜன்சி முறையில் பல குறைகள் உள. நிருவாக ஏஜண்டுகள் தங்கள் உரிமையை 1936-ஆம் ஆண்டுவரை வழி வழியாகப் பெற்றனர். எனவே, பலர் திறமையற்றவர்களாக இருந்தனர். மொத்த உற்பத்தியைப் பொறுத்து, இவர்கள் வருமானம் பெற்றதால் வருவாயைப் பெருக்கிக்கொள்வதற்காகத் தொழிலகங்களின் நலனைக் கருதாமல் இவர்கள் உற்பத்தியைப் பெருக்குவதிலேயே அக்கறை காட்டினர். கச்சாப் பொருள்களை வாங்குவதிலும் உற்பத்தியான சரக்குகளை விற்பதிலும் இவர்கள் நேர்மையுடன் நடந்துகொள்ளவில்லை. இந்த முறையின் பலனாகக் கம்பெனியின் இயக்குநர்கள் நிருவாகத்தில் அக்கறை கொள்ளவில்லை. பங்குதார்களும் தம் பொறுப்பை உணராமலிருந்ததுடன், தொழிலைப் பரப்புவதில் எந்தவித ஊக்கமும் காட்டவில்லை. நிருவாக ஏஜண்டுகள் தங்கள் உறவினருக்குக் கம்பெனிகளில் உயர்ந்த பதவிகளைக் கொடுத்தனர். இதனால், கம்பெனியின்

நிருவாகம் பாதிக்கப்பட்டது. மையப் பாங்கு விசாரணைக் குழுவினர் இந்தியத் தொழில் நிறுவனங்கள் நிருவாக ஏஜண்டுகளின் உதவியை எதிர்பார்க்கக் கூடாதென்று சிபாரிசு செய்தனர். இதன் குறைகளை அகற்றுவதற்காக 1936-ஆம் ஆண்டுச் சட்டம் நிருவாக ஏஜன்சி முறையைச் சில கட்டுப்பாடுகளுக்குட் படுத்தியது.

**தொழில் நிதிக் கார்ப்பரேஷன்.**

கனரகத் தொழிலுக்கும், அடிப்படைத் தொழிலுக்கும், பெரிய தொழில்களுக்கும் நிதியுதவி செய்ய அகில இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷனும், சிறிய தொழில்களுக்கும், நடுத்தரத் தொழில்களுக்கும் நிதியளிக்க இராச்சியத் தொழில் நிதிக் கார்ப்ப ரேஷன்களும் தேவை என்று மையப் பாங்கு விசாரணைக் குழுவினர் உணர்ந்தனர். 1948-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதி அரசினர் இந்தியப் பாராளுமன்றத்தில் ஒரு சட்டம் இயற்றி, அகில இந்தியத் தொழில் நிதிக் கார்ப்பரேஷனை ஏற்படுத்தினர். இந்தக் கார்ப்பரேஷன் தனியார் துறையைச் சேர்ந்ததாக இருக்கவேண்டுமா அல்லது இதை அரசினர் நிருவகிக்க வேண்டுமா என்பதைப் பற்றிக் கருத்து வேற்றுமை இருந்தது. இதைப் பங்குதார்களுடைய கார்ப்பரேஷனாகவே ஆரம்பித்தனர். இதன் அனுமதிக்கப்பட்ட முதல், பத்துக் கோடி ரூபாயாகும். ஒவ்வொரு பங்கின் மதிப்பும் 5,000 ரூபாயாகும். வெளியிட்ட முதலாகிய ஐந்து கோடி ரூபாயில் 40 சதவீதம் மதிப்புள்ள பங்குகளை அரசாங்கமும் ரிசர்வ் பாங்கும் பெற்றன. இந்திய ஷெடியூல் பாங்குகள் 1·25 கோடி ரூபாய் மதிப் புள்ள பங்குகளைப் பெற்றன. எஞ்சிய தொகையை இன்சூரன்சுக் கம்பனி முதலீட்டு நிறுவனங்கள் கூட்டுறவுப் பாங்குகள் முதலியன பெற்றன. முதன் முதலில் இந்தப் பங்குகளை வாங்கியோரைத் தவிர மற்றோருக்கு இவைகளை மாற்ற முடியாது. இந்தப் பங்கு களுக்கும் அவற்றின் குறைந்த பட்ச $2\frac{1}{4}$ சதவீத இலாப ஈவுக்கும் அரசினர் உறுதிமொழியளித்தனர்.

இந்தக் கார்ப்பரேஷனை நிருவகிக்க 12 இயக்குநர்கள்கொண்ட ஒரு குழுவை நியமனம் செய்தனர். இதில் மூன்று இயக்குநர்களை அரசாங்கமும், இரண்டு இயக்குநர்களை ரிசர்வ் பாங்கும் நியமனம் செய்தன. ஒரு நிருவாக இயக்குநரையும் அரசினர் நியமனம் செய்தனர். மற்ற இயக்குநர்களை ஷெடியூல் பாங்குகள், கூட்டுறவு பாங்குகள் முதலியன தேர்ந்தெடுக்கும்.

கார்ப்பரேஷன் கீழ்க்கண்ட அலுவல்களை மேற்கொள்கின்றது:

(1) தொழில் நிறுவனங்கள் பெறும் நீண்டகாலக் கடனுக்கு உறுதி கொடுப்பது. இந்தக் கடன் தொகையை 25 ஆண்டுகளுக்குள் திருப்பிக்கொடுக்கவேண்டும். மேலும், இவற்றைப் பொது மார்க்கட்டில் பெறவேண்டும்.

(2) தொழில் நிறுவனங்களில் பத்திரங்கள், பங்குகள், டிபஞ்சர்கள் முதலியவற்றிற்கு உறுதிகொடுப்பது.

(3) தொழில் நிறுவனங்களுக்குக் கடன் கொடுப்பது; அவற்றின் டிபஞ்சர்களை வாங்குவது.

மற்ற நாடுகளில் உள்ள கார்ப்பரேஷன்களைப்போல் தொழில் நிறுவனங்களின் பங்குகளை இது வாங்கக்கூடாது. பத்துக் கோடி ரூபாய்க்குமேல் இவை மக்களிடம் டெபாசிட்டுத் தொகையைப் பெறக்கூடாது. பொருள் உற்பத்தி செய்யும் தொழிலகங்களுக்கும், மின்சக்தி தயார்செய்யும் நிலையங்களுக்கும் இந்தக் கார்ப்பரேஷன் நீண்டகாலக் கடன்வசதியளிக்கலாம். 1952-க்குப் பின்னர் இது கப்பல் கம்பெனிகளுக்கும் நிதியுதவி செய்ய அதிகாரம் பெற்றது. தனிப்பட்டோருக்கும், கூட்டுக் கம்பெனிகளுக்கும் (Partnership), சொந்தக் கம்பெனிகளுக்கும் (Private compaines) இது நிதியுதவி செய்யக்கூடாது. கார்ப்பரேஷன் செலுத்திய முதலில் பத்து சத வீதத்திற்கு மேற்பட்ட தொகையை ஒரு நிறுவனத்திற்குக் கடனாகக் கொடுத்தல் சட்ட விரோதமானது. 1952-இல் ஒரு நிறுவனத்திற்குக் கொடுக்கும் அதிக பட்சத் தொகையை ஒரு கோடி ரூபாயாக உயர்த்தினர். கடன் மனுக்களை நன்கு பரிசீலனை செய்ய, தக்க அலுவலர்கள் பணியாற்றுகின்றனர். கடன் வசதியளிக்கும் போது தொழிலின் முக்கியத்துவம், நிருவாகக் குழுவினரின் திறமை, உற்பத்தி செய்யும் பண்டங்களின் தரம், அடைமானப் பொருள்களின் மதிப்பு முதலியவற்றைப் பரிசீலனை செய்தும், நிதியுதவி சிறந்த பயனளிக்குமா என்பதையும் ஆராய்ச்சிசெய்த பின்பே கார்ப்பரேஷன் தொழில்களுக்குக் கடன்கொடுக்க முடிவு செய்யும்.

கார்ப்பரேஷன் பத்திர வெளியீட்டு மூலம் வேண்டிய நிதியைத் திரட்டலாம். ரிசர்வ் பாங்கிடம் மூன்று கோடி ரூபாய் கடனாகப் பெறலாம். உலகப் பாங்கிலிருந்தும் நிதியைப் பெற்றுக்கொள்ளலாம். 1957-இல் இந்தக் கார்ப்பரேஷன் பற்றிய சட்டத்தை மாற்றியமைத்தனர். கார்ப்பரேஷன் முன்னிருந்ததைவிட அதிகமான தொகையைக் கடனாகப் பெறலாம். இது அரசாங்கத்தின் தொகையையும் டெபாசிட்டாகப் பெறலாம். 1957-க்குப்பின் பல தொழிலகங்கள் இதன் உதவியை நாடின.

கார்ப்பரேஷன் நல்ல முறையில் தொழிலுக்குத் தொண்டாற்ற வில்லை என்று பலர் கருதினர். பல தொழில் நிறுவனங்களுக்கு நிதியுதவி செய்யக் கார்ப்பரேஷன் மறுத்துவிட்டது. இது தொழிலுக்குக் கணிசமான அளவு நிதியளிக்கவில்லை. ஆரம்பமானதிலிருந்து 12 ஆண்டுகளில் 84·61 கோடி ரூபாயே இது கொடுத்த கடன் தொகையாகும். இதிலும் 50·73 கோடி ரூபாய்தான் இதுவரை தொழிலகங்கள் பெற்ற தொகையாகும். மேலும், கார்ப்பரேஷன் வசூல் செய்யும் வட்டி வீதம் அதிகமாக இருக்கின்றது. கார்ப்பரேஷன் புதிய நிறுவனங்களுக்கே பெரும்பாலும் உதவி செய்திருக்கின்றது. 1956-57-இலிருந்து கார்ப்பரேஷன் அளித்த உதவி மிகுதியடைந்தது. தொழிலில் பிற்போக்கான பகுதிகள் கணிசமான அளவு பயனடைந்திருக்கின்றன. தொழிலகங்கள் அயல்நாடுகளிலிருந்து இயந்திரங்களைப்பெறக் கார்ப்பரேஷன் உதவி செய்கின்றது. 1957-58-இலிருந்து தொழில் நிறுவனங்களின் பங்குகளுக்கு உறுதியளிக்க ஆரம்பித்தது.

அரசினர் தொழில் நிதிக் கார்ப்பரேஷன் விசாரணைக் குழுவை 1952-இல் திருமதி. சுசேதா கிருபாலனி அவர்கள் தலைமையில் நியமித்தனர். இக்குழுவினர் 1953-ஆம் ஆண்டு தம் சிபாரிசுகளை அரசினருக்கு அனுப்பினர். கார்ப்பரேஷனின் இயக்குநர்கள், நிருவாகத் தொடர்புகொண்டிருக்கும் தொழிலகங்களுக்குக் கடன் கொடுத்தல் கூடாது. கார்ப்பரேஷன் இயக்குநர்கள் சாதாரண பங்குதார்களாகவோ, இயக்குநர்களாகவோ தொடர்பு கொண்ட நிறுவனங்கள் கடனுதவி பெறலாம். ஆனால், இந்தக் கடனைக் கார்ப்பரேஷன் இயக்குநர்கள் ஒருமுகமாக அங்கீகரிக்கவேண்டும். கார்ப்பரேஷன் அவ்வப்போது அதன் தொழிலைப்பற்றிய விவரங்களை வெளியிடவேண்டும். கடன் கொடுப்பதில் தாமதம் ஏற்படக் கூடாது. தொழில்கள் நாட்டின் பொருளாதாரத்தில் பெறும் இடத்தை உணர்ந்து, திட்டக் குழுவினரின் சிபாரிசுகளையொட்டி, அவற்றிற்குக் கடன் கொடுத்தல் வேண்டும். ஐம்பது லட்ச ரூபாய்க்கு மேற்பட்ட தொகையை ஒரு நிறுவனத்திற்குக் கொடுப்பதற்குமுன் கார்ப்பரேஷன், அரசினர் அனுமதியைப் பெறல் வேண்டும். சட்டசபை அங்கத்தினர்கள், கார்ப்பரேஷன் நிருவாகத்தில் குறுக்கிடக்கூடாது. குழுவினர் முடிவுகளை அரசினர் ஏற்றுக்கொண்டனர்.

1951-இல் பாராளுமன்றம் இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன் சட்டத்தை இயற்றியது. பல இராச்சிய அரசாங்கங்கள் நிதிக் கார்ப்பரேஷன்களை ஏற்படுத்தியிருக்கின்றன. தொழில் நிதிக் கார்ப்பரேஷன் பெரிய தொழிலகங்களுக்கு நீண்டகாலக் கடன் கொடுக்கின்றது. சிறிய தொழிலகங்களும் நடுத்தரத் தொழி

லகங்களும் அதனிடம் நிதியைப்பெற முடியாது. ஆகவே, சிறிய தொழில் நிறுவனங்களுக்கு நிதியுதவி செய்யவே இந்த இராச்சியக் கார்ப்பரேஷன்களைத் தொடங்கினர். இவற்றின் பங்குகளையும் ரிசர்வ் பாங்கு, ஷெடியூல் பாங்குகள், இன்சூரன்சுக் கம்பெனிகள் முதலியவை வாங்கலாம். முதலில் பெரும்பகுதி இராச்சிய அரசாங் கங்களுடையதாக இருத்தல் வேண்டும். பங்குகளை 25 சதவீதத் திற்குமேல் பொதுமக்களிடம் விற்பனை செய்யக்கூடாது. முதன் முதலில் வாங்கியவர்களுக்கே பங்குகளை மாற்றலாம். இவற்றின் பங்குகளுக்கும் இலாப ஈவுக்கும் இராச்சிய அரசாங்கங்கள் உறுதி கொடுக்கலாம்.

தொழில் நிதிக் கார்ப்பரேஷன் போலவே இவைகளும், டிபஞ்சர்கள் மூலம் பொதுமக்களிடம் நிதியைப் பெறலாம். டெபாசிட்டுகளையும் பெறலாம். இவை சிறிய தொழிலகங்கள் பெறும் கடனுக்கு உறுதி கொடுக்கலாம். இந்தக் கடன் தொகைகள் 25 ஆண்டுகளுக்குள் திருப்பிக் கொடுக்கக்கூடியவையாக இருக்கவேண்டும். இவை பொது மார்க்கட்டில் பெற்றவையாக இருத்தல்வேண்டும். இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன்கள் தொழிலகங் களின் பங்குகளுக்கும் டிபஞ்சர்களுக்கும் உறுதி கொடுக்கலாம். 25 ஆண்டுகளுக்குள் திருப்பிக் கொடுக்கக்கூடிய கடன் தொகை களைத் தொழில் நிறுவனங்களுக்குக் கொடுக்கலாம். அவற்றின் டிபஞ்சர்களையும் வாங்கலாம்.

கடன் வேண்டுமென்று இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன்களிடம் விண்ணப்பம் செய்யும் தொழில் நிறுவனங்கள் செம்மையான முறையில் தொழிலை ஆரம்பிக்கின்றனவா என்பதைப் பரிசீலனைச் செய்வதற்குத் தகுந்த அலுவலர்கள் கிடைக்கவில்லை. இந்தக் கார்ப்பரேஷன்கள் அதிகமான வட்டி வீதம் வசூல் செய்கின்றன. சிறிய தொழிலகங்கள் இக்காலத்திய முறையில் தம் கணக்குகளை வைத்துக்கொள்ளாததால், இவைகளின் தொழிலை நன்கு பரிசீலனை செய்து, இவற்றிற்கு நிதியளிப்பது கடினம்.

1955-இல் சிறிய தொழில் கார்ப்பரேஷன் (Small Industries Corporation), 1954-55-இல் தேசியத் தொழில் முன்னேற்றக் கார்ப்பரேஷனும் (National Industrial Development Corporation), தொழில் கடன்-முதலீட்டுக் கார்ப்பரேஷனும் (Industrial Credit and Investment Corporation) தோன்றின. அரசினர் ஆரம்பித்த தேசியத் தொழில் முன்னேற்றக் கார்ப்பரேஷன் (தே. தொ. மு. கா.) ஒரு கோடி ரூபாய் அனுமதிக்கப்பட்ட முதலையும், பத்து லட்ச ரூபாய் செலுத்திய முதலையும் கொண்டது. முன்னேற்றத் திட்டங்களில் சேர்த்த பல தொழில்களுக்கு இது நிதி யுதவி செய்திருக்கின்றது. இது அரசினரிடம் கடனைப் பெறலாம்.

இரண்டாவது திட்ட காலத்தில் இதன் செலவுக்கு 55 கோடி ரூபாய் ஒதுக்கினர். இதில் ஒரு பெரும் பகுதியைப் பஞ்சாலை, சணல் தொழில்களை நவீனமாக்குவதற்கு ஒதுக்கினர்.

தொழில் கடன்-முதலீட்டுக் கார்ப்பரேஷனை (தொ. க. மு. கா.) தனியார் துறையில் ஆரம்பித்தனர். ஆயுள் இன்சூரன்சுக் கம்பெனிகளை அரசாங்க நிருவாகத்தில் கொண்டுவந்தபின் இதன் பங்குகளில் 18 சதவீதம் அரசினர் வசம் வந்தது. இதன் அனுமதிக்கப்பட்ட முதல் 25 கோடி ரூபாய். இதை ஒரு பன்னாட்டு முதலீட்டு நிறுவனம் என்று சொல்லலாம். இது தொழிலகங்களுக்குக் கடன் கொடுப்பதோடல்லாமல் அவற்றின் பங்குகளுக்கும், டிபஞ்சர்களுக்கும் உறுதியும் கொடுக்கின்றன. இது உலகப் பாங்கிலிருந்தும், அரசினரிடமிருந்தும் கடனுதவியைப் பெற்றது. 1956-ஆம் ஆண்டின் இறுதியில் இதன் சொத்தில் 74 சதவீதம் அரசினர் பத்திரங்களாகவும், ரொக்கமாகவும் இருந்தது. சாதாரண பங்குகளில் மிகச் சிறிய தொகையையே இது முதலீடு செய்திருந்தது. 1959-ஆம் ஆண்டு இதன் உறுதி கொடுக்கும் தொழில் (Undertaking business) குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அடைந்தது.

நடுத்தரத் தொழிலுக்கு நிதியுதவியளிக்க 1958-இல் ஜூன் மாதம் ஒரு மீள் நிதிக் கார்ப்பரேஷனை (Re-Finance Corporation) ஆரம்பித்தனர். ஏழு இயக்குநர்கள்கொண்ட குழு இதை நிருவாகம் செய்கின்றது. ரிசர்வ் பாங்கின் கவர்னர், துணைக் கவர்னர், ஆயுள் இன்சூரன்சுக் கார்ப்பரேஷன் தலைவர் முதலியோர் இக்குழுவில் அங்கம் வகிக்கின்றனர். இதன் அனுமதிக்கப்பட்ட முதல் 25 கோடி ரூபாய். வெளியிட்ட முதல் 12·5 கோடி ரூபாயாகும். ரிசர்வ் பாங்கு, ஸ்டேட் பாங்கு, ஆயுள் இன்சூரன்சுக் கார்ப்பரேஷன், சில ஷெடியூல் பாங்குகள் முதலியன இதில் பங்கு கொண்டிருக் கின்றன. இந்தக் கார்ப்பரேஷனுக்கு அரசினர் 26 கோடி ரூபாய் கடன் கொடுத்திருக்கின்றனர். இதில் பங்கு கொண்டிருக்கும் பாங்குகள் மூலம் இந்தக் கார்ப்பரேஷன் தொழிலகங்களுக்குக் கடன் வசதியளிக்கின்றன. இதில் பங்குகொள்ளும் ஒவ்வொரு பாங்குக்கும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்கியிருக்கின்றனர். காப்பு நிதியும், செலுத்திய முதலும், ஐந்து லட்சத்திற்குக் குறையா மலும் இரண்டரை லட்சத்திற்கு மேற்படாமலும் கொண்ட நிறுவனங்கள் கடன் வசதி பெறலாம். ஒரு தொழிலகத்திற்கு ஐம்பது லட்ச ரூபாய்க்கு மேற்படாத தொகையைக் கொடுக்கலாம். மூன்றிலிருந்து ஏழாண்டுகளுக்குட்பட்ட தவணைகளுக்கே கடன் கொடுக்கலாம். இந்தக் கார்ப்பரேஷன் எதிர்பார்த்த அளவு பயனளிக்கவில்லை.

## 6. விவசாயத்திற்கு நிதியுதவி

நமது நாட்டில் விவசாயமே எல்லாத் தொழில்களிலும் முக்கிய மானது. மக்கள் தொகையில் சுமார் 75 சதவீதம் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். நம்நாடு பொருளாதாரத் துறையில் கணிச மான அளவு முன்னேற வேண்டுமானுல் விவசாயம் செழிக்க வேண்டும். நமது விவசாயப் பிரச்சினைகள் பலவற்றுள் அதற்கு வேண்டிய நிதியுதவி செய்வது ஒன்ருகும்.

தொழிலகங்களுக்கும் விவசாயத்திற்கும் ஒரே முறையில் நிதி யுதவிசெய்ய ஏற்பாடுகள் செய்யமுடியாது. நமது தொழிலகங்களின் அமைப்பு அயல்நாட்டுத் தொழிலகங்களைப் போலிருக்கின்றது. ஆனுல், நமது விவசாயம் முன்னேற்றமடையாமல் பழைய முறை யிலேயே அமைந்திருக்கின்றது. நமது விவசாயிகளின் தொழில் விரிவடைந்ததாகவும், இலாப நோக்கத்தைக் கொண்டதாகவும் இல்லை. இந்தியாவில் விவசாயத்தை ஒரு தொழில் (business) என்று கூறுவதைவிட ஒருவித வாழ்க்கை (living) என்று கூறுவது வழக்கம். இந்த நிலையில் நவீன முறையில் இலாப நோக்கத்துடன் பெரிய மார்க்கட்டுகளில் விற்பனைக்காக உற்பத்தி செய்யாத விவசாயிகள் கடனுக்கு வேண்டிய அடைமானச் சொத்துக்களைக் கொடுக்கமுடியாது. எனவே, பண மார்க்கட்டுக்கும் விவசாயத் திற்கும் ஒரு தொடர்பை ஏற்படுத்துவது கடினம். விவசாயிகள் கொடுக்கும் அடைமானச் சொத்துக்களைப் பாங்குகள் சாதாரண மாகப் பெற்றுக்கொள்ள முடியாது. ரொக்க நிலையுடைய சொத்துக் களை நாடும் பாங்குகள், நிலம் கால் நடை போன்றவற்றை அடைமான மாக ஏற்றுக்கொள்ள முடியாது.

விவசாயிகளுக்குக் குறுகிய, இடைக்கால, நீண்டகாலத் தவணைக் கடன்கள் வேண்டியிருக்கின்றன. பயிர்த்தொழிலுக்கு வேண்டிய விதை, எரு முதலிய பொருள்களை வாங்குவதற்குக்

குறுகிய காலக்கடன் வேண்டும். கால் நடைகள் வாங்குவதற்கு இடைக்காலக் காலக்கடனும், நிலையான முதலீடு செய்வதற்கும் நிலங்கள் வாங்குவதற்கும் நீண்ட காலக் கடனும் விவசாயிகளுக்கு வேண்டும். உற்பத்திசெய்த பொருள்களை விற்பனை செய்வதற்கும் அவர்களுக்கு நிதியுதவி வேண்டும். தங்கள் தொழிலுக்கு வேண்டிய நிதியையும் கடன் வசதிகளையும் பெறுகின்றனர். இந்த நிதியைக் கொண்டு விவசாயிகள் எப்படிப் பயனடைகின்றார்கள் என்பதை இங்குக் காண்போம்.

### கடன் கொடுப்போர் (Money lenders)

விவசாயிகளுக்கும், மற்றையோருக்கும் கடன் கொடுப்போர் இருவகைப்படுவர். கடன் கொடுப்பதையே தொழிலாகக் கொண்டவர்களும், இதை மற்றத் தொழிலுடன் ஒரு துணைத் தொழிலாகப் பின்பற்றுபவர்களும் இருக்கின்றனர். இவர்கள் எளிய முறையில் தொழிலை நடத்துகின்றனர். சிறிய தொகைக் கடனை இவர்கள் நம்பிக்கையுடன் அடைமானம் எதுவும்ஏற்றுக்கொள்ளாமல் கொடுக்கின்றனர். கடன் தொகை அதிகமாக இருந்தால், வெண்ணிலைக் கடன் பத்திரங்களையும் (Promissory notes), நிலம், வீடு, நகைகள் முதலிய பொருள்களையும் அடைமானமாக ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கின்றார்கள். மையப் பாங்கு விசாரணைக் குழுவினரின் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளபடி, விவசாயிகள் தம் உற்பத்திப் பொருளை இவர்களுக்கே விற்பனை செய்வதாக ஒப்புக்கொண்டு, கடன் வசதி பெறுகின்றனர். கிராமத்தில் கடன் கொடுப்போர் தம் தொழிலுடன் வர்த்தகத்தொழிலையும் இணைப்பதால், ரொக்கக் கடனைத் தவிரப் பொருள்களையும் கடனாகக் கொடுக்கின்றனர்.

கடன் கொடுப்பதை ஒரு துணைத்தொழிலாகக் கொண்டவர்கள், உற்பத்திப் பொருள்களையும் நிலத்தையும் அடைமானமாகக் கொண்டு கடன் கொடுக்கின்றனர். நிலக்கிழார்களும் இத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். இவர்களுக்கு நிலத்தைப் பயிர் செய்பவர்கள் வட்டி, முதல், உற்பத்தியில் கொடுக்கவேண்டிய பங்கு முதலிய எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும். இவர்களுடைய கொடுமை, கடன் கொடுப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள் செய்யும் கொடுமையைவிட மிகுதியானதென்று பம்பாய்க் குழுவினர், மையப் பாங்கு விசாரணைக் குழுவினரிடம் எடுத்துரைத்தனர்.

விவசாயிகள் அறுவடையானவுடன் குறுகியகாலக் கடனைத் திருப்பிக் கொடுக்கவேண்டும். பருவமழை தவறியதாலோ மற்ற

காரணங்களாலோ அறுவடை பாதிக்கப்பட்டால், கடனைப் புதுப்பித்துக்கொள்ளலாம். ஆனால், வட்டியை அவ்வப்போது கொடுத்துவிடவேண்டும். கடன் கொடுப்போர் பல நேர்மையற்ற முறைகளைக் கையாண்டனர். கொடுக்கும் கடனைவிட அதிகமான தொகையைப் பத்திரங்களில் குறிப்பிடுவது, வட்டியை முன்பே எடுத்துக் கொள்வது போன்ற முறைகளைக் கையாண்டனர். மேலும், இவர்கள் மிக உயர்ந்த வட்டி வீதத்தை வசூல் செய்தனர்.

உயர்ந்த வட்டி வீதத்தைத் தடை செய்வதற்கு 1918-இல் கடுவட்டிக் கடன் சட்டத்தை (Usurious Loans Act) இயற்றினர். ஆனால், அந்தச் சட்டம் எதிர்பார்த்த பயனைக் கொடுக்கவில்லை. 1930-இல் பஞ்சாபில் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. அதன்படி உற்பத்தியாளர்களுக்கும், வணிகர்களுக்கும் தவிர, மற்றவர்களுக்குக் கொடுக்கும் கடன் தொகையைப்பற்றிய எல்லா விவரங்களையும் விளக்கமாகக் கணக்குப் புத்தகங்களில் குறிக்கவேண்டும். கடன் வாங்கும் ஒவ்வொருவருக்கும் ஒரு தனிப் புத்தகம் வேண்டும். இந்த விவரங்களை அரையாண்டு அறிக்கைகளில் கடன் வாங்கியோருக்கு அனுப்பவேண்டும். இது போன்ற சட்டங்களை மற்ற மாநிலங்களும் இயற்ற வேண்டுமென்றும், கடன் வாங்குவோர் செலுத்தும் தொகைக்கு அதைக் கொடுப்போர் அவ்வப்போது ரசீது கொடுத்தல் வேண்டுமென்றும் சிபாரிசு செய்தனர்.

1938-இல் வங்க அரசாங்கம் கடன் கொடுப்போர் சட்டத்தை (Money Lenders Act) இயற்றியது. இதைத் தொடர்ந்து மற்ற மாநிலங்களும் இது போன்ற சட்டங்களை இயற்றின. இந்தச் சட்டங்கள் கடன் கொடுப்போர் தொழிலை ஓரளவு கட்டுப்படுத்தியது. அவர்கள் தங்கள் தொழில் பற்றிய விவரங்களை விளக்கமாகக் கணக்குப் புத்தகங்களிலும், பேரேடுகளிலும் குறித்து வைக்க வேண்டும். அவர்கள் கடன் வாங்கியோருக்கு இந்த விவரங்களை அவ்வப்போது அனுப்பவேண்டும். அடைமானம் பெற்றுக்கொண்டு கொடுக்கும் கடனுக்கும், அடைமானம் இல்லாமல் கொடுக்கும் கடனுக்கும் அவர்கள் சட்டபூர்வமாக வசூல் செய்யக்கூடிய வட்டி வீதத்தையும் இந்தச் சட்டம் வரையறுத்தது. கூட்டு வட்டி வாங்குதல் சட்டவிரோதமாக்கப்பட்டது. பழைய வட்டிக்காக முதலைவிட மிகுதியான தொகையைப் பெறுவது மத்திய மாகாணத்தில் சட்ட விரோதமானது.

ஆனால், சட்டங்கள் இயற்றியபின்னும் கடன் கொடுப்போர் பல மாநிலங்களில் கணக்குப் புத்தகங்களையும் பேரேடுகளையும் சரியான முறையில் வைத்துக்கொள்ளவில்லை. கடு வட்டி வீதத்தைத் தடை

செய்வதற்குச் சட்டங்கள் வேண்டும். ஆனால், கடன் கொடுப்போர் தொழில் பாதிக்கப்படும் அளவு கட்டுப்பாடுகளைப் புகுத்துவது சரி யல்ல. ஏனெனில், இன்னும் விவசாயிகள் இவர்கள் உதவியை அதிகமாக நாடுகின்றனர். விவசாயிகளின் நிலையை அறிந்து அதற்குத் தகுந்தாற்போல் இவர்கள் தொழிலை நடத்துகின்றனர்.

நாளடைவில் கடன் கொடுப்போருடைய தொழிலும் அவர்கள் எண்ணிக்கையும் குறுகிவிட்டன. இதற்குப் பல காரணங்கள் உள. கொடுத்த முதலையும் வட்டியையும் மீட்கப் பலர் அரும்பாடு பட வேண்டியதாயிற்று. கடு வட்டியை ஒழிக்கப் பல மாநிலங்கள் இயற்றிய சட்டங்கள், இவர்கள் தொழிலுக்கு இடையூறாக இருந்தன. கூட்டுறவு இயக்கம் வளர்ந்ததால் இவர்கள் தொழில் குன்றியது. பலர் இந்தத் தொழிலைப் புறக்கணித்து வாணிகத் தொழிலை ஆரம்பித் தனர். சட்டங்கள் தோன்றியபின் கடன் கொடுப்போருக்கும், விவசாயிகளுக்கும் உள்ள உறவு முன்பு இருந்ததைவிட மோச மாயிற்று. நாட்டின் அரசியல் பொருளாதார நிலைமை மாறியது. ஆகையால், கடன் கொடுப்போர் பழைய முறையில் தங்கள் தொழிலை நீடித்து நடத்தமுடியவில்லை.

### சுதேச பாங்குகள்

இந்தியாவில் சில வகுப்பினர் சுதேச பாங்குத் தொழிலில் தொன்மையான காலத்திலிருந்து ஈடுபட்டுள்ளார்கள். சுதேச பாங்குதார்களில் சிலர் டெபாசிட்டுத் தொகையை ஏற்றுக்கொள் கின்றனர். சிலர் செக்குப் புத்தகங்களையும் பயன்படுத்துகின்றனர். வாணிகப் பாங்குகள் எனப்படும் கூட்டுப்பங்குப் பாங்குகள் செய்யும் வேலைகளைச் சுதேச பாங்குதார்களும் செய்கின்றனர். இவர்களில் சிலர் பாங்குத்தொழிலை மட்டுமே நடத்துகின்றனர். சிலர் இதை வாணிகத் தொழிலுடன் இணைக்கின்றனர். இவர்கள் வியாபாரத் திற்கு நிதிவசதி யளிக்கின்றனர். வாணிகப் பாங்குகளைப் போலல்லாமல் இவர்கள் எளிய முறையில் தொழிலை நடத்து கின்றனர். இவர்கள் கணக்குகளை எளிய முறையிலும் சிக்கனமாகவும் வைத்துக்கொள்கின்றனர். எப்பொழுது வேண்டுமானாலும் மக்கள் இவர்கள் உதவியைப் பெறலாம். இவர்கள் கணக்குகள் தணிக்கைக்கு உட்பட்டவையல்ல. எனவே, வாணிகத்திற்கும் பாங்குத் தொழி லிற்கும் தனித்தனியான கணக்குகளை இவர்கள் வைத்துக்கொள்வ தில்லை. இவர்கள் கடன் பெறுவோர்களைப்பற்றியும், அவர்கள் தொழிலைப்பற்றியும் பல விவரங்களைத் தெரிந்துகொண்டிருப்பதால் கூட்டுப்பங்குப் பாங்குகளைவிட எளியமுறையில் தொழில் நடத்து

கின்றனர். தொழிலுக்கு வேண்டிய அளவு ரொக்கத்தை இவர்கள் எப்பொழுதும் வைத்துக்கொண்டிருக்கின்றனர்.

இவர்கள் மக்களிடம் நடைமுறைத் தவணை டெபாசிட்டுத் தொகைகளை ஏற்றுக்கொள்கின்றனர். ஆனால், கூட்டுப்பங்குப் பாங்குகளைப்போல், டெபாசிட்டுத் தொகைகளைக் கொண்டே இவர்கள் தொழிலைச் செய்வதில்லை. இவர்கள் மிகக் குறைந்த தொகையையே டெபாசிட்டாகப் பெறுகின்றனர். சிலர் டெபாசிட்டைப் பெருமலே தங்கள் சொந்த நிதியையும் நண்பர்களிடம் பெற்ற நிதியையும் கொண்டு தொழில் செய்கின்றனர். டெபாசிட்டர்கள் செக்குகள் மூலம் சில பாங்குதார்களிடம் தொகையைத் திரும்பப் பெறமுடியும். சிலர் செக்குகளைப் பயன் படுத்தவில்லை. இவர்கள் தொழிலுக்கு அதிகமான தொகை தேவைப்படும்பொழுது ஷெடியூல் பாங்குகளிடமும், ஸ்டேட் பாங்கு களிடமும், மற்றச் சுதேச பாங்குகளிடமும் வேண்டிய தொகையைப் பெற்றுக்கொள்வர். இவர்களிடமுள்ள உண்டியல்களை மற்றப் பாங்குகள் தள்ளுபடி செய்யும்.

இவர்கள் விவசாயிகளுக்கு மறைமுகமாக உதவியளிக்கின் றனர். அவர்களுடன் நேரிடைத் தொடர்பு கொள்ளவில்லை. வாணிகத்திற்கு வேண்டிய நிதியைக் கொடுப்பதுடன் கிராமங்களில் கடன் கொடுப்போருக்கும் இவர்கள் நிதியுதவி செய்கின்றனர். நாட்டின் பல பகுதிகளில் இவர்கள் மகஜன்கள், பனியர்கள், ஷராப்புக்கள், நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் என்று அழைக் கப்படுகின்றனர். கூட்டுப்பங்குப் பாங்குகளைப்போல் மிகுதியான டெபாசிட்டுத் தொகைகளை மக்களிடம் வாங்காததால், இவர்களுக் குத் தொழில் பெருகும் சமயங்களில் வேண்டிய அளவு நிதி கிடைப்பதில்லை. பெரிய ஷராப்புக்கள், சிறிய நிறுவனங்களுக்கு உண்டியல்களைத் தள்ளுபடி செய்கின்றன. கூட்டுப்பங்குப் பாங்குகள் நாணயமாகத் தொழில் செய்யும் ஷராப்புக்களின் பெயர்களைத் தங்கள் பட்டியல்களில் குறித்து வைத்துக்கொண்டிருக் கின்றன. இவை இந்த ஷராப்புக்களுக்கு நிதியுதவி செய்கின்றன. ஸ்டேட் பாங்கும் மற்ற ஷெடியூல் பாங்குகளும், இந்த ஷராப்புக் களுக்கு ஓரளவுக்குமேல் நிதியுதவிசெய்ய மறுத்துவிடும். உண்மை யான வியாபாரத்தின் காரணமாகத் தோன்றும் உண்டியல்களையே பாங்குகள் பெரும்பாலும் தள்ளுபடி செய்யும்.

சில இடங்களில் சுதேச பாங்குதார்கள், பஞ்சாலைகளில் தம் பணத்தை டெபாசிட்டாக வைத்துக்கொள்வது வழக்கம். வெண்ணிலைக் கடன் பத்திரங்களையும், அடைமானங்களையும் ஏற்றுக்

கொண்டு இவர்கள் கடன் கொடுக்கின்றனர். நிலம், வீடு முதலிய அசையாச் சொத்துக்களை அடைமானமாக ஏற்றுக்கொண்டு இவர்கள் கடன் கொடுக்கின்றனர். இவர்கள் இந்தச் சொத்துக்களைப் சுவாதீன அடைமானமாக (Usufructuary mortgage) ஏற்றுக் கொள்ளலாம். உண்டியல்களின் தள்ளுபடி வீதம் (Rate of discount) 4-இலிருந்து 12 சதவீதம் வரை இடத்திற்கும் வியாபாரப் பருவத்திற்கும் ஏற்றபடி மாறலாம். இந்தத் தள்ளுபடி வீதத்தைச் சுதேச மார்க்கட்டு வீதம் (Bazaar rate) என்று சொல்லலாம். பம்பாயிலுள்ள சுதேச மார்க்கட்டு வீதத்திற்கும், கல்கத்தாவிலுள்ள வீதத்திற்கும் மூன்று சதவீதம் வேறுபாடிருக்கலாம். இதிலிருந்து எப்படிப் பணம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எளிதில் செல்வதில்லை என்பது விளங்கும். சுதேச பணமார்க்கட்டில் (Indigenous money market) இந்த நிலைமையைச் சாதாரணமாகக் காணலாம்.

சென்னையிலுள்ள நாட்டுக் கோட்டைச் செட்டியார்களையும், பம்பாயிலுள்ள மூல்த்தானியர்களையும் தவிர, மற்றச் சுதேச பாங்குதார்கள் பாங்குத்தொழிலுடன் வாணிகத்தொழிலையும் இணைத்திருக்கின்றனர். இவர்களுடைய பாங்குத் தொழில் நாளடைவில் குன்றியதால், இவர்கள் மற்றத் தொழில்களில் மிகுதியான ஊக்கம் காட்டி வருகின்றனர். பணம் செலுத்துவதற்கு வேண்டிய வசதிகளை ஸ்டேட் பாங்கு சிறந்த முறையில் அளிக்கின்றது. ஏனெனில், இதன் கிளைகள் நாடெங்கும் பணியாற்றுகின்றன. கூட்டுறவுப் பாங்குகள் மக்களின் சேமிப்புத் தொகைகளை டெபாசிட்டாகப் பெறுவதில் சுதேச பாங்குகளுடன் போட்டியிடுகின்றன. வாணிகத்திற்கு நிதியளிப்பதில் கூட்டுப்பங்குப் பாங்குகளுடன் போட்டியிட வேண்டியிருப்பதால், நாளடைவில் இவை செய்யும் தொழில் குன்றியது. பலர் பழைய முறைகளையும், வாணிகத்தையும் புறக்கணித்துப் புதிய முறையில் பாங்குத் தொழிலை நடத்த முன் வராததாலும், இவர்களுடைய தொழில் குறைந்தது. சுதேச பாங்குகளுக்கும் பணமார்க்கட்டின் அமைப்புள்ள பகுதிக்கும் (Organised Sector of the money market) உள்ள தொடர்பைப்பற்றி வேறு இடத்தில் காணலாம்.

விவசாயிகள் அறுவடை செய்தவுடன் பொருள்களைக் கடன் கொடுப்போருக்கு விற்பதாக ஒப்புக்கொண்டு அவர்களிடம் கடன் வசதி பெறுகின்றனர்கள். சாதாரணமாக விவசாயிகள் மிகக் குறைந்த விலைக்கே தங்கள் பொருள்களை விற்பனை செய்ய வேண்டிய நிலைமை ஏற்படுகின்றது. விலையை உயர்த்தினால் கடன் கொடுப்போர் வட்டி வீதத்தையும் உயர்த்துகின்றனர். கிராமங்களில் கடன் கொடுப்போர் தங்களுக்கு வேண்டிய நிதியை மார்க்கட்டுகள்

உள்ள ஊர்களில் பெரிய வியாபாரிகளிடமும் சுதேச பாங்குதார் களிடமும் பெற்றுக் கொள்கின்றனர். இவர்கள் பெரும்பாலும் ரொக்க வியாபாரம் நடத்துகின்றனர். இவர்கள் அதிக வட்டியைக் கொடுப்பதால் அறுவடைப் பொருளைக் குறைந்த விலைக்கே வாங்க வேண்டும். உண்டியல்கள் மூலம் இந்த வர்த்தகத்தைச் செய்தால் உண்டியல்களை மார்க்கட்டில் குறைந்த வீதத்தில் தள்ளுபடி செய்ய லாம்.

விவசாயப் பொருள்கள் உற்பத்தியானதிலிருந்து துய்ப்போரை (consumers) அடையும் வரை பல கைகள் மாறுகின்றன. இவைகளை வியாபாரம் செய்வதற்கு உண்டியல்களைப் பயன்படுத்து கின்றனர். இந்த உண்டியல்களைச் சுதேச பாங்குகளும் கூட்டுப் பங்குப் பாங்குகளும் தள்ளுபடி செய்கின்றன. சுதேச பாங்குகள் வியாபாரிகளுக்குக் கடனுதவி செய்கின்றன. ஸ்டேட் பாங்கும், மற்றச் சில பாங்குகளும் வியாபாரிகளுக்கு அவர்கள் பொருள்களை அடைமானமாக ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கின்றன. இந்தப் பொருள்களைப் பாங்குகள் கிடங்குகளில் வைத்துக்கொள்ளும்.

ஆனால், பல வியாபாரிகள் பொருள்களை அடைமானமாக வைத்துக் கடன் வாங்க விரும்பவில்லை. இந்த முறை சிக்கனமான வர்த்தகம் செய்யவும், கடன் வசதிகளைப் பெருக்குவதற்கும் பேருதவியளிக்கும் என்று எண்ணி மாநிலக் குழுக்களும், மையப் பாங்கு விசாரணைக் குழுவும் இதைச் சிபாரிசு செய்திருக்கின்றன. கூட்டுறவுப் பாங்குக் கிடங்குகள் கட்டிக்கொள்ள மாநில அரசாங் கங்கள் நிதியுதவி செய்யவேண்டும். கிடங்குகளில் விவசாயப் பொருள்களை வைத்து ரசீதுகளைப் பெற்று, அவற்றை அடைமான மாகப் பாங்குகளிடம் கொடுத்து உற்பத்தியாளரும், வியாபாரிகளும் கடன் பெறலாம். இப்படிச் செய்தால் விவசாயிகளுக்கும், விவசாயப் பொருள்களை வியாபாரம் செய்பவர்களுக்கும் பாங்குகள் சிறந்த முறையில் கடன்வசதி யளிக்கலாம். இந்தத் தொழிலில் கூட்டுறவுப் பாங்குகள் ஒரு பெரிய பங்கை ஏற்றுக்கொள்ள வேண்டும். தனியார் துறையில் கிடங்குகள் எழுப்புவதற்கு அரசினர் அனுமதி கொடுக்கவேண்டும். நேர்மையான முறையில் தொழில் செய்வோருக்கே அரசினர் அனுமதி கொடுக்கவேண்டும். இவர்கள் தொழில் திறனையும், தொழிலுக்கு வேண்டிய முதலையும் கொண்டிருக்கவேண்டும்.

## கூட்டுறவு இயக்கம்

1892-இல் சென்னை அரசாங்கம் சர். ப்ரெடரிக் நிக்கல்சன் (Sir Frederic Nicholson) என்பவரை இந்தியாவில் விவசாயப்

பாங்குகள் தொடங்க முடியுமா என்பதைப்பற்றி விசாரணை நடத்த நியமனம் செய்தது. அவர் சிபாரிசின்படி கூட்டுறவுச் சங்கச் சட்டத்தை 1904-இல் இந்திய அரசாங்கம் இயற்றியது. கூட்டுறவுக் கடன் சங்கங்களை (Co-operative credit societies) ஆரம்பிப்பதே இந்தச் சட்டத்தின் நோக்கமாகும். இதன்படி மாநில அரசாங்கங்கள் கூட்டுறவுக்காக ஒரு தனி இலாகாவை ஆரம்பித்தனர். கடன் கொடுக்கும் சங்கங்கள் (Credit societies) அங்கத்தினர்களிடம் டெபாசிட்டையும், மற்றையோரிடம் கடனையும் பெற்று, இந்தத் தொகையை அங்கத்தினர்களுக்குக் கடனாகக் கொடுக்கலாம். கூட்டுறவுச் சங்கங்கள் இந்தியக் கம்பெனிச் சட்டத்திற்குட்பட்டவையல்ல. கிராமாந்தரங்களில் 1904-ஆம் ஆண்டுச் சட்டப்படி ஆரம்பமான சங்கங்கள், தங்கள் தொழிலுக்கு வேண்டிய முதலை ஆங்காங்கே திரட்ட முடியவில்லை. ஆகையால், 1912-இல் மீண்டும் ஒரு சட்டத்தை இயற்றி, மையக் கூட்டுறவுப் பாங்குகளையும் இராச்சியப் பாங்கையும் ஆரம்பிக்க ஏற்பாடு செய்தனர். 1912-க்குப்பின் கூட்டுறவு இயக்கம் குறிப்பிடத்தக்க முறையில் முன்னேறியது. 1914-இல் அரசினர் நியமனம் செய்த மக்லகன் குழுவினர் (Maclagan committee) இவ்வியக்கத்தின் முன்னேற்றத்திற்கான சிபாரிசுகளைச் செய்தனர். 1919-இல் கூட்டுறவு, மாநில அரசாங்கத்தின் நிருவாகத்தில் சேர்ந்தது. இரண்டாவது உலகப் போர்க்காலத்தில் இவ்வியக்கம் உற்பத்தி, பங்கீடு முதலிய துறைகளில் பரவியது. 1930-க்குப்பின் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கையும், மொத்த அங்கத்தினர்கள் எண்ணிக்கையும் மிகுதியடைந்தன. 1926-இலிருந்து 1930 வரை மொத்தம் 93,000 சங்கங்கள் இருந்தன. 1938-39-இல் இந்த எண்ணிக்கை 1,22,000-க்கு உயர்ந்தது. கடன் வசதிகள் அளிப்பதைத் தவிர, மற்றத் துறைகளிலும் இவ்வியக்கம் முன்னேறியிருக்கின்றது.

1938-39-இல் இருந்த விவசாயக் கடன் சங்கங்கள் 93,000. இந்த எண்ணிக்கை 1951-52-இல் 1,17,000-க்கு உயர்ந்தது. இவ்வியக்கம் சென்னை, கிழக்குப் பஞ்சாப், பம்பாய், மைசூர் முதலிய இராச்சியங்களில் குறிப்பாக முன்னேறியிருக்கின்றது. ஆனால், கிராமங்களில் வாழும் மக்களுக்கும், விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும், கூட்டுறவு இயக்கம் வேண்டிய அளவு நிதியுதவியும் மற்ற வசதிகளும் செய்யவில்லை. இதை (மையப் பாங்கு விசாரணை) மாநிலக் குழுக்களும், மையப் பாங்குக் குழுவினரும் உணர்ந்தனர்.

கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பையும் அவற்றின் அலுவல்களையும் இங்குப் பார்ப்போம். கூட்டுறவு அமைப்பின் அடிப்படையில் தொடக்கச் சங்கங்கள் (Primary Societies) இருக்கின்றன. இவை மையப் பாங்குகளுடன் (Central Banks) இணைந்திருக்கின்றன. ஒவ்வொரு இராச்சியத்திலும் கூட்டுறவு இயக்கத்தின் தலைமை அங்கமாக இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகள் (State Co-operative Banks) இருக்கின்றன. கூட்டுறவுச் சங்கங்கள் அங்கத்தினர்களுக்குமட்டுமே கடன் கொடுக்கலாம். ஒரே இடத்தில் வசிக்கும் மக்கள் பத்துப்பேர்களுக்குக் குறையாத எண்ணிக்கையுடன் தொடக்கச் சங்கங்களை ஆரம்பிக்கலாம். கிராமங்களில் உள்ள கடன் கொடுக்கும் சங்கங்கள் பெரும்பாலும் வரையற்ற பொறுப்பின் அடிப்படையில் அமைந்துள்ளன. இச்சங்கங்களின் அங்கத்தினர்கள் ஒருவரையொருவர் நன்கு தெரிந்துகொண்டிருக்க வேண்டும். அடிப்படைச் சங்கங்களுக்கு வரையற்ற பொறுப்பே சிறந்தது. அங்கத்தினர்கள் எவ்வளவு பங்குகளைக் கொண்டிருந்த போதிலும், ஒவ்வொருவருக்கும் ஒரே ஒரு ஓட்டுத்தான் உண்டு.

இந்தச் சங்கங்கள் பங்குத்தொகை, டெபாசிட்டு, மையப்பாங்குகளிடம் பெறும் கடன் முதலிய வழிகளில் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைத் திரட்டிக்கொள்கின்றன. டெபாசிட்டு முறை மூலம் கிராமங்களில் சேமிப்பைப் பெருக்கலாம். ஒவ்வொரு சங்கமும் அதன் பகுதியிலுள்ள மக்களிடமிருந்தே டெபாசிட்டுத் தொகைகளைப் பெறுகின்றன. அங்கத்தினர்களுடைய மொத்தச் சொத்தில் ஒரு பகுதிக்குமேல் சங்கத்திலிருந்து கடன் வாங்கக்கூடாது. அங்கத்தினர்கள் தங்கள் சொத்துக்களில், ஒரு பகுதிக்குமேல் சங்கத்திலிருந்து கடன் வாங்க முடியாது. தொழிலுக்காகவும், மற்றச் செலவுக்காகவும் அங்கத்தினர்கள் கடன் வாங்கலாம். தொழிலுக்காகக் கடன் வாங்கும் பழக்கத்தையே சங்கங்கள் ஆதரிக்க வேண்டும். ஆனால், மற்றச் செலவுக்கு வேண்டிய தொகையை இச்சங்கங்கள் கொடுக்காவிடில், அங்கத்தினர்கள் கிராமத்தில் கடன் கொடுப்போர் உதவியை நாடலாம். ஆகையால், மற்றச் செலவுக்கான தொகையையும் இச்சங்கங்கள் கொடுக்கவேண்டும். விவசாயிகள் தம் தொழிலுக்கான செலவுகளுக்கு வேண்டிய நிதியைச் சங்கங்களிடமிருந்து பெறலாம். அடைமானம் பெறுமல் ஜாமீன் கொடுக்கும் இருவர் கையொப்பத்தின்பேரில் இச்சங்கங்கள் கடன் கொடுக்கின்றன; அடைமானக் கடன்களையும் கொடுக்கின்றன. இச்சங்கங்கள் இலாபத்தில் ஒரு பகுதியைக் காப்பு நிதியில் சேர்க்கின்றன.

1955-56-இல் சென்னை அரசாங்கம் நியமனம் செய்த குழுவினரின் தொடக்கச் சங்கங்கள் பற்றிய கருத்துக்களை இங்குக் காண்போம். தொடக்கச் சங்கங்கள் மிகச் சிறியனவாக இருக்கின்றன. ஆகையால், செம்மையான முறையில் கிராமங்களில் மக்களுக்குப் பணியாற்ற முடியவில்லை. ரெய்பிசன் (Raiffeisen) என்பவர் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு தனிச் சங்கம் இருத்தல் வேண்டுமென்று கருதினர். இதை யொட்டியே கிராமங்களில் கடன் கொடுக்கும் சங்கங்களை ஆரம்பித்தனர். இந்த முறையில் ஒரு சில நன்மைகள் இருந்தபோதிலும் பல குறைகளும் உள. இந்த முறை நம் நாட்டிற்கு உகந்ததல்ல. சங்கங்கள் சிறிய பகுதியில் குறைந்த அங்கத்தினர்களுடன் தொழில் செய்கின்றன. திறமையுடன் நல்ல முறையில் மக்களுக்குத் தொண்டாற்றக் குறைந்த பட்சம் ஓர் அளவு தொழில் வேண்டும். 1955-ஆம் ஆண்டு, சென்னை இராச்சியத்தில் சுமார் 3000 சங்கங்கள் நஷ்டமடைந்தன. பல சங்கங்கள் தினசரி வேலைக்கு அலுவலர்களை நியமிக்கக்கூட முடியாத நிலையில் இருக்கின்றன. கடன் மனுக்களைத் தயார் செய்வதற்குக்கூட மற்றவர்கள் உதவியை இவை நாடுகின்றன. மொத்தச் சங்கங்கள் 10,489-இல் 127 சங்கங்களே "A" வகுப்பைச் சேர்ந்தவை. அதாவது, 127 சங்கங்களே தங்கள் வேலைக்கு மற்றவர்கள் உதவியை நாடாதவை. பல சங்கங்கள் நிதி வேண்டிய சமயத்தில் அதைப் பெற்றுக்கொள்ள முடியாத நிலையிலிருக்கின்றன. ஆகையால், கூட்டுறவுச் சங்கங்கள் பயனற்றவை என்று கிராமங்களில் பலர் நினைக்கின்றனர். இந்த நிலை உடனடியாக மாறவேண்டும்.

இந்த நிலையில் இவைகள் சிறந்த முறையில் தம் கணக்குகளை வைத்துக்கொள்ள முடியவில்லை. இவை வசம் வரும் விவசாயப் பொருள்களை வைத்துக்கொள்வதற்கு வேண்டிய கிடங்குகளைக் கட்டிக்கொள்ள இவர்களுக்கு இயலவில்லை. ஆகையால், சங்கத் தலைவர்கள் தங்கள் வீட்டிலேயே இப்பொருள்களை வைத்துக்கொள்ள வேண்டும். கிராம மக்களிடம் உள்ள தகராறுகளும் சச்சரவுகளும் தொடக்கச் சங்கங்களைப் பாதிக்கின்றன. ஆகையால், பெரிய பகுதிகளில் அதிகமான அங்கத்தினர்களுடன் கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பிக்கவேண்டுமென்று குழுவினர் சிபாரிசு செய்தனர். இதே நிலைமை மற்ற இராச்சியங்களிலும் நிலவுவதால், கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பை நாடெங்கும் மாற்றியமைத்தல் நலம். தொடக்கச் சங்கங்களைப் பெரிய சங்கங்களாக மாற்றியமைத்தால் தினசரி அலுவல்களைச் செய்ய ஊழியர்களை நியமனம் செய்யலாம். சங்கங்களின் தொழிலும், டெபாசிட்டுத் தொகையும் அவற்றின் அங்கத்தினர்களின் எண்ணிக்கையும் பெருகும். சிக்கனமான முறையில் தொழிலை நடத்துவதுடன் விவசாயிகளுக்கு

வேண்டும் பொழுது கடனுதவியளிக்கலாம். தொடக்கச் சங்கங்களை மாற்றியமைக்காமல் கூட்டுறவு இயக்கத்திற்குப் புத்துயிர் அளிக்க முடியாது.

உதாரணமாக, கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் 1938-இல் "அலமுரு" என்ற இடத்தில் ஆரம்பித்த சங்கம் 95 அங்கத்தினர்களையும், 745 ரூபாய் முதலையும் கொண்டிருந்தது. 1954-இல் இதன் முதல் 1·29 லட்ச ரூபாயாகவும், அங்கத்தினர்களின் எண்ணிக்கை 4447 ஆகவும் இருந்தன. இதனிடம் இருந்த டெபாசிட்டுத் தொகை 5·91 லட்ச ரூபாய். அரிஜனங்களும், நிலமில்லாத கூலிவேலை செய்பவர்களும் இதன் அங்கத்தினர்களாக இருக்கின்றனர். சென்னை இராச்சியத்தில் ஒரு சில சங்கங்கள் நல்ல முறையில் தொழில் செய்கின்றன. இவற்றின் முதலும் தொழிலும் விரிவடைந்திருக்கின்றன. 1947-இல் சென்னையில் ஆரம்பித்த கிராமாந்தர பாங்குகள் (Rural Banks) பெரிய சங்கங்கள் போன்றவை. கிராமாந்தரக் கடன் விசாரணைக் குழுவினரும் (Rural Credit Survey) பெரிய சங்கங்களை நாட்டில் நிறுவவேண்டுமென்று சிபாரிசு செய்திருக்கின்றனர். ஆகையால், இப்படிச் செய்தாலன்றி, அரசினர் அளிக்கும் உதவியையும், கூட்டுறவு இயக்கத்தின் பயனையும் மக்கள் அடையமாட்டார்கள். சிறிய சங்கங்களை இணைத்துப் பெரிய சங்கங்களை நிறுவலாம்.

இப்படித் தொடக்கச் சங்கங்களை மாற்றியமைப்பதால், கிராமங்களில் நேர்மையற்ற முறையில் தொழில் செய்யும் கடன் கொடுப்போர் மறைந்துவிடுவார்களா என்று நாம் கேட்கலாம். இந்திய விவசாயிகளுடைய கடன் தேவைகளை நாம் சற்று நோக்கினுல், இவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில், கிராமங்களில் கடன் கொடுப்போர் நீடித்துத் தம் தொழிலைச் செய்வார்கள் என்பதை உணரலாம். ஆனுல், இவர்களுடைய தொழில் குறையும் என்பதிலும், கூட்டுறவுச் சங்கங்களின் போட்டியின் விளைவாக இவர்கள் வட்டியைக் குறைக்க வேண்டுமென்பதிலும் ஐயப்பாடெதுவும் இல்லை. கடன் கொடுப்போர், தொழிலைக் கட்டுப்பாடு செய்வதைவிடக் கூட்டுறவுச் சங்கங்களின் போட்டியை வளர்த்து, அதன் மூலம் அவர்கள் தொழிலைக் குறைப்பதே சிறந்ததாகும். சங்கங்களை மாற்றியமைக்கும்பொழுது அவைகளை வரையிட்ட பொறுப்பின் அடிப்படையில் அமைக்கவேண்டும். சங்கங்கள் கடன்வசதிகளை மட்டும் அளிக்காமல் விவசாயிகளின் மற்றத் தேவைகளையும் பூர்த்தி செய்யக்கூடியவையாக இருத்தல் வேண்டும். அதாவது, அவைகள் பன்னேக்குச் சங்கங்களாக (Multi-purpose societies) இருத்தல்வேண்டும்.

## கூட்டுறவு மையப் பாங்குகள்

மையப் பாங்குகள் பல பகுதிகளில் பணியாற்றும் தொடக்கச் சங்கங்களின் கூட்டமைப்பு நிறுவனங்களாகும். இவை முக்கிய மான ஊர்களில் இருக்கின்றன. சில மையப் பாங்குகளில் தொடக்கச் சங்கங்கள் மட்டுமே அங்கம் வகிக்கின்றன. சிலவற்றில் தொடக்கச் சங்கங்களும், தனிப்பட்டவர்களும் அங்கத்தினராக இருக்கின்றனர். ஆனால், மையப் பாங்குகளின் நிருவாகத்தில் தொடக்கச் சங்க அங்கத்தினர்களே பெரும் பங்கை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். மையப் பாங்குகள் தொடக்கச் சங்கங்களுக்கு நிதியுதவி அளிக்கின்றன. இத்துடன் கூட்டுப்பங்குப் பாங்குகள் வேலையையும் ஓரளவு மேற்கொள்ளுகின்றன. இந்த மையப் பாங்குகள் வரையிட்ட பொறுப்பின் அடிப்படையில் அமைந்துள்ளன.

இவை பங்குகள், காப்பு நிதி, பலதரப்பட்ட டெபாசிட்டுகள் முதலியன மூலம் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைத் திரட்டிக் கொள்கின்றன. இவை பெரும்பாலும் டெபாசிட்டுத் தொகையை நடுத்தர வகுப்பினரிடம் பெறுகின்றன. இவைகளுடன் இணைந்த தொடக்கச் சங்கங்களின் உபரி நிதியையும் நகராட்சி, பல்கலைக் கழகங்கள் முதலியவற்றின் தொகைகளையும் இவை டெபாசிட்டாக ஏற்றுக்கொள்கின்றன. இவை ஒவ்வொரு தொடக்கச் சங்கத்திற்கும் ஒரு வரம்புக்கு மேற்பட்ட தொகையைக் கடனாகக் கொடுக்க மாட்டா. இவை கொடுக்கும் வீதத்தைவிட மூன்று சதவீதம் அதிக மான வட்டியை வசூல் செய்கின்றன. இவைகளுடைய இலாபத்தில் 25 சதவீதத்தைக் காப்பு நிதியில் சேர்க்கவேண்டும்.

உண்மையான கூட்டுறவு வளரவேண்டுமானால், தனிப்பட்டவர்களை மையப் பாங்கின் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளக் கூடாதென்று பலர் கருதுகின்றனர். ஆனால், மையப் பாங்குகளின் நிருவாகத்தில் அவர்கள் ஒரு பெரிய பங்கை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். சிலர் மையப் பாங்கின் தலைவர்களாகப் பணியாற்றுகின்றனர். ஆகையால், இப்பொழுது உள்ள முறையைக் கைவிடக் கூடாது. தொடக்கச் சங்கங்களுக்கு நிதியுதவி செய்வதோடல்லாமல் மற்றப் பாங்கு வேலைகளையும் இவைகள் செய்யலாம். அங்கத்தினர்களுக்கும் மற்றையோருக்கும் இவை கடன் வசதிகள் அளிக்கலாம். ஆனால், இவை கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியுதவி செய்வதையே தம் முக்கிய தொழிலாகக் கொள்ளவேண்டும்.

இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு, ஒவ்வொரு இராச்சியத்திலும் மற்றப் பாங்குகளின் தலைமைப்பாங்காகப் பணியாற்றுகின்றது.

மையப் பாங்குகள் மட்டுமன்றி, தனிப்பட்டவர்களும் இதில் பங்கு கொண்டிருக்கின்றனர். இதன் நிருவாகத்தில் தனிப்பட்ட அங்கத் தினர்கள் ஒரு பெரும் பங்கை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு, கூட்டுறவு இயக்கத்திற்குச் சிறப் பாய்த் தொண்டாற்றுகின்றது. மையப் பாங்குகள் நடுத்தர வகுப் பினருடைய டெபாசிட்டுத் தொகையைத் திரட்டுகின்ற நகரங் களில் வசிக்கும் செல்வந்தர்களுடைய சேமிப்பையும், இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு பெற்றுக் கூட்டுறவு முறைக்கு வலிமை கொடுக் கின்றது. மேலும், இது கூட்டுறவு இயக்கத்திற்கும் பண மார்க் கட்டுக்கும் ஒரு தொடர்பை ஏற்படுத்துகின்றது. மையப் பாங்குகள் வேண்டும்பொழுது நிதியைப்பெற இதன் உதவியை நாடலாம். முதல், காப்பு நிதி, பல தரப்பட்ட டெபாசிட்டுகள் முதலியவற்றைக் கொண்டு இந்தப் பாங்கு தொழில் செய்கின்றது. இது மையப் பாங்குகள் மூலமாகவே தொடக்கப் பாங்குகளுக்கு உதவி செய்ய வேண்டும். ஆனால், மையப் பாங்குகள் இல்லாத இடங்களில் இது அவற்றின் வேலைகளைச் செய்யலாம்.

இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளும், மையப் பாங்குகளும், கூட்டுப்பங்குப் பாங்குகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றன. இவை வாணிகப் பாங்குகளிடம் தகுந்த அடைமானங்களைக் கொடுத்துக் கடன் தொகை பெறலாம். இவை வெவ்வேறு துறை களில் பணியாற்றுவதால் இவைகளிடையே போட்டி ஏற்படாது. ஆனால், கூட்டுறவுப் பாங்குகள் மற்றப் பாங்குகளுடன் சாதாரண பாங்கு வேலைகளைச் செய்வதில் போட்டியிடுகின்றன என்று சிலர் கருதுகின்றனர். இந்தக் கூற்று தவறு என்பதை மையப் பாங்குக் குழுவினர் ஏற்றுக்கொண்டு, கூட்டுறவுப் பாங்குகள் நடை முறை டெபாசிட்டுக்களை ஏற்றுக்கொள்ளலாம் என்றனர். பணம் செலுத்துவதற்கு வேண்டிய வசதிகளையும் அவை மற்றப் பாங்குகளைப்போல் அளிக்கலாம் என்றனர். சுதேச பாங்குதார்களும் கூட்டுறவுப் பாங்குகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக் கின்றனர். பல இடங்களில் இவர்கள் கூட்டுறவுப் பாங்குகளில் டெபாசிட்டுத் தொகையை வைத்துக்கொண்டிருக்கின்றனர்.

மேல் நாடுகளில் கூட்டுறவு இயக்கம் தானகத் தோன்றி வளர்ந்தது. குறிப்பாக ஜெர்மனி, டென்மார்க் நாடுகளில் இது நல்ல முறையில் வளர்ச்சி பெற்றது. ஆனால், இதன் வளர்ச்சிக்கு அரசினர் ஆதரவும், சட்டங்களும், முயற்சியுமே நம் நாட்டில் முக்கியமான காரணங்களாகும். கூட்டுறவை மேல்நாடுகளில் ஓர் இயக்கம் என்றும், இந்தியாவில் அரசினர் கொள்கையென்றும் சொல்வதுண்டு. கூட்டுறவுச் சங்கங்களின் மேற்பார்வை,

தணிக்கை, புதிய சங்கங்களைப் பதிவுசெய்தல் முதலியவைகளுக்கு வேண்டிய அலுவலர்களை அரசாங்கம் நியமனம் செய்துள்ளது. சில மையப் பாங்குகளுக்கு வேண்டிய நிதியுதவியையும் அரசாங்கம் செய்கின்றது. கூட்டுறவுச் சங்கங்கள் வருமான வரி, ஸ்டாம்பு வரி, பதிவு வரி முதலிய வரிகளைக் கொடுக்கவேண்டாம். அரசாங்கத் தொடர்பும் ஆதரவும் இல்லாவிடில், இந்தியாவில் கூட்டுறவுப் பாங்குகள் தம் பணியைச் சரிவரச் செய்யமுடியாது.

### நில அடைமான பாங்குகள் (Land Mortgage Banks)

கூட்டுறவுச் சங்கங்கள் குறுகியகாலக் கடனையே கொடுக்க முடியும். ஆனால், விவசாயிகளுக்கு நிலங்கள் வாங்குவதற்கும், விவசாயக் கருவிகள், கால்நடைகள் முதலியவை வாங்குவதற்கும் நீண்டகாலக் கடன் வேண்டியிருக்கின்றது. நில அடைமானப் பாங்குகள் ஐந்திலிருந்து இருபது ஆண்டுகளுள் திருப்பிக் கொடுக்கக் கூடிய கடன்களை விவசாயிகளுக்குக் கொடுக்கின்றன. இந்த நில அடைமானப் பாங்குகளும் கூட்டுறவுப் பாங்குகளேயாகும். இவை டிபஞ்சர்களையும் பத்திரங்களையும் பொது மக்களிடம் விற்றுத் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைத் திரட்டுகின்றன. ஆரம்பத்தில் இவைகள் கொடுத்த கடன் தொகையை விவசாயிகள் பழைய கடனைத் திருப்பிக் கொடுக்கவே பயன்படுத்தினர். இரண்டாவது உலகப் போருக்குமுன் ஏற்பட்ட பொருளாதார மந்த காலத்தில் விலைகள் குறைந்தன. விவசாயிகள் பெரும் தொல்லைகளுக்கு இலக்கானார்கள். நில அடைமானப் பாங்குகள் பல மாநிலங்களில் தோன்றின. இரண்டாவது போர் தொடங்கியபின் விலைகள் உயர்ந்தன; பல விவசாயிகள் கடனைத் திருப்பிக்கொடுக்க முடிந்தது.

1929-இல் சென்னையில் ஒரு மைய நில அடைமான பாங்கை ஆரம்பித்தனர். இந்தப் பாங்கு டிபஞ்சர்களையும், பங்குகளையும் விற்றுப் பணம் திரட்டி, மற்றத் தொடக்க நில அடைமான பாங்குகளுக்கு நிதியுதவி செய்தது. 1935-இல் பம்பாய் மாநிலத்திலும் ஒரு மையப் பாங்கு தோன்றியது. இதை யொட்டி மற்றச் சில மாநிலங்களிலும் மையப் பாங்குகளை ஆரம்பித்தனர். 1951-52-இல் ஆறு இராச்சியங்களில் மைய நில அடைமான பாங்குகள் தோன்றின. இந்த மையப் பாங்குகள் டிபஞ்சர்களை விற்பனை செய்யலாம். அரசாங்கம் இவற்றின் டிபஞ்சர்களுக்கு உறுதி கொடுப்பதோடல்லாமல் இவைகளுக்குக் கடன் கொடுக்கின்றது.

தொடக்க நில அடைமானப் பாங்குகள் (Primary Land Mortgage Banks) தம் தொழிலுக்கு வேண்டிய நிதியில் பெரும்

பகுதியை மையப் பாங்குகளிடம் பெறுகின்றன. இந்தப் பாங்குகளின் டிபஞ்சர்களைப் பெரும்பாலும் இன்சூரன்சுக் கம்பெனிகள், கூட்டுறவுப் பாங்குகள் முதலிய நிலையங்களே வாங்குகின்றன. 1951-52-இல் இந்தப் பாங்குகள் டிபஞ்சர்களை எளிதில் விற்பனை செய்ய முடியவில்லை. ஆகையால், அரசாங்கமும் ரிசர்வ் பாங்கும் மொத்த வெளியீட்டில் 40 சதவீத டிபஞ்சர்களை வாங்கிக்கொள்ள இசைந்தன. ஆனால், இந்தப் பாங்குகள் தம் நிதியை உற்பத்தி பற்றிய செலவுக்காகவே பயன்படுத்தவேண்டுமென்று அரசினர் வற்புறுத்தினர்.

பொருளாதார மந்த காலத்தில் இந்தப் பாங்குகள் கொடுத்த கடன் தொகையை, விவசாயிகள் பழைய கடன்களைத் திருப்பிக் கொடுக்கவே பயன்படுத்தினர் என்று குறிப்பிட்டோம். ஆனால், நாட்டில் இப்பொழுது நிலவும் நிலைமை விவசாயிகளுக்குச் சாதகமாக இருக்கின்றது. எனவே, விவசாயிகள் நில அடைமான பாங்குகள் அளிக்கும் கடனுதவியை எதிர்காலத்தில் விவசாயத்தைச் சீர்படுத்தவும், தொழில் முன்னேற்றத்திற்கும் பயன்படுத்த வேண்டும். நம்நாட்டு விவசாயம் முன்னேற வேண்டுமானால், ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் சிறிய நிலத் துண்டுகளை ஒன்று படுத்தவேண்டும். இப்படிச் செய்தாலன்றி நவீன முறையில் பயிர்த் தொழில் செய்யமுடியாது. சிறிய செய்களை ஒன்றுபடுத்துவதற்கு, அதாவது, புதிய நிலப் பகுதிகளை வாங்கிச் செய்களின் பரப்பைப் பெருக்குவதற்கு, வேண்டிய நிதியை நமது விவசாயிகள் நில அடைமானப் பாங்குகளிடம் பெறலாம். இந்த நில அடைமான பாங்குகளின் முன்னேற்றத்திற்கு வேண்டிய உதவியை ரிசர்வ் பாங்கு செய்கின்றது. இவைகளுக்கு நிதியுதவி செய்யும் நோக்கத்துடன் ரிசர்வ் பாங்கு இவை வெளியிடும் பத்திரங்களை வாங்கத் தயாராக இருக்கின்றது. நமது விவசாயத்தைச் சீர்திருத்துவதில் இந்தப் பாங்குகள் எதிர்காலத்தில் ஒரு பெரிய பங்கை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

பம்பாய் இராச்சியத்தில் இந்தப் பாங்குகள் கிணறுகள் வெட்டவும், விவசாயக் கருவிகள் வாங்குவதற்கும் கடன் கொடுக்கின்றன. இதை அரசினர் ஆதரிக்கின்றனர். ரிசர்வ் பாங்கும் இந்தப் பாங்குகளின் முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கின்றது. ஆனால், அகில இந்திய கிராமாந்தரக் கடன் விசாரணைக் குழுவினர் இந்தப் பாங்குகள் சரியான முறையில் முன்னேறவில்லை என்ற கருத்தை வெளியிட்டனர். சென்னையில் மட்டும் இவை ஓரளவு முன்னேறியிருக்கின்றன. குழுவினர் ஒற்றியிலிருக்கும் பொருள்களை மீட்கவும், பழைய கடன்களைத்

திருப்பிக் கொடுக்கவுமே இவை கொடுக்கும் நிதியை மக்கள் பயன் படுத்துகின்றனர் என்று குறிப்பிட்டிருக்கின்றனர். நெடுங்காலக் கடன் கொடுக்க இந்தப் பாங்குகள் டிபஞ்சர்கள் மூலம் நிதி திரட்டு கின்றன. ஆனால், இவை இந்த டிபஞ்சர்களை, குறுகிய எல்லைக்குட்பட்ட மார்க்கட்டிலேயே விற்பனை செய்யவேண்டியிருக் கின்றது.

நில அடைமான பாங்குகள் அதிகமாகத் தாமதம் செய்யாமல் கடன் கொடுக்கவேண்டும். நிலங்களின் எதிர்கால மதிப்பைக் கணக்கிட்டுக் கடன் கொடுத்தலே சிறந்தது. நிலத்தைச் சீராக்கு வதற்கும், அதன் தரத்தை உயர்த்துவதற்கும் இவை கடன் கொடுக் கின்றன. தரம் உயர்ந்த நிலம் பயனளிக்க ஆரம்பித்தவுடன், விவசாயி முதல் தவணைப் பணத்தைச் செலுத்தவேண்டும்.

விவசாய முன்னேற்றத்திற்காக 1883-ஆம் ஆண்டுச் சட்டப்படி அரசாங்கம் விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கின்றது. நில அடைமான பாங்குகள் உள்ள இடங்களில் இப்படிக் கொடுப்பதால் பாங்குகளின் தொழில் பாதிக்கப்படுகின்றது. நில அடைமான பாங்குகளின் பங்குகள் வாங்காமல் கடன் பெற முடியாது. ஆனால், அரசினரிடம் கடன் வாங்குவது எளிது. எனவே, விவசாயிகள் பாங்குகளைச் சரிவரப் பயன்படுத்திக் கொள்வதில்லை. கூட்டுறவுச் சங்கங்களும் நில அடைமான பாங்குகளும் தோன்றுவதற்குமுன், அரசாங்கம் விவசாயிகளுடன் நேரிடைத்தொடர்பு கொள்ள வேண்டியிருந்தது. ஆனால், இப்பொழுது இந்தப் பாங்குகள் மூலம் விவசாயிகளுக்கு உதவியளித்தலே நலம். இப்படிச் செய்தால் இந்தப் பாங்குகளின் பயனைப் பெருக்கலாம். விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதற்காகத் தனி அலுவலர்களை நியமனம் செய்ய வேண்டாம். மேலும், கொடுத்த கடனைத் திரும்பப் பெறுவதும் பாங்குகள் பொறுப்பாகும். ஆயுள் இன்சூரன்சு முறையை இந்தப் பாங்குகள் கொடுக்கும் கடனுடன் இணைக்கலாம். கடன் வாங்கும் விவசாயிகள் இருபது ஆண்டுகளுக்கு இன்சூரன்சு செய்துகொள்ள வேண்டும். இவர்கள் இன்சூரன்சுத் தொகையைப் பாங்குகளிடம் வாங்கிக்கொள்ளலாம். பாலிசியைப் பாங்குக்கு மாற்றிக் கொடுக்க வேண்டும். அவ்வப்போது செலுத்த வேண்டிய தொகைகளை நில அடைமான பாங்குகள் மூலம் செலுத்தவேண்டும். தவணை முடிந் ததும் இன்சூரன்சுத் தொகையைப் பாங்கு பெற்றுக்கொள்ளலாம். ஆயுள் இன்சூரன்சு முறையை விவசாயிகளிடம் பரப்பலாம். மேலும், அவர்கள் இறந்துவிட்டால், பாங்கு கடன் தொகையை உடனடி யாகப் பெறலாம். மேலும், இன்சூரன்சு முறையினால் விவசாயிகள் பயனடைவார்கள்.

கிராமங்களில் வாழும் விவசாயிகள் பெறும் கடன் தொகையைப்பற்றிய புள்ளி விவரங்களைக் கீழே காணலாம்.

| கடன் பெறும் மூலம் | வாங்கும் மொத்தக் கடனில் சதவீதம் |
|---|---|
| அரசாங்கம் | 3·3 |
| கூட்டுறவுச் சங்கங்கள் | 3·1 |
| வாணிகப் பாங்குகள் | 0·9 |
| உறவினர் | 14·2 |
| நிலக்கிழார் | 1·5 |
| கிராமங்களில் விவசாயிகளுக்குக் கடன் கொடுப்போர் | 24·9 |
| கடன் கொடுப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள் | 44·8 |
| வியாபாரிகளும், தரகர்களும் | 5·5 |
| மற்றவர்கள் | 1·8 |
| மொத்தம் | 100·00 |

இந்தப் புள்ளி விவரங்களிலிருந்து கூட்டுறவு இயக்கம் நம் நாட்டில் சிறந்த பயனளிக்கவில்லை என்பதும், நல்ல முறையில் வளர்ச்சி யடையவில்லை என்பதும் தெளிவாகும். இவ்வியக்கத்தை, சிறப்பாகக் கடன் கொடுக்கும் சங்கங்களை, வளர்க்க வேண்டுமானால் முதன் முதலில் அவற்றின் முதலைப் பெருக்கவேண்டும். இப்படிச் செய்தால் அவை வலிமை பெறுவதுடன் பொது மக்களின் நம்பிக்கையையும் கவரும். ஆகையால், முதன் முதலில் துவக்கச் சங்கங்களின் முதலைப் பெருக்க வேண்டும். திறமையுடன் நல்ல முறையில் தொழில் நடத்த ஒவ்வொரு சங்கமும் ஒரு குறைந்த பட்ச முதலைக் கொண்டிருக்க வேண்டும். முதலானது காப்பு நிதியைப் போல் பணியாற்றுவதால், ஒரு குறைந்த பட்ச முதல் இன்றியமையாதது. பல சங்கங்கள் மிகக் குறைந்த முதலுடன் வேலை செய்ததால் 1950-51-இல் சுமார் 4000 சங்கங்கள் கலைக்கப்பட்டன. இவற்றில் பல மிகச் சிறிய சங்கங்களாக இருந்தன.

கூட்டுறவுச் சங்கங்களுக்கு வேண்டிய நிதியைப் பெரும்பாலும் மையப் பாங்குகளும், இராச்சியப் பாங்குகளும் பல வழிகள் மூலம்

திரட்டுகின்றன. ஆனால், இவற்றைத் துவக்கச் சங்கங்களே கடனாகக் கொடுக்கின்றன. ஆகையால், தொடக்கச் சங்கங்கள் தம் வேலைகளைச் சரிவரச் செய்யாவிடில் மற்றப் பாங்குகள் பாதிக்கப் படும். துவக்கச் சங்கங்களை நிருவகிப்போர், நல்ல திறனையும் அறிவையும் பெறாததால், அங்கத்தினர்களிடம் மதிப்புள்ள அடைமானங்களைப் பெறாமலே கடன் கொடுத்து விடுகின்றனர். துவக்கச் சங்கங்களைச் செம்மையாக நிருவகிக்காவிடில், கூட்டுறவு இயக்கமே சிறந்த பயனளிக்காது. ஆகையால், துவக்கச் சங்கங்கள் மிகுதியான அளவில் டெபாசிட்டையும் முதலையும் அடையவேண்டும். மதிப்புள்ள அடைமானங்களைக் கொண்டே கடன் கொடுக்க வேண்டும். மேலும், கடன் கொடுத்த பின்னர், அத்தொகையை விவசாயிகள் பயிர்த் தொழில் பற்றிய செலவுக்குப் பயன்படுத்து கின்றனரா என்பதைக் கவனிக்கவேண்டும்.

கூட்டுறவுச் சங்கங்கள் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெரும்பாலும் மையப் பாங்குகளிடம் பெறுகின்றதால், அதிகமான வட்டியை வசூல் செய்யவேண்டிய நிலை ஏற்படுகின்றது. இவை மிகக் குறைந்த தொகையை டெபாசிட்டுகள் மூலம் பெறுகின்றன. கூட்டுறவின் நோக்கமே குறைந்த வட்டி வீதத்தில் விவசாயிகளுக்கு நிதியுதவி செய்வதேயாகும். எனவே, துவக்கச் சங்கங்கள் மையப் பாங்குகளையே எதிர்பார்க்காமல் டெபாசிட்டுகள் மூலம் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைத் திரட்டிக் கொள்ளவேண்டும். ரிசர்வ் பாங்கு இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளுக்குக் குறைந்த வட்டி வீதத்தில் கடன் கொடுக்கின்றது. சென்னை, பம்பாய், திருவாங்கூர்-கொச்சின் முதலிய இராச்சியங்களில், மற்ற இராச்சியங்களைவிட, வட்டி வீதம் குறைந்திருக்கின்றது. மற்ற இராச்சியங்களும் வட்டி வீதத்தைக் குறைக்க முயலவேண்டும்.

அகில இந்தியக் கிராமாந்தரக் கடன் விசாரணைக் குழுவினரின் கருத்துக்கள் : விவசாயிகளுக்குக் கூட்டுறவு இயக்கம் எதிர்பார்த்த பயனைக் கொடுக்கவில்லை. இதற்குப் பல காரணங்கள் உள. மையப் பாங்குகளும், இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளும் துவக்கச் சங்கங்கள் வேலையில் வேண்டிய அக்கறை கொள்ளவில்லை. துவக்கச் சங்கங்கள் திறமையுடன் நல்ல முறையில் பணியாற்ற முடியவில்லை. ஏனெனில், அவைகள் மிகச் சிறியனவாக இருந்தன. பல சங்கங்கள் மிகக் குறைந்த அளவு தொழில் செய்தன. அனுபவமும் திறமையும் கொண்டவர்கள் அவற்றை நிருவகிக்கவில்லை. வரையற்ற பொறுப்பின் அடிப்படையில் சங்கங்கள் அமைந்திருந்த காரணத்தால் கிராமங்களில் செல்வமும் செல்வாக்கும் கொண்ட பல விவசாயிகளும் நிலக்கிழார்களும் இச்சங்கங்களில் அங்கத்தினராகச் சேரவில்லை.

அடிப்படைச் சங்கங்களைத் திருத்தி அமைக்காவிடில் கூட்டுறவு இயக்கத்திற்குப் புத்துயிர் அளிக்கமுடியாது. சென்னையிலும், பம்பாயிலும் இவ்வியக்கம், மற்ற இராச்சியங்களைவிட, நல்ல முறையில் வளர்ந்திருக்கின்றது. ஆனால், இந்த இராச்சியங்களில்கூட சிறிய விவசாயிகள் இவ்வியக்கத்தால் வேண்டிய அளவு பயனடைய வில்லை. இதற்கு முக்கியமான காரணம் விவசாயிகளின் ஏழ்மையே. அவர்களுடைய செலவும் நுகர்வும், வரவையும் உற்பத்தியையும் விட அதிகமாக இருக்கின்றன. கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் அவர்கள் நிலைமையை ஓரளவுக்குமேல் மாற்றியமைக்க முடியாது. அவர்களுடைய நிலைமையும் வாழ்க்கைத் தரமும் முன்னேறினால் அவர்கள் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் சிறந்த பயனடைவார்கள்.

கூட்டுறவு இயக்கத்தின் சீரமைப்புக்குப் பல சிபாரிசுகளை இக்குழுவினர் செய்திருக்கின்றனர். கடன் கொடுப்போரே விவசாயிகளுக்கு வேண்டிய நிதியில் 90 சதவீதத்திற்கு மேற்பட்ட பகுதியைக் கொடுக்கின்றனர். கூட்டுறவு இயக்கம் இவர்கள் தொழிலைக் கணிசமான அளவில் குறைக்க முடியவில்லை. எனினும், இவ்வியக்கத்தின் மூலமே விவசாயிகளின் நிலைமையை உயர்த்த வேண்டும். எனவே, கூட்டுறவு இயக்கத்தைச் சீர்திருத்தி அதற்குப் புத்துயிர் அளிக்கவேண்டும். குழுவினர் செய்த சிபாரிசுகள் மூன்று விதிகளை யொட்டி இருந்தன. (1) அரசாங்கம் கூட்டுறவு இயக்கத்தில் பங்குகொள்ளவேண்டும். அரசினர் இவ்வியக்கத்திற்கு நிதியுதவி செய்யவேண்டும்.

(2) பல துறைகளில் தொண்டாற்றும் கூட்டுறவுச் சங்கங்களின் வேலைகளை ஒருமுகப்படுத்தவேண்டும்.

(3) கிராமாந்தரங்களில் வாழும் மக்களின் தேவைகளுக்கேற்ற முறையில் கூட்டுறவுச் சங்கங்களை நிருவகிக்க அலுவலர்களுக்குப் பயிற்சி அளிக்கவேண்டும்.

அரசாங்கம் பின்பற்றும் புதிய கொள்கை, கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பயனளிக்கக் கூடியதாக இருக்கவேண்டும். அவை புதியதோர் ஊக்கத்துடன் வேலை செய்யவேண்டும். இராச்சியப் பாங்குகளிலும், மையப் பாங்குகளிலும் மொத்த முதலில் 51 சதவீதத்திற்குக் குறையாத தொகையை அரசினர் கொள்ளவேண்டும். துவக்கச் சங்கங்களிலும் அரசாங்கம் முதலீடு செய்யலாம். இராச்சியப் பாங்குகளுக்கு அரசினர் நேரிடை உதவி செய்ய வேண்டும். அதாவது, அதன் பங்குகளை அரசாங்கம் வாங்கிக் கொள்ளவேண்டும். மையப் பாங்குகளுக்கு மறைமுக நிதியுதவி

செய்யலாம். இராச்சியப் பாங்குகள் மூலம் மையப் பாங்குகளுக்கும் அவை மூலம் துவக்கப் பாங்குகளுக்கும், அரசினர் நிதியுதவி செய்யலாம். துவக்கச் சங்கங்கள் இராச்சிய அரசாங்கத்தின் உதவியுடன் சிறிது காலம் பணியாற்றிய பிறகு, உண்மையான கூட்டுறவுச் சங்கங்களாக வளரவேண்டும். அதாவது, அரசினர் உதவியை எதிர்பார்க்காமல் பங்குதார்களிடம் பெற்ற முதலுடன் செம்மையான முறையில் தொண்டாற்றவேண்டும். ஆனால், இவ்வாறு வளர்ச்சியடையும் வரை அவைகளுக்கு இராச்சிய மையப் பாங்குகளின் உதவி வேண்டும்.

அரசாங்கம் இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளின் பங்குகளை வாங்குவதால், அவற்றின் நிருவாகத்திலும் ஒரு பெரும் பங்கை ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், நிருவாகக் குழுவில் அதன் அதி காரத்தை மூன்றில் ஒரு பங்காகக் குறைப்பது நலம். அதாவது, நிருவாகத்தில் அரசினர் குறுக்கிடாமல் இருத்தல் நலம். ஆனால், அரசாங்கம் வேண்டும்பொழுது நிருவாகக் குழுவின் முடிவுகளை மாற்றியமைக்கலாம். நிதிக் கொள்கை, கடன் கொடுக்கும் கொள்கை முதலியவை பற்றிய பாங்கின் முடிவுகளை அரசினர் மாற்றலாம். அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்றபின்பே இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு, தலைவரை நியமனம் செய்யலாம்.

இராச்சியக் கூட்டுறவுப் பாங்கைப்போல் ஒவ்வோர் இராச்சியத்திற்கும், ஒரு மையக் கூட்டுறவு விற்பனைச் சங்கம் இருக்கவேண்டும். பாங்குகளைப்போல் இவைகளுக்கும் அரசாங்கம் உதவி செய்யவேண்டும். துவக்கச் சங்கங்கள் விவசாய உற்பத்திக்கே கடன் கொடுக்கவேண்டும். விற்பனைச் சங்கங் களுக்கும், கடன் கொடுக்கும் சங்கங்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டும். விவசாயிகள் விற்பனைச் சங்கங்கள் மூலமாகத் தங்கள் சரக்குகளை விற்பனை செய்ய இசைந்தாலன்றி, துவக்கச் சங்கங்கள் அவர்களுக்குக் கடன் கொடுக்கக்கூடாது.

துவக்கச் சங்கங்கள் சிறந்த முறையில் வேலை செய்யவேண்டு மானால், அவை இப்பொழுது இருப்பது போலன்றிப் பெரிய சங்கங் களாக இருத்தல் வேண்டும். பல கிராமங்களுக்குப் பணியாற்ற ஒரு பெரிய துவக்கச் சங்கத்தை நிறுவலாம். இப்படிச் செய்தால், தினசரி வேலையைச் செய்வதற்குப் பயிற்சிபெற்ற ஒரு செயலாளரை நியமனம் செய்யலாம். சங்கங்கள் மிகுதியான அங்கத்தினர்களைக் கொள்ளவேண்டும். கூட்டுறவுத் துறையில் பணியாற்றும் அலுவலர்களுக்கு நல்ல பயிற்சி அளிக்கவேண்டும்.

ரிசர்வ் பாங்கு நாட்டின் விவசாயக்கடன் (நெடுங்காலத் தொழிலுக்கு) நிதியையும் (National Agricultural Credit (Long term) Fund) நாட்டின் விவசாயக் கடன் (நிலைபேற்று) நிதியை யும் (National Agricultural Credit (Stabilization) Fund) ஏற் படுத்த வேண்டும். கூட்டுறவுக் கடன் முறையைச் சீர்படுத்து வதிலும், பல துறைகளில் இவ்வியக்கம் செய்யும் வேலைகளை ஒருமுகப்படுத்துவதிலும் ரிசர்வ் பாங்கு இராச்சிய அரசாங்கங் களுடன் ஒத்துழைக்க வேண்டும். இந்த மாறுதல்களுக்கு ஏற்றபடி ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றியமைத்தனர். இதன்படி ரிசர்வ் பாங்கு நெடுங்காலத் தொழில் நிதியில் பத்துக் கோடி ரூபாயைச் சேர்க்கவேண்டும். இதைத் தவிர, ஐந்தாண்டுகளுக்கு ஆண்டு தோறும் ஐந்து கோடி ரூபாயை இந்த நிதியில் சேர்க்கவேண்டும். இந்த நிதியிலிருந்து இராச்சிய அரசாங்கங்களுக்குக் கூட்டுறவுச் சங்கங்களின் பங்குகளை வாங்குவதற்குக் கடன் கொடுக்கலாம். இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளுக்கும் நிதியுதவி செய்யலாம். இந்த உதவியைக் கொண்டு இந்தப் பாங்குகள் விவசாயத்திற்கு வேண்டிய நடுத்தரக் காலக் கடனைக் கொடுக்கலாம். மைய நிலை அடைமான பாங்குகளுக்கு நிதியுதவி செய்யவும், அவற்றின் டிபஞ்சர்களை வாங்கவும் இந்த நிதியைப் பயன்படுத்தலாம். ரிசர்வ் பாங்கு நிலைபேற்று நிதியில் ஒரு கோடி ரூபாயை முதன் முதலில் சேர்க்கவேண்டும். இதன்பின் ஆண்டுதோறும் ஒரு கோடி ரூபாயை இதில் சேர்க்கவேண்டும். இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகள் கொடுத்த குறுகியகாலக் கடனை, பருவ மழை தவறுவது போன்ற பல காரணங்களால் திரும்பப்பெற முடியாமலிருக் கலாம். இந்தச் சந்தர்ப்பங்களில் குறுகியகாலக் கடன்களை அவை நடுத்தரக்காலக் கடனாக மாற்றுவதற்கு இந்த நிதியை உபயோகிக் கலாம்.

இந்த நிதிகளை ரிசர்வ் பாங்கு நிருவகிக்க வேண்டும். நாட்டு விவசாயக் கடன் (இடர் உதவி-உறுதி மொழிக்கான) நிதியை (National Agricultural Credit (Relief and Guarantee) Fund) அரசினர் உணவு-விவசாய இலாகாவின் கீழ் அமைக்கவேண்டும். பஞ்சம், பற்றுக்குறை முதலிய காரணங்களால் கூட்டுறவுச் சங்கங்கள் கொடுத்த கடனைத் திரும்பப் பெற முடியாமலிருக்கலாம். இந்த நிலையில் அவைகளுக்கு உதவிசெய்ய இந்த நிதியைப் பயன்படுத்த லாம். இராச்சிய விவசாயக் கடன் (இடர் உதவி-உறுதி மொழிக் கான) நிதியையும் (State Agricultural Credit (Relief and Guarantee) Fund), இராச்சியக் கூட்டுறவு வளர்ச்சி நிதியையும் (State Co-operative Development Fund) இராச்சிய அரசாங் கங்கள் ஏற்படுத்தவேண்டும். மற்ற இரு நிதிகளைப் போலவே

இவற்றையும் பயன்படுத்த வேண்டும். இந்த நிதிகளைத் தவிர இந்திய அரசாங்கம் நாட்டுக் கூட்டுறவு வளர்ச்சி நிதியையும் (National Co-operative Development), நாட்டுக் கிடங்கு வளர்ச்சி நிதியையும் (National Ware-housing Development Fund) அமைக்க வேண்டும்.

ரிசர்வ் பாங்குடன் கலந்து ஆலோசித்து இராச்சிய அரசாங்கங்கள் கூட்டுறவு இயக்க முன்னேற்றத்திற்கான வழிகளை வகுக்கவேண்டும். இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு நிலையிலும், மையப்பாங்கு நிலையிலும், துவக்கச் சங்கங்கள் நிலையிலும் அரசாங்கம் கூட்டுறவு நிலையங்களின் அலுவல்களில் பங்கு கொள்ள வேண்டும். ஆனால், நாளடைவில் இந்தப் பங்கு சிறிது சிறிதாகக் குறைய வேண்டும். முதன்முதலில் துவக்கச் சங்கங்களின் அலுவல்களில் அரசினர் குறுக்கீடு நீங்கவேண்டும். பிறகு, மற்ற இரு நிலைகளிலும் அவர்கள் பங்கு சிறிது சிறிதாக மறையும்.

இரு துறைகளில் முன்னேற்றம் வேண்டும். கூட்டுறவுக்கடன் துறையில் ரிசர்வ் பாங்கும், விற்பனை, உற்பத்தி முதலியவற்றில் அரசாங்கமும் முன்னேற்றத்திற்கு ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். ஸ்டேட் பாங்கு, கூட்டுறவுப் பாங்குகளுக்குப் பணம் செலுத்து வதற்கு வசதிகள் அளிக்க வேண்டும்.

மேற்கூறிய அகில இந்திய கிராமாந்தரக் கடன் விசாரணைக் குழுவினரின் கருத்துக்கள் கூட்டுறவுக் கோட்பாட்டைவிட்டுச் சற்று விலகியதாக இருக்கின்றன. மற்ற மேல்நாடுகளில் கூட்டுறவு இயக்கம் தானகத் தோன்றி, அரசினர் கட்டுப்பாடின்றி பணியாற்று கின்றது. நம்நாட்டில் முன்பே உள்ள அரசினர் குறுக்கீட்டைக் குழுவினரின் முடிவுகள் மிகைப்படுத்துகின்றன. கடன் கொடுக் கும் நிலையங்கள் கடன் வாங்கும் பல நிலையங்களின் பங்குகளை வாங்குவது பொருத்தமானதல்ல. ஆனால், நம் நாட்டில் உள்ள நிலைமையைச் சற்றே நோக்கினல், குழுவினரின்முடிவுகள் முற்றிலும் இந்தியாவிற்குப் பொருத்தமானவையல்ல என்று சொல்ல முடியாது. பூனவில் நடைபெற்ற இரண்டாவது கூட்டுறவு மாநாடு, அரசாங்கம் கூட்டுறவு இயக்கத்தில் பங்குகொள்ள வேண்டுமென்ற குழுவினரின் முடிவை ஏற்றுக்கொண்டது. ஆனல், ஆங்காங்கே பணியாற்றும் கூட்டுறவுச் சங்கங்களின் தேவைக்கேற்றவாறு இந்தப் பங்கு அமைய வேண்டும் என்று முடிவு செய்தனர். இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளின் நிருவாகக் குழுவில் அர சாங்கம் மூன்று அங்கத்தினர்களுக்கு மேல் நியமனம் செய்யக் கூடாதென்றும், இந்த அங்கத்தினர்கள் சில நிருவாகப் பிரச்சினை

களில் தலையிடக் கூடாதென்றும், அரசாங்கம் பாங்குகளின் நிரு வாகத்தில் கூடியமட்டில் குறுக்கிடக் கூடாதென்றும் முடிவு செய்தனர். 1955-இல் கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர்களும், மந்திரிகளும் கூடிய மாநாடு பூனு மாநாட்டின் முடிவுகளை ஏற்றுக் கொண்டது.

1955-56-இல் சென்னை அரசாங்கம் நியமித்த குழுவினர், அரசினர் கூட்டுறவு இயக்க வேலையில் பங்கு கொள்வதால், கணிசமான முன்னேற்றம் ஏற்படுமென்று எதிர்பார்க்க முடியாதென்ற கருத்தை வெளியிட்டனர். கூட்டுறவுப் பாங்குகள் அரசினர் தலையீட்டை விரும்பவில்லை. ஆகையால், அரசாங் கத்தின் பங்குத் தொகையைத் திருப்பிக் கொடுக்கவும், அவர்கள் குறுக்கீட்டைக் குறைத்துக்கொள்ளவும் பாங்குகளுக்கு அதிகாரம் கொடுக்கவேண்டும். கூட்டுறவுச் சங்கங்கள் மக்களுக்குச் செய்யும் தொண்டு உண்மையாக மிகுதியடையவேண்டுமானல், கிராமாந்தர மக்கள் இவ்வியக்கத்தில் நம்பிக்கை கொண்டு துவக்கச் சங்கங் களில் அங்கத்தினர்களாகச் சேரவேண்டும். இச்சங்கங்களை நன்கு கப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். மையப் பாங்குகளுக்கும் இராச்சியப் பாங்குகளுக்கும் நிதியுதவி செய்வதன்மூலம் இப்பொழுது உள்ள நிலைமையை மாற்ற முடியாது. கூட்டுறவுச் சங்கங்களில் அங்கத்தினர்களாகச் சேர்வதற்கு அரசினர் முதல் மூலம் அளிக்கும் நிதியைக் கொண்டு மக்களுக்குக் கடன் கொடுத்து உதவலாம். சில குறைகள் இருந்தபோதிலும் அகில இந்தியக் கிராமாந்தரக் கடன் விசாரணைக் குழுவினரின் அறிக்கை கூட்டுறவு இயக்கத் தின் முன்னேற்றத்திற்கான வழிகளை வகுத்திருக்கின்றது. குழு வினரின் முடிவுகளை அரசாங்கமும், ரிசர்வ் பாங்கும் ஏற்றுக் கொண்டன. 1955-இலிருந்து குழுவினரின் சிபாரிசுகளை ஒட்டி அரசாங்கம் பல நடவடிக்கைகளை எடுத்தது. ரிசர்வ் பாங்குச் சட்டத்தை இதற்காக மாற்றியமைத்தனர். கூட்டுறவு நிலையங் களின் பங்குகளை வாங்குவதற்காக இராச்சிய அரசாங்கங்கள் ரிசர்வ் பாங்கிலிருந்து கடன் பெறலாம். ரிசர்வ் பாங்கின் ஆதரவில் கூட்டுறவு இயக்கம் சிறந்த முறையில் எதிர் காலத்தில் வளர வேண்டும்.

# 7. சேமிப்புப் பணத்தை முதலீடு செய்தல்

## இன்சூரன்சுக் கம்பெனிகள்

இன்சூரன்சுக் கம்பெனிகள் மக்களுடைய சேமிப்புக்களை ஒன்று படுத்தி முதலீட்டுக்குப் பயன்படுத்துகின்றன. ஈட்டுறுதி வசதிகள் அளிப்பதோடல்லாமல், இன்சூரன்சு முறை, மக்களுடைய சேமிப்புக்களைத் திரட்டி முதலீடு செய்து உற்பத்திக்கும், வர்த்தகத் திற்கும் உதவியளிக்கின்றது. அமைப்புபெற்ற முதல் மார்க்கட்டில் (Organised Capital Market) இன்சூரன்சுக் கம்பெனிகள் சிறப்பாய்ப் பணியாற்றுகின்றன. பல துறைகளில் இன்சூரன்சுத் தொழிலைச் செய்யலாம். அவற்றுள் ஆயுள் இன்சூரன்சு ஒன்ருகும்.

ஆயுள் இன்சூரன்சுப் பத்திரம் பெற்றவர்கள் நீண்ட காலத்திற்கு இன்சூரன்சுக் கட்டணங்களைச் (Insurance Premiums) செலுத்தவேண்டும். இன்சூரன்சுப் பத்திரங்களைப் பெறுவோரின் ஆயுளையும், கம்பெனி நிறுவனத்தின் செலவையும், மதிப்பீடு செய்து, செலுத்த வேண்டிய தொகையை நிர்ணயம் செய்வது வழக்கம். இந்தியாவில் ஆயுள் இன்சூரன்சுத் தொழில் 19-ஆம் நூற்ருண்டில் தொடங்கியது. முதன் முதலில் ஓரியண்டல் ஆயுள் இன்சூரன்சுக் கம்பெனி 1818-இல் ஆரம்பித்தது. இதைத் தொடர்ந்து பல கம்பெனிகள் தோன்றின. 1912-ஆம் ஆண்டு இந்திய இன்சூரன்சுக் கம்பெனிச் சட்டம் இயற்றினர். அதுவரை இக்கம்பெனிகள், இந்தியக் கம்பெனிச் சட்டத்துக்குட்பட்டிருந்தன. 1912-க்குப்பின் இன்சூரன்சுத் தொழிலில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. ஆனுல், இத்தொழிலில் சில குறைகள் இருந்தன. பல கம்பெனிகள் தோன்றின. அவற்றுள் சில செம்மையான முறையில் தொழில் செய்யாமல் ஊகவாணிகத்தில் ஈடுபட்டன. அவைகளுடைய அடக்கச் செலவும் மிகுதியாக

இருந்தது. இத் தொழிலில் ஈடுபட்ட பலருக்குப் போதிய அனுபவம் இல்லை. பொருளாதார மந்த காலத்தில் பல கம்பெனிகளைக் கலைக்க வேண்டியதாயிற்று.

1912-ஆம் ஆண்டுச் சட்டம் இன்சூரன்சுக் கம்பெனிகளைச் சிறந்த முறையில் கட்டுப்பாடு செய்யவில்லை. ஆதலின், அரசினர் மீண்டும் 1938-இல் ஒரு சட்டத்தை இயற்றினர். 1940-க்குப் பின் இன்சூரன்சுத் தொழில் மீண்டும் பெருகியது. நாட்டுப் பிரிவினை இதன் முன்னேற்றத்தை ஓரளவு பாதித்தபோதிலும், 1953-க்குப்பின் மீண்டும் இத்தொழில் பெருகத் தொடங்கியது. 1954-இல் ஆயுள், நெருப்பு, கடல் பற்றிய தொழில் செய்யும் இன்சூரன்சுக் கம் பெனிகள் மொத்தம் 319 இந்தியாவில் இருந்தன. இவற்றில் 215 இந்தியர் வசமும், 104 அன்னியர் வசமும் இருந்தன. அன்னியக் கம்பெனிகளில் மூன்று மட்டும் ஆயுள் இன்சூரன்சுத் தொழில் செய்தன.

இன்சூரன்சுக் கம்பெனிகள் தங்கள்வசம் இருக்கும் நிதியில் ஒரு பகுதியை இன்சூரன்சுப் பத்திரம் பெற்றவர்களுக்குக் கடனுகக் கொடுத்தன. கணிசமான தொகையைப் பத்திர முதலீட்டிலும், கருவூல உண்டியல்களிலும் (Treasury Bills) முதலீடு செய்தன. சில இந்திய இன்சூரன்சுக் கம்பெனிகள் கூட்டுப் பங்குக் கம்பெனி களின் டிபஞ்சர்களையும் வாங்குவதற்குத் தங்கள் நிதியைப் பயன் படுத்துகின்றன. 1946-க்குப்பின் இன்சூரன்சுக் கம்பெனிகள் அரசினர் பத்திரங்களிலேயே தம் நிதியைப் பெரும்பாலும் முதலீடு செய்ய ஆரம்பித்தன. கூட்டுப்பங்குக் கம்பெனிகளின் பங்கு களிலும் ஓரளவு முதலீடு செய்தன. 1948-க்குப்பின் பத்திர முதலீடு குறைந்தது. ஆனால், கம்பெனிகள் மிகுதியான தொகையைப் பங்குகள் வாங்குவதில் செலவு செய்தன. ஜப்பானில் இன்சூரன்சுக் கம்பெனிகள் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பாங்குகள் மூல மாகவும், நேரிடையாகவும் கொடுத்து உதவின. ஆனால், இந்தி யாவில் தொழிலுக்கு இன்சூரன்சு நிதி பயன்படவில்லை.

இன்சூரன்சுத் தொழில் சிறந்த முறையில் வளர்ச்சியடைய அரசாங்கம் பல சட்டங்களை இயற்றினர். முன்பு இயற்றிய சட்டங் களின் குறைகளை நீக்குவதற்காக 1937-இல் ஒரு புதிய சட்டத்தை இயற்றினர். அதன்படி,

(1) இன்சூரன்சுக் கம்பெனிகள், தொழிலை ஆரம்பிப்பதற்கு முன் 50,000 ரூபாய் மதிப்புள்ள அரசாங்கப் பத்திரங்களைப் பெற்று

அரசினரிடம் கொடுக்கவேண்டும். 50,000 ரூபாய் மதிப்புள்ள முதலுடன் தொழில் ஆரம்பமாகவேண்டும்.

(2) கம்பெனிகளின் சொத்துக்களில் குறைந்த பட்சம் மூன்றில் ஒரு பங்கை அரசாங்கப் பத்திரங்களிலும், ட்ரஸ்ட்டு (Trust) பத்திரங்களிலும் முதலீடு செய்யவேண்டும்.

(3) கம்பெனியின் நிலைமையை மூன்றுண்டுக்கு ஒருமுறை தனிப்பட்ட இன்சூரன்சுக் கணக்கர் பரிசீலனை செய்யவேண்டும். இப்படிச் செய்யும் மதிப்பீட்டில் குறைகள் இருந்தால், புதிய தொழில் செய்ய ஆரம்பிப்பதற்குமுன் அக்குறைகளை நீக்கவேண்டும்.

(4) ஒவ்வொரு கம்பெனியும் குறிப்பிட்ட நமூனுக்களில் அதன் ஆண்டறிக்கையை அரசாங்கத்திற்கு அனுப்பவேண்டும்.

(5) தள்ளுபடியை (Rebates) இந்தச் சட்டம் அனுமதிக்கவில்லை.

(6) ஏஜண்டுகளுக்குக் கொடுக்கும் கூலியை வரையறுத்தனர்.

(7) கம்பெனியின் நிருவாக ஏஜண்டுகளின் கால வரை மூன்றுண்டுகளுக்குட்பட்டிருக்கவேண்டும். அவர்கள் பெறும் ஊதியத்தையும் வரையறுத்தனர். இங்கிலாந்தில் பதிவான இன்சூரன்சுக் கம்பெனிகளும் இந்தச் சட்டதிட்டங்களுக்குட்பட்டிருந்தன.

இந்தச் சட்டத்தை 1946-இலும், 1950-இலும் திருத்தியமைத்தனர். கம்பெனிகளின் முதலீடுகள் கட்டுப்பாடுகளுக்குட்பட்டன. ஊகவாணிகத்தில் கம்பெனிகள் ஈடுபடுவதைத் தடுப்பதே இக்கட்டுப்பாடுகளின் நோக்கமாகும்.

1956-ஆம் ஆண்டு ஆயுள் இன்சூரன்சுத் தொழில் நாட்டுடைமையாக்கப்பட்டது. இது பற்றிய சட்டத்தை 1956-இல் அரசினர் இயற்றினர். இம்பீரியல் பாங்கும் ஆயுள் இன்சூரன்சுத் தொழிலும் அரசாங்க நிருவாகத்தின்கீழ் வந்தபின், பணமார்க்கட்டிலுள்ள ரொக்கத்தில் ஒரு பெரும் பகுதி அரசாங்கத்தின் நேரடிக் கண்காணிப்பில் வந்தது. ஆயுள் இன்சூரன்சுக் கம்பெனிகள் மக்கள் சேமிப்பை ஒருமுகப்படுத்தின. அரசினருக்குப் பொருளாதாரத் திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு ஏராளமான நிதி தேவைப்பட்டது. ஆயுள் இன்சூரன்சுக் கம்பெனிகளின் நிதியைப் பயன்படுத்திக்கொள்ளும் நோக்கத்துடன் அவைகளை நாட்டுடைமையாக்கினர். 1956-இல் ஆயுள் இன்சூரன்சுக் கம்பெனிகள் ஆண்டுதோறும் 55 கோடி ரூபாய் இன்சூரன்சுக் கட்டணமாகப் பெற்றன. சுமார் 380 கோடி ரூபாய் பெறுமானமுள்ள சொத்தைக்

கொண்டிருந்தன. பல இன்சூரன்சுக் கம்பெனிகள் சிறந்த முறையில் நிருவகிக்கப்படாததாலும், அவற்றின் இயக்குநர்கள் நேர்மையற்ற முறையில் நடந்து கொண்டதாலும், இன்சூரன்சுத் தொழிலை நாட்டுடைமையாக்க வேண்டியதாயிற்று. இன்சூரன்சுப் பத்திரங்களைப் பெற்றவர்களின் நலன்களைக் காப்பதற்காகவும், அரசினர் இத்தொழிலைத் தங்கள் நிருவாகத்தின்கீழ்க் கொண்டுவந்தனர்.

1956-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஆயுள் இன்சூரன்சுக் கார்ப்பரேஷனை ஆரம்பித்தனர். எல்லா இன்சூரன்சுக் கம்பெனிகளையும் இதனுடன் இணைத்தனர். அரசினர் குறுக்கீடின்றி இந்தக் கார்ப்பரேஷன் சுயேச்சையுடன் பணிபுரியலாம். ஆனால், வேண்டும் பொழுது அரசினர் சட்டத்தின் 21-ஆவது பகுதிப்படி கார்ப்பரேஷனைக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தலாம். 1958-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நியமனம் செய்த சாக்லா குழுவினர் (Chagla Committee) ஆயுள் இன்சூரன்சுக் கார்ப்பரேஷனுடைய முதலீடு பற்றிய சிபாரிசுகளை அரசினரிடம் அளித்தனர்.

(1) கார்ப்பரேஷனுடைய வேலையில் அரசினர் தலையிடக் கூடா. அவர்கள் குறுக்கீடு தேவையாயிருந்தால், அரசினர் கருத்துக்களையும் எண்ணங்களையும் எழுத்துமூலம் கார்ப்பரேஷனுக்கு அனுப்ப வேண்டும்.

(2) தொழில், நிதி பற்றிய அனுபவம் பெற்றவர்களையே கார்ப்பரேஷன் தலைவர்களாக நியமனம் செய்யவேண்டும்.

(3) அரசினர் அலுவலர்களைத் தலைவர்களாக நியமனம் செய்தால், அவர்கள் கார்ப்பரேஷன் நலன்களையே கருதித் தொண்டாற்ற வேண்டும். உயர்ந்த பதவியிலிருக்கும் அலுவலர்கள் தங்கள் எண்ணத்தை நிறைவேற்ற முயற்சி செய்யக்கூடாது.

(4) கார்ப்பரேஷன் நிதியை முதலீடு செய்யும்பொழுது பத்திரம் பெற்றவர்களுடைய நலன்களையும் நாட்டின் நலனையும் கருதியே முதலீடு செய்யவேண்டும். அரசினர் முதலீட்டுக் கொள்கையை அறிக்கை மூலம் மக்களுக்குத் தெரிவிக்கவேண்டும்.

(5) அரசினர் தங்கள் முடிவுகளையும், கொள்கைகளையும் பாராளுமன்றத்திற்கு அவ்வப்போது எடுத்துரைக்கவேண்டும்.

(6) அமைச்சர்கள் தங்கள் இலாகாவில் பணியாற்றும் அலுவலர்கள் செயல்களுக்குப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும். அலுவலர்கள் செயலைப்பற்றித் தங்களுக்கு ஒன்றும் தெரியாதென்றோ, தங்கள் கட்டளையை மீறி அவர்கள் நடந்து விட்டார்களென்றோ அமைச்சர்கள் சொல்லக்கூடாது. குழுவி

னரின் முடிவுகள் கார்ப்பரேஷனுக்கும் அரசினருக்கும் இடையே இருக்கவேண்டிய தொடர்பை விளக்கின.

அரசினர் நிருவாகத்தின்கீழ் வந்தபின், ஆயுள் இன்சூரன்சு நிதியை நாட்டு முன்னேற்றத்திற்கும், திட்டங்களைச் செயலாற்று வதற்கும் பயன்படுத்திக் கொள்கின்றோம். மேலும் தனியார் துறையிலிருந்த இத்தொழில் பொது நிருவாகத்தின்கீழ் வந்தமை பொதுவுடைமைப் பாதையில் நமது முன்னேற்றத்தைக் காட்டு கின்றது. இந்தியாவில் மட்டுமன்றி சில மேல்நாடுகளிலும் இன்சூரன்சுத் தொழில் அரசினர் வசம் இருக்கின்றது.

## அஞ்சல் அலுவலக டெபாசிட்டுகள்

அஞ்சல் அலுவலகங்கள் மக்களுக்குப் பாங்கு வசதிகள் அளிக்கின்றன. இவை சேவிங்ஸ் டெபாசிட்டுத் தொகைகளை மக்களிடம் பெறுகின்றன. அரசினர் பத்திரங்களை விற்பனை செய் கின்றன. ஆயுள் இனசூரன்சுத் தொழிலையும் செய்கின்றன. நடுத் தர வகுப்பினர்களின் சேமிப்புத் தொகைகளை அஞ்சல் அலுவல கங்கள் திரட்டுகின்றன. இவற்றின் தொழில் பெருகிக்கொண்டே சென்றது. ஆனால், 1939-இல் போர் தொடங்கியதும் இத்தொழில் சிறிது குறைந்தது. எனினும், விரைவில் மீண்டும் முன்னேற ஆரம் பித்தது. 1954-இல் டெபாசிட்டுத் தொகை மொத்தம் 127 கோடி ரூபாய் இருந்தது. அஞ்சல் டெபாசிட்டு முறை மக்களிடம் சேமிப்புப் பழக்கத்தை வளர்க்கின்றது. டெபாசிட்டர்கள் பெரும்பாலும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள். தொழிலாளிகளும் விவசாயி களும் இதை அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அஞ்சல் அலுவலகங்கள் நடைமுறை டெபாசிட்டு வசதிகள் அளிக்கவில்லை.

முதல் உலகப் போர் நடந்து கொண்டிருக்கும்பொழுது அஞ்சல் அலுவலகங்கள் ரொக்கப் பத்திரங்களை வெளியிட்டன. நடுத்தர வகுப்பினரின் சேமிப்புக்களை இந்தப் பத்திரங்கள் மூலம் அரசினர் அடைந்தனர். இரண்டாவது உலகப் போர் நடந்து கொண்டிருக்கும் பொழுதும், இதுபோன்ற பத்தாண்டுத் தவணைப் பத்திரங்களை வெளியிட்டனர். 1943-இலிருந்து நாட்டுச் சேமிப்புப் பத்திரங்களை (National Savings Certificates) வெளி யிட்டனர். இந்தப் பத்திரங்கள் பன்னிரண்டு ஆண்டுத் தவணைப் பத்திரங்களாகும். இந்தப் பத்திரங்களுக்கு வருமானவரி விதிக்க வில்லை. ஒவ்வொரு தனிப்பட்ட நபரும் 5,000 ரூபாய் பெறுமான முள்ள பத்திரங்களை வைத்துக்கொள்ளலாம்.

அஞ்சல் அலுவலகங்கள் அரசாங்க, ஸ்தலஸ்தாபன, பல்கலைக் கழக அலுவலர்களுக்கு ஆயுள் இன்சூரன்சு வசதிகள் அளிக்கின்றன. இன்சூரன்சுக் கட்டணங்களை மாதந்தோறும் செலுத்தவேண்டும்.

19-ஆம் நூற்றாண்டின் இடையில் சென்னையில் "நிதிகளை" ஆரம்பித்தனர். இவை அங்கத்தினர்களுக்குக் கடன் வசதியளிக்கும் நோக்கத்துடன் செய்த ஏற்பாடாகும். இவை இந்தியக் கம்பெனிச் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப்பட்டவை. இவை பங்கு முதல் (Share capital), டெபாசிட்டுத் தொகை முதலியவற்றுடன் தொழில் நடத்துகின்றன. அங்கத்தினர்களுக்கும் மற்றையோருக்கும் தகுந்த அடைமானம் பெற்றுக் கடன் கொடுக்கின்றன. இவை பெரும்பாலும் நல்ல முறையில் நிருவகிக்கப்படுகின்றன.

சென்னை இராச்சியத்தில் "சீட்டு நிதிகளும்" ஆங்காங்கே உள்ளன. இதன் அங்கத்தினர்கள் பல தவணைகளில் (மாத அல்லது வாரத் தவணைகளில்) பணம் செலுத்தவேண்டும். இதை நிருவகிப்போர் முதல் மாதம் அல்லது முதல் தவணை வசூலான தொகையை எடுத்துக் கொள்வது வழக்கம். மற்றத் தவணைகளில் வசூலாகும் தொகைகளை மற்ற அங்கத்தினர்களுக்குக் கொடுப்பது வழக்கம். ஒவ்வொருவராக எல்லா அங்கத்தினர்களுக்கும் அவ்வப்போது வசூலாகும் பணத்தைக் கொடுப்பதற்குப் பல முறைகளைக் கையாளுகின்றனர். இந்தச் சீட்டுநிதி முறையைச் "சீட்டு பிடித்தல்" என்று கூறுவார்கள். மையப் பாங்கு விசாரணைக் குழு இந்த முறைபற்றிய பல சிபாரிசுகளைச் செய்திருக்கின்றது.

நகரக் கூட்டுறவுப் பாங்குகள் (Co-operative Urban banks) நடுத்தர வகுப்பினருக்கும், அரசியல் அலுவலர்களுக்கும், சிறிய தொழிலில் ஈடுபட்டிருப்போருக்கும், தொழிலாளிகளுக்கும் கடன் வசதிகளை அளிக்கின்றன. இவர்களுக்குக் கடன் தேவை அடிக்கடி எழுகின்றது. கூட்டுறவுப் பாங்குகளே இந்தத் தேவைகளைச் சிறந்த முறையில் நிறைவேற்ற முடியும். கூட்டுப்பங்குப் பாங்குகள் இவர்களிடம் உள்ள அடைமானங்களைப் பெற்றுக் கொண்டு இவர்களுக்குக் கடன் கொடுக்க முடியாது. இந்தப் பாங்குகள் இவர்களின் சேமிப்புத் தொகைகளையும் டெபாசிட்டுக்களாகப் பெறலாம். இவை நகை, அசையாச் சொத்துக்கள் முதலியவற்றை அடைமானமாகக் கொண்டு கடன் கொடுக்கின்றன. தொழிலாளிகளுக்குப் பணிபுரியத் தனிக் கூட்டுறவுப் பாங்குகளை ஏற்படுத்தலாம். ஆனால், இவர்கள் நடுத்தர வகுப்பினர்களைப்போல் இந்தப் பாங்குகளைப் பயன்படுத்திக்

கொள்ளமாட்டார்கள். எனவே, தொழிலாளிகள் பெரும்பாலும் கடன் கொடுப்போரையே எதிர்பார்க்கின்றனர்.

### பங்கு மாற்றுச் சந்தைகள் (Stock Exchanges)

பங்குகளையும் பத்திரங்களையும் இந்தச் சந்தையில் வாங்கவும் விற்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பம்பாய்ப் பங்கு மாற்றுச் சந்தை 1887-இல் தோன்றியது. முதல் உலகப் போர்க் காலத்தில் பல புதிய கம்பெனிகள் தோன்றின. பங்கு மாற்றுச் சந்தைகள் வளர்ச்சியடைந்தன. ஊகவாணிகமும் (Speculation) பெருகியது. பம்பாய்ப் பங்கு மாற்றுச் சந்தையில் அங்கத்தினராகச் சேர ஒரு குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்தவேண்டும். சந்தையின் நிருவாகக் குழுவின் இரு அங்கத்தினர்கள் புதிதாகச் சேரும் அங்கத்தினர்களின் மனுவை ஆதரிக்கவேண்டும். அங்கத் தினர் சீட்டையும் (Card) புதிய அங்கத்தினர்கள் விலைகொடுத்து வாங்கிக்கொள்ளவேண்டும். பம்பாயைப்போல் கல்கத்தா, சென்னை முதலிய இடங்களிலுள்ள சந்தைகளிலும் அங்கத்தினராகச் சேரச் சில விதிகளும் கட்டுப்பாடுகளும் உள. பங்கு மாற்றுச் சந்தை களின் அங்கத்தினர்கள் பொது மக்கள் சார்பில் தரகர்களாகவோ (brokers) தம் சொந்தச் சார்பில் பங்கு வர்த்தகராகவோ (Jobber) வேலை செய்யலாம். இந்த இரு வேலைகளையும் ஒருவர் செய்வதால் தொல்லைகள் எழும். இலண்டனில் இவ்விரு வேலைகளையும் தனித்தனி அங்கத்தினர்கள் செய்கின்றனர். அங்கத் தினர்கள் சார்பில் அவர்களுடைய எழுத்தாளர்களும் (Clerks) துணைத் தரகர்களும் பணியாற்றலாம்.

அங்கத்தினர்கள் சூதாட்டத்தை ஒத்த ஊகவாணிகத்தைச் செய்யப் பங்கு மாற்றுச் சந்தைகளில் வாய்ப்புக்கள் இருக்கின்றன. ஊகவாணிகர் பத்திரங்களின் விலை எதிர்காலத்தில் உயரும் என்று எதிர்பார்த்தால் அவைகளை இப்பொழுது வாங்கி, பின் விற்பனை செய்வர். விலை குறையும் என்று எதிர்பார்த்தால், அவைகளை விற்பனை செய்வது வழக்கம். ஊகவாணிகத்திற்கும் உண்மையான முதலீட்டுக்கும் வேறுபாடுகள் இருந்தபோதிலும், இவற்றைப் பாகுபாடு செய்வது கடினம். எல்லைகளுக்குட்பட்ட ஊகவாணிகம் சிறந்த பயனை அளிக்கும். பங்குகளின் உண்மையான முதல் மதிப்பு உயரும் என்பதை ஆராய்ச்சி செய்து, ஊகித்து அவற்றை வாங்குவதைச் சூதாட்டத்திற்குச் சமமாகக் கருதக் கூடாது. ஆனால், சூதாட்டத்தைப் போல் தொழில் செய்வோரைக் கட்டுப் பாடு செய்வது கடினம். ஏனெனில், இதை உண்மையான தொழிலி லிருந்து பாகுபாடு செய்வது எளிதல்ல.

பங்குச் சான்றுச் சீட்டுக்களையும், பத்திரங்களையும் பங்கு மாற்றுச் சந்தைகளில் விற்பனை செய்யலாம். சந்தைக்கு வரும் பத்திரங்கள் சில சட்டதிட்டங்களுக்குட்பட்டிருக்கும். மற்றச் சந்தைகளுக்கு வரும் பொருள்களைப் போலல்லாமல், இவற்றை மட்டும் ஏன் சில விதிகளுக்குட்படுத்தவேண்டுமென்று கேட்கலாம். மற்றப் பண்டங்களை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளலாம். ஆனால், பங்கு மாற்றுச் சந்தையில், போலிப் பத்திரங்களை எளிதில் விற்பனை செய்துவிடலாம். இதைத் தடுப்பதற்காகவே இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள். ஒரு கம்பெனியின் பங்கை இச்சந்தைக்குக் கொண்டுவர வேண்டுமானால், அந்தக் கம்பெனி துவக்கத்திற்குப் பின் ஒரு சில ஆண்டுகளாவது தொழில் செய்திருக்கவேண்டும். சந்தையின் கட்டுப்பாடுகளையும், விதிகளையும் மீறிய கம்பெனிகளின் பத்திரங்களைச் சந்தையின் புறத்தில் (kerb) விற்பனை செய்யலாம். ஆனால், அவற்றைச் சந்தை நிருவாகிகள் அங்கீகரிப்பதில்லை. 1944-45-இல் 360 ரூபாய் செலுத்திய முதலைக் கொண்ட பதின்மூன்றாயிரம் கூட்டுப் பங்குக் கம்பெனிகள் இந்தியாவில் இருந்தன. ஆனால், இவைகளில் ஆயிரம் கம்பெனிகளின் பங்குகளே விற்பனைக்குச் சந்தைக்கு வந்தன.

பங்கு மாற்றுச் சந்தையில் ரொக்கப் பேரங்களும் (Cash deals), தவணைப் பேரங்களும் (Time deals) உள. தவணைப் பேரங்கள் ஊகவாணிகத்திற்கு உகந்தவை. தவணைப் பேரங்களுக்கும் தனித் தனியான பட்டியல்கள் (lists) உள. உண்மையாக முதலீடு செய்வோரும், கணிசமான நிதியைக் கொண்டவர்களும் ரொக்கப் பேரங்கள் செய்யலாம். ஊகவாணிகம் செய்வோர் தவணைப் பேரங்களில் ஈடுபடுவது வழக்கம். இவர்கள் பெரும்பாலும் கடன் வாங்கித் தொழில் செய்கின்றனர். பாங்குகளின் பங்குகளைத் தவணைப் பட்டியல்களில் சேர்ப்பதில்லை. ஏனெனில், பாங்குகள் டெபாசிட்டுத் தொகையைக் கொண்டே தொழில் செய்கின்றன. இவற்றின் பங்குகளை ஊகவாணிகத்திற்குட்படுத்தினால் பல தொல்லைகள் ஏற்படும். டெபாசிட்டார்கள் சில சமயங்களில் பாங்கில் கொண்ட நம்பிக்கையை இழக்க நேரிடலாம். சில கம்பெனிகளின் பங்குகளே தவணைப் பட்டியலில் சேர்க்கப் பட்டுள்ளன. சிலர் பெயரில் பங்குகளைப் பதிவு செய்து, அவர்கள் கையொப்பத்தை மாற்றுப் பத்திரங்களில் (Transfer deed) பெற்று, பங்குகளைச் சந்தையில் மாற்றுவது வழக்கம். இப்படிச் செய்வதால், பங்குகளை மாற்றுவதில் ஏற்படும் செலவுகளைக் குறைக்கலாம். ஆனால், இந்தத் தவறான பழக்கத்தைப் பங்கு மாற்றுச் சந்தைகள் ஆதரிக்கவில்லை.

முதல் உலகப்போரையொட்டி ஒரு பொருளாதார வீக்கம் (boom) ஏற்பட்டது. பங்கு மாற்றுச் சந்தையில் விலைகள் உயர்ந்தன. சந்தையின் நிலை மோசமாக இருந்ததால் அரசினர் அட்லே குழுவை 1923-இல் நியமனம் செய்தனர். சந்தையின் கட்டுப்பாடுகளையும், வேலை நேரத்தையும் அதிகப்படுத்த வேண்டுமென்றும், விடுமுறை நாட்களைக் குறைக்கவேண்டுமென்றும், நிருவாகக் குழுவினரை ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், துணைத்தரகர்கள் இருத்தல் கூடாதென்றும், ஒரேவிதமான மாற்று நமுறைவைப் பயன் படுத்தவேண்டுமென்றும் குழுவினர் சிபாரிசு செய்தனர். 1925-இல் ஊகவாணிகம் அதிகரித்தது. 1936-இல் நியமனம் செய்த மாரிசன் குழுவினர் ஊக வாணிகத்தைக் கட்டுப்பாடு செய்யப் பல சிபாரிசுகளைச் செய்தனர். நிருவாகக் குழுவினரின் அதிகாரங்களைக்குறைத்து அரசாங்கத்தின் அதிகாரத்தைப் பெருக்கவேண்டுமென்று சிபாரிசு செய்தனர். 1939-இல் இரண்டாவது உலகப் போர் ஆரம்பித்ததும் ஊக வாணிகம் பெருகியது. அரசினர் இந்தியத் தற்காப்புச் சட்டத்தைப் பயன்படுத்தி, இதைக் கட்டுப்பாடு செய்தனர். இந்தக் கட்டுப்பாடுகள் 1945-க்குப்பின் மறைந்தன.

1947-ஆம் ஆண்டுச் சட்டப்படி அரசினர் முன்னேக்கிய பேரங்களைக் (Forward dealings) கட்டுப்பாடு செய்ய முயன்றர். 1951-இல் கோர்வாலாக் குழுவை (Gorwala Committee) அரசாங்கம் நியமனம் செய்தது. முன்னேக்கிய பேரங்களைப் பற்றிய பல சிபாரிசுகளை இக்குழுவினர் செய்தனர். 1956-இல் இந்திய அரசாங்கம் ஒரு சட்டம் இயற்றியது. அச்சட்டம் இயற்றுவதற்கு முன் ஊகவாணிகக் கட்டுப்பாடு, பங்கு மாற்றுச் சந்தைகளின் பொறுப்பாக இருந்தது. அரசினர் சந்தைகளின் அலுவல்களில் அதிகம் தலையிடாமல் அவற்றின் சொந்தக் கட்டுப்பாடுகளை வளர்த்தனர்.

ஒழுங்காக அமைந்த சந்தைகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும். இவை பங்குகளையும், பத்திரங்களையும் விற்பனை செய்வதற்கும் வாங்குவதற்கும் வசதியளிக்கின்றன. பங்கு மாற்றுத் தொழிலை நேர்மையாகச் செய்ய இந்தச் சந்தைகள் வேண்டும். பல முதலீட்டு வழிகளில் சேமிப்புகளை நல்ல முறையில் செலுத்த இவை இன்றியமையாதவை. நம்நாட்டுத் தொழில் முன்னேற்றத்தில் இந்தப் பங்கு மாற்றுச் சந்தைகள் ஒரு சிறந்த பங்கை ஏற்றுக்கொண்டன.

## 8. பணமார்க்கட்டு (Money Market)

பணமார்க்கட்டு, சேமிப்புப் பணத்தை முதலீடு செய்வதற்கும், கடன் வாங்குவோருக்கு வசதிகளும் அளிக்கின்றது. பணமார்க்கட்டு எல்லாவிதத் தொழில்களுக்கும் வேண்டிய நிதிவசதியளிக்கின்றது. எனினும், சாதாரணமாகப் பணமார்க்கட்டு என்றால் குறுகிய காலத் தவணைக் கடன்களை வாங்கவும், கொடுக்கவும் வசதிகள் அளிக்கும் மார்க்கட்டு என்று சொல்வதுண்டு. சாதாரண மக்கள் மார்க்கட்டு என்றால் பண்டங்கள் விற்பனை செய்யப்படும் சந்தை என்று கருதுவார்கள். ஆனால், பொருளியலில் மார்க்கட்டு என்றால் சந்தை என்றே பொருள்கொள்ள வேண்டுமென்ற கட்டாயம் இல்லை.

பணமார்க்கட்டின் தன்மையானது, நாட்டின் பொருளாதார அமைப்பு, அதன்வரலாறு, அரசாங்கத்தின் சட்டதிட்டங்கள், மக்கள் பழக்க வழக்கங்கள், மரபுகள் முதலியவற்றால் பாதிக்கப்பட்டிருக்கும். இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் செம்மையாக அமைந்த பண மார்க்கட்டுகள் உள. இங்கிலாந்தில் மற்ற நாடுகளைப் போலல்லாமல் பாங்கு முறை பெரும்பாலும் பழக்கத்தை யொட்டியே அமைந்துள்ளது. ஆகையால், அங்குச் சட்டங்களும் கட்டுப்பாடுகளும் மற்ற நாடுகளைப்போல் அதிகம் தேவையில்லை.

பணமார்க்கட்டுக்கும், பாங்குத் தொழிலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இந்தியாவில் பணமார்க்கட்டை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒரு பகுதி நல்ல அமைப்பைப் பெற்றுள்ளது. ஸ்டேட் பாங்கு, நாணயமாற்றுப் பாங்குகள், ரிசர்வ் பாங்கு, கூட்டுப் பங்குப் பாங்குகள் முதலியவை இந்தப் பகுதியைச் சேர்ந்தவை. அமைப்பற்ற பகுதியில் சுதேச பாங்குகள், கடன்கொடுப்போர் நிதிகள் (Nidhies) முதலியவற்றைச் சேர்க்கலாம். இந்த இரு பகுதிகளுக்கும் அதிகத் தொடர்பில்லை. 1935-ஆம் ஆண்டு வரை மையப் பாங்கு இல்லாததால் இம்பீரியல் பாங்கே மையப் பாங்கின் பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டிருந்தது. இம்பீரியல் பாங்கு மற்றக்

கூட்டுப்பங்குப் பாங்குகளுக்கும் ஒரு பாங்காகப் பணியாற்றியது. அதாவது, அவற்றின் டெபாசிட்டுக்களை ஏற்றுக்கொண்டு அவை களுக்கு நிதியுதவியளித்தது. ஆனால், மற்றப் பாங்குகள் இம்பீரியல் பாங்குகளின் டெபாசிட்டுத் தொகையை வைத்துக்கொள்ளவேண்டு மென்ற கட்டுப்பாடு கிடையாது. மேலும், இம்பீரியல் பாங்கும் மற்றப் பாங்குகளுடன் போட்டியிட்டதென்று சொல்லலாம். ஆகையால், அது மையப் பாங்கின் அலுவல்களைச் சரிவரச் செய்ய முடியவில்லை.

மேலும், கூட்டுறவுப் பாங்குகள் இம்பீரியல் பாங்குடன் தொடர்பு கொள்ளவில்லை. ஆகையால், பணமார்க்கட்டில் உள்ள பல பகுதிகள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் தனித்தனியாக இருந்தன. அமைப்பற்ற பகுதியிலும் (Un-organised sector) நிலைமை இப்படித்தான் இருந்தது. ஆகையால், மேல் நாடுகளைப் போலல்லாமல் இந்தியாவில் பணமார்க்கட்டு எந்தவிதக் கட்டுப் பாட்டுக்கும் இடம் கொடுக்கவில்லை. இப்பொழுது இரு பகுதிகளும் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை இங்குப் பார்ப்போம்.

**பணமார்க்கட்டின் அமைப்புள்ள பகுதி** (Organised sector of the money market).

இப்பகுதி நன்றாக அமைந்துள்ளது. பம்பாயும், கல்கத்தாவும் பணமார்க்கட்டின் இரு பெரிய கேந்திரங்களாகும். இவற்றுள் சமீப காலம் வரை கல்கத்தா பம்பாயைவிடச் சிறந்ததாகவும் முக்கியமான தாகவும் கருதப்பட்டு வந்தது. ஆனால், இப்பொழுது பம்பாயே கல்கத்தாவைவிட முக்கியமானதாகும். இங்கிலாந்திற்கு இலண்டன் போலவும், அமெரிக்காவிற்கு நியூயார்க் போலவும், இந்தியாவிற்குப் பம்பாய் நகரம் அமைந்துள்ளது. இதற்குப் பல காரணங்கள் உள. ரிசர்வ் பாங்கும், பல கூட்டுப்பங்குப் பாங்குகளின் தலைமைக் காரி யாலயங்களும் பம்பாயில் அமைந்துள்ளன. மேலும், பொருள்கள், அரசினர் பத்திரங்கள், உலோகங்கள், பங்குகள் முதலியவற்றை வாங்கவும் விற்பனை செய்யவும் ஏற்ற மார்க்கட்டுகள் பம்பாயில் இருக்கின்றன. ஆகையால், பம்பாய் அமைப்புள்ள பணமார்க் கட்டின் மையமாக அமைந்துள்ளது.

**அழைப்புக்கடன் மார்க்கட்டு** (The Call Money Market)

கூட்டுப்பங்குப் பாங்குகளும், நாணய மாற்றுப் பாங்குகளும் தங்களுக்குத் தற்காலிகமாக வேண்டும் நிதியை இந்த மார்க்கட்டில் பெற்றுக்கொள்கின்றன. இந்தக் கடன் தொகையைக் கொடுத் தவர்கள் கேட்கும்பொழுது உடனடியாகத் திருப்பிக் கொடுத்தல்

வேண்டும். இந்தக் கடனைக் கொடுப்பவர்களும் வாங்குவோரும் பாங்குகளேயாகும். நாணயமாற்றுப் பாங்குகள் குறைந்த ரொக்கத்தையும், மிகுதியான ரொக்கநிலையுடைய மற்றச் சொத்துக்களையும் கொண்டிருக்கின்றன. இவைகட்கு அடிக்கடி அழைப்புக் கடன் தேவைப்படும். தவணைக்காலம் முடியும்பொழுது மிகுதியான உண்டியல்களில் குறிப்பிட்டிருக்கும் தொகையைத் திருப்பிக் கொடுக்கும் நிலை ஏற்படலாம். இவர்கள் பெறும் தொகையைவிடத் திருப்பிக் கொடுக்கவேண்டிய தொகை அதிகமாக இருக்கலாம். இதுபோன்ற சமயங்களில் இவை தற்காலிகமாக அழைப்புக்கடனைப் பெறவேண்டும். ஒவ்வொரு பாங்கும் ஒரு குறைந்த பட்ச ரொக்கம் வைத்திருக்கவேண்டும். அவைகள் வைத்திருக்கும் ரொக்கம் போதாவிடில் அவை அழைப்புக் கடன்களைப் பெறலாம். ஆண்டின் இறுதியில் வாணிகப் பாங்குகள் புறச்சோடனைக்காகவும் (Window-dressing) அழைப்புக்கடன் தொகைகளைப் பெறலாம். 1951-ஆம் ஆண்டு வரை அழைப்புக்கடன் வட்டி வீதம் $\frac{1}{4}$ சதவீதத்திலிருந்து ஒரு சதவீதம் வரை மாறுபட்டுக்கொண்டிருந்தது. 1951-இலிருந்து $\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து 3 சதவீதம் வரை, காலத்திற்கும் கடன் தேவைக்கும் ஏற்றபடி மாறுபாடு அடைந்தது. விறுவிறுப்பான காலங்களில் மிகுதியான தொகை தேவைப்படலாம். அப்பொழுது வட்டி வீதம் உயரும்; மந்தகாலத்தில் வட்டிவீதம் குறையும். இந்த அழைப்புக் கடனைத் தரகர் மூலம் ஏற்பாடு செய்கின்றனர்.

## இந்தியாவில் உண்டியல் மார்க்கட்டு (Bill Market)

சிறந்த பாங்கு முறைக்கு உண்டியல் மார்க்கட்டு வேண்டும். நல்ல அமைப்புள்ள உண்டியல் மார்க்கட்டு நம் நாட்டில் இல்லாதது ஒரு பெரிய குறையாகும். இதனால், நமது ஏற்றுமதி இறக்குமதி உண்டியல்களை, ரூபாய் உண்டியல்களாகத் தயார்செய்ய முடியவில்லை. மேலும், சிறந்த உண்டியல் மார்க்கட்டு இருந்தால் பண்டங்களை ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்கு அனுப்பவும், வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியுதவி செய்யவும் எளிதாக இருக்கும். சுருங்கக்கூறின், நல்ல உண்டியல் மார்க்கட்டு இருப்பின் விவசாயம், தொழில், வர்த்தகம் முதலியவை சிறந்த பயனடையும். இந்த மார்க்கட்டு, பணமார்க்கட்டுக்கு நெகிழ்ச்சியைக் கொடுப்பதுடன் குறுகிய கால முதலீட்டுக்கும் பேருதவியாக இருக்கின்றது. நாட்டில் இப்பொழுது பயன்படுத்தும் "ஹூண்டி" என்ற உண்டியல்கள் போதிய அளவு இல்லை. மேலும், அவற்றைத் தள்ளுபடி செய்யவும் வசதிகள் இல்லை. ஆகையால், 1931-இல் மையப் பாங்கு விசாரணைக் குழு இந்தியாவில் உண்டியல் மார்க்கட்டை ஏற்படுத்த

வேண்டுமென்று வற்புறுத்தியது. சில ஆண்டுகளுக்கு முன்தான் ரிசர்வ் பாங்கு இதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கியது. பலவகைப்பட்ட "ஹுண்டி" உண்டியல்கள் இருந்ததால் அவற்றைக்கொண்டு உண்டியல் மார்க்கட்டை ஏற்படுத்த முடியவில்லை. வியாபாரிகள் ரொக்கக் கடனைப் பயன்படுத்தியதாலும், உண்டியல் மார்க்கட்டு வளர்ச்சியடையவில்லை.

இங்கிலாந்தைப் போல் நம்நாட்டில் தள்ளுபடி மார்க்கட்டு கிடையாது. நமது வாணிகப் பாங்குகள் உண்டியல்களை விற்பனையோ தள்ளுபடியோ செய்யாமல், அவை முதிர்வு அல்லது தவணை முடிவு (Maturity) அடையும் வரை வைத்திருப்பது வழக்கம். வேண்டும்பொழுது அரசினர் பத்திரங்களைப் பயன்படுத்தி, இம்பீரியல் பாங்கில் கடன் பெற்றுக்கொள்ளும். அயல்நாட்டினரின் பாங்குகள் இலண்டன் பணமார்க்கட்டில் தங்கள் வசம் இருக்கும் உண்டியல்களைத் தள்ளுபடி செய்துகொள்கின்றன. இந்தியாவில் வாணிகப் பாங்குகள் பணம் வேண்டும்பொழுது ரிசர்வ் பாங்குக்குத் தம் அரசினர் பத்திரங்களை விற்பனை செய்து பணத்தைப் பெற்றுக் கொண்டன. ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் 17(4)a பிரிவுப்படி அந்தப் பாங்கு மற்றப் பாங்குகளிடம் அரசினர் பத்திரங்களை வாங்கிக் கொள்ளலாம். வாணிகப் பாங்குகள் மீண்டும் நிதி கிடைக்கும்பொழுது இந்தப் பத்திரங்களை வாங்கிக் கொள்ள வேண்டும். இப்பழக்கத்தை ரிசர்வ் பாங்கு 1951-இல் நிறுத்தி விட்டது. ரிசர்வ் பாங்கு 1952-ஆம் ஆண்டு ஜனவரி 16-ஆம் தேதி உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தை ஆரம்பித்தது. இத் திட்டத்தின் மூலம் பணமார்க்கட்டுக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்து, நிதி பற்றிய பற்றுக்குறையை அவ்வப்போது நீக்கலாம். பணமார்க்கட்டு வேண்டிய நெகிழ்ச்சியைப் பெறும். ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் பிரிவு 17(4) c-ஐப் பயன்படுத்தி இத்திட்டத்தை ஆரம்பித்தனர். இந்தப் பிரிவுப்படி மூன்று மாதத் தவணை உண்டியல்களை அடைமானமாகக் கொண்டு, ரிசர்வ் பாங்கு ஷெடியூல் பாங்குகளுக்குக் கடன் கொடுக்கலாம். ஆனால், ஷெடியூல் பாங்குகள் தரிசன வெண்ணிலைக்கடன் பத்திரங்களைக் (Demand Promissory notes) கொண்டு கடன் கொடுக்க முடியாது. தவணை உண்டியல்களும், வெண்ணிலைக்கடன் பத்திரங்களும் ரிசர்வ் பாங்கிடம் கடனுதவிபெறத் தேவை. ஆனால், ஷெடியூல் பாங்குகள் அதிகப் பற்றுக்கடன், ரொக்கக் கடன் முதலியவற்றைக் கொடுக்கும்பொழுது, தரிசன வெண்ணிலைக்கடன் பத்திரங்களையே பெரும்பாலும் ஏற்றுக்கொள்கின்றன. ரிசர்வ் பாங்கின் கடன் உதவியைப் பெறவேண்டுமானால், ஷெடியூல் பாங்குகள் தவணை வெண்ணிலைக்கடன் பத்திரங்களைத் தரிசனப்

பத்திரங்களாக மாற்றவேண்டும். இதற்கு ஷெடியூல் பாங்குகள் கொடுக்கும் கடனை இரு பிரிவுகளாகப் பிரிக்கவேண்டும். ஒரு பிரிவு கடனை வேண்டும்பொழுது, வேண்டிய அளவு கடன் பெறுவோர் வாங்கிக் கொள்ளவும், திருப்பிக் கொடுக்கவும் அனுமதிக்கலாம். இந்தப் பிரிவுக்குத் தரிசனப் பத்திரத்தை ஷெடியூல் பாங்குகள் ஏற்றுக்கொள்ளலாம். கடன் வாங்குவோரின் குறைந்த பட்சத் தேவையையொட்டிய மற்ெருரு பிரிவுக் கடனுக்கு மூன்று மாதத் தவணைப் பத்திரங்களைப் பெறவேண்டும். இந்தத் தவணைப் பத்திரங்களைப் பயன்படுத்தி ரிசர்வ் பாங்கிடம் ஷெடியூல் பாங்குகள் கடன் தொகையைப் பெறலாம். இந்த முறை மிகச் சிக்கலானது. ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றி, அந்தப் பாங்கு ஷெடியூல் பாங்குகளின் தரிசனப் பத்திரங்களை ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கலாம்.

இந்த முறையில் கடன் பெறும் ஷெடியூல் பாங்குகள் தாங்கள் பயன்படுத்தும் உண்டியல்களைப் பற்றியும், பத்திரங்களைப் பற்றியும், எல்லா விவரங்களையும் ரிசர்வ் பாங்குக்குக் கொடுக்கவேண்டும். இந்தப் பத்திரங்களும் உண்டியல்களும் உண்மையான வியாபாரத்தின் பலனுகத் தோன்றியவை என்று உறுதி மொழி கூற வேண்டும். கடன் வசதியளிக்கும் பொழுது ரிசர்வ் பாங்கு அடைமானத்தை மட்டுங் கருதாமல், கொடுக்கும் நிதி வர்த்தகத்திற்குப் பயன்படுமா என்பதையும் கவனிக்கும். எந்தக் காரணமும் கொடுக்காமல் ரிசர்வ் பாங்கு கடன் கொடுக்க மறுக்கலாம்.

முதன் முதலில் பத்துக் கோடி ரூபாய்க்குக் குறையாத தொகையை டெபாசிட்டாகக் கொண்ட ஷெடியூல் பாங்குகளுக்கு மட்டுமே ரிசர்வ் பாங்கு கடன் வசதியளித்தது. 1953-இல் ஐந்து கோடி ரூபாய் டெபாசிட்டுத் தொகையுடைய பாங்குகளுக்கும் இந்த வசதியை அளித்தது. 1954-ஆம் ஆண்டு ஜூலை மாதத்திலிருந்து பாங்குக் கம்பெனிச் சட்டத்தின் 22-ஆவது பிரிவுப்படி அனுமதி பெற்ற எல்லாப் பாங்குகளுக்கும் இந்த வசதியளிக்கப்பட்டது. 1954-க்குப்பின் உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தைப் பயன்படுத்திப் பல பாங்குகள் ரிசர்வ் பாங்கிடம் நிதியுதவி பெற்றன. உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தை மக்களிடையே பரவச் செய்வதற்காக, ரிசர்வ் பாங்கு இத்திட்டத்தின்படி கொடுக்கும் கடனுக்கு மையப் பாங்கு வீதத்தை விட அரை சதவீதம் குறைந்த வட்டியைப் பெற்றது. மேலும், இதற்கான ஸ்டாம்பு வரியில் இப்பகுதியை ரிசர்வ் பாங்கு ஏற்றுக்கொண்டது. ஆனல், 1956-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் இந்தச் சலுகைகளை ஓரளவு குறைத்தனர்.

**பில் மார்க்கட்டுத் திட்டத்தின்படி ரிசர்வ் பாங்கு கொடுத்த கடன் (கோடி ரூபாயில்) 17 (4) c பிரிவுப்படி**

| ஆண்டு | தொகை |
|---|---|
| 1953 | 65·84 |
| 1954 | 147·52 |
| 1955 | 225·44 |
| 1956 | 436·82 |
| 1957 | 414·81 |
| 1958 | 153·06 |

உண்டியல் மார்க்கட்டுத் திட்டக் கடன் 1953-இலிருந்து படிப்படியாக மிகுதியடைந்தது. 17 (4) a பிரிவுப்படி கொடுக்கும் கடன் குறைந்துகொண்டே வந்தது. இந்தக் கடன் 1952-இல் மொத்தத்தில் சுமார் 67 சதவீதம் இருந்தது. 1954-இல் இது சுமார் 40 சதவீதமாகக் குறைந்தது. இந்தியாவிலுள்ள அன்னியர் பாங்குகளும் 17 (4) c பிரிவின்கீழ் ரிசர்வ் பாங்கிடம் கடன்பெற ஆரம்பித்தன. உண்டியல் மார்க்கட்டுத் திட்டம் கூட்டுப் பங்குப் பாங்குகளின் ரொக்க நிலையைச் சீர்படுத்தியது. மேலும், இது பணமார்க்கட்டுக்கு ஒரு நெகிழ்ச்சியைக் கொடுக்கின்றது.

இந்த உண்டியல் மார்க்கட்டுத் திட்டம் செம்மையானதல்ல வென்றும், சுதேச பாங்குகளுடைய உண்டியல்களை இத்திட்டத்தின் கீழ்ப் பயன்படுத்தாதது ஒரு பெரிய குறையாகும் என்றும் சிலர் கருது கின்றனர். மேலும், இது ஒரு சிக்கலான திட்டமாகும். ஷெடியூல் பாங்குகள் தரிசனப் பத்திரங்களைத் தவணைப் பத்திரங்களாக மாற்ற வேண்டும். ரிசர்வ் பாங்கு இந்தத் திட்டத்தை எளியதாக வகுத் திருக்க வேண்டும். உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தை முதன் முதலில் மையப் பாங்கு விசாரணைக் குழுவினர் சிபாரிசு செய்தனர். குழுவினர் விசாரணை நடத்திய காலத்தில் இந்தியாவில் குறுகிய கால அரசினர் பத்திரங்களுக்கு நன்ருக அமைந்த ஒரு மார்க்கட்டு இல்லை. மேலும், பாங்குகளும் அதிகமாக அரசினர் பத்திரங்களை வைத்துக்கொள்ளவில்லை. ஆகையால், உண்டியல் மார்க்கட்டுக்கு அப்பொழுது தேவை இருந்தது. ஆனல், இப்பொழுது நன்கு அமைந்த அரசினர் பத்திர மார்க்கட்டு இருப்பதாலும், இந்தியப் பாங்குகள் வசம் வேண்டிய பத்திரங்கள் இருப்பதாலும், உண்டியல் மார்க்கட்டின் தேவை குறைந்துவிட்டது. அரசினர் பத்திரங்கள் வாணிகப் பாங்குகளுக்கு வேண்டிய ரொக்க நிலையை அளிக்கின்றன.

இந்தப் பத்திரங்களைக்கொண்டு அவை மையப் பாங்கிடம் வேண்டிய நிதியைப் பெறலாம். பணமார்க்கட்டும் நெகிழ்ச்சியுடையதாக இருக்கின்றது. ஆகையால், முன்பு உண்டியல் மார்க்கட்டுக்கு இருந்த தேவை இப்பொழுது இல்லை. எனினும், ரிசர்வ் பாங்கின் உண்டியல் மார்க்கட்டுத் திட்டம் நிலைமையை மேலும் சீர்படுத்தலாம். ஆனால், வாணிக உண்டியல் மேல்நாடுகளிற்கூட இப்பொழுது அதிகமாகப் பயன்படுத்தப்படுவதில்லை. இரண்டாவது உலகப் போருக்குப்பின் பாங்குகள் அரசினர் பத்திரங்களையே பெரும்பாலும் பயன்படுத்துகின்றன.

உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தின் கீழ், சட்டத்தின் 17 (4) c பிரிவுப்படி பாங்குகள் கடன் வாங்குவதற்கு ஒரே காரணம்தான் இருக்கின்றது. அதாவது, இந்தத் திட்டத்திற்குச் சில சலுகைகள் காட்டினர். ரிசர்வ் பாங்கு இந்த முறையில் கொடுத்த கடனுக்கு மையப் பாங்கு வீதத்தைவிட அரைச்சதவீதம் குறைந்த வட்டியைப் பெற்றனர். இதற்காகச் செலவு செய்யும் ஸ்டாம்பு வரியில் ஒரு பகுதியை ரிசர்வ் பாங்கு ஏற்றுக்கொண்டது. இந்தச் சலுகைகளை ரிசர்வ் பாங்கு நீக்கிய பின்பு இந்த முறை நீடிக்கும் என்று நாம் உறுதியாகச் சொல்ல முடியாது. இது நீடிக்க வேண்டுமானால் ரிசர்வ் பாங்குச் சட்டத்தை, நாம் மேலே குறிப்பிட்டதுபோல் மாற்றி, இதை எளிய முறையாகச் செய்யவேண்டும்.

உண்டியல் ஒரு செலாவணிப் பத்திரம் (Negotiable instrument) ஆகும். செலாவணித் தன்மையுடைய (Negotiability) உண்டியல்கள் நம் நாட்டில் கிடையா. இங்கிலாந்தில் வர்த்தகத்திற்காகத் தயார் செய்த உண்டியல்களையும், மற்ற உண்டியல்களையும் தள்ளுபடி செய்யமுடியும். ஆனால், இந்தியாவில் தள்ளுபடி மார்க்கட்டு இல்லை. "ஹுண்டி" எனப்படும் சுதேச உண்டியலைத் தள்ளுபடி செய்ய முடியாது. இவை ஒரே மாதிரியானவை அல்ல. மேலும், இவைகளை வர்த்தக உண்டியல்களா அல்லது நிதி திரட்டுவதற்காகத் தயார் செய்த உண்டியலா என்று கண்டுகொள்வது கடினம். ரிசர்வ் பாங்கின் உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தின்கீழ்ப் பயன்படுத்தும் உண்டியல்கள் செலாவணித் தன்மை பெற்றவை அல்ல. மேலும், ரிசர்வ் பாங்கு இந்த உண்டியல்களைத் தள்ளுபடியோ மறு தள்ளுபடியோ (Re-discount) செய்வதில்லை. இவைகளை அடைமானமாகக் கொண்டு ஷெடியூல் பாங்குகளுக்குக் கடன் கொடுக்கின்றன. எனவே, ரிசர்வ் பாங்கு ஏற்படுத்தியுள்ள திட்டத்தை உண்டியல் மார்க்கட்டுத் திட்டம் என்று சொல்வதைவிட உண்டியல் பழக்கம் (bill habit) என்று கூறுவதே சிறந்தது.

இங்கிலாந்திற்கூட இப்பொழுது வர்த்தக உண்டியல்களை அதிகமாகப் பயன்படுத்தாத காரணத்தால் இலண்டன் தள்ளுபடி மார்க்கட்டில் இப்பொழுது அரசினர் பத்திரங்களைத் தள்ளுபடி செய்கின்றனர். மற்ற நாடுகளிலும் நிலைமை இப்படியே இருக்கின்றது. இந்தியாவில் வர்த்தகத்திற்கு ரொக்கக் கடனையும் அதிகப் பற்றுக் கடனையும் பயன்படுத்துவதால், எதிர்காலத்தில் உண்டியல் மார்க்கட்டு சிறந்து வளரும் என்று நாம் உறுதியாகச் சொல்லமுடியாது.

இந்திய அரசாங்கமும் இராச்சிய அரசாங்கமும் கருவூல உண்டியல்களை (Treasury bills) வெளியிடுகின்றன. இவைகளை வாங்குவோர் மூன்று மாதத் தவணையில் இவற்றின் தொகைகளைப் பெறலாம். முதல் உலகப் போர்க்காலத்தில் இங்கிலாந்தின் சார்பில் இந்திய அரசாங்கம் இந்த உண்டியல்களை வெளியிட்டது. போருக்குப் பின் வரவு செலவில் ஏற்பட்ட பற்றுக்குறையைச் சமாளிப்பதற்காக இந்த உண்டியல்களை வெளியிட்டனர். பழைய உண்டியல் தொகையைத் திருப்பிக் கொடுப்பதற்காகவும், மூலதனச் செலவுக்காகவும், இப்பொழுது அரசினர் இந்த உண்டியல்களை வெளியிடுகின்றனர். இந்த உண்டியல்களைத் தள்ளுபடி செய்து விற்பனை செய்கின்றார்கள். அறிக்கை மூலம் அரசாங்கம் டெண்டர்களைக் கோருகின்றனர். மிகக் குறைந்த தள்ளுபடி வீதத்தில் யார் வாங்க முன் வருகின்றார்களோ அவர்களுக்கு, உண்டியல்களை விற்பனை செய்யச் சில முக்கியமான பாங்குகளை எதிர்பார்க்க வேண்டியிருக்கின்றது. இங்கிலாந்தில் பாங்குகளைத் தவிர மற்ற நிலையங்களும் இந்த உண்டியல்களை வாங்குவதால், அரசாங்கம் தங்களுக்குச் சாதகமான தள்ளுபடி வீதத்தில் அவைகளை விற்பனை செய்கின்றது.

கருவூல உண்டியல்களை வாங்குவதில் நல்ல போட்டி இல்லாததால், இந்தியாவில் அரசினர் சாதகமான தள்ளுபடி வீதத்தில் அவைகளை விற்பனை செய்ய முடியவில்லை. ஆகையால், ரிசர்வ் பாங்கே இந்த உண்டியல்களை வாங்கவேண்டியிருக்கின்றது. ரிசர்வ் பாங்கு இந்த உண்டியல்களை விற்பனைசெய்யப் பரந்த மார்க்கட்டை ஏற்படுத்த முயற்சி செய்கின்றது. இந்த உண்டியல்களை ரிசர்வ் பாங்கில் மறு தள்ளுபடி செய்யலாம். கருவூல உண்டியல்களுக்குப் பரந்த மார்க்கட்டை ஏற்படுத்துவது கடினம். ஏனெனில், நம் நாட்டில் நன்கு அமைந்த தள்ளுபடி மார்க்கட்டு இல்லை. ஆகையால், பாங்குகள் உண்டியல்களைத் தள்ளுபடி செய்து ரொக்கம் பெற்றுக் கொள்ள முடியாது. ரிசர்வ் பாங்கில் இவற்றைத் தள்ளுபடி செய்யவும் பாங்குகள் தயங்குகின்றன. ஏனெனில், ரிசர்வ் பாங்கில் கருவூல உண்டியல்களைத் தள்ளுபடி செய்தல் அவற்றின் வலுவற்ற தன்மையைக் காட்டும் என்று பாங்கு நிருவாகிகள் அஞ்சுகின்றனர்.

ரிசர்வ் பாங்கு, கருவூல உண்டியல்களுக்குப் பரந்த மார்க்கட்டை ஏற்படுத்தவேண்டும். பாங்குகள் இந்த உண்டியல்களைத் தங்கு தடையின்றி ரிசர்வ் பாங்கில் தள்ளுபடிசெய்ய முன்வரவேண்டும். இப்படிச் செய்தால் இந்தியப் பண மார்க்கட்டு மேலும் நெகிழ்ச்சியையும், ரொக்கத் தன்மையையும் பெற்றுச் சிறந்த முறையில் பணியாற்றும்.

## குறுகிய கால அரசினர் பத்திர மார்க்கட்டு

இரண்டாவது உலகப் போர்க்காலத்திலும், அதற்குப் பின்னும் இந்த மார்க்கட்டு வளர்ச்சியடைந்தது. 1939-இல் இந்திய ஷெடியூல் பாங்குகள் சுமார் 36 கோடி ரூபாய் பத்திர முதலீட்டில் வைத்திருந்தன. இவை பெரும்பாலும் அரசினர் பத்திரங்களிலேயே முதலீடு செய்தன. இந்தப் பாங்குகளின் பத்திர முதலீட்டின் மதிப்பு 1952-இல் சுமார் 195 கோடி ரூபாயாக மிகுதியடைந்தது. போருக்குப்பின் குறுகிய கால அரசினர் பத்திரங்கள் மிகுதியடைந்து விட்டன. சிறுசேமிப்புப் (Small Savings) பத்திரங்கள், கருவூல உண்டியல்கள் முதலிய பலவகைப்பட்ட பத்திரங்கள் உள. போருக்கு முன் இப்பத்திரங்களின் பெரும் பகுதியை இம்பீரியல் பாங்கே வைத்துக்கொண்டிருந்தது. ஆனால், இப்பொழுது இவற்றை எல்லா வாணிகப் பாங்குகளும் சில கூட்டுறவுப் பாங்குகளும் கொண்டிருக்கின்றன.

இந்தியாவில் செம்மையாக அமைந்த உண்டியல் மார்க்கட்டு இல்லாத குறையை இந்தப் பத்திர மார்க்கட்டு நீக்கியது. ரொக்கம் வேண்டும்பொழுது வாணிகப் பாங்குகள் இப்பத்திரங்களைப் பயன் படுத்தி, ரிசர்வ் பாங்கிடம் நிதி வாங்கிக் கொள்ளலாம். பத்திரங்கள் வேண்டிய அளவுக்கு மேல் மிகுதியாகக் கிடைப்பின் விலை குறையலாம். அதாவது வட்டி வீதம் உயரலாம். இந்த நிலைமையைத் தடுப்பது ரிசர்வ் பாங்கின் பொறுப்பாகும். இது போன்ற சமயங்களில் ரிசர்வ் பாங்கு மார்க்கட்டிலுள்ள பத்திரங்களைத் தானே வாங்கிக் கொள்ளும். பம்பாய் பங்கு மாற்று நிலையத்தில் அரசினர் பத்திரங்களை விற்பனை செய்யலாம். பல தரகர்கள் பத்திர விற்பனைத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். ஆனால், வாணிகப் பாங்குகள் பெரும்பாலும் ரிசர்வ் பாங்குடன் நேரடியாகத் தொடர்பு கொண்டிருக்கின்றன. இந்திய பாங்குகள் கருவூல உண்டியல்களைத் தம் சொத்துக்களில் சேர்த்துக்கொள்ள விரும்புகின்றன. ஏனெனில், இவை குறுகிய கால உண்டியல்களாகவும், ரொக்க நிலையுடையனவாகவும் இருக்கின்றன.

## துணையீட்டுக் கடன் மார்க்கட்டு

இந்தியப் பணமார்க்கட்டில் இது ஒரு முக்கியமான பகுதியாகும். வாணிகப் பாங்குகள் தங்கள் நிதியைப் பெரும்பாலும் துணையீட்டுக் கடனிலேயே முதலீடு செய்கின்றன. இந்தக் கடன் மூன்று வகைப்படும். அவை முறையே, சாதாரண கடன், அதிகப் பற்றுக் கடன், ரொக்கக் கடன் ஆவன. அதிகப்பற்றுக் கடனையும், ரொக்கக் கடனையும் பெறுவோர் பாங்கில் நடைமுறை டெபாசிட்டை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அரசினர் பத்திரங்களையும் மற்ற முதல்தரப் பத்திரங்களையும், சில பெரிய கம்பெனிகளின் பங்குகளையும் எளிதில் விற்பனை செய்யலாம். அவைகளின் மதிப்பு அதிகம் மாறுபாடுடையது. ஆகையால், அவைகளை ஏற்றுக்கொண்டு, துணையீட்டுக் கடன்களை ஷெடியூல் பாங்குகள் கொடுக்கின்றன. சாதாரண கடன் மற்ற இரண்டு கடன்களைவிட நீண்ட காலத்திற்குக் கொடுக்கப்படுகின்றது. ஆனால், தொழில் துறையிலிருப்போர் அதிகப் பற்றுக் கடனையும், ரொக்கக் கடனையுமே பெரும்பாலும் விரும்புகின்றனர். ஏனெனில், இந்தக் கடன்களுக்கு வாங்கிய தொகைக்குமட்டும் வட்டி செலுத்தினால் போதும்.

பங்கு மாற்று நிலையங்களில் தொழில் செய்யும் தரகர்கள் பங்குகளையும், பத்திரங்களையும் பயன்படுத்தித் துணையீட்டுக் கடன் பெறுகின்றனர். பாங்குகள் அரசினர் பத்திரங்களில் 80 சதவீத மதிப்பு வரை கடன் கொடுக்கின்றன. ரொக்கக் கடன்களைப் பெறத் தொழில் துறையிலிருப்போர் பெரும்பாலும் பண்டங்களை அடைமானமாகப் பயன்படுத்துகின்றனர். அதிகப் பற்றுக் கடனுக்கு, ரொக்கக் கடனுக்கு வாங்குவதைவிடக் குறைந்த வட்டி வீதத்தைப் பாங்குகள் வசூல் செய்கின்றன. முக்கியமான நகரங்களில் பங்கு மாற்று நிலையத் தரகர்கள் பாங்குகளில் மிகுதியான தொகையைக் கடனகப் பெறுகின்றனர். வாணிகப் பாங்குகள் மற்றப் பாங்குகளிடம் கடன் தொகை பெறலாம். இந்தக் கடன்களையும் தரகர்களே ஏற்பாடு செய்கின்றனர். இதேபோல் உலோக மார்க்கட்டிலும் தரகர்கள் இருக்கின்றார்கள்.

பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதி: இப்பகுதியில் சுதேச பாங்குதார்களே முக்கிய இடம் பெற்றுள்ளனர். நாட்டின் பல பகுதிகளில் தொழில் செய்யும் இவர்கள் பல முறைகளைப் பின்பற்றுகின்றனர். "ஹூண்டி" எனப்படும் சுதேச உண்டியல் தொழிலை இவர்கள் செய்கின்றனர். சில சுதேச பாங்குதார்கள் டெபாசிட்டுத் தொகையை மக்களிடம் ஏற்றுக்கொள்கின்றனர். சிலர் டெபாசிட்டுக்களை ஏற்றுக் கொள்ளாமல் தொழில் நடத்துகின்றனர்.

குறிப்பாக "மூல்த்தானி ஷராப்புக்கள்" (Multani Shroffs) டெபாசிட்டுத் தொகையை ஏற்றுக்கொள்வதில்லை. இந்தியப் பணமார்க்கட்டில் இந்தச் சுதேச பாங்குதார்கள் சிறந்த பணி புரிகின்றனர். நம் நாட்டு வர்த்தகத்தில் ஒரு கணிசமான பகுதி இவர்கள் அளிக்கும் நிதியைக்கொண்டே நடைபெறுகின்றது. சிறிய உற்பத்தியாளர்களும், வியாபாரிகளும் இவர்கள் உதவியைக் கொண்டே பெருபாலும் தொழில் செய்கின்றனர். இவர்கள் நிலம், வீடு முதலிய சொத்துக்களை அடைமானமாக ஏற்றுக்கொண்டு கடன் வசதியளிக்கின்றனர். சுதேச உண்டியல்கள் மூலமாகவும் கடன் கொடுக்கின்றனர்.

இந்தியாவில் ஆங்காங்கே உள்ள சில வகுப்பினர் மிகத் தொன்மையான காலத்திலிருந்தே இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக் கின்றனர். இவர்களில் சிலர் பல இடங்களில் கிளை அலுவலகங்களை நிறுவியிருக்கின்றனர். இவர்கள் சில பொதுநல நோக்குடன் சில சங்கங்களை ஏற்படுத்தியிருக்கின்றனர். டெபாசிட்டுக்களைப் பெற்றுக் கொள்ளுதலும், கடன் கொடுப்பதும் இவர்களுடைய தொழிலாகும். இவர்களில் ஒரு சிலரே டெபாசிட்டுத் தொகையைத் திருப்புவதற்குப் "பற்று வரவுச் சிட்டையையும்" "செக்குப் புத்தகத்தையும்" பயன் படுத்துகின்றனர். இவர்களுடைய செக்குகளை மற்றக் கூட்டுப்பங்குப் பாங்குகள் ஏற்றுக்கொள்வதில்லை. சுதேச பாங்குதார்கள் பெரும் பாலும் பாங்குத் தொழிலுடன் மற்றத் தொழில்களையும் இணைக்கின் றனர். பொருள் வர்த்தகம், தரகு வேலை, நகை வியாபாரம் முதலிய தொழில்களிலும் இவர்கள் ஈடுபடுகின்றனர். நாடெங்கும் வர்த்தகம், தொழில், விவசாயம் முதலியன இவர்கள் கொடுக்கும் கடனுதவி யால் ஓரளவு பயன் அடைகின்றன. ஆமதாபாத், பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் சுதேச பாங்குதார்கள் தொழில் நிலையங்களுக்கும், ஆலைகளுக்கும், தங்கள் நிதியில் ஒரு பகுதியை டெபாசிட்டாகக் கொடுத்துதவுகின்றனர். சிறிய வியாபாரிகளும் தொழிலகங்களும் இவர்களையே நிதி வேண்டும்பொழுது நாடு கின்றனர்.

இவர்கள் விவசாயிகளுக்கும் உதவி செய்கின்றனர். ஆனால், உதவியை மறைமுகமாகவே செய்கின்றனர். அதாவது, கிராமங் களில் கடன் கொடுப்போர் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியை இவர்களிடம் பெற்று, விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கின்றனர். விவசாயிகளுடன் இவர்களுக்கு நேரடித் தொடர்புகொள்ள முடிய வில்லை. இவர்கள் கொடுக்கும் நிதியைக் கொண்டே விவசாயப் பொருள்களை விற்பனைக்காகச் சந்தைகளுக்குக் கொண்டு வருகின்றனர். வெண்ணிலைக் கடன் பத்திரங்கள் மூலம் இவர்கள்

கடன் கொடுக்கின்றனர். கடன் தொகை அதிகமாக இருந்தால் தகுந்த அடைமானங்களை ஏற்றுக்கொண்டே கடன் கொடுக் கின்றனர். அடைமானங்கள் கொடுக்காவிடில் கடன் தொகைக்கு மிகுதியான வட்டி வீதத்தை வசூல் செய்கின்றார்கள்.

இவர்கள் செய்யும் உண்டியல் தொழில் இங்குக் குறிப்பிடத் தக்கது. சுதேச உண்டியல் "தரிசன உண்டியல்கள்", "தவணை உண்டியல்கள்" என இருவகைப்படும். தவணை உண்டியல் தொகையைக் குறிப்பிட்ட தவணைக் காலத்தில் செலுத்தவேண்டும். சில உண்டியல் தொகைகளைக் குறிப்பிட்ட சிலருக்கே கொடுக்க வேண்டும். சில உண்டியல் தொகைகளை நாணயமுள்ள எந்த வியாபாரியிடமும் கொடுக்கலாம். சுதேச உண்டியல்கள் செலாவணித் தன்மை (Negotiability) கொண்டவை. ஆகையால், அவற்றைத் தள்ளுபடியும், மறு தள்ளுபடியும் செய்யலாம். தவணைக் காலம் முடிந்து உண்டியல்கள் முதிர்வு பெறுவதற்குள் அவைகளைப் புறக்குறிப்புடன் (Endorsement) எங்கு வேண்டுமானாலும் அனுப்பலாம். சிறிய வியாபாரிகளுடைய உண்டியல்களைச் சுதேச பாங்குதார்கள் தள்ளுபடி செய்யும் வீதத்தைச் "சுதேச பாங்கு வீதம்" (Bazaar rate) என்று கூறலாம். இந்தச் "சுதேச பாங்கு வீதம்" ஆங்காங்கே வேறுபட்டிருக்கின்றது. நாட்டின் பல பகுதிகளில் தொழில் நடத்தும் சுதேச பாங்குகளிடையே தொடர்பு இல்லாததால், இவர்களுடைய வட்டி வீதத்தில் அதிக வேற்றுமை இருக்கின்றது. மேலும், இவர்கள் கொடுக்கும் பல வகைக் கடன்களுக்குப் பல வட்டி வீதங்களை வசூல் செய்கின்றனர். பொது வாக விவசாயக் கடனுக்கு அதிக வட்டியையும், மற்றக் கடன் களுக்குக் குறைந்த வட்டியையும் வசூல் செய்கின்றனர். அடைமானக் கடனுக்கு வட்டி குறைவாகவும், மற்றக் கடன்களுக்கு அதிகமாகவும் இருக்கின்றது.

சுதேச பாங்குதார்கள் உயர்ந்த வட்டி வீதம் வாங்குகின்றார் களென்றும், இவர்கள் மக்களுக்குச் சிறந்த பணியைச் செய்யவில்லை என்றும் சிலர் கூறுகின்றனர். ஆனால், இந்தக் கருத்து தவறானது. நல்ல அடைமானங்கள் கொடுத்தால் எட்டிலிருந்து பன்னிரண்டு சதவீதத்துக்கு மேற்படாத வட்டி வீதத்தை வசூல் செய்கின்றனர். அடைமானம் கொடுக்காவிடில், சற்று அதிக மான வட்டியை இவர்கள் வசூல் செய்கின்றனர். அடை மானத்தைப் பெறாமல் கடன் கொடுப்பது ஆபத்தானது. ஆகையால், சுதேச பாங்குதார்கள் அதிகமான வட்டி வாங்குவதை ஒரு குறை என்று கூறலாகாது. மிகப் பழைய காலத்திலிருந்து இந்தப் பாங்குகள் நாட்டுக்குச் சிறந்த முறையில் பணியாற்றிக்

கொண்டிருக்கின்றன. வாணிகப் பாங்குகளின் போட்டி இவை களின் தொழிலைக் குறைக்கவில்லை.

சுதேச பாங்குதார்களில் சிலரே டெபாசிட்டுத் தொகையை ஏற்றுக்கொள்கின்றனர் என்று குறிப்பிட்டோம். தொழில் மிகுதி யடையுங் காலங்களில் இவர்கள் கூட்டுப்பங்குப் பாங்குகளிடம் நிதியுதவி கோருகின்றனர். வாணிகப் பாங்குகள் அங்கீகரிக்கப் பட்ட பட்டியல்களில் சில சுதேச பாங்குகளின் பெயர்களைக் குறித்து வைத்துக்கொள்கின்றன. இந்தப் பட்டியலில் உள்ள பாங்குகளுக்குக் கூட்டுப்பங்குப் பாங்குகள் கடன் வசதியளிக்கின்றன. சுதேச பாங்குகள் எல்லாவற்றையும் பட்டியலில் சேர்த்துக் கொள்வதில்லை. பட்டியலிலுள்ள ஒவ்வொரு சுதேச பாங்குக்கும் ஒரு குறிப்பிட்ட தொகைக்குமேல் கடன் கொடுப்பதில்லை. மூல்த்தானி பாங்கு தார்கள் (Multani Bankers) இந்தப் பட்டியலில் சேர்க்கப் பட்டுள்ளனர். இவர்கள் பாங்குத் தொழிலுடன் மற்றத் தொழிலை இணைப்பதில்லை. பட்டியலிலுள்ள பாங்குகளுக்குச் சுதேச உண்டியல் களைத் தள்ளுபடி செய்து நிதியுதவி செய்கின்றனர். உண்மையான வர்த்தகத்தின் காரணமாகத் தோன்றிய உண்டியல்களையே வாணிகப் பாங்குகள் தள்ளுபடி செய்ய விரும்புகின்றன. மேலும், இந்த உண்டியல்கள் சுதேச பாங்குதார்களின் புறக்குறிப்பைக் கொண்டிருக்கவேண்டும். இந்த விதமாகச் சுதேச பாங்குதார்கள் கூட்டுப்பங்குப் பாங்குகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றனர். இப்படித் தொடர்புகொண்டுள்ள சுதேச பாங்குகளுக்கு ஸ்டேட் பாங்கும், மற்றக் கூட்டுப்பங்குப் பாங்குகளும் சலுகைகள் எவையும் காட்டவில்லை என்பது அவர்கள் குறையாகும்.

சுதேச பாங்குதார்களுள் மூல்த்தானி பாங்குதார்கள் முக்கிய மானவர்கள். இவர்கள் மூல்த்தானைச் சேர்ந்தவர்கள் அல்லர். வட இந்தியாவில் உள்ள ஷிக்கார்பூர் என்ற இடத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பம்பாய், சென்னை, மைசூர், மத்திய பிரதேசம் முதலிய இடங்களில் தொழில் செய்கின்றார்கள். கடந்த ஐம்பது ஆண்டு களில் இவர்கள் ஒரு புதிய பாங்கு முறையை வளர்த்திருக்கின்றனர். மூல்த்தானி பாங்குதார்கள் பெரும்பாலும் தலைமை அலுவலகங்களை பம்பாயிலே வைத்துக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் ஸ்டேட் பாங்கு, செண்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா, பாங்க் ஆப் இந்தியா, பாங்க் ஆப் பரோடா முதலிய பெரிய பாங்குகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றனர். இவர்களை ஷராப்புகள் (shroffs) என்று அழைப்பதுண்டு. குறைந்த முதலுடன் வர்த்தகம் செய்யும் சிறிய வியாபாரிகள் நிதியுதவிக்குப் பெரும்பாலும் இவர்களையே நாடுகின் றனர். இவர்கள் கூட்டுப்பங்குப் பாங்குகளிடமோ மற்றச்

சுதேச பாங்குகளிடமோ கடன் வாங்க முடியாத நிலைமையில் இருக்கின்றனர்.

அமைப்பற்ற பகுதியில் சிறிய வியாபாரிகளுக்குக் கடன் கொடுக்கும் மூல்த்தானி பாங்குதார்கள் தங்கள் தொழிலுக்கு வேண்டிய நிதியைக் கூட்டுப்பங்குப் பாங்குகளிடம் வாங்கிக் கொள் கின்றனர். இவர்கள் பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதிக்கும் அமைப்புள்ள பகுதிக்கும் ஒரு தொடர்பை ஏற்படுத்துகின்றார்கள். இந்தத் தொடர்பு மையப் பாங்கின் வேலைக்கு இன்றியமையாதது. இத் தொடர்பை வலுவுறச் செய்தால் மையப் பாங்கு பணமார்க் கட்டைச் செம்மையான முறையில் கண்காணிக்கலாம். அமைப் பற்ற பகுதியில் ரிசர்வ் பாங்கின் ஆதிக்கம் பரவவேண்டுமானால், மூல்த்தானி பாங்குகள் வாணிகப் பாங்குகளுடன் கொண்ட தொடர்பைச் செம்மையாக்க வேண்டும்.

ஷராப்புக்கள் செய்யும் சுதேச உண்டியல் தொழில், அவர்கள் தொழிலின் சிறப்பை எடுத்துக் காட்டும். இந்தச் சுதேச உண்டி யல்கள் பாங்குகளின் முதலீட்டுக்கு (investment) மிக நேர்த்தி யானவை. வாணிக உண்டியல்கள் ரொக்க நிலையுடன் இருப்ப தோடல்லாமல் இலாபகரமாகவும் இருக்கின்றன. இங்கிலாந்தில் இந்த உண்டியல்களைத் தள்ளுபடி மார்க்கட்டில் தள்ளுபடி செய்ய லாம். ஆனால், இந்தியாவில் உண்டியல் மார்க்கட்டு இல்லை என்று, ரிசர்வ் பாங்கு ஓர் உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தை ஏற்படுத்தி யிருக்கின்ற தென்பதையும் பார்த்தோம். இந்திய பாங்குகள் இந்த உண்டியல்களை முதலீட்டுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். இந்த உண்டியல்களில் உள்ள குறைகளை நீக்கி, நாடெங்கும் ஒரேவிதமான உண்டியல்களைப் பயன்படுத்துவதற்கு ஏற்பாடு செய்து, இவைகளைத் தள்ளுபடியும் மறு தள்ளுபடியும் செய்வதற்கு ஆவன செய்தால், இந்தியாவில் உண்மையான உண்டியல் மார்க்கட்டு வளர்ச்சியடை யும். இந்த ஏற்பாடுகளை ரிசர்வ் பாங்கு மூல்த்தானி பாங்குதார்கள் மூலம் செய்யலாம். அரசினர் பத்திரங்கள் மட்டுமே ரொக்க நிலையுடைய சொத்து என்ற கருத்து தவறானது. மூல்த்தானி பாங்குதார்கள் மூலம் சுதேச உண்டியல்களைச் செம்மைப் படுத்தலாம். சிறிய வியாபாரிகளுக்கும் கடனுதவியளிக்கலாம்.

மூல்த்தானி பாங்குதார்களுக்கும் மற்றச் சுதேச பாங்குதார் களுக்கும் பல வேறுபாடுகள் உள. மூலத்தானி பாங்குதார்கள் மற்ற வர்களைப்போல் டெபாசிட்டுத் தொகையை மக்களிடம் ஏற்றுக் கொள்வதில்லை. இவர்கள் கொடுக்கும் கடனுக்கு அடைமானம் பெற்றுக்கொள்வதில்லை. மற்றச் சுதேச பாங்குதார்கள் அடைமானம்

பெருமல் கடன் கொடுக்க மாட்டார்கள். மற்றச் சுதேச பாங்குதார் களிடம் எல்லோரும் கடனுதவி பெறலாம். ஆனல், ஷராப்புக்கள் உண்மையான வர்த்தகத்திற்கு மட்டுமே நிதி கொடுக்கின்றனர். குறிப்பிட்ட சில வியாபாரிகளுக்குக் குறுகிய காலத் தவணைக்கடன் கொடுக்கின்றனர். அடைமானம் இல்லாமல் கடன் கொடுப்பதால், இவர்கள் மிகுதியான தொகையைக் கொடுப்பதில்லை. ஒரு திட்டப்படி அமைந்த உண்டியல்களையே இவர்கள் பயன்படுத்துகின் றனர். இவர்கள் டெபாசிட்டை ஏற்றுக் கொள்ளாவிடினும், உண்டி யல் தள்ளுபடி மூலம் வாணிகப் பாங்குகளிடம் வேண்டிய பணத்தை வாங்கிக் கொள்கின்றனர். பாங்குகள் டெபாசிட்டுத் தொகையைக் கொண்டே தொழில் நடத்துகின்றன. இவர்கள் நேரிடையாக மக்களிடம் டெபாசிட்டுத் தொகையைப் பெருவிடினும், மற்ற பாங்குகளிடம் வாங்கிக்கொள்ளும் நிதி டெபாசிட்டு மூலம் பெற்றது தான். ஆகையால், இவர்கள் மறைமுகமாக டெபாசிட்டுத் தொகையை ஏற்றுக்கொள்கின்றனர் என்று சொல்லலாம்.

ஷராப்புக்கள் ஊகவாணிகத்தில் ஈடுபட்டிருப்போருக்கும், வர்த் தகம் செய்யாதவர்களுக்கும், திரைப்படத் தயாரிப்பாளர்களுக்கும் கடன் கொடுப்பதில்லை. சிறிய வியாபாரிகளுக்குக் குறைந்த தொகையைக் குறுகிய காலத்துக்கு இவர்கள் கொடுக்கின் றனர். இவர்கள் கொடுக்கும் கடனுக்கு ஏற்றுக்கொள்ளும் வட்டி வீதத்துக்கும், வாணிகப் பாங்குகளுக்கு இவர்கள் கொடுக்கும் வட்டி வீதத்துக்கும் சுமார் ஐந்து சதவீதம் வேறுபாடு இருக்கின்றது. கடன் வேண்டுமென்ருல் வியாபாரிகள் சில தரகர்கள் மூலம் இவர்களை அணுகவேண்டும். அதாவது, தரகர்கள் நாணயத் துடன் செம்மையான முறையில் வர்த்தகம் செய்வோரை ஷராப்புக் களுக்கு அறிமுகப்படுத்துகின்றனர். இப்படி அறிமுகமானவர் களுக்கு ஷராப்புக்கள் கடன் கொடுக்கின்றனர். தரகர்கள் கடன் பெறுவோரிடம் கூலி வாங்கிக்கொள்கின்றனர். கடன்வாங்குவோர் நல்ல முறையில் தொழில் செய்கின்றனரா என்று கவனித்துக் கொள்வது தரகர்களுடைய பொறுப்பாகும். ஷராப்புக்களுக்குப் பாங்குகளிலிருந்து கடன் வசதிபெற ஏற்பாடு செய்வோர் வேறு தரகர்களாவர்.

ஷராப்புக்கள் தொழில் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருக்கும் பொழுது 12 சதவீதம் வரை வட்டி வாங்குகின்ருர்கள். இவர்கள் தொழிலை உற்றுநோக்கும்பொழுது இவர்கள் உயர்ந்த வட்டி வீதம் வாங்குகின்றனர் என்று கூற முடியாது. ஏனெனில், இவர்கள் ஸ்டேட் பாங்கில் $6\frac{1}{2}$ சதவீதத்திலும் மற்றப் பாங்குகளில் 7 சதவீதத் திலும் கடன் வாங்கித் தொழில் நடத்துகின்றனர். தாங்கள்

கொடுக்கும் வட்டியைவிடச் சுமார் ஐந்து சதவீதம் உயர்ந்த வட்டியை வசூல் செய்கின்றனர். அடைமானம் பெருமல் கடன் கொடுக்கும் தொழிலில் உள்ள ஆபத்தை நாம் கருதும்பொழுது இவர்கள் அடையும் வட்டி வீதம் அதிகம் என்று சொல்ல முடியாது. கூட்டுப்பங்குப் பாங்குகளும் தாங்கள் கொடுக்கும் வட்டியைவிட ஐந்து சதவீதம் அதிகமான வட்டியைப் பெறு கின்றன. தரகர் கூலி, ஸ்டாம்புச் செலவு முதலியவற்றைச் சேர்த் தால் மொத்த வட்டிவீதம் 13 சதவீதமாகும். ஷராப்புக்கள் அளிக்கும் கடன் வசதி சிறிய வியாபாரிகளுக்குக் கிட்டாவிடில், அவர்கள் மேலும் அதிக வட்டியைக் கொடுத்துக் கடன் வாங்க வேண்டும். சிலர் வட்டி அதிகமாக இருப்பினும் ஷராப்புக்களிடம் கடன் வாங்கத் தவறுவதில்லை. ஏனெனில், அவர்கள் வெகு விரைவில் மற்ற இடங்களிலிருந்து பணம் எதிர்பார்க்கின்றனர். அதுவரை செலவுக்கு வேண்டிய தொகைகளை மூல்த்தானிய பாங்குதார்களிடம் வாங்கிக் கொள்கின்றனர். நல்ல அடை மானங்களைக் கொடுத்துப் பாங்குகளில் கடன் வாங்க முடியாத நிலைமையிலுள்ள சிறிய வியாபாரிகள் இவர்களிடமே நிதியைப் பெறவேண்டியிருக்கின்றது.

மூல்த்தானி பாங்குதார்களுடைய உண்டியல்களைக் கூட்டுப் பங்குப் பாங்குகள் அதிகமாகப் பெற்று இவர்களுக்கு மிகுதியான அளவில் நிதியுதவி செய்யவேண்டும். ஏனெனில், இவர்களுடைய உதவியை மேலும் மேலும் மக்கள் நாடுகின்றனர். ஆனல், வாணிகப் பாங்குகள் இவர்களுக்கு வேண்டிய அளவு நிதியுதவி செய்வதில்லை. ஒவ்வொரு பாங்குதாருக்கும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஏற்படுத்தியிருக்கின்றனர். இரண்டாவது திட்ட காலத்தில் ஏற்பட்ட விலையுயர்வின் பலனுகச் சிறிய வியாபாரிகள் இவர்களிடம் மிகுதியான தொகையைக் கடனுகக் கேட்கின்றனர். ஆனல், வாணிகப் பாங்குகள் வேண்டிய அளவு நிதியுதவி செய்யாததால், மூல்த்தானி பாங்குதார்கள் தொழிலைப் பரப்ப முடியவில்லை. ரிசர்வ் பாங்கின் கொள்கையே இதற்கு முக்கியமான காரணமாகும். ரிசர்வ் பாங்கின் ஆணைப்படி கூட்டுப்பங்குப் பாங்குகள் 1961-இல் அடைமான-மற்றக் கடன்களைக் குறைத்துக்கொள்ள முயற்சி செய்தன. இந்த அடைமான்-மற்றக் கடன்கள் ஓர் எல்லைக்குட் பட்டிருக்க வேண்டுமென்ற காரணத்தால், வாணிகப் பாங்குகள் ஷராப்புக்களுக்குக் கொடுக்கும் கடன் தொகையைக் குறைத்தன. இதனுல், ஷராப்புக்களின் தொழில் பாதிக்கப்பட்டது.

ஸ்டேட் பாங்கும் மற்றப் பாங்களில் ஒரு சில பெரிய பாங்கு களுமே மூல்த்தானி பாங்குதார்களுக்குக் கடன்வசதி யளிக்கின்றன.

பாங்குகள் கொடுக்கும் மொத்தக் கடனில் மிகச் சிறிய பகுதியையே மூல்த்தானி பாங்குதார்கள் அடைகின்றனர். ஷராப்புக்களின் உண்டியல்கள் ரொக்க நிலையுடையன. அவை ஏழு சதவீதம் வருமானம் கொடுக்கக் கூடியவை. முதலீட்டுக்கு மிக நேர்த்தியானவை. எனினும், ஒருசில பாங்குகளைத்தவிர மற்ற நிறுவனங்களே இந்த உண்டியல்களைத் தள்ளுபடி செய்கின்றன. இதற்குக் காரணம் மிகுதியான அளவில் அரசினர் பத்திரங்களைச் சொத்துக்களாகக் கொள்ள வேண்டுமென்ற அவாவேயாகும். அரசினர் பத்திரங்கள் ரிசர்வ் பாங்கிலிருந்து கடன் வாங்க உதவும். எனவே, அவை ரொக்க நிலையைக் கொண்டிருக்கின்றன.

தொழில் சுறுசுறுப்பாக நடக்கும் காலங்களிலேயே மூல்த்தானி பாங்குதார்களின் உண்டியல்களைக் கூட்டுப்பங்குப் பாங்குகள் தள்ளுபடி செய்கின்றன. செலாவணிச்சுருக்கக் கொள்கையை ரிசர்வ் பாங்கு பின்பற்றுவதால், வாணிகப் பாங்குகள் மிகுதியான அளவு அரசினர் பத்திரங்களை வைத்துக்கொள்ள வேண்டியிருக்கின்றது. வாணிகப் பாங்குகள் ஷராப்புக்களுக்குக் கொடுக்கும் கடனைப் பயன் படுத்தி, உண்டியல் மார்க்கட்டுத் திட்டப்படி ரிசர்வ் பாங்கில் கடன் வசதி பெற முடியாது. ஆகையால், அவை மூல்த்தானி பாங்குதார் களுக்கு வேண்டிய அளவு நிதியுதவி செய்ய இயலவில்லை.

இப்பொழுது ரொக்க நிலையுடைய சொத்துக்களில் அரசினர் பத்திரங்களையே முக்கியமானவை என்று கருதுகின்றனர். ஷராப்புக்களின் உண்டியல்களும், ரயில்வே ரசீதுகளைக் கொண்டு கொடுக்கும் கடன்களும், பாங்குகளிடையே ஏற்படும் கடன்களும் (Inter bank loans) ரொக்க நிலையுடையனவாகக் கருதப்பட வேண்டும். ஒவ்வொரு பாங்கும் ஓரெல்லைக்குட்பட்ட தொகையை மூல்த்தானி பாங்குதார்களுக்குக் கடனாகக் கொடுக்கலாம் என்று ரிசர்வ் பாங்கு உத்தரவிடவேண்டும். இந்த எல்லையை ரிசர்வ் பாங்கு வரையறுக்கலாம். மூல்த்தானி பாங்குதார்களிடம் ஓர் ஒற்றுமை உணர்ச்சியும், உயர்ந்த தொழில் நாணயமும் இருக்கின் றன. ஒரு பாங்குதாருக்கு ஏதேனும் ஆபத்து வந்தால் மற்றவர்கள் உதவியளிக்கத் தயாராக இருக்கின்றனர். எனினும், இப்பொழுது இந்த ஒற்றுமை உணர்ச்சி குறைந்துகொண்டு வருகின்றது.

சுதேச பாங்குதார்களுக்கும், ரிசர்வ் பாங்குகளுக்கும் உள்ள தொடர்பை இங்குப் பார்ப்போம். இந்தியப் பணமார்க்கட்டின் அமைப்புள்ள பகுதிக்கும் அமைப்பற்ற பகுதிக்கும் நெருங்கிய வலுவுள்ள தொடர்பு இல்லை. ஆகையால், ரிசர்வ் பாங்கு பண மார்க்கட்டைச் செம்மையான முறையில் கண்காணிக்க முடியவில்லை. ரிசர்வ் பாங்குச் சட்டப்படி அது தோன்றிய ஆண்டிலிருந்து

மூன்றுண்டுகளுக்குள் சுதேச பாங்குகளுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள ஒரு திட்டத்தை வகுக்கவேண்டும். 1937-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்கு நிலைமையைப் பரிசீலனை செய்து ஒரு திட்டத்தை வகுத்து அரசினரிடம் அளித்தது. இந்திய பாங்குக் கம்பெனிச் சட்டத்தில் விளக்கியுள்ள பாங்குத் தொழிலை மட்டுமே சுதேச பாங்குதார்கள் செய்யவேண்டும். பாங்குத் தொழிலுடன் இணைத்திருக்கும் மற்றத் தொழில்களைக் கைவிடவேண்டும். பழைய முறைகளைக் கைவிட்டுப் புதிய முறையில் சுதேச பாங்குதார்கள் தங்கள் கணக்குகளை வைத்துக் கொள்ளவேண்டும். இந்தக் கணக்குகளை நல்ல தகுதி வாய்ந்த தணிக்கையாளர்கள் அவ்வப்போது தணிக்கை செய்ய வேண்டும். ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பையும் மேற்பார்வையையும் இவர்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். குறைந்த பட்சம் இரண்டு லட்ச ரூபாய் நடை முதலுடன் (working capital) இவர்கள் தொழில் செய்யவேண்டும். இந்த முதல், நாளடைவில் ஐந்து லட்சமாகப் பெருகவேண்டும். தொழில் பற்றிய மற்ற விவரங்களையும் ரிசர்வ் பாங்குக்குக் கொடுக்கவேண்டும். இந்த நிபந்தனைகளைச் சுதேச பாங்குதார்கள் ஒத்துக்கொள்ளவில்லை. இவைகளை ஒத்துக்கொண்டு ரிசர்வ் பாங்குடன் தொடர்பு கொள்ள அவர்களுக்கு ரிசர்வ் பாங்கு சலுகைகள் எவையும் காட்டவில்லை.

1951-இல் ரிசர்வ் பாங்கின் கவர்னர் சர். பி. என். ராவ். (Sir B.N. Rao) ஷராப்புக்கள் சங்கத்தில், சுதேச பாங்குதார்களை அமைப்புள்ள பணமார்க்கட்டில் சேர்த்துக்கொள்ள ரிசர்வ் பாங்கு விரும்புகிறதென்றும், சுதேச பாங்குதார்கள் பழைய முறைகளைக் கைவிடவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். பாங்குத் தொழிலுடன் மற்றத் தொழிலை இணைக்கக் கூடாதென்றும் வேண்டிக்கொண்டார். ஆனல், சுதேச பாங்குதார்கள் மற்றத் தொழிலைக் கைவிடத் தயாராக இல்லை. சுதேச உண்டியல்களைத் தள்ளுபடி செய்ய ஒரு நல்ல தள்ளுபடி மார்க்கட்டை ஏற்படுத்த வேண்டும். இன்றேல், ரிசர்வ் பாங்கு மூல்த்தானி பாங்குதார்களின் உண்டியல்களைத் தள்ளுபடி செய்யலாம். மூல்த்தானி பாங்குதார்களின் உண்டியல்கள் உண்மையான வர்த்தகத்தின் பலனுகத் தோன்றுவதால் அவற்றை வாணிகப் பாங்குகள் பயன்படுத்தலாம். அவற்றின் செலாவணித் தன்மையை உயர்த்தினுல் பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதி, அமைப்புள்ள பகுதியுடன் கொண்ட தொடர்பை வலிமைபெறச் செய்யலாம்.

### வட்டி வீதங்கள்

இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் குறுகியகாலக் கடனைவிட நெடுங்காலக் கடனுக்கு வட்டி வீதம் உயர்ந்ததாக இருக்கின்றது. ஆனல், இந்தியாவில் குறுகியகாலக் கடன் வீதம் (Short term

rates) நெடுங்கால வீதத்தைவிட உயர்ந்திருப்பது சாதாரணமாகும். குறுகியகாலக் கடனைப் பெரும்பாலும் விவசாயத்துக்கே நாடுகின்றனர். இதை மீண்டும் மீண்டும் புதுப்பிப்பதால், இது உண்மையில் நீண்டகாலக் கடனாகவே மாறுகின்றது. குறுகியகாலக் கடனில் உள்ள ஆபத்து நெடுங்காலப் பத்திர முதலீட்டில் இல்லை. ஆகையால், குறுகியகால வீதம் நெடுங்கால வீதத்தைவிட உயர்ந்திருக்கின்றது. இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் பாங்குகள் நடைமுறை டெபாசிட்டுக்கு வட்டி கொடுப்பதில்லை. இந்தியாவில் ஸ்டேட் பாங்கைத் தவிர, மற்றப் பாங்குகள் நடைமுறை டெபாசிட்டுகளுக்கு வட்டி கொடுக்கின்றன. தொழில் செய்வோர் தங்கள் வசதிக்காக நடைமுறை டெபாசிட்டை வைத்துக்கொள்வதால் இதற்கு வட்டி கொடுக்கவேண்டியதில்லை. இந்தியாவில் பாங்குகள் கடனுக்கு வசூல் செய்யும் வட்டி வீதமும், அவை டெபாசிட்டர்களுக்குக் கொடுக்கும் வீதமும், அவை செய்யும் தொழிலின் தன்மைக்கேற்றபடியும், தொழில் நடத்தும் பகுதிகளுக்கேற்றபடியும் மாறுபட்டிருக்கின்றன. ஆனால், மிகுதியான தொகையை டெபாசிட்டாகப் பெறுவதற்காக உயர்ந்த வட்டி வீதம் கொடுப்பது சரியல்ல. மையப் பாங்கு வீதத்துக்கும் மற்ற வீதங்களுக்கும் இங்கிலாந்தில் நெருங்கிய தொடர்பு உண்டு. இங்கிலாந்தில் மையப் பாங்கு முதல்தர உண்டியல்களையும் பத்திரங்களையும் தள்ளுபடி செய்யும் வீதமே மையப் பாங்கு வீதமாகும். 1935 வரை இம்பீரியல் பாங்கு அரசினர் பத்திரங்களை அடைமானமாகப் பெற்றுக்கொண்டு, கொடுக்கும் கடனுக்கு வசூல் செய்யும் வீதமே மையப் பாங்கு வீதமாக இருந்தது. இம்பீரியல் பாங்கு கொண்டிருக்கும் ரொக்க நிலைக்கேற்றபடி வட்டி வீதம் மாறியது. மையப் பாங்கு வீதத்துக்கும் பண மார்க்கட்டின் நிலைமைக்கும் எந்த விதத் தொடர்பும் இல்லை.

ஆங்காங்கே நிலவும் சுதேச பாங்குதார்கள் வீதங்களும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் இருந்தன. சிறந்த உண்டியல் மார்க்கட்டும் தள்ளுபடி மார்க்கட்டும் இந்தியாவில் இருந்தால் பணமார்க்கட்டின் நிலைமை முன்னேறும். பணமார்க்கட்டு நெகிழ்ச்சியையும் நிலையான தன்மையையும் அடையும்.

இதுவரை இந்தியப் பணமார்க்கட்டின் தன்மையைப் பற்றிப் பார்த்தோம். முன்னிருந்ததைவிடப் பணமார்க்கட்டில் இன்று ஒரு நிலையான தன்மையும், நெகிழ்ச்சியும் இருக்கின்றன. ஆனால், ரிசர்வ் பாங்கை நிறுவனம் செய்வதற்கு முன்பு நிலைமை மோசமாக இருந்தது. மையப் பாங்கு வீதம் அடிக்கடி மாறிக்கொண்டிருந்தது. இதனால் தொழில் செய்வோருக்குத் தொல்லைகள் பல எழுந்தன. தொழில் மந்தமாக இருக்கும் பொழுது இந்த வீதம் மூன்று சதவீத

மாகவும், சுறுசுறுப்பாக இருக்கும்பொழுது ஏழு சதவீதமாகவும் மாறியது. தொழில் சுறுசுறுப்பாக இருந்த காலங்களில் பணமார்க் கட்டில் அதிகப்பணம் தேவைப்பட்டது. இதுபோன்ற சமயங்களில் நெகிழ்ச்சியுடைய பணமார்க்கட்டு வேண்டிய தொகையைப் பெறும். ஆனால், இந்தியாவில் இந்தச் சமயங்களில் பணப்பற்றாக்குறை ஏற் பட்டது. தொழில் மந்தமாக இருக்கும் காலங்களில் தேவைக்கு மேற்பட்ட பணம் மார்க்கட்டில் இருந்தது.

1921-ஆம் ஆண்டில் இம்பீரியல் பாங்கு தோன்றியது. அது வரை அரசினர் வசூல் செய்யும் வரித்தொகைகளைக் கருவூலங்களில் வைத்துக்கொள்வது வழக்கம். தொழில் பெருகும் பொழுது அரசினர் அத்தொகையைப் பெருகும் தொழிலுக்குப் பயன்படுத்த முடியவில்லை. ஆகையால் பணப்பற்றாக்குறை ஏற்பட்டது. 1921-இலிருந்து அரசாங்கத்தின் பணத்தை வைத்துக்கொள்ளும் பொறுப்பை ரிசர்வ் பாங்கு ஏற்றுக்கொண்டது. தொழில் பெருகும் பொழுது இம்பீரியல் பாங்கு பணமார்க்கட்டுக்கு ஓரளவு நிதியுதவி அளிக்கும். எனவே, 1921-இலிருந்து அவ்வப்போது பணமார்க் கட்டில் ஏற்படும் பற்றாக்குறையின் கொடுமை ஓரளவு குறைந்தது.

ஆனால், இந்தியாவில் நன்கு அமைந்த மையப் பாங்கு இல்லை. பணமார்க்கட்டை அரசாங்கமும், இம்பீரியல் பாங்கும் கண் காணித்தன. இந்த இரட்டைக் கண்காணிப்பு சிறந்த பாங்கு முறைக்கு உகந்ததல்ல. மேலும், இந்த இரட்டைக் கண்காணிப்பு செம்மையாக அமையவில்லை. அரசாங்கம் செலாவணியையும், இம்பீரியல் பாங்கு ஓரளவு பாங்குச் செலாவணியையும் கண் காணித்தன. செலாவணித் தாள் உற்பத்தியும், பாங்குச் செலா வணிக் கட்டுப்பாடும் மையப் பாங்கின் ஆதிக்கத்தில் இருக்க வேண்டும். ஆனால், இந்தியாவில் மையப் பாங்கு இல்லை. இம்பீரியல் பாங்கு மற்றப் பாங்குகளைப்போன்ற ஒரு கூட்டுப்பங்குப் பாங்காகும். அவைகளுடன் தொழிலைப் பெருக்குவதில் போட்டி யிடும் நிலையிலிருந்தது. அது மையப் பாங்கின் பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ளவோ, மற்றப் பாங்குகளைக் கண்காணிக்கவோ அதற்கு முடியவில்லை. தொழில் மந்தமாக இருந்த காலங்களில் பணமார்க்கட்டில் உள்ள அதிகமான தொகையை அது வாங்கிக் கொள்ளத் தயாராக இல்லை. இலாப நோக்குடன் தொழில் செய்யும் கூட்டுப்பங்குப் பாங்கு, மையப் பாங்குகளின் அலுவல்களை ஏற்றுச் செய்ய உகந்ததல்ல. ஆகையால், ரிசர்வ் பாங்கை ஏற்படுத்த வேண்டியதாயிற்று.

---

## 9. ரிசர்வ் பாங்கு

ரிசர்வ் பாங்கு இந்தியாவின் மையப் பாங்காகும். மையப் பாங்கு என்ருல் என்ன என்பதையும், அதன் பொறுப்புக்கள் யாவை என்பதையும் நாம் தெரிந்து கொண்டாலன்றி, ரிசர்வ் பாங்கு எவ்வளவு தூரம் அதன் அலுவல்களை வெற்றியுடன் செய்கின்றது என்று கணக்கிட முடியாது. சாதாரண பாங்குகளை வாணிகப் பாங்குகள் என்று அழைப்பது வழக்கம். வர்த்தகத்திற்கு வேண்டிய நிதியைக் கொடுப்பதே அவைகளின் முக்கியமான பொறுப்பாகும். அவைகள் இலாப நோக்குடன் தொழில் நடத்துகின்றன. மையப் பாங்குகள் இலாப நோக்கங்கொண்டவை யல்ல. இவை பல முக்கியமான பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ளவேண்டும். நாட்டின் செலாவணி ஒரே மதிப்புடையதாக இருக்கவேண்டும். அதாவது, அதன் அக மதிப்பும், புற மதிப்பும் பெரிதும் குறையாமலிருக்க வேண்டும். செலாவணியின் மதிப்பைக் காப்பாற்றுவது மையப் பாங்கின் பொறுப்பாகும்.

வாணிகப் பாங்குகள் ரொக்க நிலையுடன் இருக்கவேண்டும். பலரிடமிருந்து பெற்ற டெபாசிட்டுத் தொகையைக் கொண்டே இவை தொழில் நடத்துகின்றன. டெபாசிட்டர்கள் தேவைக் கேற்றபடி இவைகள் ரொக்கங்கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும். வாணிகப் பாங்குகளுக்கு எங்கும் பணம் கிடைக்காத பொழுது, இறுதியில் கடன் கொடுக்கும் பணியை (lender of the last resort) மையப் பாங்குகள் மேற்கொள்ளவேண்டும். பணமார்க் கட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு மக்களுக்கு வேண்டும் பொழுது, தேவைக்கேற்பப் பணத்தைக் கொடுப்பதும், தொழில் மந்தமாக இருக்கும்பொழுது பணமார்க்கட்டிலிருக்கும் அதிகப் பணத்தை மீட்பதும் மையப் பாங்கின் பொறுப்பாகும்.

பொருளுற்பத்தியும் வர்த்தகமும் நெருங்கிய தொடர்புடையன. வர்த்தகம் சீர்கேடடைந்தால் உற்பத்தி குறையும். நாட்டின்

பொருளாதாரமும் குலைந்துவிடும். வர்த்தகம் சிறந்த முறையில் வளர வேண்டுமென்ருல் பாங்குமுறை நன்ருக அமையவேண்டும். பாங்குமுறை மக்கள் நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்திருக்கின்றது. செம்மையான பாங்குமுறையை நாட்டில் வளர்ப்பது மையப் பாங்கின் பொறுப்பாகும். இந்த நோக்கத்துடன் மையப் பாங்கு நாட்டிலுள்ள வாணிகப் பாங்குகளைக் கண்காணிக்க வேண்டும்.

அரசாங்கத்தின் செலாவணிக் கொள்கையைச் செயலாற்றுவது மையப் பாங்கின் முக்கிய அலுவலாக இருந்தபோதிலும், அரசாங்கம் இந்தப் பாங்குடன் சிறந்த தொடர்பைக் கொள்ள வேண்டும். கட்சி அரசியலுக்கு இந்தப் பாங்கு உட்படாமல், நாட்டின் நலனையே கருதிப் பணியாற்ற வேண்டும். அரசாங்கமும் மையப்பாங்கும் ஒத்துழைக்கவேண்டும். பாங்கின் தினசரி அலுவல்களில் அரசினர் தலையிடக்கூடாது. நாட்டின் பொருளாதாரம் பற்றிய முடிவுகள் செய்யும்பொழுது, அரசினர் மையப் பாங்கின் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

மையப் பாங்குகள் செலாவணித் தாள்களை வெளியிடுகின்றன; பாங்குச் செலாவணியைக் கட்டுப்படுத்துகின்றன. மையப் பாங்கு வீதம் (Bank rate), வெளிச்சந்தை நடவடிக்கை (open market operations) முதலியவை மூலம் மையப் பாங்குகள் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்கின்றன. இவற்றைத் தவிர மற்றச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளும் உள. அரசாங்கத்தின் நிதி நிருவாகமும் மையப் பாங்குகளிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கின்றன. அரசாங்கத் தொகைகளை டெபாசிட்டாக வைத்துக்கொள்வதும், அதன் சார்பில் பணம் செலுத்துவதும், வசூல் செய்வதும் இந்தப் பாங்குகளின் பொறுப்புக்களாகும்.

இங்கிலாந்தின் மையப்பாங்கு மேற்கூறிய பொறுப்புக்களை வெற்றிகரமாகச் செய்கின்றது. இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு ஒரு கூட்டுப்பங்குப் பாங்காக ஆரம்பமாயிற்று. நாளடைவில் சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து மையப்பாங்கின் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டது. ஆங்கிலப் பாங்குமுறை சட்டதிட்டங்களுக்குட் படாமல் பெரும்பாலும் பழக்க வழக்கங்களையேயொட்டி வளர்ந்திருக்கின்றது. இங்கிலாந்தில் பாங்குத் தொழில் செம்மையான முறையில் நடப்பதில் வியப்பொன்றுமில்லை. அந்த நாட்டில் நன்கு அமைந்த மையப்பாங்கும், வாணிகப் பாங்குகளும், பணமார்க்கட்டும், தள்ளுபடி மார்க்கட்டும், பங்குமாற்று நிலையங்களும் உள. பாங்குப் பழக்கமும் மக்களிடம் நன்கு பரவியிருக்கின்றது.

ஆனால், இந்தியாவில் முற்றிலும் மாறுபட்ட நிலையில் பாங்குகள் பணியாற்றுகின்றன. அண்மைக் காலம் வரை இந்தியாவில் மையப் பாங்கு இல்லை. நாட்டின் நலனைக்கருதி, மையப் பாங்கின் இன்றியமையாமையைக் கருதி, அண்மையில் ஒரு சட்டம் இயற்றி அதன் மூலம் ரிசர்வ் பாங்கைத் தோற்றுவித்தனர். நமது பழைய பாங்குமுறை ஒருபுறம் பணியாற்ற, மற்றொருபுறம் புதிய பாங்குமுறை இயங்கி வருகின்றது. எனவே, பணமார்க்கட்டில் ஒன்றோடொன்று அதிகத் தொடர்பில்லாத இருபெரும் பகுதிகள் இருக்கின்றன. மேலும், ஆங்கிலப் பாங்கு முறையைப்போல் நமது முறை ஒரு சீரான வளர்ச்சியடையவில்லை. குறிப்பாக இம்பீரியல் பாங்கு, ரிசர்வ் பாங்கு முதலியவை சட்டமியற்றிய பிறகு தோன்றியவை. ஆகையால், நமது முறை பழக்கவழக்கங்களை யொட்டியதல்ல; சட்டதிட்டங்களுக்குட்பட்டவை. கற்றறியாத பாமர மக்களிடம் பாங்குப் பழக்கங்களைச் சட்டங்கள் மூலம் பரப்புவது எளிதல்ல. மேலும், நமது விவசாயம், தொழில், வர்த்தகம் முதலியவை சில சிறப்பான இயல்புகளைக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் நமது மையப் பாங்காகிய ரிசர்வ் பாங்கு எவ்வளவு தூரம் தன் அலுவல்களை வெற்றிகரமாகச் செய்திருக்கின்றதென்றும், இந்தியாவின் சிறப்பான சூழ்நிலைக்கேற்றவாறு மாறுபட்டிருக்கின்றதென்பதையும் நாம் இங்குக் காண்போம். ரிசர்வ் பாங்கை மற்ற நாட்டு மையப் பாங்குகளுடன் ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது, நம் நாட்டின் சூழ்நிலையை நாம் கருத்தில் கொள்ளவேண்டும்.

இந்தியாவில் ஒரு செம்மையான செலாவணி முறையையும், பாங்குச் செலாவணி முறையையும் புகுத்துவதற்கு மையப் பாங்கு வேண்டும். ரூபாயின் அகமதிப்பையும், புறமதிப்பையும் நிலைநாட்டி, அது மாறுமலிருக்க ஆவன செய்வதற்கும் மையப் பாங்கு இன்றியமையாதது. செலாவணி வெளியீட்டையும் பாங்குச் செலாவணியையும் ரிசர்வ் பாங்கு கட்டுப்பாடு செய்தால், அது இந்தப் பணியை வெற்றியுடன் மேற்கொள்ளலாம். வாணிக உண்டியல்களின் அடிப்படையில் செலாவணித்தாள் வெளியீட்டை அமைத்து, வர்த்தகத்திற்கு வேண்டிய அளவு பணப்பெருக்கமோ பணச் சுருக்கமோ செய்யலாம்.

இந்திய பாங்குகளின் அமைப்பிலும், அவைகள் செய்யும் தொழில் முறையிலும் குறைபாடுகள் இருந்தன. பல பாங்குகள் வேண்டிய அளவு ரொக்கம் வைத்துக்கொள்ளாமல் தொழிலைப் பெருக்கிவிட்டன. நாணய மாற்றுப் பாங்குகள்கூட வேண்டிய அளவு ரொக்கம் வைத்துக்கொள்வதில்லை. மக்களின் ரொக்கத் தேவை மிகுதியடைந்தாலும், பாங்குகளுக்கு ஏதாவது ஆபத்து

ஏற்பட்டாலும் அந்நிலைமைகளைச் சமாளிப்பதற்கு வேண்டிய ரொக்கம் பல பாங்குகளிடமில்லை. இந்த நிலைமை ஏற்பட்டால் அதைச் சமாளிக்க, பாங்குகள் டெபாசிட்டர்களுக்கு வேண்டிய தொகையைக் கொடுக்க வேண்டும். ஆபத்தான நிலையிலுள்ள பாங்குகளுக்கு மற்றப் பாங்குகள் உதவியளிக்கவேண்டும். ஆனால், ஆபத்தில் சிக்கியுள்ள பாங்குகளுக்கு மற்றப் பாங்குகள் சாதாரண மாக உதவியளிக்கமாட்டா. இது போன்ற நிலைமையைச் சமாளிப் பதற்கும், வாணிகப் பாங்குகளைச் சிறந்த முறையில் கட்டுப்பாடு செய்வதற்கும் ஒரு மையப் பாங்கு வேண்டும். 1935 வரை இம்பீரியல் பாங்கு இந்தியாவின் மையப் பாங்காகப் பணியாற்றியது. ஆனால், இலாப நோக்குடன் தொழில் செய்யும் இம்பீரியல் பாங்கு இந்தப் பணியைச் செவ்வனே செய்யவில்லை. மற்ற வாணிகப் பாங்குகளின் காப்பு நிதியைப் பெற்றுக்கொள்ளவும், அவைகளுக்கு வேண்டிய உதவியை அளிக்கவும் மையப் பாங்கு ஒன்று கட்டாயம் வேண்டும். எல்லா வாணிகப் பாங்குகளும் தங்கள் காப்பு நிதியை இந்த மையப் பாங்கில் வைத்துக் கொள்வதுதான் சிறந்த பழக்க மாகும். மற்றப் பாங்குகளின் காப்பு நிதித்தொகைகளைப் பயன் படுத்தி, ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளுக்கு நெருக்கடியான காலங்களில் உதவியளிக்கலாம். மக்களின் நம்பிக்கையை மீட்பதற்கும், பாங்குகளைக் காப்பாற்றுவதற்கும் நெருக்கடியான காலங்களில் ரிசர்வ் பாங்கின் உதவி கிடைக்கும் என்ற நம்பிக்கை ஒன்றே போதுமானதாகும்.

ரிசர்வ் பாங்கு ஏற்படுவதற்கு முன் வாணிகப் பாங்குகள் தங்கள் இருப்புத் தொகைகளைப் பல பாங்குகளில் வைத்திருந்தன. இது சிறந்த முறையல்ல. ஒரே மையப் பாங்கு எல்லாப் பாங்கு களின் காப்பு நிதித் தொகைகளையும் வைத்திருப்பதே சிறந்த முறையாகும். இந்த முறை நெகிழ்ச்சியுடையது. வாணிகப் பாங்குகள் வேண்டும்பொழுது தம் தேவைக்கேற்ப ரிசர்வ் பாங்கில் கடன் வாங்கிக்கொள்ளலாம். ஒரே மையப் பாங்கில் காப்பு நிதிகளை வைத்துக்கொள்ளும் பழக்கம் செம்மையான பாங்கு முறையைச் சார்ந்த பழக்கமாகும்.

மொத்தச் செலாவணியும், பாங்குச் செலாவணியும், வர்த்த கத்திற்கும் தொழிலுக்கும் ஏற்ற முறையில் பெருகவோ சுருங்கவோ வேண்டும். இதற்கு மையப் பாங்கு மட்டுமே செலாவணித் தாள்களை வெளியிட வேண்டும். அது வாணிகப் பாங்குகளின் ரொக்க நிலையையும் கண்காணிக்க வேண்டும். பாங்குச் செலா வணிக் கட்டுப்பாட்டை ஒரு மையப் பாங்கு பல முறைகளில் கட்டுப்பாடு செய்யலாம். ஆனால், ஒரு மையப் பாங்கே இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியும். மேலும், நாட்டின் பாங்கு

முறையைச் சீர்திருத்துவதற்கும், சுதேச பாங்குகளை, அமைப்புள்ள பணமார்க்கட்டில் சேர்ப்பதற்குரிய வழிகளை வகுக்கவும், பாங்குத் தொழிலைப் பற்றிய புள்ளி விவரங்களை அவ்வப்போது பிரசுரிப்பதற்கும் ஒரு மையப் பாங்கு இந்தியாவுக்குக் கட்டாயம் வேண்டும்.

அரசினரின் நிதிக்கொள்கையைச் செயல்படுத்துவது உலகெங்கும் மையப் பாங்குகளின் பொறுப்பாகும். மற்ற நாடுகளில் உள்ள மையப் பாங்குகளைப் போலல்லாமல் இந்தியாவில் ரிசர்வ் பாங்கு விவசாயத்திற்குக் கடன் உதவி செய்யும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கின்றது. இது மையப் பாங்கின் தொழிலல்ல என்று சிலர் கருதலாம். ஆனால், நாம் இந்தியாவிலுள்ள நிலைமைக் கேற்றபடி நமது மையப் பாங்கின் அலுவல்களையும், முறையையும் ஓரளவு மாற்றிக் கொண்டிருக்கின்றோம். மேற்கூறிய பொறுப்புக்களை ஏற்றுக்கொள்வதற்கு மையப் பாங்கு ஒன்று கட்டாயம் வேண்டுமென்பதை எல்லோரும் உணர்ந்தனர். ரிசர்வ் பாங்கு ஏற்படுத்துவதைப்பற்றி ஆராய்ச்சி செய்து, சிபாரிசுகளைச் செய்ய அரசினர் ஒரு குழுவை அமைத்தனர். இக்குழுவினரின் முடிவுகளை ஏற்றுக்கொண்டு, 1934-இல் ரிசர்வ் பாங்குச் சட்டத்தை இயற்றினர். 1935-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் ரிசர்வ் பாங்கு நாட்டுக்குப் பணியாற்றத் தொடங்கியது.

## ரிசர்வ் பாங்கின் அமைப்பு

ஐந்து கோடி ரூபாய் முதலுடன் "ரிசர்வ் பாங்கு" தொடங்கப்பட்டது. ஒவ்வொரு பாங்கின் மதிப்பும் நூறு ரூபாய் ஆகும். பம்பாய், கல்கத்தா, டில்லி, சென்னை முதலிய இடங்களில் இதன் கிளைகள் இருந்தன. ஒவ்வொரு கிளை அலுவலகத்திற்கும் தனித் தனிப் பங்குதார் பட்டியல்கள் உண்டு. ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு குறிப்பிட்ட மதிப்புள்ள பங்குகளை ஒதுக்கியிருந்தனர். பங்குகளை மக்களிடம் பரவலாக விற்பனை செய்ய முயன்றனர். ரிசர்வ் பாங்கின் பங்குகள், பங்கு மாற்று நிலையங்களில் மிக உயர்ந்த மதிப்பைப் பெற்றன. 200 பங்குகளுக்குமேல் ஒரு தனிப்பட்ட நபர் வைத்துக்கொள்ளக் கூடாதென்று சட்டத்தை மாற்றியமைத்தனர். எனினும், பம்பாய், கல்கத்தா ஆகிய நகரங்களிலேயே மிகுதியான பங்குகளை மக்கள் கொண்டிருந்தனர் :

கீழ்க்கண்ட அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு மைய நிருவாகக் குழுவை அமைத்தனர் :

1. ஒரு கவர்னரையும், இரு துணைக் கவர்னர்களையும் அரசினர் நியமனம் செய்வர். நிருவாகக் குழுவின் சிபாரிசின்பேரில் அரசாங்கம் இவர்களை நியமனம் செய்வர்.

2. நான்கு இயக்குநர்களையும் அரசாங்கம் நியமனம் செய்யும்.

3. வட்டாரக் குழுக்கள் (Local boards) எட்டு இயக்குநர்களைத் தேர்ந்தெடுக்கும்.

4. அரசாங்கம் அலுவலர் ஒருவரை நியமனம் செய்யும். துணைக் கவர்னருக்கும், அரசியல் அலுவலருக்கும் ஓட்டுரிமை கிடையாது. கவர்னரையும், துணைக் கவர்னர்களையும் ஐந்தாண்டுகளுக்கு மேற்படாத காலத்துக்கு அரசாங்கம் நியமனம் செய்யும். காலத் தவணை முடிந்த பின்பு அவர்களையே மீண்டும் நியமனம் செய்யலாம். தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர்கள் ஐந்தாண்டுகளுக்குப் பணியாற்றுவர். மற்ற இயக்குநர்கள் கால வரையறையின்றிப் பணியாற்றலாம்.

மைய நிருவாகக் குழுவைத் தவிர வட்டாரக் குழுக்களும் இருந்தன. பங்குதாரர்கள் தேர்ந்தெடுக்கும் ஐந்து அங்கத்தினர்களும், மைய நிருவாகக் குழு நியமனம் செய்யும் மூன்று அங்கத்தினர்களும் வட்டாரக் குழுவில் அங்கம் வகிப்பர். பங்குதாரர்கள் கொண்டிருந்த பங்குகளில் ஐந்துக்கு ஓர் ஓட்டு என்று கணக்கிட்டு ஓட்டுரிமையைப் பங்குதாரர்களுக்கு வழங்கினர். பத்து ஓட்டுகளுக்குமேல் ஒரு தனிப்பட்ட நபர் பயன்படுத்தக்கூடாது. வட்டாரக் குழுவினர் செய்யவேண்டிய வேலைகள் யாவை என்பதை மையக் குழுவினர் முடிவு செய்தனர். கண்ணியமானவர்களும், நாணயமானவர்களுமே மைய நிருவாகக் குழுவிலும், வட்டாரக் குழுக்களிலும் பணியாற்றலாம்.

1927-இல் ஹில்ட்டன் யங் குழுவினரது முடிவையொட்டி ரிசர்வ் பாங்குச் சட்டத்தை உருவாக்கும்பொழுதே பலர் இந்தியாவின் மையப் பாங்கு தனியார் துறையினர் வசம் இருக்கக் கூடாதென்று வாதாடினர். அரசினரே ரிசர்வ் பாங்கை நடத்த வேண்டுமென்பதற்குப் பல காரணங்கள் கூறினர். மையப்பாங்கு தன் பொறுப்புக்களையும், அலுவல்களையும் நன்கு நிறைவேற்ற வேண்டுமாயின், அது அரசினர் நிருவாகத்திற்குட்பட்டிருக்க வேண்டும் என்று பலர் உணர்ந்தனர். ஆனால், 1935-இல் ரிசர்வ் பாங்கைப் பங்குதாரர்கள் பாங்காகவே தொடங்கினர். அதை நாட்டுடைமையாக்கும் நோக்கத்துடன், சட்டசபை 1947-இல் ஒரு மசோதாவை இயற்றியது. ரிசர்வ் பாங்கை நாட்டுடைமையாக்க வேண்டிய ஏற்பாடுகளை அரசாங்கம் உடனடியாகச் செய்யும் என்று நிதிமந்திரி உறுதி கூறினார். அதற்கான சட்டத்தை 1948-இல் இயற்றி, 1949-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி ரிசர்வ் பாங்கின் நிருவாகத்தை அரசியலார் ஏற்றுக்கொண்டனர். இரண்டாவது

16

உலகப் போருக்குப்பின் இங்கிலாந்து அரசாங்கம் அதன் தலைமைப் பாங்கை (Bank of England) நாட்டுடைமையாக்கியது.

ரிசர்வ் பாங்கின் பங்குகளை அரசினர் வாங்கிக்கொண்டனர். பங்குதார்களுக்கு நூறு ரூபாய் மதிப்புள்ள பங்கு ஒன்றுக்கு ரூ. 118-10-0 என்ற வீதத்தில் ஈடு கொடுத்தனர். நஷ்ட ஈட்டில் ஒரு பகுதியை ரொக்கமாகவும், மற்றொரு பகுதியைப் பத்திரமாகவும் கொடுத்தனர். அரசினர் அவ்வப்போது ரிசர்வ் பாங்குக்குச் சில பணிகளை இடலாம்.

பங்குதார்கள் மிகக் குறைந்த தொகையையே நஷ்ட ஈடாகப் பெற்றனர் என்று சிலர் கருதினர். 1947-ஆம் ஆண்டில் நிலவிய பாங்கின் மதிப்பைக்கொண்டு நஷ்டஈட்டுத் தொகையைக் கணக்கிட்டதால், பலர் அதிகமான விலைகொடுத்து வாங்கிய பங்குகளைக் குறைந்த விலைக்கு விற்பனைசெய்ய வேண்டியதாயிற்று. 1935-லிருந்தே ரிசர்வ் பாங்கு அரசாங்கத்துடன் ஒத்துழைத்தது. இரண்டாவது போர்க்காலத்தில் மட்டும் அரசாங்கத்திற்கும், ரிசர்வ் பாங்குக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. தனியார் துறையில் இயங்கியபொழுதும் ரிசர்வ் பாங்கு அரசியலார் கண்காணிப்புக்கு உட்பட்டிருந்தது.

1948-க்குப்பின், பாங்கின் அமைப்பு கீழ்க்கண்ட முறையில் மாறுபாடடைந்தது. மைய நிருவாகக் குழுவில் கீழ்க்கண்ட அங்கத்தினர்கள் பணியாற்றுகின்றனர்: (1) ஒரு கவர்னரும், இரு துணைக் கவர்னர்களும்—இவர்களை அரசாங்கம் நியமனம் செய்யும். (2) வட்டாரக் குழுக்களின் சார்பாக அரசினர் நியமனம் செய்யும் நான்கு இயக்குநர்கள். (3) அரசாங்கம் நியமனம் செய்யும் ஆறு இயக்குநர்கள். (4) ஓர் அரசாங்க அலுவலர். வட்டாரக் குழுக்களின் அங்கத்தினர்களையும் அரசாங்கமே நியமனம் செய்யும். இந்த அங்கத்தினர்கள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மையக்குழு அங்கத்தினர்கள் ஐந்தாண்டுகளுக்குப் பணியாற்றலாம். கவர்னரும், துணைக் கவர்னர்களும் முழு நேரமும் பாங்கு வேலைகளைச் செய்யும் அலுவலர்களாவர். ரிசர்வ் பாங்கின் தலைமை அலுவலகம் பம்பாயில் அமைந்துள்ளது. கல்கத்தா, சென்னை, டில்லி முதலிய இடங்களில் மற்ற அலுவலகங்களும், பங்களூர், கான்பூர், நாகபுரி முதலிய இடங்களில் கிளைகளும் உள.

ரிசர்வ் பாங்கின் அலுவல்கள் யாவை என்பதையும், அவற்றை அது எப்படிச் செய்கின்றது என்பதையும் இங்குக் காண்போம். பாங்கின் அலுவல்களை அதன் இருப்பு நிலைக் குறிப்பு (Balance

Sheet) விளக்கும். (செலாவணித் தாள்களை) வெளியிடும் துறைக்கும் (Issue Department), பாங்குத் துறைக்கும் (Banking Department) தனித்தனியாக இருப்புநிலைக் குறிப்பைத் தயார் செய்கின்றனர். 1955-ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 19-ஆம் தேதி ரிசர்வ் பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு :

## வெளியீட்டுத் துறை

## (Issue Department)

ரூபாய் —கோடியில்

| பொறுப்புக்கள் (Liabilities) | | சொத்துக்கள் (Assets) | |
|---|---|---|---|
| | | பொன் நாணயங்களும் உலோகமும். | |
| பாங்குத் துறைவசம் இருக்கும் செலாவணித் தாள்கள் | 31·39 | (1) இந்தியாவில் உள்ளது | 40·02 |
| புழக்கத்திலிருக்கும் செலாவணித் தாள்கள் | 1297·98 | (2) வெளி நாடுகளில் உள்ளது-அயல் நாட்டுப் பத்திரங்கள் | 637·04 |
| | | | 677·06 |
| | | ரூபாய் நாணயங்கள் | 108·63 |
| | | இந்திய அரசாங்க ரூபாய்ப் பத்திரங்கள் | 543·68 |
| | | உள்நாட்டு வாணிப உண்டியல்கள் | ....... |
| மொத்தம் | 1329·37 | மொத்தம் | 1329·37 |

## பாங்குத் துறை

## (Banking Department)

### ரூபாய்—கோடியில்

| பொறுப்புக்கள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| செலுத்திய முதல் | 5·00 | செலாவணித் தாள்கள் | 31·39 |
| காப்பு நிதி (Reserve Fund) | 5·00 | ரூபாய் நாணயங்கள் | 0·09 |
| டெபாசிட்டுக்கள் | | மற்றத் துணை நாணயங்கள் | 0.09 |
| (1) அரசினர் டெபாசிட்டு (மைய அரசாங்கம் | 90·95 | வாங்கிய உண்டியல்களும் தள்ளுபடி செய்த உண்டியல்களும் | |
| (2) மற்ற அரசாங்க டெபாசிட்டுக்கள் | 25·89 | (1) உள் நாட்டு உண்டியல்கள் | 0·62 |
| பாங்குகளின் டெபாசிட்டுக்கள் | 51·71 | (2) வெளிநாட்டு உண்டியல்கள் | —— |
| மற்ற டெபாசிட்டுக்கள் | 33·43 | (3) கருவூல உண்டியல்கள் | 10·89 |
| கொடுக்க வேண்டிய உண்டியல் தொகை | 11·10 | வெளிநாட்டில் இருப்புத் தொகை | 85·30 |
| மற்றப் பொறுப்புக்கள் | 12·76 | அரசியலாருக்குக் கொடுத்த கடன் தொகை | 2·44 |
| | | மற்றக் கடன்கள் | 33·38 |
| | | பத்திர முதலீடு | 62·38 |
| | | மற்றச் சொத்துக்கள் | 9·27 |
| மொத்தம் | 235·84 | மொத்தம் | 235·84 |

ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் 34-ஆவது பிரிவுப்படி வெளியீட்டுத் துறையையும், பாங்குத் துறையையும் தனித்தனியாக வைத்துக் கொள்ளவேண்டும். இவ்விரு துறைகளின் இருப்பு நிலைக் குறிப்புக் களையும் தனித்தனியாக வெளியிட வேண்டும். செலாவணித் தாள்களை வெளியிடும் பொறுப்பை வெளியீட்டுத் துறை ஏற்றுக் கொள்ளவேண்டும். ரிசர்வ் பாங்கு வெளியிடும் செலாவணித் தாள்கள் சட்ட பூர்வமானவை. அச்செலாவணித் தாள் வெளியீடு ரிசர்வ் பாங்குச் சட்டத்துக்குட்பட்டிருந்தது.

பொன் உலோகம், பொன் நாணயம், குறிப்பிட்ட சில பத்திரங்கள் முதலியவற்றை வெளியீட்டுத் துறையின் சொத்துக்

களாக வைத்துக் கொண்டிருக்கின்றனர். இந்தச் சொத்துக் களில் ஐந்தில் இருபங்கை (அதாவது 40 சதவீதத்தை) பொன் உலோகம், பொன் நாணயங்கள், அயல் நாட்டுப் பத்திரங்கள் முதலியவற்றில் முதலீடு செய்யவேண்டும். நாற்பது கோடி ரூபாய்க்குக் குறையாத மதிப்புள்ள பொன் உலோகமும், பொன் நாணயங்களும் வெளியீட்டுத் துறையின் சொத்துக்களில் எப்பொழுதும் இருத்தல் வேண்டும். வரம்பின்றிச் செலாவணித் தாள்களை வெளியிடுவது சரியல்ல. செலாவணித் தாள் வெளி யீட்டைக் கட்டுப்பாடு செய்யவும் ஒழுங்கு படுத்தவும் பல முறைகளைக் கையாளலாம். இதில் விகிதக் காப்பு முறை (Proportional Reserve System) ஒன்றாகும். இம்முறையை நம்நாட்டில் பின் பற்றினர். தேவையிருந்தால், குறுகிய காலத்திற்கு மைய அரசாங்கத்தின் அனுமதியைப் பெற்று, ரிசர்வ் பாங்கு இந்த விதிகளை மீறி, அதிகமான செலாவணித் தாள்களை வெளியிடலாம்.

பொன் உலோகம், பொன் நாணயங்கள் அயல்நாட்டுப் பத்திரங்கள் முதலியவற்றைத் தவிர ரூபாய் நாணயங்கள், ரூபாய்ப் பத்திரங்கள், வாணிப உண்டியல்கள் முதலியவற்றையும் வெளி யீட்டுத் துறை சொத்துக்களாக வைத்துக்கொள்ளலாம். வெளி யீட்டுத் துறையில் இருக்கும் இந்திய அரசாங்கப் பத்திரங்கள் ஐம்பது கோடி ரூபாய்க்கு மேற்படாமல் இருக்க வேண்டும். இத்துறையின் மொத்தச் சொத்துக்களில் நான்கிலொரு பங்கு ஐம்பது கோடி ரூபாய்க்குக் குறைவாக இருந்தால், இத்துறைவசம் இருக்கும் இந்திய அரசாங்கப் பத்திரங்கள் நான்கிலொரு பங்கு சொத்தின் மதிப்புக்கு மேற்படாமல் இருக்கவேண்டும். வெளி யீட்டுத்துறை வசம் இருக்கும் தங்கத்தில் (பொன் நாணயங்கள் உள்பட) இருபதில் பதினேழு பங்கை இந்தியாவில் வைத்துக் கொள்ளவேண்டும். கீழ்க்கண்டவற்றை ஸ்டெர்லிங் பத்திரங் களாகச் சட்டம் ஏற்றுக்கொண்டது :

(1) வெளியீட்டுத் துறை இங்கிலாந்தின் தலைமைப் பாங்கில் வைத்திருக்கும் தொகை.

(2) மூன்று மாதத் தவணை உண்டியல்கள். அவை வாணிப உண்டியல்களாக இருக்கவேண்டும். அந்த உண்டியல்களில் குறிப் பிட்டிருக்கும் தொகை ஸ்டெர்லிங் நாணயத்தில் செலுத்தக் கூடியதாக இருத்தல் வேண்டும்.

(3) ஐந்தாண்டுகள் தவணைகொண்ட இங்கிலாந்து நாட்டின் அரசினர் பத்திரங்கள்.

1939-ஆம் ஆண்டு வெளியீட்டுத் துறை, தன் சொத்தில் சுமார் 53 சதவீதத்தைப் பொன்ஞகவும், அயல் நாட்டுப் பத்திரங்களாகவும் வைத்திருந்தது. ஆனல், இரண்டாவது போர்க்காலத்தில் வெளியீட்டுத் துறையினரின் சொத்தில் கணிசமான ஒரு பகுதி ஸ்டெர்லிங் பத்திரமாக இருந்தது. புழக்கத்திலிருந்த செலாவணித் தாள்களின் மதிப்பும் உயர்ந்தது. எனினும், போருக்குப்பின் வெளியீட்டுத் துறைவசம் இருந்த ஸ்டெலிங் பத்திரங்கள் குறைந்தன; ரூபாய்ப் பத்திரங்கள் அதிகரித்தன.

இரண்டாவது போருக்குப்பின் வெளியீட்டுத்துறை வசமிருந்த ஸ்டெர்லிங் பத்திரங்கள் போன்ற அயல்நாட்டுப் பத்திரங்கள் நாளடைவில் குறைந்தன. நமது பத்திரங்களாகிய ரூபாய்ப் பத்திரங்களை இத்துறை அதிகமாக வைத்துக்கொண்டது.

செலாவணித் தாள்கள் வெளியீட்டில் பல முறைகள் உள. அவற்றுள் ஒன்ருன விகிதக் காப்பு முறையை (Proportional Reserve System) ரிசர்வ் பாங்கு 1935-இலிருந்து பின்பற்றியது. மிகுதியான செலாவணித் தாள்களை வெளியிட வேண்டுமாஞல், வெளியீட்டுத் துறை அதற்குத் தக்கவாறு பொன்னையும் அயல் நாட்டுப் பத்திரங்களையும் வைத்துக் கொள்ளவேண்டும். 1956-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றியமைத்தனர். பழைய வெளியீட்டு முறையை ரிசர்வ் பாங்கு கைவிட்டது. இந்தியா விடுதலையடைந்தபின் நம் நாட்டுப் பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்க்கவும், உற்பத்தியைப் பெருக்கவும் அரசினர் பல திட்டங்களை வகுத்தனர். இத்திட்டங்களைச் செயலாற்றுவதற்குப் பற்ருக்குறை நிதியாக்கம் தேவையாயிற்று. பழைய விகிதக் காப்புமுறை அதற்கு இடங்கொடுக்கவில்லை. எனவே, பழைய முறையைப் புறக்கணித்து ஒரு புதுமுறையை அரசியலார் கையாள வேண்யடிதாயிற்று.

1956-இலிருந்து பின்பற்றிய புதிய முறைப்படி ரிசர்வ் பாங்கு ஒரு குறைந்தபட்ச காப்பு நிதியை வைத்துக்கொள்ள வேண்டும். அதாவது 115 கோடி ரூபாய் மதிப்புள்ள பொன்னையும், 400 கோடி ரூபாய் மதிப்புள்ள அயல்நாட்டுப் பத்திரங்களையும் வெளியீட்டுத்துறை சொத்தாக வைத்துக்கொள்ளவேண்டும். மேலும், பழைய முறைப்படி பொன்னை ஒரு தோலா ரூ. 21-3-0 என்று மதிப்பீடு செய்தனர். ஆனல், புதிய முறைப்படி பொன்னின் விலையை ஒரு தோலா ரூ. 62-50 என்று ஏற்றுக்கொண்டு, ரிசர்வ் பாங்கு வசம் இருந்த பொன்னை மதிப்பீடு செய்தனர். பொன்னின் இந்தப் புதிய மதிப்பைப் பன்ஞட்டு நாணய நிதி ஏற்றுக்கொண்டது. இதன் விளைவாக 40 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொன்னின் மதிப்பு

சுமார் 115 கோடி ரூபாயாக உயர்ந்தது. சாதாரணமாகக் காப்பு நிதியில் 515 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொன்னும், அயல் நாட்டுப் பத்திரங்களும் இருத்தல் வேண்டும். ஆனால், தேவை ஏற்பட்டால் ரிசர்வ் பாங்கு 415 கோடி ரூபாய் பெறுமானமுள்ள காப்பு நிதியை வைத்துக்கொள்ளலாம். அதாவது, காப்பு நிதியில் 115 கோடி ரூபாய் பொன்னும், 300 கோடி ரூபாய் அயல்நாட்டுப் பத்திரங்களும் இருக்கலாம். ஆனால், இப்படிச் செய்வதற்கு மைய அரசாங்கத்தின் அனுமதி வேண்டும். மைய அரசாங்க அனுமதி யுடன் ஆறுமாத காலத்திற்கே இப்படிக் குறைந்த காப்பு நிதியை வைத்துக்கொள்ள முடியும். அவசியமானல், இந்தக் காலத் தவணையை அரசினர் அனுமதியுடன் மேலும் மூன்று மாதத்திற்கு நீட்டித்துக்கொள்ளலாம்.

1957-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்கு வசம் இருந்த அயல் நாட்டுச் செலாவணி குறைந்துவிட்டதால், காப்பு நிதி பற்றிய சட் டத்தை மீண்டும் மாற்றியமைத்தனர். இந்தியாவின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மோசமாக இருந்தது. நமது ஸ்டெர்லிங் நிதியும் குறைந்துவிட்டது. இந்த நிலையில் 1957-இல் காப்பு நிதி பற்றிய சட்டத்தை மாற்றியமைத்தனர். ரிசர்வ் பாங்குவசம் இருக்க வேண்டிய குறைந்தபட்சக் காப்பு நிதியின் மதிப்பு 200 கோடி ரூபாய். இதில் 115 கோடி ரூபாய்க்குக் குறையாத மதிப்புள்ள பொன் இருத்தல் வேண்டும்.

செலாவணித் தாள் வெளியீட்டுக்கு எத்தகைய காப்புமுறை வேண்டும் என்பதை இங்குக் காண்போம். செலாவணித் தாள் காப்பு முறைகளில் பலவகைகள் உள. அவற்றுள் எது சிறந்தது என்பது பற்றி இங்கிலாந்தில் 19-ஆவது நூற்றாண்டில் கருத்து வேற்றுமை இருந்தது. ஒரு சாரார் செலாவணித் தாள்களை நாண யங்களுக்குப் பதிலியாகவே (Substitutes) மக்கள் ஏற்றுக்கொள் கின்றனரென்றும், ஆகையால், இத்தாள்களை உலோக நாணயங் களாக அரசாங்கம் மாற்றத் தயாராக இருக்கவேண்டுமென்றும் கூறினர். ஆகையால், மையப் பாங்கு எந்த அளவு செலாவணித் தாள் வெளியிடுகின்றதோ அதே அளவு மதிப்புள்ள உலோகத்தைக் காப்பு நிதியில் சொத்தாகக் கொள்ளவேண்டுமென்பது அவர்கள் கருத்து. ஆனால், சிலர் செலாவணித் தாள் வெளியீட்டில் ஒரு பகுதிக்குச் சமமான உலோகம் வைத்துக்கொண்டால் போதுமான தென்று கருதினர். ஏனெனில், மையப்பாங்கு வெளியிடும் செலா வணித் தாள்கள் அனைத்தையும் மக்கள் நாணயமாக மாற்ற முயல மாட்டார்கள். இந்த முறை எளியதாகவும், நெகிழ்ச்சி உடைய தாகவும் இருக்கும் என்று இவர்கள் குறிப்பிட்டனர்.

19-ஆவது நூற்றுண்டில் இங்கிலாந்தில் நிலேயான நம்பிக்கை வெளியீட்டு முறையைப் (Fixed Fiduciary System) பின்பற்றினர். செலாவணித் தாள் வெளியீட்டில் ஒரு பகுதியைக் காப்பு நிதியின்றி வெளியிடலாம். அப்பகுதியை நம்பிக்கை வெளியீட்டுப் பகுதி என்று கூறினர். மையப் பாங்கு வெளியீட்டின் மற்றப் பகுதிக்குச் சமமான பொன்னே வைத்துக்கொள்ளவேண்டும். அம்முறை நெகிழ்ச்சியற்றது. நாட்டின் வர்த்தகத்திற்கும் மக்கள் தேவைக்கும் ஏற்றவாறு செலாவணி வெளியீடு பெருகாமல் மையப் பாங்கு வசம் இருக்கும் பொன் உலோகத்திற்கேற்றவாறு பெருகும். எனவே, மாக்மில்லன் குழுவினர் இங்கிலாந்து இம்முறையைக் கைவிடவேண்டுமென்று கூறினர்.

1928-ஆம் ஆண்டு வரை பிரான்சு உயர்ந்தபட்ச நம்பிக்கை வெளியீட்டு முறையைப் (Maximum Fiduciary System) பின் பற்றியது. அதன்படி ஒரு குறிப்பிட்ட தொகைக்குமேல் நம்பிக்கை வெளியீடு அதிகரிக்கக்கூடாது. அந்த நம்பிக்கை வெளியீட்டுக்குக் காப்புநிதி வேண்டியதில்லே. அவசியமானுல் இந்த உயர்ந்த பட்ச வெளியீட்டுத் தொகையை அதிகரித்துக் கொள்ளலாம். இம் முறையை இங்கிலாந்து பின்பற்றலாம் என்று மாக்மில்லன் குழுவினர் சிபாரிசு செய்தனர்.

முதல் உலகப் போருக்குப்பின் விகிதக் காப்பு முறையைப் பல நாடுகள் பின்பற்றின. அம்முறையை ஹில்ட்டன் யங் குழுவினர் நம் நாட்டுக்குச் சிபாரிசு செய்தனர். அதன்படி செலாவணித் தாள் வெளியீட்டில் ஒரு பகுதி மதிப்புள்ள பொன்னேக் காப்பு நிதி யாக மையப் பாங்கு வைத்துக்கொள்ளவேண்டும். மற்ற முறைகளேவிட இம்முறை நெகிழ்ச்சியுடையது.

காப்பு நிதியின் பயனேயும் தேவையையும் பற்றி நாம் இப்பொழுது ஒரு முடிவுக்கு வரலாம். ஒரு நாட்டில் வர்த்தகம் பெருகும்பொழுது செலாவணிப் பெருக்கமும் ஏற்படவேண்டும். செலாவணித் தாள் வெளியீட்டு முறை நெகிழ்ச்சியுடையதாக இருக்கவேண்டும். 19-ஆம் நூற்றுண்டில் காப்புநிதி பற்றிய சட் டங்களே இயற்றி, காப்பு நிதியில் பொன் இருக்கவேண்டும் என்று கருத்துடன் வேண்டிய ஏற்பாடுகளேச் செய்தனர். பலநாடுகள் பொன் நாணயத் திட்டங்களேப் பின்பற்றின. அவை பொன் நாணயத் திட்டத்தின் விதிகளேயொட்டிச் செலாவணி வெளியீட்டையும், அதற்கு வேண்டிய காப்பு நிதிகளேயும் அமைத்துக்கொண்டன. செலா வணித் தாள்களேப் பொன் நாணயங்களின் பதிலியாகவே மக்கள் கருதினர். மக்கள் செலாவணி முறையில் கொண்ட நம்பிக்கை

குறையாமல் இருக்கவேண்டுமென்று கருதி மையப் பாங்கு செலாவணித் தாள்களை ஏற்றுக்கொண்டு நாணயங்களையோ, பொன் உலோகத்தையோ கொடுக்கத் தயாராக இருந்தது. ஆனால், இப்பொழுது பொன் நாணயங்கள் கிடையா. மேலும், செலா வணித்தாள்களை நாணயங்களாகவோ, உலோகமாகவோ மாற்ற வேண்டியதில்லை. ஆகையால், காப்பு நிதியில் உலோகம் வைத்துக் கொள்ள வேண்டியதில்லை.

மேலும், அதிகமாக உயராமலும், தாழ்வடையாமலும் விலை வாசிகளை கட்டுப்பாடு செய்வது மையப் பாங்கின் பொறுப்பாகும். இப் பணியைச் செம்மையான முறையில் செய்யவேண்டுமானால், மையப் பாங்குக்குச் செலாவணித் தாள்களையும், பாங்குச் செலாவணியையும் கட்டுப்பாடு செய்ய அதிகாரம் வேண்டும். காப்பு நிதி பற்றிய சட்டங்கள் இந்த அதிகாரத்தை எவ்விதத்திலும் குறைக்கக்கூடாது. 19-ஆம் நூற்றாண்டில் செலாவணித் தாள்களை நாணயங்களாக மாற்றுவதற்கு மையப் பாங்குகள் காப்பு நிதியைப் பயன்படுத்திக் கொண்டன. இப்பொழுது, நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை தற்காலிகமாகப் பாதிக்கப்பட்டால், அதைச் சீர்படுத்து வதற்காகக் காப்பு நிதியைப் பயன்படுத்துகின்றனர். மேலும், காப்புநிதி மூலம் நாட்டின் செலாவணி முறையில் மக்கள் நம்பிக் கையை வளர்க்கலாம். 19-ஆம் நூற்றாண்டைப்போலல்லாமல் காப்பு நிதியின் பயன்கள் இப்பொழுது மாறிவிட்டதால், மையப் பாங்குகள் குறைந்த அளவு காப்பு நிதியை வைத்துக்கொள்ளலாம்.

இப்பொழுது நம்நாடு பின்பற்றும் செலாவணித்தாள் முறை நெகிழ்ச்சி உடையதாகவும் எளிதாகவும் அமைந்துள்ளது. அதிக மான செலாவணித்தாள் வெளியிட வேண்டுமென்றால், ரிசர்வ் பாங்கு அதற்கு ரூபாய்ப் பத்திரங்களையும் கருவூல உண்டியல்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம். வேண்டும்பொழுது ரிசர்வ் பாங்கு, பாங்குத் துறையிலுள்ள பத்திரங்களில் ஒரு பகுதியை வெளியீட்டுத் துறைக்கு மாற்றலாம். புழக்கத்திலிருந்து மீண்டும் செலாவணித் தாள்கள் பாங்குக்கு வரும்பொழுது அப்பத்திரங்களைப் பாங்குத் துறைக்கு மாற்றிவிடலாம்.

ரிசர்வ் பாங்கு மைய, மாநில அரசாங்கங்களின் அலுவல்கள் சிலவற்றை மேற்கொள்ளவேண்டும். இந்த அரசாங்கங்களுக்கு மக்கள் செலுத்த வேண்டிய தொகைகளை ரிசர்வ் பாங்கு ஏற்றுக் கொள்ள வேண்டும். அரசினர் சார்பில் செலுத்த வேண்டிய தொகைகளைச் செலுத்த வேண்டும். மைய, மாநில அரசாங்கங் களின் கடன் தொகையை நிருவகிப்பது இந்தப் பாங்கின்

பொறுப்பாகும். அரசினர் கடன் வாங்க வேண்டுமென்று கருதினால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை இந்தப்பாங்கு செய்யவேண்டும். பொதுக்கடன் நிருவாகத்தை (Administration of Public Debt.) ஏற்றுக்கொள்வதால் ரிசர்வ் பாங்கு அரசியலாரிடமிருந்து சிறப்பான ஊதியம் பெறுகின்றது. அரசியலார் தம்மிடமுள்ள பணத்தை ரிசர்வ் பாங்கில் டெபாசிட்டாக வைத்துக்கொள்ளவேண்டும். இந்த டெபாசிட்டுத் தொகைக்கு, பாங்கு வட்டி கொடுக்க வேண்டியதில்லை. மைய, மாநில அரசாங்கங்கள் ஒரு குறிப்பிட்ட தொகைக்குக் கீழ்ப்படாத குறைந்தபட்ச டெபாசிட்டை ரிசர்வ் பாங்கில் எப்பொழுதும் வைத்துக்கொள்ள வேண்டும். டெபாசிட்டுத் தொகை அந்தக் குறைந்தபட்ச அளவைவிடக் குறைந்தால், கருவூல உண்டியல்கள் மூலம் வேண்டிய தொகையைப் பெறலாம். அல்லது, பற்றுக்குறையை நீக்க அவைகள் ரிசர்வ் பாங்கிடம் கடனைப் பெறலாம். அரசினர் ரிசர்வ் பாங்கைத் தவிர மற்ற எந்தப் பாங்கிலும் டெபாசிட்டுத் தொகைகளை வைத்துக் கொள்ளக்கூடாது. ஆனால், ரிசர்வ் பாங்கு இல்லாத இடங்களில், ஸ்டேட் பாங்கு அதன் சார்பில் அரசாங்க அலுவல்களை ஏற்றுக் கொள்ளலாம். அரசினர் நிதி நிருவாகம்பற்றி முடிவு செய்வதற்கு முன் ரிசர்வ் பாங்கின் ஆலோசனையை நாடுகின்றனர். அரசாங்க நிதித்துறைக்கும் இந்தப் பாங்குக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

சிலநாடுகளில் மையப் பாங்கு தனியார் துறையில் இருக்கின்றது. அரசினர் நிதிக் கொள்கையைச் செயலாற்றுவது இப் பாங்கின் பொறுப்பாகும். மையப் பாங்கும் அரசாங்கமும் நிதிக் கொள்கையைச் செயலாற்றுவதில் ஒத்துழைக்கவேண்டும். சில நாடுகளில் மையப் பாங்கு கவர்னருக்கும், அரசாங்கத்திற்கும் கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டிருக்கின்றன. சர் ஜேம்ஸ் டெய்லர் (Sir James Taylor) என்ற கவர்னர் காலத்திலிருந்து ரிசர்வ் பாங்கு அரசாங்கத்துடன் நல்லுறவு கொண்டிருந்தது.

செலாவணியின் மதிப்பு பெரிதும் மாறாமல் ஒரே நிலையில் இருத்தல் வேண்டும். செலாவணியின் அகமதிப்பும், புறமதிப்பும் விலைவாசியையொட்டி இருக்கும். விலைவாசி உயர்ந்தால் செலாவணியின் மதிப்பு தாழ்வடையும். விலைவாசி தாழ்வடைந்தால் செலாவணியின் மதிப்பு உயரும். இந்தியா ஸ்டெர்லிங் நாணயத் திட்டத்தைப் (Sterling Standard) பின்பற்றிய காலத்தில் ரூ. 1 = 1 ஷி. 6 பெ. என்ற வீத மதிப்பை நிலைநாட்டினர். அயல் நாட்டுச் செலாவணி மார்க்கட்டில் (Foreign exchange market) கிடைக்கும் மொத்த ரூபாயும், அதற்கு ஏற்படும் தேவையும் ரூபாயின் புறமதிப்பை நிர்ணயிக்கும். அயல்நாட்டினர் நமது பொருள்களை

அதிக அளவில் வாங்கினுல் அப் பொருள்களுக்குச் செலுத்த வேண்டிய தொகையை ரூபாய் நாணயத்திலேயே செலுத்த வேண்டும். அயல் நாட்டுச் செலாவணி மார்க்கட்டில் ரூபாய் மிகுதியான அளவில் தேவைப்படும். அதன் புறமதிப்பு உயரும். ஆனுல், நம் நாட்டில் ஏற்பட்ட பணவீக்கத்தின் விளைவாகப் பொருள்களின் விலைகள் உயர்ந்துவிட்டன. ஆகையால், அயல் நாட்டினர் உயர்ந்த விலையில் நமது பொருள்களை வாங்கமாட்டார்கள். எனவே, ரூபாயின் தேவையும் அதன் புறமதிப்பும் குறையலாம். ஆகையால், நாணய மாற்றுக் கட்டுப்பாடு (Exchange Control), இறக்குமதிக் கட்டுப்பாடு முதலியவை மூலம் ரூபாயின் புறமதிப்பை ரூ. 1 = 1 ஷி. 6 பெ. என்ற வீதத்தில் நிலைநாட்டுகின்றனர். இறக்குமதிக் கட்டுப்பாட்டை இரண்டாவது போர்க்காலத்தில் அமுலில் கொண்டு வந்தனர். அயல்நாட்டுச் செலாவணி மார்க்கட்டில் கிடைக்கும் மொத்தச் செலாவணித் தொகையையும், நாட்டின் தேவையையும் அரசாங்கம் கட்டுப்படுத்துவதை நாணய மாற்றுக் கட்டுப்பாடு என்று கூறுகின்றனர். நாணயமாற்றுக் கட்டுப்பாடு அமுலில் இருக்கும் நாட்டில், அன்னிய நாட்டுச் செலாவணியை அரசினர் அனுமதியைப் பெற்றபின்பே மக்கள் அடையலாம். உள்நாட்டில் ஏற்படும் அன்னிய நாட்டுச் செலாவணித் தேவையையும் அரசியலார் கட்டுப்பாடு செய்வர். இந்தியாவில் நாணய மாற்றுக் கட்டுப்பாட்டை நிருவாகம் செய்வது ரிசர்வ் பாங்கின் பொறுப்பாகும்.

ஒரு செலாவணியின் புறமதிப்புக்கும், அகமதிப்புக்கும் நெருங்கிய தொடர்புண்டு. செலாவணியின் அகமதிப்பு உயர்ந்தால் புறமதிப்பும் உயரும். அதாவது, புறமதிப்பு அகமதிப்பை யொட்டியே மாறுபாடடையும். ஒரு நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டால் விலைகள் உயரும். செலாவணியின் அகமதிப்பும் தாழ்வடையும். ஏற்றுமதிப் பொருள்களின் விலை உயர்வதால் அயல்நாட்டினர் தேவை சுருங்கும்; ஏற்றுமதியும் குறையும். ஆனுல், இறக்குமதி மிகுதியடையும். பணவீக்கம் ஏற்பட்ட நாட்டின் செலாவணி அதிகமான அளவில் அயல்நாட்டுச் செலாவணி மார்க்கட்டில் கிடைக்கும். எனவே, அதன் தேவை குறையும்; புறமதிப்பு தாழ்வடையும்.

புழக்கத்திலிருக்கும் மொத்தப் பணம் மையப் பாங்கின் செலாவணிக் கொள்கை, அரசாங்கத்தின் நிதிக்கொள்கை, பொருளாதார அமைப்பின் நிலை முதலியவை ஒரு நாட்டின் செலாவணியின் அகமதிப்பை நிர்ணயிக்கும். புழக்கத்திலிருக்கும் மொத்தச் செலாவணிக்கும், உற்பத்தியாகும் பொருள்களின் மொத்த

அளவுக்கும் ஒரு பொருத்தம் இருக்க வேண்டும். உற்பத்தியாகும் பொருள்களை விலையாக்குவதற்கே செலாவணியும் பணமும் உதவு கின்றன. ஆகையால், உற்பத்தி பெருகினுல் மிகுதியான செலாவணியை வெளியிடல் வேண்டும். உற்பத்தி குறையும் பொழுது செலாவணிச் சுருக்கம் ஏற்படலாம். பாங்குகளில் மக்கள் கொண்டிருக்கும் நடப்பு டெபாசிட்டுகளையும் நாம் செலாவணியாகக் கருதலாம். ஏனெனில், இந்த டெபாசிட்டுத் தொகைகளைச் செலாவணித்தாள்களைப் போல் நாம் பயன்படுத்திக் கொள்ளலாம். மொத்தச் செலாவணித் தொகை (பாங்குச் செலாவணி உள்பட) மிகுதியாக இருந்தபோதிலும் அதை மக்கள் சரியாகப் பயன்படுத்தா விடில், சாதாரணமாகச் செலாவணிப் பெருக்கத்தாலாகும் நல்ல விளைவு ஏற்படாது. செலாவணிப் பெருக்கத்தால் நல்ல விளைவுகள் ஏற்பட வேண்டுமானுல், மக்கள் அதை நன்கு பயன்படுத்த வேண்டும். அதாவது, புதிதாகப் பாங்குகள் வெளியிடும் செலாவணியை மக்கள் செலவு செய்யவேண்டும். நாட்டிலிருக்கும் மொத்தச் செலாவணித் தொகையை மக்கள் எந்த அளவு பயன் படுத்துகின்றனரோ அதைப் பொறுத்திருக்கும். மக்கள் முன்னிலும் இப்பொழுது அதிகமாகப் பணச்செலவு செய்தால், புழக்கத்தி லிருக்கும் செலாவணித் தொகை மிகுதியடையும். நாட்டின் உற்பத்தியைவிடச் செலாவணி அதிகரித்தால், தேவைக்கு மேல் அதிகமான செலாவணி புழக்கத்திலிருக்கும். விலைவாசி உயரும். பணத்தின் மதிப்புத் தாழ்வடையும். செலாவணிப் பெருக்கம் ஏற் படாமல் பொருள் உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டால், விலைகள் தாழ் வடைய பணத்தின் மதிப்பு உயரும். பணவீக்கமும் விலையுயர்வும் ஓரளவுக்குமேல் நீடித்தல் அவை நாட்டுக்கு நல்ல பயனை விளைவிக்க மாட்டா. விலைவாசி தாழ்வடைந்தால் நாட்டின் பொருள் உற்பத்தி, வேலைவாய்ப்புக்கள், வாணிகம் முதலியவை குறையலாம். பொருள் உற்பத்தியைப் பெருக்கவும், வேலை வாய்ப்புக்களைப் பெருக்கவும் நாட்டின் வாணிகத்துக்கு ஒரு தூண்டுதல் அளிக்கவும் ஏற்ற விலை வாசிக் கொள்கையைப் பின்பற்றவேண்டும். பணவீக்கமும் பணச் சுருக்கமும் ஏற்படாமலிருக்க, வேண்டிய ஏற்பாடுகளை அரசியலாரும் மையப்பாங்கும் செய்யவேண்டும். ஒவ்வொரு விலைவாசிக்கும் (Price level) ஏற்ற உற்பத்தியளவு உண்டு. விலைவாசி குறையக் குறைய உற்பத்தியின் அளவும் குறையும். நாட்டிலுள்ள உற்பத்திச் சாதனங்களை முழுமையாகப் பயன்படுத்தி, உயர்ந்தபட்ச உற்பத்திப் பெருக்கத்தை (Maximum production) ஏற்படுத்தவேண்டுமென் ருல் ஒரு குறிப்பிட்ட நிலையில் விலைவாசியை நிலைநாட்ட வேண்டும். இந்த நிலையிலிருந்து விலைகள் மாருமல் இருக்க வேண்டிய ஏற்பாடு களை அரசாங்கமும் மையப் பாங்கும் செய்யவேண்டும்.

பொருள் உற்பத்தியை மையப் பாங்கு பெருக்கவோ சுருக்கவோ முடியாது. ஆகையால், விலைவாசியை மையப் பாங்கு சிறந்த செலாவணிக் கொள்கை மூலம் கண்காணித்தல் வேண்டும். ரிசர்வ் பாங்கு புழக்கத்திலிருக்கும் செலாவணித் தொகையை வேண்டிய அளவு பெருக்கி, விலைவாசியை நிலைநாட்ட வேண்டும். இந்த வேலையை ரிசர்வ் பாங்கு எப்படிச் செய்கின்றது என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

பாங்கில் மக்கள் வைத்திருக்கும் நடைமுறை டெபாசிட்டைப் பாங்குச் செலாவணி என்று சொல்லலாம். மேல்நாடுகளில் செலாவணித் தாள், நாணயங்கள் போன்ற சட்டபூர்வமான பணத்தை விட, பாங்குச் செலாவணியையே மக்கள் அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். ஆனால், இந்தியாவில் நாம் பாங்குச் செலாவணியைவிடச் சட்டபூர்வமான பணத்தையே அதிகமாகப் பயன்படுத்துகின்றோம். ரிசர்வ் பாங்கு சட்ட பூர்வமான செலாவணியை வெளியிடுகின்றது. இந்த வெளியீட்டை வேண்டிய அளவு பெருக்கவோ சுருக்கவோ முடியும். பாங்குச் செலாவணி உற்பத்தியை ரிசர்வ் பாங்கு எப்படிக் கண்காணிக்க முடியும் என்பதை இங்குப் பார்க்கலாம்.

பாங்குச் செலாவணியை நடைமுறை டெபாசிட்டு மூலம் வாணிகப் பாங்குகள் உற்பத்தி செய்யலாம். வாணிகப் பாங்குகள் தம்மிடம் இருக்கும் முதலையோ, டெபாசிட்டர்களிடம் பெற்ற தொகையையோ கடனாகக் கொடுக்கலாம். முதலையும் மற்றோர் பணத்தையும் பயன்படுத்திக் கடன் கொடுக்கும்பொழுது, பாங்குகள் புதிதாகச் செலாவணியாக்கம் செய்வதில்லை. ஆனால், பாங்குகள் புதிய நடைமுறை டெபாசிட்டை ஏற்படுத்தி, அதன் மூலம் கடன் கொடுக்கும்பொழுது செலாவணியாக்கம் செய்கின்றன. வாணிகப் பாங்குகள் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியை முதல், டெபாசிட்டுத் தொகை முதலியவை மூலம் பெற்றுக்கொள்கின்றன. நடைமுறை டெபாசிட்டுத் தொகையை மக்கள் வேண்டும்பொழுது திருப்பிக் கொடுக்க வேண்டும். ஆகையால், பாங்குகள் எப்பொழுதும் ரொக்கம் வைத்துக்கொள்ள வேண்டும். ஆனால், எல்லா டெபாசிட்டர்களும் சாதாரணமாக ஒரே சமயத்தில் ரொக்கத்தை நாடமாட்டார்கள். எனவே, மொத்த டெபாசிட்டுத் தொகையில் ஒரு சதவீதத்தை மட்டும் வாணிகப் பாங்குகள் ரொக்கமாக வைத்துக்கொண்டால் போதும். அதாவது, ஒரு வாணிகப் பாங்கில் ஒரு குறிப்பிட்ட தொகை ரொக்கம் இருந்தால், அந்தப் பாங்கு அதைப்போல் பன்மடங்கு டெபாசிட்டை உற்பத்தி செய்யலாம். வர்த்தகத்தில் ஈடுபட்டிருப்போர் பாங்குகளில்

வாங்கும் கடனை உடனடியாக ரொக்கமாகப் பெற்றுக்கொள்வ தில்லை. அத்தொகையை அதே பாங்கில் நடைமுறை டெபாசிட் டாக வைத்துக்கொள்வர். வேண்டும்பொழுது செக்குகள் (Cheques) மூலம் ரொக்கத்தை வாங்கிக் கொள்ளலாம். மற்றவர் களுக்குச் செலுத்த வேண்டிய தொகையைச் செக்குகள் மூலம் செலுத்தலாம். செலாவணித் தாள்களைப் போலவே செக்குகளும் புழக்கத்தில் இருப்பதால் நாம் அவற்றைப் பணமாகக் கருதலாம். ஆகவே, பாங்குகள் நடைமுறை டெபாசிட்டுகள் மூலம் பாங்குச் செலாவணி என்ற பணத்தை உற்பத்தி செய்கின்றன. இந்தி யாவைவிடப் பாங்கு முறை நன்கு வளர்ச்சிபெற்ற மேல் நாடுகளில் செக்குகள் மிகுதியாகப் புழக்கத்தில் இருக்கின்றன. சரியான விலை வாசிக் கொள்கையைப் பின்பற்ற வேண்டுமானால், ஒரு நாட்டின் மையப் பாங்கு, பாங்குச் செலாவணியைச் சிறந்த முறையில் கண் காணிக்கவேண்டும்.

புழக்கத்திலிருக்கும் பாங்குச் செலாவணியை நடைமுறை டெபாசிட்டு மூலம் கண்காணிக்கலாம். பாங்குகள் வைத்திருக்கும் மொத்த நடைமுறை டெபாசிட்டுக்கும், ரொக்கத்திற்கும் ஒரு தொடர்பு இருக்கவேண்டும். இந்த நடைமுறை டெபாசிட்டை ரொக்கமாக மாற்றிக்கொள்வதற்கு டெபாசிட்டர்களுக்கு உரிமை உண்டு. ஆகையால், பாங்குகள் எப்பொழுதும் காப்பு நிதியில் ஒரு பகுதியை ரொக்கமாக வைத்துக்கொள்ள வேண்டும். அவ்வப்போது டெபாசிட்டர்களுடைய தேவைக்கேற்றபடி ரொக்கம் கொடுக்கப் பாங்குகள் இக்காப்பு நிதியைப் பயன்படுத்திக்கொள்ளும். காப்பு நிதியின் மற்றொரு பகுதியைப் பாங்குகள் ரிசர்வ் பாங்கில் டெபாசிட்டாக வைத்துக்கொள்ளவேண்டும். ஒவ்வொரு பாங்கும் தன்வசமிருக்கும் நடைமுறை டெபாசிட்டில் ஐந்து சதவீதத்தையும், தவணை டெபாசிட்டில் இரண்டு சதவீதத்தையும், ரிசர்வ் பாங்கில் காப்பு நிதியாக வைத்துக்கொள்ள வேண்டும். ரிசர்வ் பாங்கு, பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்ய இந்தக் காப்பு நிதியைப் பயன்படுத்திக் கொள்கின்றது. பாங்குகள் வசம் இருக்கும் மொத்தக் காப்பு நிதி மிகுதியடைந்தால், அவை அதிகமான நடை முறை டெபாசிட்டை ஏற்படுத்திக் கொள்ளலாம். டெபாசிட்டில் 20 சதவீதம் பெறுமானமுள்ள தொகை காப்பு நிதியில் இருந்தால், காப்பு நிதி மிகுதியடையும்பொழுது அதைப்போல் ஐந்து மடங்கு டெபாசிட்டைப் பெருக்கிக் கொள்ளலாம், எனவே, வாணிகப் பாங்குகளில் கடன் வாங்கும் சிலர் பாங்குகளில் ரொக்கத்தைப் பெற்றுக்கொள்ளலாம். காப்பு நிதியிலுள்ள ரொக்கம் குறைவதால் பாங்குகளின் நடைமுறை டெபாசிட்டும் குறைய வேண்டும். ஆகையால், பாங்குகள் எந்த அளவுக்கு ரொக்

கத்தை இழக்கின்றனவோ அந்த அளவுக்கு அவற்றில் டெபாசிட்டும் குறையும். ஆகையால், பாங்குகளின் காப்புநிதி மிகுதியடையும்பொழுது அதனை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டு, டெபாசிட்டைப் பெருக்கிக்கொள்ள முடியாத நிலையில் இருக்கலாம். பாங்கு முறையும், பாங்குப் பழக்கங்களும் நன்ருக வளர்ச்சி பெற்றிருக்கும் நாடுகளில் மக்கள் செக்குகளைப் பயன்படுத்துகின்றனர். இந்த நாடுகளில் மக்கள் மிகுதியான அளவில் ரொக்கத்தை நாடுவதில்லை. இந்தியாவிலும் பெரிய நகரங்களில் செக்குகளை மக்கள் புழங்குகின்றனர். ஆனல், கிராமங்களில் பெரும்பாலும் மக்கள் ரொக்கத்தையே (அதாவது செலாவணித் தாள்களையும், நாணயங்களையுமே) புழங்குகின்றனர்.

விலைவாசிகள் அடிக்கடி மாருமல் ஒரே நிலையிலிருக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதும், உற்பத்தியையும், வேலை வாய்ப்புக்களையும் பெருக்குவதும் செலாவணிக் கொள்கையின் நோக்கங்கள் என்று முன்பே குறிப்பிட்டோம். மையப் பாங்குகள் தம் செலாவணிக் கொள்கையைச் செயலாற்றப் பலவகைக் கருவிகளைக் கையாண்டு, பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்கின்றன. இக்கருவிகளுள் எவை சிறந்த பயனளிக்கும் என்று நாம் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. மையப் பாங்கின் கொள்கையும் இக்கருவிகளும் ஆங்காங்கே உள்ள சூழ்நிலைக்கும், பாங்கு முறை வளர்ச்சிக்கும் ஏற்றவாறு வெற்றியளிக்கும். இங்கிலாந்தில் மையப் பாங்கு வீதமும் (Bank rate) அமெரிக்காவில் வெளி மார்க்கட்டு நடவடிக்கையும் (Open Markret Operations) நல்ல பயனை அளிக்கின்றன. மையப் பாங்கு, பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடுசெய்ய பல கருவிகளைப் பயன்படுத்துகின்றது. அவற்றுள் சில நேர்முகமானவை; சில மறைமுகமானவை.

மையப் பாங்குகள் பயன்படுத்தும் கருவிகளுள் பாங்கு வீதம் அல்லது மையப் பாங்கு வீதம் முக்கியமானதாகும். இது ஒரு மறைமுகக் கருவியாகும். இதை ரிசர்வ் பாங்கு எப்படிப் பயன்படுத்துகின்றது என்பதைப் பார்ப்போம். சில குறிப்பிட்ட உண்டியல்களையும், பத்திரங்களையும் ரிசர்வ் பாங்கு தள்ளுபடிசெய்யத் தயாராக இருக்கின்றது. இந்த உண்டியல்களையும் பத்திரங்களையும் தகுதியுள்ள தாள்கள் அல்லது தகுதியுள்ள பத்திரங்கள் (Eligible Papers) என்று அழைப்பார்கள். இந்தத் தாள்களைத் தள்ளுபடி செய்யும் வீதத்தையும், மையப் பாங்கு வாணிகப் பாங்குகளுக்குக் கடன் கொடுக்கும்பொழுது பெறும் வட்டி வீதத்தையும் பாங்கு வீதம் என்று கூறுவார்கள். இந்தப்பாங்கு வீதத்தை ரிசர்வ் பாங்கு

உயர்த்தினுல், வாணிகப் பாங்குகள் மிகுதியான வட்டியைக் கொடுத்து ரிசர்வ் பாங்கிலிருந்து கடன்தொகை பெறவேண்டும். வாணிகப் பாங்குகள் கடன் வசதிக்கு ரிசர்வ் பாங்கின் உதவியை நாடுவது வழக்கம். ஏனெனில், மற்ற மையப் பாங்குகள்போல் ரிசர்வ் பாங்கும் இறுதியில் கடன் கொடுக்கும் பணியை ஏற்றுக் கொண்டிருக்கின்றது. ரிசர்வ் பாங்குக்கு அதிகமான வட்டியைக் கொடுக்க வேண்டிய காரணத்தால் வாணிகப் பாங்குகள் தாங்கள் கொடுக்கும் கடனுக்கும் உயர்ந்த வட்டி வீதத்தைப்பெறும். வட்டி வீதம் உயர்வதால் முன்னிலும் மக்கள் குறைந்த தொகையையே கடனுகப் பெறுவர். மக்கள் பாங்குகளிலிருந்து பெறும் கடனும், அதைத் தொடர்ந்து பாங்குகள் உற்பத்தி செய்யும் பாங்குச் செலாவணியும் அளவில் குறையும். பாங்குச் செலாவணியைப் பெருக்க வேண்டுமென்ருல், ரிசர்வ் பாங்கு, பாங்கு வீதத்தைக் குறைக்க வேண்டும். இங்கிலாந்தின் தலைமை பாங்கு இக்கருவியை (பாங்கு வீதம்) வெற்றிகரமாகப் பயன்படுத்துகின்றது.

ரிசர்வ் பாங்கு உண்மையான வாணிக உண்டியல்களை வாணிகப் பாங்குகளிடமிருந்து வாங்கலாம். அவைகளைத் தள்ளுபடியும் செய்யலாம். இந்த உண்டியல்கள் தகுதியுடைய உண்டியல்களாக இருத்தல் வேண்டும். இவை இந்தியாவில் தயார் செய்தவையாக இருக்கவேண்டும். இவை இந்தியாவில் உண்மையான வர்த்தகத்திற்கு நிதியளிப்பதற்காகத் தயார் செய்தவையாக இருக்கவேண்டும். இந்த உண்டியல்களில் இரண்டு கையெழுத்துக்களாவது இருக்கவேண்டும். இவற்றுள் ஒன்று ஒரு ஷெடியூல் பாங்கினுடையதாக இருக்கவேண்டும். இந்த உண்டியல்களை ரிசர்வ் பாங்கு பெறும் நாளிலிருந்து மூன்று மாதங்களுள் இவை தவணை முடிவு பெற்று, முதிர்ச்சியடையக்கூடியவையாக இருத்தல் வேண்டும். வாணிகப் பாங்குகள், இந்த உண்டியல்களை எவர்களிடமிருந்து பெற்றனவோ அவர்களைப் பற்றியும், அவர்கள் செய்யும் தொழிலைப் பற்றியும், ரிசர்வ் பாங்குக்கு அவ்வப்போது செய்தி கொடுக்கவேண்டும். உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தின்கீழ் வாணிகப் பாங்குகள் எப்படி ரிசர்வ் பாங்கிடமிருந்து நிதியுதவி பெற முடியும் என்பதை முன்பே பார்த்தோம்.

ரிசர்வ் பாங்கு உண்மையான விவசாய உண்டியல்களையும் பெறலாம். இவை 15 மாதத் தவணை உண்டியல்களாக இருக்கலாம். இவை விவசாயத்திற்கு நிதி பெறுவதற்காகத் தயார் செய்தவையாக இருத்தல்வேண்டும். இந்த உண்டியல்களும் இரண்டு கையெழுத்துக்களைக் கொண்டவையாக இருக்கவேண்டும். இவற்றுள் ஒன்று

ஒரு கூட்டுறவுப் பாங்கின் கையெழுத்தாகவோ ஷெடியூல் பாங்கின் கையெழுத்தாகவோ இருக்கவேண்டும். ரிசர்வ் பாங்கு இந்த உண்டியல்களைத் தள்ளுபடி செய்யலாம் அல்லது வாங்கிக் கொள்ளலாம். வாணிக உண்டியல்களைத் தவிர, அரசினர் பத்தி ரங்களை வாங்குவதற்கும், விற்பனை செய்வதற்கும் கடனுதவியை நாடுவோர் தயார் செய்யும் உண்டியல்களையும் ரிசர்வ் பாங்கு வாங் கலாம் அல்லது தள்ளுபடி செய்யலாம். இப்படிச் செய்வதால் அரசினர் பத்திரங்களுக்கு ஒரு செம்மையான மார்க்கட்டை நிறுவ லாம். பன்னாட்டு நாணய நிதியில் அங்கம் வகிக்கும் நாடுகளின் கருவூல உண்டியல்களையும் ரிசர்வ் பாங்கு தள்ளுபடி செய்யலாம். இந்த உண்டியல்களும் தள்ளுபடி செய்யும் அல்லது வாங்கும் நாளி லிருந்து மூன்று மாதங்களுள் தவணை முடிந்து முதிர்ச்சி பெறக் கூடியவையாக இருத்தல்வேண்டும். அயல் நாட்டு உண்டியல் களுக்கும் நம் நாட்டில் ஒரு மார்க்கட்டை ஏற்படுத்துவதே இப்படிச் செய்வதன் நோக்கமாகும். மேற்கூறிய உண்டியல்களை ரிசர்வ் பாங்கு விற்பனையும் செய்யலாம்.

மாநில அரசாங்கங்களுக்கும், கூட்டுறவுப் பாங்குகளுக்கும், ஷெடியூல் பாங்குகளுக்கும் ரிசர்வ் பாங்கு கடன் கொடுக்கலாம். இக்கடன் தொகைகளைக் கேட்கும்பொழுதோ, குறிப்பிட்ட தவணைக்குப் பின்போ திருப்பிக் கொடுக்கவேண்டும். பங்குகளையும், பத்திரங்களையும் கடனுக்கு அடைமானமாக ரிசர்வ் பாங்கு ஏற்றுக் கொள்ளலாம். பொன், வெள்ளி போன்ற உலோகங்களையும், அடை மானமாக ஏற்றுக்கொள்ளலாம். உண்டியல் மார்க்கட்டுத் திட்டத் தைப்பற்றி முன் அதிகாரங்களில் விவரமாகப் பார்த்தோம். ஷெடியூல் பாங்குகள் கடன் கொடுக்கும்பொழுது வெண்ணிலைக் கடன் பத்திரங்களை மக்களிடமிருந்து பெற்றுக் கொள்வதோடல்லாமல், அவர்களுடைய பொருள்கள் பற்றிய ஆவணங்களைத் (Documents of title to goods) தங்கள் (பாங்குகள்) பெயருக்கு மாற்றிக்கொள் கின்றனர். இப்படி ஆவணங்களோடு கூடிய வெண்ணிலைக் கடன் பத்திரங்களையும், உண்டியல்களையும் அடைமானமாகக்கொண்டு, ரிசர்வ் பாங்கு ஷெடியூல் பாங்குகளுக்குக் கடனுதவியளிக்கலாம். பொருள்கள்பற்றிய ஆவணங்களை அடைமானமாகக் கொள்ளாமல், பொருள்களையே ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கும் ஷெடியூல் பாங்குகள் ரிசர்வ் பாங்கிடம் கடன் பெறமுடியாது. மேலும், ஒரு வெண்ணிலைக்கடன் பத்திரத்தைப் பாங்குகள் தகுதியுள்ள தாளாகப் (Eligible Paper) பயன்படுத்தி ரிசர்வ் பாங்கிடம் கடன்பெற வேண்டுமானால், அப்பத்திரம் ஒரு சிறந்த செலாவணிக் கருவியாக இருத்தல்வேண்டும். அரசாங்கமும் ரிசர்வ் பாங்கிடம் குறுகிய கால

கடனையே பெறமுடியும். ரிசர்வ் பாங்கிடம் பெறும் கடனை அரசாங்கம் நெடுங்கால மூலதனச் செலவுக்குப் (Long-term Capital Expenditure) பயன்படுத்த முடியாது. நெருக்கடியான சமயங்களில் ரிசர்வ் பாங்கு, சட்டத்தைப் புறக்கணித்து, ஷெடியூல் பாங்குகளின் கையெழுத்து இல்லாத உண்டியல்களையும் தள்ளுபடி செய்யலாம். செம்மையான செலாவணிக் கொள்கையைப் பின்பற்றுவதே இதன் நோக்கமாகும். நெருக்கடியான சமயங்களில் ரிசர்வ் பாங்கு தனிப்பட்டோருடைய உண்டியல்களையும் தள்ளுபடி செய்யலாம்.

பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்யப் பல கருவிகள் உள என்றும், அவற்றுள் மையப் பாங்கு வீதம் அல்லது பாங்கு வீதம் ஒன்று என்றும் குறிப்பிட்டோம். இக்கருவியை ரிசர்வ் பாங்கு எப்படிப் பயன்படுத்துகின்றது என்று பார்ப்போம். 1930-ஆம் ஆண்டு ஒரு பெரிய பொருளாதார மந்தம் உலகைத் தாக்கியது. இதற்கு இந்தியாவும் இலக்காயிற்று. 1935-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்கு தோன்றியபொழுது பொருளாதார மந்தத்தின் விளைவுகளிலிருந்து நம்நாடு மீட்சியடைந்து கொண்டிருந்தது. அந்த நிலையில் பாங்குச் செலாவணியை மக்கள் மிகுதியான அளவில் நாடவில்லை. பாங்குகள் மிகுதியான அளவில் காப்பு நிதியை வைத்துக்கொண்டிருந்தன. பணமார்க்கட்டில் வேண்டிய அளவு பணம் இருந்தது. இந்த நிலையில் ரிசர்வ் பாங்கு இந்திய வாணிகப் பாங்குகளிடையே ஒரு முதன்மையான இடத்தைப் பெற முயற்சி செய்துகொண்டிருந்தது. ரிசர்வ் பாங்கு தோன்றுவதற்கு முன்பே இந்தியப் பணமார்க்கட்டில் இம்பீரியல் பாங்கு ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. முதன் முதலாக 1935-இல் ஜூலை மாதம் பாங்கு வீதத்தை $3\frac{1}{2}$ சதவீதம் என்று அறிக்கை விடுத்தது. இவ்வீதத்தை நவம்பர் மாதம் மூன்று சதவீதத்துக்குக் குறைத்தது. இந்தியப் பாங்குகள் 1935-க்கு முன்பு இம்பீரியல் பாங்குடன் தொடர்பு கொண்டிருந்தன. அவை இம்பீரியல் பாங்கிடம் அன்றாடம் தங்களுக்கு வேண்டிய கடனுதவியைப் பெற்றன. இம்பீரியல் பாங்கு பெறும் வட்டி வீதமும் மையப் பாங்கு வீதமும் ஒன்றாகவே இருந்தன. இந்த நிலையில் மையப் பாங்கு வீதம் பயனளிக்கவில்லை. அழைப்புக் கடன் மார்க்கட்டிலும் ரிசர்வ் பாங்கு பணியாற்ற முடியவில்லை. இம்பீரியல் பாங்கிடம் உள்ள நிதியனைத்தும் செலவான பின்பும், வாணிகப் பாங்குகளின் தேவை பூர்த்தியாகாமல் இருந்தால் அவை ரிசர்வ் பாங்கின் உதவியை நாடும். கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் பணமார்க்கட்டில் ரிசர்வ் பாங்கின் நிலைமையை நன்கு விளக்கும்.

(கோடி ரூபாயில்)

| | கடன் தொகை | | வாங்கிய தள்ளுபடி செய்த உண்டியல்கள் | | |
|---|---|---|---|---|---|
| | அரசாங்கங்களுக்கு | மற்றவர்களுக்கு | மொத்தம் | உள்நாட்டு உண்டியல்கள் | கருவூல உண்டியல்கள் |
| **1936** | | | | | |
| ஜனவரி மாதம் | 4·40 | ... | ... | ... | ... |
| ஏப்ரல் மாதம் | 3·50 | 0·05 | 0·01 | 0·01 | ... |
| ஜூலை மாதம் | 1·80 | ... | 0·01 | 0·01 | ... |
| அக்டோபர் மாதம் | 0·40 | ... | ... | ... | ... |
| **1937** | | | | | |
| ஜனவரி மாதம் | 0·60 | ... | ... | ... | ... |
| ஏப்ரல் மாதம் | 0·60 | 0·01 | 0·02 | 0·02 | ... |
| ஜூலை மாதம் | 1·00 | 0·02 | 0·01 | 0·01 | ... |
| அக்டோபர் மாதம் | ... | 0·01 | ... | ... | ... |
| **1938** | | | | | |
| ஜனவரி மாதம் | 2·20 | 0·01 | ... | ... | ... |
| ஏப்ரல் மாதம் | 0·40 | 0·01 | 0·18 | ... | 0·18 |
| ஜூலை மாதம் | 0·02 | 0·04 | 0·09 | ... | 0·09 |
| அக்டோபர் மாதம் | 5·80 | ... | 0·16 | ... | 0·16 |
| **1939** | | | | | |
| ஜனவரி மாதம் | 5·40 | 0·07 | 7·85 | ... | 7·85 |
| ஏப்ரல் மாதம் | 0·42 | 0·93 | 2·23 | ... | 2·23 |
| ஜூலை மாதம் | 1·80 | 0·02 | 0·10 | ... | 0·10 |
| அக்டோபர் மாதம் | 1·89 | 0.05 | 1·25 | ... | 1·25 |

ரிசர்வ் பாங்கு தோன்றிய ஆண்டிலிருந்து இரண்டாவது உலகப்போர் தொடங்கும் வரை வாணிகப் பாங்குகளுக்கு மிகுதியான அளவில் கடன் கொடுக்கவில்லை. முதன் முதலாக 1936-இல் 15 கோடி ரூபாய் கடன் கொடுத்தது. ரிசர்வ் பாங்கில் பெறும் கடனுக்கு வாணிகப் பாங்குகள் தவணை உண்டியல்களையும் அரசினர் பத்திரங்களையும் அடைமானமாகப் பயன்படுத்தின. இந்தப் பாங்குகளுக்காக ரிசர்வ் பாங்கு தள்ளுபடி செய்த

தொகையும், மிகக் குறைவானதே. எனவே, ரிசர்வ் பாங்கு செம்மையான முறையில் மையப் பாங்கின் பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. பணமார்க்கட்டைச் சிறந்த முறையில் கண்காணிக்க முடியவில்லை.

இந்த நிலையில், 1938-ஆம் ஆண்டு ஜூன் மாதம் தென் இந்தியாவில் ஒரு பெரிய பாங்கு நெருக்கடி (Banking Crisis) ஏற்பட்டது. திருவாங்கூர் நாஷனல் அண்டு கொய்லோன் பாங்கு திவாலாயிற்று. டெபாசிட்டர்கள் இந்தப் பாங்கிலிருந்து தங்கள் பணத்தைப்பெற முடியவில்லை. இந்த நிகழ்ச்சி பாங்குகளிடம் டெபாசிட்டர்கள் கொண்டிருந்த நம்பிக்கையை ஓரளவு பாதித்தது. அவர்களிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. திருவாங்கூர் பாங்கு ரிசர்வ் பாங்கின் உதவியை நாடியபொழுது, ரிசர்வ் பாங்கு உதவியளிக்கத் தயாராக இருந்தது. ஆனால், பாங்கின் நிலைமையையும், அது செய்யும் தொழிலைப் பற்றிய முழு விவரங்களையும், ரிசர்வ் பாங்கு அறிய வேண்டுமென்று வற்புறுத்தியது. ஆனால், ரிசாவ் பாங்கு தங்கள் கணக்குகளை மேற்பார்வையிட, திருவாங்கூர் பாங்கு இசையாததால், ரிசர்வ் பாங்கின் உதவியைப்பெற முடியவில்லை. ஆனால், தென்னிந்தியாவில் உள்ள மற்ற எல்லாப் பாங்குகளும் ரிசர்வ் பாங்கின் உதவியைப் பெற்றன. அப்பாங்குகளுக்கு ஒதுக்கிய கடன் தொகையை ரிசர்வ் பாங்கு அதிகப்படுத்தியது.

இதுபோன்ற நெருக்கடி எதிர்காலத்தில் ஏற்படுவதைத் தடுக்க ரிசர்வ் பாங்கு மற்ற ஷெடியூல் பாங்குகளுக்கு ஓர் அறிக்கை விடுத்தது. அவை, ரிசர்வ் பாங்குடன் எத்தகைய தொடர்பு கொள்ளவேண்டுமென்பதை இவ்வறிக்கையில் விளக்கியது. மீள் தள்ளுபடி செய்யக்கூடிய சொத்துக்களை (Rediscountable Assets) வாணிகப் பாங்குகள் வைத்துக் கொள்ளவேண்டும். அவை வைத்திருக்கும் சொத்துக்கள் ரொக்க நிலையுடையவையாக இருப்ப தோடல்லாமல் தள்ளுபடிக்கும், மீள் தள்ளுபடிக்கும் ஏற்றவையாகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய சொத்துக்களை வாணிகப் பாங்குகள் வைத்துக்கொள்ளவில்லை என்பதையும், அதன் காரணமாக ரிசர்வ் பாங்கின் உதவியை மிகுதியான அளவில் பெறமுடியவில்லை என்ப தையும் நெருக்கடி நன்கு எடுத்துக்காட்டியது. பாங்குகள் வேண்டிய அளவு தகுதியுள்ள தாள்களை (Eligible Papers) கொள்ள வேண்டும். அவை, உள்நாட்டு வர்த்தக உண்டியல்களைப் பெறவேண்டுமென்ற கருத்தை ரிசர்வ் பாங்கு தனது சுற்றறிக்கையில் விளக்கியது. ஆனால், இந்தியாவில் இத்தகைய உண்டியல்கள் கிடையா. ஹூண்டி என்ற சுதேச உண்டியல்களைச் சுதேச பாங்குதார்கள் பயன்படுத்துகின்றனர். இந்த உண்டியல்களை ரிசர்வ் பாங்கு சிறந்த

உண்டியல்களாக மதிக்கவில்லை. ரிசர்வ் பாங்கு இந்தியாவின் நிலைமையைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் பாங்கு முறை பற்றிய கோட்பாடுகளைத் தனது சுற்றறிக்கையில் விளக்கியது. 1938-இல் இந்தியாவில் பத்திர மார்க்கட்டும் நல்ல வளர்ச்சி யடையவில்லை. ரிசர்வ் பாங்கு இந்தியப் பணமார்க்கட்டில் அமைப்புள்ள பகுதியைக் (Organised Sector) கூட நன்கு கண்காணிக்க முடியாத நிலையில் இருந்ததில் வியப்பொன்றும் இல்லை. நெருக்கடியான அல்லது அவசரமான சமயங்களில் ரிசர்வ் பாங்கு சட்டத்தை மீறி நடக்கலாம். ஆகையால், 1938-ஆம் ஆண்டு ஏற்பட்ட நெருக்கடியைச் சமாளிக்க ரிசர்வ் பாங்குக்குப் போதிய அதிகாரம் இருந்தது. எனினும், ரிசர்வ் பாங்கு அந்த அதிகாரத்தைப் பயன்படுத்திப் பாங்குகளுக்கு நெருக்கடியான நிலையில் உதவிபுரியத் தவறியது. எனவே, ரிசர்வ் பாங்குடன் வாணிகப் பாங்குகள் நல்லுறவையும் சிறந்த தொடர்பையும் கொள்ளவில்லை. 1949-ஆம் ஆண்டுச் சட்டத்தை இயற்றியபின், ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளை மேற்பார்வையிடவேண்டிய அதிகாரத்தைப் பெற்றது.

1939-இல் இரண்டாவது உலகப்போர் தொடங்கியது. சாதா ரணமாக, போர்க் காலத்தில் மையப் பாங்குகள் சிறந்த செலாவணிக் கொள்கையைப் (Monetary Policy) பின்பற்றுவது இயல்பு. ஆனால், இந்தியாவில் ரிசர்வ் பாங்கு விறுவிறுப்பான கொள்கை யைப் பின்பற்றவில்லை. போர்க் காலத்தில் ரிசர்வ் பாங்கின் வீதம் மூன்று சதவீதமாக இருந்தது. அரசாங்கத்தின் செலவு அதிகரித் ததால் பணவீக்கம் ஏற்பட்டது. இப்பணவீக்கத்தை அரசினர் நிதிக் கொள்கை (Fiscal Policy), விலைக்கட்டுப்பாடு, பண்டங்கள் பங்கீடு முதலியவை மூலம் கட்டுப்பாடு செய்தனர். ஆனால், ரிசர்வ் பாங்கு விறுவிறுப்பான செலாவணிக் கொள்கையைப் பின்பற்றவில்லை.

போர் மூண்டதும் விலைகள் உயர்ந்தன. போரின் விளைவுகளை முன் அதிகாரங்களில் விளக்கினோம். மிகுதியாகப் பணம் தேவைப் பட்டது. அழைப்புக் கடன் வீதம் $2\frac{1}{2}$ சதவீதத்திற்கு உயர்ந்தது. 1940-க்குப் பிறகு உற்பத்தியும் விலைகளும் மேலும் உயர்ந்தன. ஆனால், பணமார்க்கட்டில் மிகுதியான பணம் தேவைப்படவில்லை. ஷெடியூல் பாங்குகள் தங்களிடம் இருந்த மிகுதியான நிதியை அரசினர் பத்திரங்களில் முதலீடு செய்தன. புழக்கத்தில் இருந்த செலாவணியும், பாங்குச் செலாவணியும் மிகுதியடைந்தன. அரசினரின் செலாவணிக் கொள்கையை ரிசர்வ் பாங்கு செய லாற்றியது, ரிசர்வ் பாங்கின் வீதம் மூன்று சதவீதமாக இருந்தது. அரசினர் பத்திரங்களின் விலை தாழ்வடைந்ததால் (அதாவது வட்டி

வீதம் உயர்ந்ததால்) அரசாங்கம் பத்திரங்களுக்குக் குறைந்தபட்ச விலையை ஏற்படுத்தி, அதை நிலைநாட்ட முயற்சி செய்தது. அரசாங்கத்தின் செலவு மிகுதியடைந்தது. இங்கிலாந்திற்கு ஏற்றுமதி செய்த பொருள்களுக்காக இந்தியா ஸ்டெர்லிங் பத்திரங்களைப் பெற்றது. நமது ஸ்டெர்லிங் நிதி வளர்ந்தது.

ஸ்டெர்லிங் நிதி அல்லது ஸ்டெர்லிங் பத்திரங்களைக் காப்பு நிதிக்காகக் கொண்டு ரிசர்வ் பாங்கு செலாவணித் தாள்களை வெளியிட்டது. இந்திய அரசாங்கம் கொடுக்கவேண்டிய பழைய ஸ்டெர்லிங் கடனுக்கு அரசினர் ஸ்டெர்லிங் நிதியைப் பயன் படுத்திக் கொண்டது. ரூபாய்ப் பத்திரங்களை ரிசர்வ் பாங்குக்குக் கொடுத்து, இந்திய அரசாங்கம் அதன் ஸ்டெர்லிங் பத்திரங்களைப் பெற்றது. ஆனால், ரிசர்வ் பாங்குச் சட்டப்படி வெளியீட்டுத்துறை ஒரு குறிப்பிட்ட தொகைக்குமேல் ரூபாய்ப் பத்திரங்களைச் செலா வணி வெளியீட்டுக்குக் காப்பு நிதியாகக் கொள்ளமுடியாது. இச் சட்டத்தை 1941-இல் அரசினர் மாற்றியமைத்தனர். எனவே, 1941-க்குப் பின் செலாவணித் தாள் வெளியீடு வரையறையின்றி மிகுதியடைந்தது. விலைகள் உயர்ந்தன. விலைவாசிக் கட்டுப் பாடு, உணவுப் பொருள் கட்டுப்பாடு முதலியவை மூலம் பணவீக் கத்தின் கொடுமையைக் குறைக்க முயன்றது. நாட்டின் பொரு ளாதார நிலைமையைக் கட்டுப்பாடு செய்ய, செலாவணிக் கொள் கையைவிட நிதிக்கொள்கையையே அரசினர் நம்பியிருந்தனர். போர்க்காலத்தில் ஒரு சிறந்த மையப் பாங்கு ஆற்றவேண்டிய பணிகளை ரிசர்வ் பாங்கு ஆற்றவில்லை. போர் நடந்து கொண் டிருக்கும்பொழுது மைய அரசாங்கமும், இராச்சிய அரசாங்கங் களும் ரிசர்வ் பாங்கில் அவ்வப்பொழுது கடன் வாங்கிக்கொண்டன. ஷெடியூல் பாங்குகளும், கூட்டுறவுப் பாங்குகளும் அதன் உதவியை அதிகமாக நாடவில்லை. அவை, ரிசர்வ் பாங்கில் பெற்ற மிக அதிக மான தொகை 73 கோடி ரூபாயாகும். இத்தொகையை 1944-ஆம் ஆண்டு ஷெடியூல் பாங்குகளும், கூட்டுறவுப் பாங்குகளும் கடனாகப் பெற்றன. ஷெடியூல் பாங்குகளுக்கு வாணிக உண்டியல்களை ரிசர்வ் பாங்கு தள்ளுபடி செய்யாதது குறிப்பிடத்தக்கது. ஆனால், ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளின் கருவூல உண்டியல்களை அவ்வப்போது ஒழுங்காகத் தள்ளுபடி செய்தது. இதிலிருந்து இரண் டாவது போர்க்காலத்தில் முதன் முதலாக ரிசர்வ் பாங்குக்கும், வாணிகப் பாங்குகளுக்குமிடையே ஒரு தொடர்பு வளர்ந்தது என்பதை நாம் அறியலாம். மையப் பாங்குகளுக்கும், வாணிகப் பாங்குகளுக்கும் ஒரு நல்ல தொடர்பு இருந்தாலன்றிச் செம்மை யான பாங்கு முறை நாட்டில் வளராது. இரண்டாவது போருக்கு முன் இத்தகைய தொடர்பு வளரவில்லை.

மையப் பாங்குக்கும் வாணிகப் பாங்குக்குமிடையே வளர ஆரம்பித்த தொடர்பு, போர் முடிந்ததும் நீடித்த வலிமைபெற்றது. இந்தியப் பாங்குகளிடையே ரிசர்வ் பாங்கு ஒரு தலைமையான இடத்தைக் கைப்பற்றியது.

போருக்குப்பின் நம் நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டது. போர்க் காலத்தில் அரசினர் நிதிக்கொள்கை மூலம் பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்ய முயற்சி செய்தனர் என்று குறிப்பிட்டோம். பண்டங்களின் தேவை மிகுதியடைந்தது. ஆனால், உற்பத்தி வேண்டிய அளவு அதிகரிக்கவில்லை. இந்தியாவிலிருந்து பாக்கிஸ்தான் பிரிந்தபின் உணவு, கச்சாப்பொருள்கள் வேண்டிய அளவு கிடைக்கவில்லை. குறியீட்டெண்கள் (Index Numbers) உயர்ந்தன. பணமார்க்கட்டில் மிகுதியான பணம் இருந்தது. 1945-இல் இந்தியப் பாங்குகளின் மொத்த நடைமுறை, தவணைப் பொறுப்புக்கள் 1,100·84 கோடி ரூபாய் மதிப்புள்ளவை. போர் முடிந்ததும் நாட்டில் ஒரு பொருளாதார மந்தம் ஏற்படலாம் என்று அஞ்சி, சிலர் வட்டி வீதத்தைக் குறைக்க வேண்டுமென்று கருதினர். ஆனால், ரிசர்வ் பாங்கு இக்கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. நிறுவனம் செய்ததிலிருந்து ரிசர்வ் பாங்கு இரண்டாவது உலகப் போர் முடியும் வரை எவ்வித நிதிக் கொள்கையையும் பின்பற்றவில்லை. போருக்குப்பின் முதல் முதலாக ஒரு செலாவணிக் கொள்கையை உருவாக்க முயற்சி செய்தது.

பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்வதற்குக்கூட வட்டி வீதத்தை உயர்த்துவது சரியல்ல என்று ரிசர்வ் பாங்கு கருதியது. பின்தங்கிய நாடாகிய இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்திற்காக அரசாங்கம் மிகுதியான பணத்தைச் செலவு செய்கின்றது. இச்சூழ்நிலையில் நிதிக் கொள்கை மூலமாகவும், நேரடி நடவடிக்கை மூலமாகவும், பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்யவேண்டும் என்ற கருத்தை ரிசர்வ் பாங்கு வெளியிட்டது. ஆனால், போருக்குப்பின் வாணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கிடம் அடிக்கடி கடன் உதவி பெற்றன. எனவே, ஷெடியூல் பாங்குகள் ரிசர்வ் பாங்குடன் நெருங்கிய தொடர்பு கொண்டன. ஷெடியூல் பாங்குகள் ரிசர்வ் பாங்கிடம் மிகுதியான தொகையைப் கடனாகப் பெறுவிடினும், அவை அடிக்கடி ரிசர்வ் பாங்கின் உதவியை நாடின. 1947-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அவை 2·39 கோடி ரூபாய்க் கடனைப் பெற்றன. 1946-ஆம் ஆண்டு வட இந்தியாவில் குறிப்பாக வங்காளத்தில் வகுப்புவாதக் கலவரங்கள் தோன்றின. மக்கள் தங்கள் டெபாசிட்டுத் தொகைகளைப் பாங்குகளிலிருந்து திருப்பினர். அதையொட்டி ஒரு பாங்கு நெருக்கடி ஏற்பட்டது. வாணிகப்

பாங்குகள் ரிசர்வ் பாங்கின் உதவியை நாடின. ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளுக்கு வேண்டிய உதவியை அளித்து நெருக்கடியை வெற்றிகரமாகச் சமாளித்தது. நெருக்கடியில் முக்கிய பாங்குகளுக்குப் பாங்கு வீதத்தைவிடக் குறைந்த வீதத்தில் ரிசர்வ் பாங்கு கடன் கொடுத்து உதவியது. வாணிகப் பாங்குகளுக்கு ரிசர்வ் பாங்கு அளித்த உதவியும் சலுகைகளும் இந்திய மையப் பாங்குக்கும், ஷெடியூல் பாங்குகளுக்குமிடையே ஒரு நல்லுறவை வளர்த்தது. போருக்குப்பின், ஷெடியூல் பாங்குகள் வாணிக உண்டியல்களைத் தள்ளுபடிக்காக ரிசர்வ் பாங்குக்கு எடுத்துச் செல்லவில்லை. ஆனால், அவ்வப்போது, நிதி வேண்டிய பொழு தெல்லாம் ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளின் கருவூல உண்டி யல்களைத் தள்ளுபடி செய்தது. போர்க்காலத்தில் தொடங்கிய இப்பழக்கம் போருக்குப் பின்பும் நீட்டித்து, முன்னிலும் மிகுதியான உண்டியல்களை ரிசர்வ் பாங்கு இப்பொழுது தள்ளுபடி செய்தது. இப்பழக்கம் செம்மையான பாங்கு முறை வளர்ப்பதற்கு ஏதுவாக இருந்தது.

பாக்கிஸ்தான் இந்தியாவிலிருந்து பிரிந்த ஆண்டிலிருந்து இந்திய வாணிகப் பாங்குகள் மேலும் மேலும் ரிசர்வ் பாங்கின் உதவியை நாடின. நெருக்கடியான சமயங்களில் சட்டத்தைப் புறக்கணித்து, வாணிகப் பாங்குகளுக்கு ரிசர்வ் பாங்கு உதவி புரியலாமென்று முன்பு குறிப்பிட்டோம். முதன் முதலாக ரிசர்வ் பாங்கு இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தியது. வாணிக உண்டி யல்களைத் தள்ளுபடி செய்தது. 1948-இல் விலைவாசிகள் உயர்ந்தன. விலைவாசிக் கட்டுப்பாடுகளை நீக்கியதுதான் இதற்கு முக்கியமான காரணமாகும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை இந்தி யாவுக்கு மாறான அல்லது பாதகமான நிலையிலிருந்தது. 1949-இல் ரூபாயின் புறமதிப்பைக் குறைக்க வேண்டியதாயிற்று. விலை வாசிக் கட்டுப்பாட்டையும், பங்கீட்டையும் மீண்டும் அமுலில் கொண்டு வந்தனர். பணவீக்கத்தைக் குறைக்க மற்ற நடவடிக்கை களையும் அரசினர் எடுத்தனர். விலைகள் ஓரளவு குறைந்தன. 1948-49-இல் பணமார்க்கட்டில் பற்றுக்குறை ஏற்பட்டது. 1948-ஆம் ஆண்டின் இறுதியில் அழைப்புக் கடன் வீதம் 3/4%-ஆக உயர்ந்தது. 1949-இல் இந்த வீதம் $1\frac{1}{4}$%-ஆக உயர்ந்தது. வாணிகப் பாங்குகளின் மொத்த ரொக்கம் குறைந்தது. 1949-50-இல் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. நாளடைவில் பணமார்க்கட்டின் நிலைமை யிலும் முன்னேற்றம் ஏற்பட்டது. அழைப்புக் கடன் வீதம் தாழ் வடைந்தது. ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளுக்குக் கடன் கொடுத்துதவியதைத் தவிர பணவீக்கத்தைக் குறைக்க எந்த

நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆனால், பணமார்க்கட்டில் ஒரு முதன்மையான இடத்தை எளிதில் கைப்பற்றியது. கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் இதை விளக்கும்.

(கோடி ரூபாயில்)

| | கடன் தொகை | | தள்ளுபடி செய்த/வாங்கிய உண்டியல்கள் | | |
|---|---|---|---|---|---|
| | அரசாங்கங்களுக்கு | மற்றையோருக்கு | மொத்தம் | உள்நாட்டு உண்டியல்கள் | கருவூல உண்டியல்கள் |
| **1948** | | | | | |
| ஜூலை மாதம் | 0·10 | 0·12 | 2·19 | 0·15 | 2·04 |
| அக்டோபர் மாதம் | 0·95 | 4·41 | 2·27 | 0·41 | 1·86 |
| **1949** | | | | | |
| ஜனவரி மாதம் | 5·90 | 11·25 | 9·09 | 0·49 | 8·60 |
| ஏப்ரல் மாதம் | 2·40 | 6.05 | 8·14 | 0·47 | 7·67 |
| ஜூலை மாதம் | 11·06 | 8·16 | 3·88 | 0·67 | 3·22 |
| அக்டோபர் மாதம் | 0·58 | 9·31 | 1·85 | 0·08 | 1·77 |
| **1950** | | | | | |
| ஜனவரி மாதம் | 4·70 | 7·94 | 5·36 | 0·53 | 4·83 |
| ஏப்ரல் மாதம் | 5·28 | 10·55 | 3·07 | 1·31 | 1·76 |
| ஜூலை மாதம் | 1·92 | 8·74 | 2·44 | 1·09 | 1·36 |

1949-இலிருந்து ரிசர்வ் பாங்கு கருவூல உண்டியல்களைத் தள்ளுபடி செய்தது. 1950-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 1·31 கோடி ரூபாய் மதிப்புள்ள உண்டியல்களை ரிசர்வ் பாங்கு தள்ளுபடி செய்தது. முன்னிலும் அதிகமான கருவூல உண்டியல்களையும் தள்ளுபடி செய்தது. மைய, இராச்சிய அரசாங்கங்களுக்குக் கொடுத்த கடன் தொகையும் மிகுதியடைந்தது.

1950-ஆம் ஆண்டு கொரியாவில் போர் ஆரம்பித்தது. இப்போர் மூன்றாவது உலகப் போராக மாறலாம் என்று அஞ்சி, உலக நாடுகள் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தன. இதன் பலனாகப் பண்டங்களின் தேவையும், உற்பத்தியும்

அதிகரித்தது. கொரியப் போரைத் தொடர்ந்து ஒரு பொருளாதார வீக்கம் ஏற்பட்டது. 1950-இல் பருவ மழை தவறியதால் உணவு உற்பத்தி குன்றியது. பணவீக்கத்தின் கொடுமை மிகுதியடைந்தது. 1950-ஆம் ஆண்டின் இறுதியில் இந்திய அரசாங்கம் அமெரிக்காவிலிருந்து கோதுமை இறக்குமதி செய்ய ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது. மொத்த விலைவாசிக் குறியீட்டெண் (Index of whole-sale Prices) 433·2 ஆக உயர்ந்தது. பாங்குச் செலாவணி மிகுதியான அளவு புழக்கத்தில் இருந்தது. இந்த நிலையில் விலைவாசிகளைக் குறைக்க அரசாங்கமும், ரிசர்வ் பாங்கும் நடவடிக்கைகள் எடுக்கவேண்டியதாயிற்று.

மிகுதியான பாங்குச் செலாவணிப் புழக்கத்திலிருந்தது. அதைக் கட்டுப்பாடு செய்ய வேண்டும். 1951-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இங்கிலாந்தில் மையப் பாங்கு வீதத்தை இரண்டரை சதவீதத்திலிருந்து இரண்டு சதவீதத்திற்குக் குறைத்தனர். ரிசர்வ் பாங்கு நீண்டகாலம் பாங்கு வீதத்தை மூன்று சதவீதத்தில் வைத்திருந்தது. இவ்வீதத்தை 1951-இல் $3\frac{1}{2}$ சதவீதத்திற்கு உயர்த்தினர். உற்பத்திற்கும், உண்மையான வர்த்தகத்திற்கும் எந்தவிதத் தீமையும் விளையாதபடி பணவீக்கத்தையும், பாங்குச் செலாவணியையும் ரிசர்வ் பாங்கு கட்டுப்பாடு செய்யவேண்டும். பாங்குச் செலாவணியின் அளவு ரிசர்வ் பாங்கின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கவேண்டும். அதாவது, பாங்குச் செலாவணியை ரிசர்வ் பாங்கு நாட்டின் தேவைக்கு ஏற்றமுறையில் பெருக்கவோ, சுருக்கவோ வேண்டும்.

1951-இல் மையப் பாங்கு வீதத்தை உயர்த்தியவுடன் அதைத் தொடர்ந்து மற்ற நடவடிக்கைகளையும் ரிசர்வ் பாங்கு எடுத்தது. இந்தியாவில் வர்த்தகமும், உற்பத்தியும் ஆண்டின் சில பருவங்களில் விறுவிறுப்பாக இருக்கும். இப்பருவங்களில் மிகுதியான பணமும், பாங்குச் செலாவணியும் தேவைப்படும். வேண்டிய செலாவணியைப் பணமார்க்கட்டுக்குக் கொடுப்பதற்காக ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளிடம் இருக்கும் அரசினர் பத்திரங்களை வாங்குவது வழக்கம். மிகுதியான பணம் தேவைப்படாத காலத்தில் இப்பத்திரங்களை வாணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கிடமிருந்து திருப்பிப் பெற்றுக்கொள்ளும். பாங்கு வீதத்தை உயர்த்தியவுடன் ரிசர்வ் பாங்கு இப்பழக்கத்தையும் தற்காலிகமாக கைவிட்டது. ஓர் உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்யையும் ரிசர்வ் பாங்கு இந்தியாவில் புகுத்தியது. இவ்வுண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தைப்பற்றிய விவரங்களை முன் அதிகாரத்தில் பார்த்தோம். இந்த விதமாக ரிசர்வ் பாங்கு ஒரு புதிய பணக்கொள்கையை உருவாக்கியது.

ரிசர்வ் பாங்கு தனது புதிய கொள்கையை விறுவிறுப்பான காலத்தில் செயலாற்றியதால் அதற்கு உடனடியான பலன் ஏற்பட்டது. இம்பீரியல் பாங்கு தனது அழைப்புக்கடன் வீதத்தை உயர்த்தியது. அயல்நாட்டின் பாங்குகளும் மற்றப் பாங்குகளும் இதைத் தொடர்ந்து தங்கள் வீதங்களை உயர்த்தின. பாங்குச் செலாவணி முன்போல் மிகுதியாகவும், எளிய வீதத்திலும் கிடைக்கவில்லை. எனவே, வாணிகப் பாங்குகள் தாராளமாகக் கடன் கொடுக்க முடியவில்லை. பாங்குகள் பண்டங்களைப் பதுக்கி வைத்து (Hoarding) ஊகவாணிகம் செய்வோர்க்குக் கடனுதவியளிக்க மறுத்தன. கடன் கொடுப்பதில் தாராளமாக இருக்க வேண்டாம் என்று வாணிகப் பாங்குகளுக்கு ஓர் அறிக்கை விடுத்தது.

இந்தியப் பணமார்க்கட்டில் நீண்டகாலம் வேண்டிய பணம் இருந்தது. எளிமையான நிலைமை (Easy condition) நிலவியது. ஆனால், இந்த நிலை 1951-இல் மாறியது. பணமார்க்கட்டில் பற்றுக் குறை ஏற்பட்டது. வாணிகப் பாங்குகள் இந்த நிலையில் ரிசர்வ் பாங்கின் உதவியை எதிர்பார்த்தன. ரிசர்வ் பாங்கின் நிலைமையும், மற்றப் பாங்குகளுடன் கொண்டுள்ள அதன் தொடர்பும் வலிமை பெற்றன. 1952-இல் விலைவாசிகள் தாழ்வடைந்தன. 1952-இல் தொழில் விறுவிறுப்பாக இருக்கும் பருவம் முடிந்து, மந்தமான காலம் தொடங்கியதும் பாங்குகள் கொடுத்த கடன் தொகைகளைத் திரும்பப்பெற்றன. மிகுதியான தொகையை ரொக்கமாக வைத்துக் கொள்வதால் பாங்குகள் வட்டியை இழக்க நேரிடும். ஆகையால், அவை தங்களிடமிருந்த ரொக்கத்தை அரசினர் பத்திரங்களில் முதலீடு செய்தன. 1952-இல் உலகெங்கும் விலைகள் தாழ் வடைந்தன. இந்தியாவில் விலைவாசிகள் படிப்படியாகச் சிறந்த முறையில் தாழ்வடைந்தன. ரிசர்வ் பாங்கு தனது செலாவணிக் கொள்கையை வெற்றிகரமாகச் செயலாற்றியது. பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்யும்பொழுது உண்மையான வர்த்தகமும் உற் பத்தியும் பாதிக்கப்படாதவாறு ரிசர்வ் பாங்கு தனது செலாவணிக் கொள்கையைச் செயலாற்றியது.

கூட்டுறவுப் பாங்குகளும் ஷெடியூல் பாங்குகளும் மேலும் மேலும் மிகுதியான தொகையை ரிசர்வ் பாங்கிடம் பெற்றன. வாணிக உண்டியல்களையும் வெண்ணிலைக் கடன் பத்திரங்களையும் ஏற்றுக்கொண்டு ரிசர்வ் பாங்கு கடன் கொடுத்தது. இதுபோன்ற கடன் தொகையை ரிசர்வ் பாங்கு இதுவரை கொடுத்ததில்லை. வாணிக உண்டியல்களைத் தவிர, கருவூல உண்டியல்களையும் ரிசர்வ் பாங்கு தள்ளுபடி செய்தது. இந்தியப் பாங்குகள் ரிசர்வ் பாங்கின் கொள்கையை நன்றாகப் புரிந்து கொண்டு தங்கள் கொள்கை

களையும் அதற்கு ஏற்றபடி மாற்றியமைத்துக் கொண்டன. இந்த விதமாக ரிசர்வ் பாங்கு செம்மையான முறையில் வளர்ச்சி பெற்றது.

கொரியப் போரின் விளைவாகத் தொடங்கிய பொருளாதார வீக்கத்திற்கு இலக்காகிய இந்தியப் பொருளாதாரம் அதிலிருந்து 1953-ஆம் ஆண்டு மீட்சியடைந்தது. பாங்குத் தொழிலும் பழைய நிலையை அடைந்தது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை இந்தியாவுக்குச் சாதகமாக மாறியது. அரசாங்கத்திற்குக் கடன்கொடுத்தல், பாங்குகளுக்குக் கடன் கொடுத்தல், உண்டியல்களைத் தள்ளுபடி செய்தல் முதலிய ரிசர்வ் பாங்கின் அலுவல்கள் பழையபடியே சாதாரணமாக நடைபெற்றன.

(கோடி ரூபாயில்)

| | கடன் தொகை | | தள்ளுபடி செய்த/வாங்கிய உண்டியல்கள் | | |
|---|---|---|---|---|---|
| | அரசாங்கங்களுக்கு | மற்றையோருக்கு | மொத்தம் | உள்நாட்டு உண்டியல்கள் | கருவூல உண்டியல்கள் |
| **1950** | | | | | |
| ஜூலை மாதம் | 1.92 | 8·74 | 2·45 | 1·09 | 1·36 |
| அக்டோபர் மாதம் | 0·45 | 3·49 | 1·07 | —— | 1·07 |
| **1951** | | | | | |
| ஜனவரி மாதம் | 4·70 | 4·32 | 4·56 | 0·50 | 4·06 |
| ஏப்ரல் மாதம் | 4·88 | 14·82 | 11·83 | 0·37 | 11·46 |
| ஜூலை மாதம் | 5·79 | 8·50 | 2·71 | 0·37 | 2·34 |
| அக்டோபா மாதம் | 5·04 | 6·69 | 7·14 | 0·72 | 6·42 |
| **1952** | | | | | |
| ஜனவரி மாதம் | 8·06 | 31·35 | 6·82 | 1·40 | 5·42 |
| ஏப்ரல் மாதம் | 1·15 | 49·23 | 12·66 | 1·92 | 10·74 |
| ஜூலை மாதம் | 3·46 | 13·40 | 1·46 | 0·89 | 0·56 |
| அக்டோபர் மாதம் | 3·42 | 9·23 | 1·93 | 0·39 | 1·54 |

1953-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 22·32 கோடி ரூபாய்த் தொகையை ரிசர்வ் பாங்கு கூட்டுறவு பாங்குகளுக்கும், ஷெடியூல்

பாங்குகளுக்கும் கடனைக் கொடுத்தது. 1952-ஆம் ஆண்டிலும் 1953-இல் மிகுதியான உண்டியல்களை ரிசர்வ் பாங்கு தள்ளுபடி செய்தது.

1954-ஆம் ஆண்டு நாட்டின் உற்பத்தி பெருகியது. இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகமும் பெருகியது. ஆனால், விலைவாசி குறைய ஆரம்பித்தது. வாணிகப் பாங்குகளின் டெபாசிட்டுகளும், பத்திர முதலீடும், கடன் தொகையும் பெருகின. பாங்குச் செலாவணியின் அளவும் மிகுதியடைந்தது. வாணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கின் உதவியைக் கணிசமான அளவில் பெற்றன. உண்டியல் மார்க்கட்டுத் திட்டம் நல்ல முறையில் இயங்கி வந்தது. கூட்டுறவுப் பாங்குகளுக்குக் கடன் கொடுப்பதில் ரிசர்வ் பாங்கு சில சலுகைகள் காட்டி வந்தது. அறுவடையான விவசாயப் பண்டங்களை விற்பனை செய்வதற்குக் குறைந்த வட்டியில் கடன் கொடுத்தது. 1935-ஆம் ஆண்டு தோன்றிய ரிசர்வ் பாங்கு வெகுநாட்களாக, நல்ல வளர்ச்சி பெற்ற மையப் பாங்கு வெற்றிகரமாகச் செய்யும் பணிகளைச் செய்ய முடியாத நிலையில் இருந்தது. ஆனால், இரண்டாவது உலகப் போருக்குப்பின் இந்த நிலைமை மாறியது. வாணிகப் பாங்குகள் படிப் படியாக ரிசர்வ் பாங்கின் உதவியை நாட ஆரம்பித்தன. அவை அத்துடன் கொண்ட தொடர்பும் வலிமைபெற்றது.

1955-ஆம் ஆண்டு விலைகள் மீண்டும் உயர ஆரம்பித்தன. பலர் உணவுப் பொருள்களைப் பதுக்கவும், ஊகவாணிகம் செய்யவும் ஆரம்பித்தனர். ரிசர்வ் பாங்கு பொதுவான கட்டுப்பாடுகளையும், தேர்ந்தெடுத்த பாங்குச் செலாவணிக் கட்டுப்பாடுகளையும் பயன் படுத்த ஆரம்பித்தது. 1956-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றியமைத்தனர். இதன்படி ரிசர்வ் பாங்கின் அதிகாரம் மிகுதியடைந்தது. பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்வதற்குப் புதிய அதிகாரத்தை ரிசர்வ் பாங்கு பயன் படுத்தியது. பொருளாதார முன்னேற்றத்திற்குச் செலாவணிப் பெருக்கம் இன்றியமையாதது. செலாவணிப் பெருக்கத்தால் பொருளாதாரத்திற்கு எவ்விதத் தீங்கும் ஏற்படாமலிருக்கவேண்டும். ஆகையால், கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட செலாவணிப் பெருக்கமே (Controlled monetary expansion) ரிசர்வ் பாங்கின் இலட்சியமாயிற்று. இந்தச் செலாவணிக் கொள்கையைப் பின்பற்றுவதில் பாங்கு வீதம் சிறந்த பயன் அளிக்கும். உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தின்கீழ்க் கொடுக்கும் கடனுக்கு ரிசர்வ் பாங்கு மூன்று சத வீதம் வட்டி வசூல் செய்தது. 1956-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் மூன்றேகால் சதவீதமாகவும், அதே ஆண்டு நவம்பர் மாதம் இதை மூன்றரைச் சதவீதமாகவும் உயர்த்தினர். அரசினர் வசூல் செய்யும்

ஸ்டாம்பு வரியையும் அரைச் சதவீதம் உயர்த்தியதால் உண்டியல் மார்க்கட்டுத் திட்டத்தின்கீழ்க் கொடுக்கும் கடனுக்கு நான்கு சதவீதம் வட்டி வசூல் செய்தனர்.

1957-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்கு மையப் பாங்கு வீதத்தை 3½ சதவீதத்திலிருந்து 4 சதவீதத்திற்கு உயர்த்தியது. அரசினர் பத்திரங்களையும் தவணை உண்டியல்களையும் பயன்படுத்தி ஷெடியூல் பாங்குகள் பெறும் கடனுக்கு நான்கு சதவீதம் வட்டி கொடுத்தன. இதைக் கொடுக்கும் வீதம் (Lending rate) என்றும், அரசாங்கத்தின் கருவூல உண்டியல்கள் வீதத்தை வாங்கும்வீதம் (Borrowing rate) என்றும் அழைத்தனர். கொடுக்கும் வீதம் நான்காகவும், வாங்கும் வீதம் மூன்றரையாகவும் இருந்தது. இந்த இரண்டு வீதங்களுக்கும் இடையே வேறுபாடு இருத்தல் கூடாதென்று கருதி, ரிசர்வ் பாங்கு மையப் பாங்கு வீதத்தை 1957-இல் உயர்த்தியது. மேலும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைச் செயலாற்றுவதற்கு வேண்டிய அயல்நாட்டுச் செலாவணி கிடைக்காததால், இந்தியா உலகப் பாங்கின் உதவியைக் கோரியது. இந்தியாவுக்கு வந்த உலகப் பாங்கு அலுவலர்கள் நம்நாட்டில் பணவீக்கம் இருந்ததென்று அஞ்சினர். எனவே, அரசினர் பணவீக்கத்தைக் குறைக்க வேண்டுமென்று பாங்கு வீதத்தை உயர்த்தினர். மேலும், 1957-58-ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் சில மறைமுக வரிகளை உயர்த்தினர். இதன் காரணமாக விலைகள் உயரலாம் என்று அஞ்சி, ரிசர்வ் பாங்கு மையப் பாங்கு வீதத்தை உயர்த்தியது.

மேலும், 1957-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்கு, வாணிகப் பாங்குகளைத் தாராளமாகக் கடன் கொடுக்க வேண்டாமென்று கேட்டுக்கொண்டது.

## 10. ரிசர்வ் பாங்கு—பணிகள்

முன் அதிகாரத்தில் ரிசர்வ் பாங்கின் தோற்றம், அலுவல்கள், பாங்குச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாகிய பாங்கு வீதத்தை அது எவ்வாறு பயன்படுத்துகின்றது என்பனவற்றைக் கவனித்தோம். இவ்வதிகாரத்தில் அது, மற்றச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளை எவ்வாறு பயன்படுத்துகின்றது என்பதை விவரமாகக் காண்போம்.

இக்கருவிகளுள் வாணிகப் பாங்குகளின் காப்புநிதியின் (Cash Reserve) விகிதத்தை மாற்றுவது ஒன்றாகும். இந்தியாவைப் போல் மற்றப் பல நாடுகளிலும் சட்டப்படி வாணிகப் பாங்குகள் மையப் பாங்குகளில் தம் டெபாசிட்டுத் தொகையில் ஒரு குறிப்பிட்ட பகுதியைக் காப்பு நிதியாக வைத்துக் கொள்ளவேண்டும். முதன் முதலில் இக்காப்பு நிதி பற்றிய சட்டத்தை வாணிகப் பாங்குகளின் ரொக்க நிலையைக் காப்பாற்றுவதற்காகவே இயற்றினர். ஆனால், இதைப் பிறகு பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்வதற்கு ஒரு வசதியாகப் பயன்படுத்திக் கொண்டனர். 1935-ஆம் ஆண்டு அமெரிக்காவில் இக்கருவியைப் பயன்படுத்தினர்.

ரிசர்வ் பாங்கு சில தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளையும் (Selective Credit Control) பயன்படுத்தலாம். இது மையப்பாங்கு வீதத்தைப்போலல்லாமல் ஒரு நேர்முகமான கருவியாகும் (Direct Control). மறைமுகக் கருவிகள் மொத்தப் பாங்குச் செலாவணியின் அளவைக் கட்டுப்பாடு செய்ய உதவுகின்றன. ஆனால், இந்த நேர்முகக் கருவி பாங்குச் செலாவணியின் ரகத்தைக் (Quality) கட்டுப்பாடு செய்ய உதவுகின்றது. மையப் பாங்குகள் சில சந்தர்ப்பங்களில் மறைமுகக் கருவிகளாகிய பாங்கு வீதம், வெளிமார்க்கட்டு நடவடிக்கை (Open Market Operations) முதலியவற்றைப் பயன்படுத்த முடியாத நிலையில் இருக்கலாம்.

அது போன்ற சமயங்களில் தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப் பாட்டுக் கருவி சிறந்த பயனை அளிக்கும். பாங்குகள் உண்மையான வர்த்தகத்திற்கு வேண்டிய கடன் உதவியை அளிக்கவேண்டும். ஆனால், சில பண்டங்களில் ஊக வாணிகத்தைத் தடை செய்ய வேண்டும். மறைமுகக் கட்டுப்பாட்டுக் கருவிகளைப் பயன் படுத்தினால், உண்மையாக வர்த்தகத்திற்குக் கடன் உதவி பெறு வோர் அதற்காக அதிகச் செலவு செய்ய வேண்டும். இது போன்ற சமயங்களில் உண்மையான தொழிலையும், ஊகவாணிகத்திற் குட்பட்ட தொழிலையும் பாகுபாடு செய்து ஊகவாணிகத்தை ஒழிப்பதற்காகத் தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப்பாடுகளைப் பயன்படுத்தலாம். விலைவாசியை நிலைப்படுத்துவதற்கு ஊகவாணி கத்தைக் கட்டுப்பாடு செய்தல் இன்றியமையாதது. பத்திர மார்க்கட்டில் பத்திரங்களை வாங்குபவர் வாணிகப் பாங்குகளிடம் கடன் பெறுவது வழக்கம். 1934-இல் பத்திரங்களின் மார்க்கட்டு விலைக்குச் சமமான தொகையைக் கடனாகக் கொடுக்காமல், அமெரிக்கப் பாங்குகள் அத்தொகையில் ஒரு சதவீதத்தை ஒதுக்கி எஞ்சிய பகுதிக்குச் சமமான தொகையையே கடனாகக் கொடுத் தனர். இப்படி ஒரு சதவீதத்தை அல்லது ஒரு பகுதியை ஒதுக்கும் (Margin Requirements) பழக்கம் தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப்பாட்டு முறையைச் சார்ந்ததாகும். அரசினர் திட்டத்தைச் செயலாற்றும்பொழுது பணவீக்கம் ஏற்படும். மேலும், பற்றாக்குறை நிதியாக்கமும், அரசாங்கத்தின் நிதிக் கொள்கையும் நிலைமையை மோசமாக்கும். விலைவாசி உயர்வைக் கட்டுப்பாடு செய்ய, திட்ட காலத்தில் ஒரு சிறந்த செலாவணி கொள்கையைப் பின்பற்ற வேண்டும். அதாவது கட்டுப்பாட்டுக்குட்பட்ட செலாவணிப் பெருக்கமே நாட்டின் இலட்சியமாகும். ஆகவே, பாங்குகள் கடன் கொடுக்கும்பொழுது அடைமானப் பொருளின் மதிப்பில் ஒரு பகுதியை ஒதுக்கி, எஞ்சிய தொகையையே கடனாகக் கொடுக்கும் பழக்கத்தை நம்நாட்டில் பின்பற்ற வேண்டியதாயிற்று.

1956-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ரிசர்வ் பாங்கு நாட்டின் வாணிகப் பாங்குகளுக்கு ஓர் அறிக்கை விடுத்தது. அதன்படி நெல், அரிசி போன்ற பண்டங்களை அடைமானமாகப் பெற்றுக் கொண்டு, கொடுக்கும் கடன் தொகையைக் குறைக்க வேண்டு மென்று ரிசர்வ் பாங்கு வற்புறுத்தியது. 1957-ஆம் ஆண்டு ஜூன் மாதம் ரிசர்வ் பாங்கு மீண்டும் ஓர் அறிக்கை விடுத்தது. நெல், அரிசி போன்ற பண்டங்களை அடைமானமாகக் கொண்டு 50,000 ரூபாய்க்கு மேல் தனிப்பட்ட நபருக்குக் கடன் கொடுக்கவேண்டா மென்றும், இக்கடனுக்கு "ஒதுக்குப் பகுதி" யுடன் (Margin requirements) மேலும் பத்து சதவீதம் சேர்த்துக்கொள்ள வேண்டு

மென்றும் இவ்வறிக்கையில் கண்டிருந்தது. அதாவது, உணவுத் தானிய அடைமானக் கடனில் "ஒதுக்கும் பகுதி" 40 சதவீதம் இருத்தல் வேண்டும். மேலும், சென்ற ஆண்டில் உணவுத் தானியங்களை அடைமானமாகக் கொண்டு, கொடுத்த தொகையில் 125 சதவீதத்திற்கு மேற்படாத தொகையையே கடனாகக் கொடுக்கலாம் என்றும் அவ்வறிக்கையில் கண்டிருந்தது. கோதுமை, சர்க்கரை, பருத்தித் துணி முதலியவைகளும் இக்கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டன. உச்சவரம்பு மூலம் சில பண்டங்களை அடைமானமாகக் கொண்டு, கொடுக்கும் கடன் தொகையைக் கட்டுப்பாடு செய்தனர். தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப்பாடுகளைப் பயன்படுத்திய தோடல்லாமல் ரிசர்வ் பாங்கு அவ்வப்போது நாட்டின் செலாவணிக் கொள்கையை நிறைவேற்றுவதில் வாணிகப் பாங்குகளின் ஒத்துழைப்பைக் கோரியது. 1958-இல் ரிசர்வ் பாங்கு கோதுமையை அடைமானமாகக் கொண்டு, கொடுக்கும் கடன் தொகை சென்ற ஆண்டு கொடுத்த தொகையில் $66\frac{2}{3}$ சதவீதத்திற்கு உட்பட்டிருக்க வேண்டுமென்று வற்புறுத்தியது. மற்ற உணவுத்தானியங்களுக்கும் உச்சவரம்பு இருந்தது. 1959-இல் தேங்காயும் எண்ணெய் வித்துக்களும் இக்கட்டுப்பாடுகளுக்குட்பட்டன. 1960-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சணல் அடைமானக் கடனும் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப்பட்டது.

பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்வதில் தேர்ந்தெடுத்த கட்டுப்பாடுகள் இந்தியாவில் சிறப்பாய்ப் பயனளிக்கவில்லை. மறைமுகக் கட்டுப்பாட்டுக் கருவிகளைப் பயன்படுத்திப் பொதுவாகப் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்தாலன்றி விலையுயர்வு தாழ்வடையாது. ஆனால், ஊகவாணிகத்தைத் தடை செய்வதில் இவை ஓரளவு பயனளித்தன.

வாணிகப் பாங்குகள் மையப் பாங்கில் வைத்திருக்கும் காப்பு நிதியின் அளவை மாற்றி அதன் மூலம் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்யலாமென்று குறிப்பிட்டோம். பாங்குகள் பாங்குச் செலாவணியை உற்பத்தி செய்யலாம். அவை தம்மிடமுள்ள ரொக்கத்திற்கு ஏற்ற அளவில் பாங்குச் செலாவணியை உற்பத்தி செய்யலாம். மிகுதியான ரொக்கம் இருப்பின் மிகுதியான அளவிலும், குறைந்த அளவு ரொக்கம் இருப்பின் குறைந்த அளவிலும் இந்தப் பாங்குச் செலாவணியை உற்பத்தி செய்யலாம். வாணிகப் பாங்குகள் தம் ரொக்கத்தில் ஒரு பெரும் பகுதியை மையப் பாங்கில் டெபாசிட்டாக வைத்துக்கொள்ளும் என்பதைப்பற்றி முன் அதிகாரங்களில் குறிப்பிட்டோம். இந்த ரொக்கத் தொகையை மையப் பாங்கு குறைத்தோ அதிகப்படுத்தியோ மொத்தப் பாங்குச் செலா

வணியைக் கட்டுப்பாடு செய்யலாம். இந்தச் செலாவணிக் கட்டுப் பாட்டு முறையை முதன் முதலில் அமெரிக்காவில் பயன்படுத்தினர்.

இந்தியாவில் இந்தச் செலாவணிக் கட்டுப்பாட்டு முறை சிறந்த பயனை அளிக்கும் என்பது பலர் கருத்து. நமது செலாவணிக் கொள்கையின் குறிக்கோளாகிய "கட்டுப்பாட்டுக்குட்பட்ட செலாவணிப் பெருக்கத்தை" ஏற்படுத்த இக்கருவியைப் பயன்படுத் தலாம். இதை உணர்ந்து 1956-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றும்பொழுது, வாணிகப் பாங்குகளின் ரொக்க விகி தத்தை (Cash Reserve), அதாவது ரிசர்வ் பாங்கின் டெபாசிட்டில் வைத்துக்கொள்ள வேண்டிய விகிதத்தை, மாற்றியமைக்கும் அதி காரத்தை ரிசர்வ் பாங்குக்கு அளித்தனர். 1956-ஆம் ஆண்டுச் சட்டத்தை இயற்றியபின், ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகள் வைத்துக்கொள்ள வேண்டிய காப்பு நிதியை அதிகப்படுத்தலாம். அதாவது, நடைமுறை டெபாசிட்டில் வைத்துக்கொள்ள வேண்டிய காப்பு நிதியை, ஐந்திலிருந்து 20 சதவீதம் வரையிலும், தவணை டெபாசிட்டில் வைத்துக்கொள்ள வேண்டிய காப்பு நிதியை இரண்டி லிருந்து எட்டு சதவீதம் வரையிலும் உயர்த்தலாம். மேலும், ஒரு குறிப்பிட்ட தேதியிலிருந்து வாணிகப் பாங்குகள் பெறும் டெபாசிட்டுத் தொகையில் நூறு சதவீதம் வரை காப்பு நிதியை வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளை வற்புறுத்தலாம்.

1956-ஆம் ஆண்டுச் சட்டம் கொடுத்த இப்புதிய அதிகாரத்தை ரிசர்வ் பாங்கு 1960-இல் பயன்படுத்தியது. 1960-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 11-ஆம் தேதிக்குப்பின் வாணிகப் பாங்குகள் பெறும் டெபாசிட்டுத் தொகையில் 25 சதவீதம் மதிப்புள்ள தொகையைக் காப்பு நிதியில் அவை வைத்துக்கொள்ள வேண்டும். சட்டப்படி வாணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கில் வைத்துக்கொள்ள வேண்டிய தொகைக்கு மேல் இந்த 25 சதவீதத்தை உபரியாக வைத்துக்கொள்ளவேண்டும். இந்த உபரிக் காப்பு நிதியை ரிசர்வ் பாங்கு மே மாதம் ஐம்பது சதவீதமாக உயர்த்தியது. மேலும், பங்குகளை அடைமானமாகக் கொண்டு, கொடுக்கும் கடன் தொகையில் "ஒதுக்கும் பகுதியை" (Margin Requirements) ஐம்பது சதவீதமாக உயர்த்தினர். வாணிகப் பாங்குகள் டெபாசிட்டர்களிடம் பல்வேறு டெபாசிட்டுக்களைப் பெறுகின்றன. அவை பெறும் மொத்த டெபாசிட்டுத் தொகைக்குக் கொடுக்கும் சராசரி வட்டிவீதத்தை ரிசர்வ் பாங்கு அவைகளிடம் பெறும் உபரி டெபாசிட்டுத் தொகைக்குக் கொடுத்தது. பிறகு இந்த வட்டி வீதத்தை ½ சதவீதம் உயர்த்தியது. (ஆனால், இந்த வீதம் 4½ சதவீதத்திற்கு மேற்படாமல் இருத்தல் வேண்டும்).

1960-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ரிசர்வ் பாங்கு பண வீக்கத்தின் கொடுமையைத் தடைசெய்ய மேலும் சில நடவடிக் கைகளை எடுத்தது. அந்த நடவடிக்கைகளைப் பற்றி ரிசர்வ் பாங்கு அறிக்கை விடுத்தவுடன் பங்குகளின் விலை ஓரளவு குறைந்தது. ஒவ்வொரு வாணிகப் பாங்கும் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் ரிசர்வ் பாங்கில் கடன் வாங்க முடியாது. வாணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கில் வைத்திருக்கும் ரொக்கக் காப்புநிதியில் அரைப்பாகத்திற்குச் சமமான தொகையையே கடனுகப்பெற முடியும். ஒரு பாங்கு தனக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகைக்குமேல் ரிசர்வ் பாங்கிடம் கடனுக உதவி பெற்ருல், அப்படிப் பெறும் உதவி ஒதுக்கப்பட்ட தொகைக்கு மேல் 200 சதவீதத்திற்கு மேற்படாமல் இருப்பின், அதற்கு மையப் பாங்கு வீதத்திற்கு மேல் ஒரு சதவீதம் மிகுதியான அபராத வட்டியை ரிசர்வ் பாங்கு வசூல் செய்யும். ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை யையே கடனுகப்பெறும் பாங்குகள், பாங்கு வீதத்தை மட்டும் கொடுக்கலாம். இருநூறு சதவீதத்திற்கு மேல் கடன் வாங்கும் பாங்குகள் பாங்கு வீதத்திற்கு மேல் இரண்டு சதவீதம் அதிகமான வட்டியைக் கொடுக்கவேண்டும்.

1960-ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்கு எடுத்த நடவடிக்கை களையும் அதன் சாதனைகளையும் இதுவரை விளக்கினேம். அதே ஆண்டு ரிசர்வ் பாங்கின் கவர்னர் திரு. எச். வி. ஆர். ஐயங்கார் அவர்கள் சென்னையில் ஒரு கூட்டத்தில் பாங்கின் செலாவணிக் கொள்கையை விளக்கினர். ரூபாயின் புறமதிப்பு தாழ்வடையாமல் இருப்பதற்கு அயல் நாடுகளிலிருந்து நாம் பெற்ற கடனுதவியே காரணமென்று திரு. ஐயங்கார் அவர்கள் கூறினர். விலைவாசி நாட்டில் உள்ள பொருள் உற்பத்திக்கும், செலாவணிப் பெருக்கத் திற்கும் ஏற்றமுறையில் மாறுபாடடையும். உற்பத்திப் பெருக் கத்தைவிட, செலாவணிப் பெருக்கம் மிகுதியடைந்தால் விலைகள் உயரும். செலாவணிப் பெருக்கத்தைவிட உற்பத்திப் பெருக்கம் மிகுதியடைந்தால் விலைகள் இறங்கும். நாட்டின் வருமானத்தில் சுமார் ஐம்பது சதவீதம் விவசாய உற்பத்தியைச் சார்ந்தது. எனவே, மொத்த உற்பத்தியும், விலைவாசியும் நாட்டின் பருவமழை, அறுவடை முதலியனவற்றைப் பொறுத்திருக்கும். அரசினர் நிதிக் கொள்கையும், பற்ருக்குறை நிதியாக்கமும், பணவீக்கத்திற்கு முக்கியமான காரணங்களாகுமென்று அவர் விளக்கினர். ஆனல், பொருளாதாரத் துறையில் பின் தங்கிய நாடாகிய இந்தியாவில் திட்டங்களை வெற்றிகரமாகச் செயலாற்றப் பற்ருக்குறை நிதியாக்கம் இன்றியமையாதது. பற்ருக்குறை நிதியாக்கம் தயாரிக்கும்பொழுது விலைவாசிகளின் போக்கை நன்ருக உற்று நோக்கி, அவை மேலும்

உயராமல் இருக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். ரிசர்வ் பாங்கும் அரசாங்கமும் சிறந்த முறையில் ஒத்துழைக்கின்றன. பணமார்க்கட்டில் அவ்வப்போது ஏற்படும் தேவைக்கு வேண்டிய பணம் அளிப்பதே ரிசர்வ் பாங்கின் பொறுப்பாகும். எனினும், நாட்டில் வேண்டிய அளவுக்கு மேல் சற்று மிகுதியான தொகை இருக்கின்றது என்பதைத் திரு. ஐயங்கார் ஏற்றுக்கொண்டார். ஆயினும், நாட்டில் ஒரு கொடிய பணவீக்கம் ஏற்பட்டுவிட்டது என்று கருதுவது தவறு என்றும், பணவீக்கம் இந்தியாவில் ஒரு சிறப்பான பிரச்சினை அல்ல என்றும், மற்ற நாடுகளிலும் விலைகள் உயர்ந்திருக்கின்றன என்றும் அவர் எடுத்துரைத்தார்.

ஆனால், இரண்டாவது திட்டகாலத்தில் விலைகள் உயர்ந்ததால், மக்கள் அன்றாட வாழ்க்கைக்கு வேண்டிய முக்கியமான பண்டங்களை எளிதில் பெறமுடியவில்லை. விலைகள் மேலும் உயராமல் இருக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். ரிசர்வ் பாங்கு பணவீக்கத்தை ஒழிப்பதில் முழு வெற்றி காணமுடியாது. ஏனெனில், அரசினர் நிதிக்கொள்கையையும் இதே நோக்கத்துடன் அமைத்துக் கொண்டாலன்றி விலைகள் தாழ்வடையா. அவ்வப்போது சிறந்த நடவடிக்கைகளை எடுத்து, ரிசர்வ் பாங்கு ஒரு மையப் பாங்கு செய்ய வேண்டிய அனைத்தையும் சிறந்த முறையில் செய்து வருகின்றது என்று திரு. ஐயங்கார் அவர்கள் குறிப்பிட்டார்.

பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்ய ரிசர்வ் பாங்கு பயன்படுத்தும் பல கருவிகளை இதுவரை பரிசீலனை செய்தோம். இவைகளுள் வெளிமார்க்கட்டு நடவடிக்கை (Open Market Operations) ஒன்றாகும். இக்கருவியை ரிசர்வ் பாங்கு எவ்வாறு பயன்படுத்துகின்றது என்பதை இங்குக் காண்போம். கருவூல உண்டியல்கள், அரசினர் பத்திரங்கள், பொன் முதலியவைகளை ஒரு மையப் பாங்கு வாங்கும்பொழுதும், விற்கும்பொழுதும் வாணிகப் பாங்குகளின் ரொக்கக் காப்பு நிதியின் அளவு (அதாவது, அவை மையப் பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டுத் தொகை) மாறும். ரொக்கக் காப்பு நிதி மாறும்பொழுது, வாணிகப் பாங்குகள் கொடுக்கும் கடன் தொகையும் அதற்குத் தகுந்தாற்போல் மாற வேண்டும். வாணிகப் பாங்குகள் தம் டெபாசிட்டுத் தொகையில் ஒரு சதவீதத்தை மையப் பாங்கில் ரொக்கமாக வைத்துக்கொள்ள வேண்டும். மையப் பாங்கு உண்டியல்கள், பத்திரங்கள் முதலியவற்றை வாங்கும்பொழுது அவற்றைக் கொடுப்பவர்களுக்குச் செக்குகள் மூலம் பணம் செலுத்துகின்றது. இந்தச் செக்குகளை அவர்கள் வாணிகப் பாங்குகளிடம் கொடுப்பதால், வாணிகப்

பாங்குகள் மையப் பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டுத் தொகை மிகுதியடையும். உண்டியல்களை மையப் பாங்குக்கு விற்பனை செய்வோரின் டெபாசிட்டுத் தொகை வாணிகப் பாங்குகளில் மிகுதியடையும். வாணிகப் பாங்குகளின் ரொக்கக் காப்புநிதி அதிகரிப்பதால், அவை முன்னிலும் மிகுதியான தொகையைக் கடனாகக் கொடுக்கலாம். மையப் பாங்கு உண்டியல்களையும் பத்திரங்களையும் விற்பனை செய்தால், வாணிகப் பாங்குகளின் ரொக்கக் காப்பு நிதி குறையும். அவை கொடுக்கும் கடன் தொகையும் குறையவேண்டும். மையப் பாங்கு இப்படி வாணிகப் பாங்குகளின் காப்புநிதியை மாற்றுவதை வெளிமார்க்கட்டு நடவடிக்கை என்று கூறலாம்.

ஒரு மையப் பாங்கு பல நோக்கங்களுடன் வெளிமார்க்கட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம். மையப் பாங்கு வீதத்தை மாற்றும் பொழுது எதிர்பார்த்த பலனைப் பெற, மையப் பாங்கு வெளிமார்க்கட்டு நடவடிக்கையையும் மேற்கொள்ளவேண்டும். பணமார்க்கட்டை ஒழுங்குபடுத்துவதற்கும், அரசாங்கம் மிகுதியான தொகையைச் செலவு செய்யும்பொழுது அதைச் சரிக்கட்டுவதற்கும், பாங்குச் செலாவணியைக் கண்காணிப்பதற்கும் மையப் பாங்கு இக்கருவியைப் பயன்படுத்தலாம்.

ஒரு மையப் பாங்கு வெற்றிகரமாக வெளி மார்க்கட்டு நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டுமானால், அதற்குத் தேவையான சாதனங்களை, அதாவது பத்திரங்களையும் உண்டியல்களையும், ஏராளமான அளவில் வைத்திருக்க வேண்டும். பணமார்க்கட்டு நல்ல அமைப்புடன் இருந்தால் வெளிமார்க்கட்டுக் கொள்கை நல்ல பயனளிக்கும். மேலும், மையப் பாங்கு வைத்திருக்கும் உண்டியல்களும், பத்திரங்களும் சிறந்த ரகத்தைச் சேர்ந்தவையாக இருக்க வேண்டும். ரிசர்வ் பாங்கு ஏராளமான பத்திரங்களையும் உண்டியல்களையும் கொண்டிருக்கின்றது. ஆனால், 1951-ஆம் ஆண்டு வரை ரிசர்வ் பாங்கு ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் பத்திரங்களை வைத்துக்கொள்ள முடியாது. மேலும், ஒரே ஆண்டில் தவணை முடிந்து முதிர்வுபெறும் உண்டியல்களை ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் வைத்துக்கொள்ள முடியாது. எனவே, 1951-ஆம் ஆண்டுக்கு முன் வெளிமார்க்கட்டு நடவடிக்கையை ரிசர்வ் பாங்கு தாராளமாகப் பயன்படுத்த முடியாத நிலையில் இருந்தது. ஆனால், நடைமுறையில் ரிசர்வ் பாங்கு செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளை 1951-க்குமுன் பயன்படுத்தவில்லை. 1951-இல் ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றியமைத்தனர். அதன் அதிகாரமும், சாதனங்களும் மிகுதியடைந்தன. ரிசர்வ் பாங்கு வைத்திருக்கும் முதல், காப்பு நிதி, அரசாங்கங்களின் டெபாசிட்டுத்

தொகை, வாணிகப் பாங்குகளின் டெபாசிட்டுத் தொகை முதலியவைகளை வெளிமார்க்கட்டு நடவடிக்கைக்குப் பயன்படுத்தலாம். வெளிமார்க்கட்டு-நடவடிக்கைக்கு வேண்டிய தொகை ரிசர்வ் பாங்கு வசம் இருக்கின்றது. மேலும், செலாவணித் தாள்களை வெளியிடுவது ரிசர்வ் பாங்கின் தனி உரிமையாகும்.

•

மையப் பாங்கின் வெளிமார்க்கட்டுக் கொள்கை வெற்றிகரமாக இருக்கவேண்டுமானால், அதற்குச் சிறந்த அமைப்புள்ள மார்க்கட்டு வேண்டும். இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் மையப் பாங்குகள் சிறந்த முறையில் பணியாற்றுகின்றன. ஏனெனில், அங்குள்ள மார்க்கட்டுகள் சிறந்த அமைப்பைக் கொண்டிருக்கின்றன. இந்தியாவில் உள்ள மார்க்கட்டுகளில் பம்பாய் மார்க்கட்டு தலைமையான இடம் பெற்றிருக்கின்றது. கல்கத்தா மார்க்கட்டு அதற்கு அடுத்த படியானது. மற்ற மார்க்கட்டுகள் முழு வளர்ச்சி பெற்றவையல்ல. இந்த நிலையில் ரிசர்வ் பாங்கு மிகுதியான அளவில் பத்திரங்களையும், உண்டியல்களையும் வாங்கினாலோ, விற்பனை செய்தாலோ அதன் காரணமாகப் பணமார்க்கட்டின் அமைதி கெடும். மற்ற நாடுகளைப்போலல்லாமல் பத்திரங்களை ரிசர்வ் பாங்கும், ஒரு சில பெரிய பாங்குகளுமே கணிசமான அளவில் கொண்டிருக்கின்றன. நாட்டில் பெரிய பாங்குகள் தம் தலைமை அலுவலகங்களை முக்கியமான நகரங்களில், குறிப்பாகப் பம்பாயில் கொண்டிருப்பதாலும், ரிசர்வ் பாங்குடன் அவை நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதாலும், வெளி மார்க்கட்டு நடவடிக்கையை ரிசர்வ் பாங்கு எளிய முறையில் மேற்கொள்ள முடியும். ஆனால், எல்லாப் பாங்குகளும் கணிசமான அளவில் பத்திரங்களை வைத்துக்கொள்ளாததால், வெளி மார்க்கட்டுக் கொள்கை நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் எதிர்பார்த்த பலனை அளிக்காது.

இந்தியாவில் கிளைப் பாங்குமுறை (Branch Banking) நன்கு வளர்ச்சி பெறவேண்டும். தனித்தனியாக ஆங்காங்குப் பணியாற்றும் பாங்குகளை மற்றப் பெரிய பாங்குகளுடன் இணைத்தல் நலமாகும். நாட்டில் எல்லாப் பாங்குகளும் ரிசர்வ் பாங்குடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால் பணமார்க்கட்டின் அமைப்புள்ள பகுதியுடன் ரிசர்வ் பாங்கு சிறந்த தொடர்பைக் கொள்ளமுடியும். வெளிமார்க்கட்டுக் கொள்கையை ரிசர்வ் பாங்கு வெற்றிகரமாகச் செயலாற்றலாம். பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதி எவ்வாறு ரிசர்வ் பாங்குடன் தொடர்பற்ற நிலையில் இருக்கின்றது என்பதை முன் அதிகாரங்களில் பார்த்தோம்.

இந்தியாவில் ரிசர்வ் பாங்கு வெளிமார்க்கட்டு நடவடிக்கையை இரண்டு முக்கியமான காரணங்களுக்குப் பயன்படுத்துகின்றது. (1) மையப் பாங்கு வீதம் எதிர்பார்த்த பயனைக் கொடுக்கவேண்டு மென்று வெளி மார்க்கட்டு நடவடிக்கையை ஒரு துணைக்கருவியாகப் பயன்படுத்துகின்றது. (2) அவ்வப்போது பணமார்க்கட்டிற்கு வேண்டிய ரொக்கத்தைக் கொடுப்பதற்காகவும் இக்கருவியை ரிசர்வ் பாங்கு பயன்படுத்துகின்றது.

ரிசர்வ் பாங்கு தோன்றிய காலத்தில் பணமார்க்கட்டில் எளிமையான நிலை (Easy condition) நிலவியது. அதாவது, தேவைக்கு வேண்டிய பணம் அவ்வப்போது கிடைத்தது. உலோக மார்க்கட்டிலும் (Bullion Market) பங்கு மாற்று நிலையங்களிலும், தொழில் விறுவிறுப்பாக நடைபெற்றதால் மிகுதியான பணம் தேவைப்பட்டது. அழைப்புக் கடன் மார்க்கட்டில் வட்டி வீதம் உயர்ந்தது. ரிசர்வ் பாங்கின் பத்திர முதலீடு மிகுதியடைந்தது. பணமார்க்கட்டும் வேண்டிய தொகையைப் பெற்றது. விறுவிறுப் பான காலம் முடிந்தபின் மந்தகாலத்தில் சிறப்பீட்டுப் பத்திரங்களின் விலை (Gilt-edged securities) தாழ்வடைந்தது. ஆனால், இப்பத்தி ரங்களின் விலையை உயர்த்த ரிசர்வ் பாங்கு நடவடிக்கைகள் எதுவும் எடுக்கவில்லை. இரண்டாவது உலகப் போருக்குமுன் ரிசர்வ் பாங்கு வெளிமார்க்கட்டு நடவடிக்கை மூலம், அவ்வப்போது பணமார்க்கட்டிற்கு வேண்டிய பணத்தைக் கொடுத்தது. அரசினர் பத்திரங்களின் விலையையும் நிலைநாட்டியது.

இரண்டாவது போர் தொடங்கியபின், பணமார்க்கட்டில் எளிமையான நிலைமை இருந்ததால், ரிசர்வ் பாங்கு வெளிமார்க் கட்டுக் கொள்கை மூலம் பணமார்க்கட்டுக்குப் பணம் அளிக்க வேண்டிய நிலை ஏற்படவில்லை. ஆனால், அரசாங்கப் பத்திரங்களின் விலையை நிலைநாட்ட வேண்டியதாயிற்று. இந்தியா விடுதலை யடைந்தபின்பும் இதே நிலைமை இருந்தது. நாட்டுப் பிரிவினை, அரசியல் பிரச்சினைகள், வகுப்புவாதக் கலவரங்கள் முதலியவை மக்கள் நம்பிக்கையையும், பத்திரங்களின் விலையையும் பாதிக்காமல் இருக்கத் தேவையான ஏற்பாடுகளை ரிசர்வ் பாங்கு செய்தது. அவ் வப்போது போதிய அளவுப் பத்திர முதலீடு செய்தது.

1951-இல் கொரியாவில் போர் ஆரம்பித்ததென்றும், அதன் விளைவாகப் பணவீக்கமும் விலையுயர்வும் ஏற்பட்டதென்றும் குறிப் பிட்டோம். அதே ஆண்டு மையப் பாங்கு வீதத்தை மூன்றிலிருந்து மூன்றரை சதவீதத்துக்கு உயர்த்தினர். சாதாரணமாகப் பண மார்க்கட்டில் மிகுதியான பணம் தேவைப்பட்டால், ரிசர்வ் பாங்கு

வெளிமார்க்கட்டுக் கொள்கை மூலம் வேண்டிய பணத்தைக் கொடுப்பது வழக்கம். ஆனால், 1951-இல் ரிசர்வ் பாங்கு இவ்வாறு செய்யவில்லை. தொழில் விறுவிறுப்பாக இருக்கும் காலங்களில், ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளின் விருப்பத்தையொட்டிப் பத்தி ரங்களை அவைகளிடம் வாங்கிக்கொள்ளத் தயாராக இல்லை. ஆனால், பத்திரங்களை அடைமானமாகக்கொண்டு, ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளுக்குக் கடன் கொடுக்கத் தயாராக இருந்தது. பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்து, பணவீக்கத்தைக் குறைக்கும் நோக்கத்துடன் பாங்கு வீதம், வெளிமார்க்கட்டு நடவடிக்கை என்ற இரு கருவிகளையும் ரிசர்வ் பாங்கு பயன் படுத்தியது. இதன் விளைவாகப் பத்திரங்களின் விலை மார்க்கட்டில் தாழ்வடைந்தது.

வெளிமார்க்கட்டுக் கொள்கை மூலம் பணமார்க்கட்டுக்கு அவ் வப்போது வேண்டிய தொகையைக் கொடுப்பதும், பணமார்க்கட்டில் இருக்கும் மிகுதியான பணத்தை மீட்பதும் இந்தியாவில் வழக்கமாக இருந்தது. ஆனால், 1951-இல் ஏற்பட்ட பணவீக் கத்தைக் குறைக்க வேண்டியிருந்தது. எனவே, வாணிகப் பாங்கு களின் பத்திரங்களை ரிசர்வ் பாங்கு வாங்க மறுத்தது. அதாவது, வெளிமார்க்கட்டுக் கொள்கையைப் பாங்கு வீதத்துடன் ஒரு துணைக் கருவியாக ரிசர்வ் பாங்கு பயன்படுத்தியது. முதன் முதலாக ரிசர்வ் பாங்கு வெளிமார்க்கட்டு நடவடிக்கையைப் பாங்குச் செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவியாக 1951-இல் பயன்படுத் தியது. எதிர்காலத்தில் இந்தியாவில் பத்திர மார்க்கட்டு மேலும் வளர்ச்சி பெறும். ரிசர்வ் பாங்கு வெளிமார்க்கட்டுக் கொள்கையை வெற்றிகரமாகப் பயன்படுத்தலாம்.

இதுவரை ரிசர்வ் பாங்கு செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளை எவ்வாறு பயன்படுத்துகின்றது என்பதைப் பார்த் தோம். ரிசர்வ் பாங்கு சட்டப்படி மற்ற வாணிகப் பாங்குகளை மேற்பார்வையிடலாம். வாணிகப் பாங்குகளின் புத்தகங்களையும், கணக்குகளையும், அவ்வப்போது தணிக்கை செய்யலாம். இரண்டாவது உலகப்போர் தொடங்கியபின் வாணிகப் பாங்கு களின் எண்ணிக்கையும் கிளைகளும் விரைவில் மிகுதியடைந்தன. பல புதிய பாங்குகள் தோன்றின. இவற்றுள் பல பாங்குகள் வேண்டிய முதலைக் கொள்ளவில்லை. 1949-இலிருந்து 1957வரை ரிசர்வ் பாங்கின் கவர்னராகப் பணியாற்றிய திரு. பி. ராமராவ் என்பவர், "இந்தியாவில் மையப் பாங்கு முறை வளர்ச்சி" (Evolution of Central Banking in India) என்ற புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளது போல், கம்பெனிகளைப் பதிவு செய்யும் அலுவலரால் (Registrar of

Companies) பல பாங்குகளின் இருப்பிடத்தையே கண்டுபிடிக்க முடியவில்லை. நேர்மையற்ற சிலர் சில பாங்குகளின் நிருவாகக் குழுவில் அங்கம்வகித்தனர். அவர்கள் டெபாசிட்டர்களின் பணத்தை நல்ல முறையில் முதலீடு செய்து, பாங்குகளைச் செம்மையான முறையில் நிருவாகம் செய்யவில்லை. நிருவாகக் குழுவின் அங்கத்தினர் தம் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் கடன் கொடுத்தல் போன்ற பல குறைகளுடன் இயங்கிய புதிய பாங்குகளைச் சிறந்த முறையில் கண்காணிக்க வேண்டியதாயிற்று. புதியதாகத் தோன்றிய பாங்குகளில் சில கவிழ்ந்தன. மேற்கு வங்காளத்தில் நான்கு ஷெடியூல் பாங்குகளும், சில ஷெடியூலில் சேர்க்கப்படாத பாங்குகளும் கவிழ்ந்ததால் நடுத்தர வகுப்பினர் பாதிக்கப்பட்டனர். 1939-இலிருந்து 1949-க்குள் 588 பாங்குகள் நம்நாட்டில் கவிழ்ந்தன. பாங்குக் கம்பெனிச் சட்டத்தைப்பற்றி முன் அதிகாரங்களில் விவரமாகப் பார்த்தோம். 1949-ஆம் ஆண்டுச் சட்டம் ரிசர்வ் பாங்குக்கு வேண்டிய அதிகாரங்களைக் கொடுத்தது. எந்த நேரத்திலும் ரிசர்வ் பாங்கு ஒரு வாணிகப் பாங்கை மேற்பார்வையிடலாம்.

பல நோக்கங்களுடன் ரிசர்வ் பாங்கு ஒரு வாணிகப் பாங்கை மேற்பார்வையிடலாம். சிறிய பாங்குகளைப் பெரிய பாங்குகளுடன் இணைக்கும் பொழுதும், அவைகளுக்கு அனுமதி (licence) வழங்கும் பொழுதும் ரிசர்வ் பாங்கு அவைகளை மேற்பார்வையிடலாம். அப் பாங்குகளின் கணக்குகளைப் பரிசீலனை செய்யலாம். வாணிகப் பாங்குகளை நல்லமுறையில் கண்காணிக்கவும் அவைகளின் புத்தகங்களையும், கணக்குகளையும் பரிசீலனை செய்யவும், நேர்மையும், நாணயமும் உள்ள அலுவலர்கள் வேண்டும். வாணிகப் பாங்குகளில் பணிபுரியும் அலுவலர்களை நியமனம் செய்து, ரிசர்வ் பாங்கு அவர்களுக்கு வேண்டிய பயிற்சியையும் அளித்தது. இந்த அலுவலர்கள் வாணிகப் பாங்குகளை மேற்பார்வையிட்டு அவைகளுடைய குறைகளை எடுத்துக்காட்டினர். ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பின்கீழ் இந்திய பாங்குகள் நல்ல வளர்ச்சிபெற்று நாட்டுக்குச் சிறப்பாய்த் தொண்டாற்றும் என்பதில் ஐயமில்லை.

ஒரு வாணிகப் பாங்கு ரிசர்வ் பாங்கின் அனுமதியின்றித் தொழில் நடத்தலாம். ஆனால், ரிசர்வ் பாங்கு அனுமதியளிக்க மறுத்தபின் அது நீடிக்கலாகாது. பாங்குகள் செய்யும் தொழிலில் பெருங்குறைகள் இருந்தாலன்றி ரிசர்வ் பாங்கு அனுமதிக் கொடுக்கச் சாதாரணமாக மறுக்காது.

ரிசர்வ் பாங்கின் மேற்பார்வைக்கும் கண்காணிப்புக்கும் உட்பட்ட பாங்குகளுக்கு எவ்வித இடரும் நேராது என்று சொல்ல முடியாது. பாங்குகளின் அலுவலர்கள் திறமையுடன் பணியாற்ற வேண்டும். வாணிகப் பாங்குகளின் அலுவலர்களுக்குப் பயிற்சி யளிக்க ஒரு பயிற்சிக் கூடத்தை ரிசர்வ் பாங்கு ஆரம்பித்தது. வாணிகப் பாங்குகள் தம் அலுவலர்களை இப்பயிற்சிக் கூடங்களில் பயிற்சிபெற அனுப்புகின்றன.

மற்றநாடுகளில் உள்ள மையப் பாங்குகளுக்கும் ரிசர்வ் பாங்குக்கும் ஒரு வேற்றுமை உண்டு. ரிசர்வ் பாங்கு விவசாயி களுக்குக் கூட்டுறவுப் பாங்குகள் மூலம் கடன் வசதியளிக் கின்றது. விவசாயத்திற்கு வேண்டிய நிதியைக் கொடுப்பதை மற்ற நாட்டினர் மையப் பாங்கின் ஒரு சிறப்பான அலுவலாகக் கருதவில்லை. ஆனால், இந்தியாவில் ரிசர்வ் பாங்கு இப்பொறுப்பைத் தனது பணிகளுள் ஒரு சிறப்பான பணியாகக் கருதுகின்றது. ரிசர்வ் பாங்கும் 1935-இலிருந்து அண்மைக்காலம் வரை விவசாயத் திற்கு நிதியுதவியளிப்பதைத் தனது பொறுப்பாகக் கருதவில்லை. செம்மையான முறையில் பணியாற்றும் ஒரு மையப் பாங்கு விவசாயத்திற்கு நிதியளிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளக் கூடாது என்ற கருத்தை ரிசர்வ் பாங்கு கொண்டிருந்தது. 1937-ஆம் ஆண்டு அது அரசினரிடம் சமர்ப்பித்த அறிக்கையில் இக் கருத்தை வெளியிட்டது. "கூட்டுறவுச் சங்கங்களும், பாங்குகளும் அடிக்கடி ரிசர்வ் பாங்கின் கடனுதவியைக் கோருகின்றன. இப் பொறுப்பை ரிசர்வ் பாங்கு ஏற்றுக்கொள்ள முடியாதென்று முன்பே நாங்கள் தெளிவாக எடுத்துரைத்தோம். இதே கருத்தை மீண்டும் கூறத்தேவையில்லை......நீண்டகாலக் கடன் வசதியளிப்பது (மையப் பாங்காகிய) ரிசர்வ் பாங்கின் வேலைகளை ஒட்டியதல்ல...... வேண்டுமானால், ரிசர்வ் பாங்கு இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு களுக்கு குறுகிய காலக் கடன் கொடுக்கலாம். இக்கடன் தொகையைக் குறிப்பிட்ட காலத் தவணையில் திருப்பிக் கொடுத்து விட வேண்டும்" என்ற கருத்துக்களை ரிசர்வ் பாங்கு தனது அறிக்கையில் விளக்கியது.

ஆனால், நாளடைவில் ரிசர்வ் பாங்கு தனது கொள்கையை மாற்றிக் கொண்டது. 1951-ஆம் ஆண்டில் ரிசர்வ் பாங்குச் சட்டத்தை மாற்றி அமைத்தனர். ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் 17 (2) (a) பிரிவின்படி ஷெடியூல் பாங்குகளுக்கு ரிசர்வ் பாங்கு கட னுதவி அளிக்கலாம். 1951-ஆம் ஆண்டு நிறைவேறிய சட்ட மாற்றத்தின்படி இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளும் ரிசர்வ் பாங்கிடம் கடன் வசதி பெறலாம். சட்டத்தின் 17 (2) (b) பிரிவின்படி

அறுவடையான பொருள்களை விற்பனை செய்வதற்கும், பருவ காலங்களில் விவசாயத்திற்கும் ஒன்பது மாதத் தவணைக் கடன் கொடுக்கலாம். 1951-இல் இத்தவணைக் காலத்தை ஒன்பதிலிருந்து பதினைந்து மாதமாக நீட்டித்தனர். 17 (2) (b) பிரிவை மீண்டும் 1953-ஆம் ஆண்டு மாற்றியமைத்தனர். கால்நடைப் பண்ணைகளையும், விவசாயப் பொருள்களைப் பண்படுத்துதலையும் விவசாய வேலைகளாகக் கருதி அவைகளுக்கும் ரிசர்வ் பாங்கு கடனுதவியளிக்கலாம் என்று முடிவு செய்தனர். குடிசைத் தொழிலுக்கு நிதியுதவி அளிப்பதற்காக 12 மாதத் தவணைக்குட்பட்ட உண்டியல்களை ரிசர்வ் பாங்கு தள்ளுபடியோ மீள்தள்ளுபடியோ செய்யலாம்.

ரிசர்வ் பாங்கில் விவசாயக் கடன் துறை (Agricultural Credit Department) என்ற ஒரு தனித்துறை இருக்கின்றது. 1951-இல் 14 அங்கத்தினர் கொண்ட குழு ஒன்றை அமைத்தனர். அக்குழுவினர் விவசாயக் கடன் துறைக்கு அவ்வப்போது விவசாயத்திற்கு அளிக்கவேண்டிய கடனுதவியைப் பற்றி ஆலோசனைகள் கூற வேண்டும். கூட்டுறவுத் துறையில் பணியாற்றும் அலுவலர்களுக்குப் பயிற்சியளிக்கப் பூனா நகரில் ஒரு பயிற்சிக் கூடத்தை ரிசர்வ் பாங்கு நிறுவியது.

வாணிகப் பாங்குகளைப் போல் கூட்டுறவுப் பாங்குகளும் ரிசர்வ் பாங்குடன் நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டும். இத்தொடர்பு மூலம் ரிசர்வ் பாங்கு பணமார்க்கட்டை நன்கு கண்காணிக்கலாம். கூட்டுறவுப் பாங்குகள் ரிசர்வ் பாங்கின் உதவியைப் பெறவேண்டுமானால், அரசினர் பத்திரங்கள் போன்ற ரொக்க நிலையுள்ள (liquid) சொத்துக்களைக் கணிசமான அளவில் வைத்திருக்கவேண்டும். அவை குறுகிய காலத் தவணைக் கடன்களையே கொடுக்கவேண்டும். நெடுங்காலத் தவணைக் கடன்களை விவசாயிகள் நில அடைமானப் பாங்குகளிலிருந்து பெறவேண்டும். ஷெடியூல் பாங்குகளைப் போலவே கூட்டுறவுப் பாங்குகளையும் ரிசர்வ் பாங்கு மேற்பார்வையிடல் வேண்டும். ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பில் கூட்டுறவுப் பாங்குகள் நல்ல முறையில் வளரும். தற்பொழுது ரிசர்வ் பாங்கின் உதவியைப்பெறும் கூட்டுறவுப் பாங்குகளை மட்டுமே ரிசர்வ் பாங்கு மேற்பார்வையிடலாம். இராச்சிய அரசாங்கக் கூட்டுறவுத்துறை அலுவலர்கள் கூட்டுறவுப் பாங்குகளைத் தணிக்கை செய்கின்றனர். ரிசர்வ் பாங்கின் கண்காணிப்பும் கூட்டுறவுப் பாங்குகளுக்கு நன்மை பயக்கலாம்.

ரிசர்வ் பாங்கு கூட்டுறவு இயக்கத்தின் மூலமே விவசாயத்திற்குக் கடன் கொடுத்துதவ முடியும். ஆனால், கூட்டுறவு இயக்கம்

விவசாயிகளின் தேவை முழுவதையும் பூர்த்தி செய்யவில்லை என்றும், இந்தியாவில் விவசாயிகள் கடன் கொடுப்போரையும், சுதேச பாங்குதார்களையுமே நிதியுதவிக்கு எதிர்பார்க்கின்றனர் என்றும் முன் அதிகாரங்களில் குறிப்பிட்டோம். விவசாய முன்னேற்றத்திற்கு நிதியுதவி இன்றியமையாதது. ஆனால், ரிசர்வ் பாங்கின் நிதியுதவி இந்திய விவசாயத்தில் உள்ள குறைகளை அறவே நீக்க முடியாது. இந்திய விவசாயத்தில் உள்ள குறைகள் பல. அவைகள் நீங்கி, இந்தியாவில் விவசாயம் ஒரு வாழ்க்கை வழியாக (Way of living) இராமல் மேலை நாடுகளில் இருப்பதுபோல் ஒரு தொழிலாக (Business) மாற வேண்டும். இந்திய விவசாயத்தில் உள்ள குறைகளை ரிசர்வ் பாங்கு நீக்க முடியாது. பழைய கொள்கையைப் புறக்கணித்து ரிசர்வ் பாங்கு கூட்டுறவுப் பாங்குகளுக்குக் கடன் கொடுத்தல் போற்றத்தக்கது.

ரிசர்வ் பாங்கின் அமைப்பு, அதிகாரம், அலுவல்கள் முதலியவற்றை முன்னிரு அதிகாரங்களில் பார்த்தோம். ரிசர்வ் பாங்கு தோன்றிய ஆண்டிலிருந்து இரண்டாவது உலகப் போர் முடியும் வரை குறிப்பிடத்தக்க சாதனை ஒன்றையும் புரியவில்லை. ஆனால், போர் முடிந்தவுடன் நாளடைவில் ரிசர்வ் பாங்கு தன் அதிகாரத்தையும், அலுவல்களையும் பெருக்கிக்கொண்டது. வாணிகப் பாங்குகள் அவ்வப்போது அதன் உதவியை நாட ஆரம்பித்தன. ரிசர்வ் பாங்கு மிகுதியான அளவில் உண்டியல்களைத் தள்ளுபடி செய்தது. அவைகளை வாங்கவும் செய்தது. வாணிகப் பாங்குகளுக்குக் கடன் உதவியளித்தது. சுருங்கக் கூறின், வாணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்குடன் நெருங்கிய தொடர்பு கொண்டன. எனவே, ரிசர்வ் பாங்கு முன்னிலும் வெற்றிகரமாகப் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்தது.

இரண்டாவது போருக்குப்பின் ரிசர்வ் பாங்கு நாட்டின் உண்மையான மையப் பாங்காகப் பணியாற்ற ஆரம்பித்தது. போர்க் காலத்தில் அரசாங்கத்தின் செலவு மிகுதியடைந்தது. நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டது. வாணிகப் பாங்குகள் ரொக்க நிலையிலிருந்தால் ரிசர்வ் பாங்கின் உதவியை நாடவில்லை. இந்த நிலையில் ரிசர்வ் பாங்கு வாணிகப் பாங்குகளைச் செம்மையான முறையில் கண்காணிக்க முடியவில்லை. மேலும், சட்டம் ரிசர்வ் பாங்குக்கு வேண்டிய அதிகாரங்களைக் கொடுக்கவில்லை. இரண்டாவது உலகப் போருக்குப்பின் அரசினர் இயற்றிய சட்டங்கள் ரிசர்வ் பாங்குக்கு நாட்டின் சிறந்த மையப் பாங்காகப் பணியாற்றுவதற்கு வேண்டிய அதிகாரங்களைக் கொடுத்தது. இந்தியா விடுதலையடைந்த ஆண்டிலிருந்து ரிசர்வ் பாங்கு நாட்டுக்குச் சிறப்பாய்த் தொண்டாற்றி

வருகின்றது. போருக்குப்பின் ஏற்பட்ட பணவீக்கத்தைக் குறைப்பதிலும், பற்றுக்குறை நிதியாக்கத்தினுல் ஏற்பட்ட விலையுயர்வைத் தடுப்பதிலும் ரிசர்வ் பாங்கு சிறந்த நடவடிக்கைகளை எடுத்தது. ஷெடியூல் பாங்குகளைப் போலவே இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளும் ரிசர்வ் பாங்கின் உதவியைப் பெறலாம். உண்டியல் மார்க்கட்டுத் திட்டமும், அரசாங்கப் பத்திர மார்க்கட்டும் வாணிகப் பாங்குகளுடன் ரிசர்வ் பாங்கு கொண்டிருக்கும் தொடர்பை மேலும் வளர்த்தன. உண்டியல் மார்க்கட்டுத் திட்டம் பணமார்க்கட்டின் நெகிழ்ச்சியையும், வாணிகப் பாங்குகளின் ரொக்க நிலையையும் அதிகரித்தன.

ரிசர்வ் பாங்கு சிறந்த முறையில் ஒரு மையப் பாங்காக வளர்ச்சியடைந்துவிட்டது என்று நாம் கூறும்போது, பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதி அதன் கண்காணிப்புக்குட்படவில்லை என்பதை மறக்கக்கூடாது. பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதியை அமைப்புள்ள பகுதியுடன் இணைக்க ரிசர்வ் பாங்கு முயற்சி செய்தது. ஆனல், அந்த முயற்சி வெற்றியளிக்கவில்லை. சுதேச பாங்குதார்கள் "ஹுண்டி" என்ற சுதேச உண்டியல்கள் மூலம் உள்நாட்டு வர்த்தகத்துக்கு வேண்டிய நிதியை அளிக்கின்றனர். இந்தச் சுதேச உண்டியல்கள் சிறந்த செலாவணிக் கருவிகள் அல்ல என்ற காரணத்தால் ரிசர்வ் பாங்கு இவைகளை மீள்தள்ளுபடி செய்ய மறுக்கின்றது. ஆனல், ஸ்டேட் பாங்கும், மற்றச் சில பாங்குகளும் அந்த உண்டியல்களைத் தள்ளுபடி செய்கின்றன. ரிசர்வ் பாங்கும் சுதேச உண்டியல்களைத் தள்ளுபடி செய்ய ஏற்பாடு செய்தால் பணமார்க்கட்டின் அமைப்பற்ற பகுதியை அமைப்புள்ள பகுதியுடன் இணைக்கலாம். ரிசர்வ் பாங்கு மூன்று மாதத் தவணை உண்டியல்களையே பயன்படுத்த வேண்டுமென்று சுதேச பாங்குதார்களைக் கேட்டுக் கொள்ளலாம். சுதேச பாங்குகளின் உண்டியல்களை நேர்முகமாகவோ, வாணிகப் பாங்குகள் மூலமாகவோ தள்ளுபடி செய்யலாம்.

விவசாயத்துக்கு நிதி கொடுக்கும் பெரும் பொறுப்பை உலகிலுள்ள மையப் பாங்குகளுள் இந்திய ரிசர்வ் பாங்கு ஒன்றே ஏற்றுக்கொண்டிருக்கின்றது. இப்பெரும்பணி மையப் பாங்கின் பொறுப்பல்ல என்று எடுத்துரைத்தது. மையப் பாங்குபற்றிய கோட்பாடுகளை விளக்காமல் நம்நாட்டுச் சூழ்நிலைக்கேற்றவாறு ரிசர்வ் பாங்கு தொண்டாற்றுவது போற்றத்தக்கது. பல துறைகளிலும் ரிசர்வ் பாங்கு சுதந்தர இந்தியாவில் முன்னேற்றமடைந்திருக்கிறது.

———

# முடிவுரை

இந்தியாவில் பாங்குகள் எவ்வாறு தோன்றி வளர்ச்சி பெற்றன என்பதைப்பற்றி முன் அதிகாரங்களில் பார்த்தோம். நல்ல வளர்ச்சிபெற்ற ஒரு பாங்கு முறை நம்நாட்டில் இருக்கின்றது. இங்கிலாந்தில் உள்ள "பேரைந்துகள்" (Big Five) போலவே நம்நாட்டிலும் சில மிகப்பெரிய பாங்குகள் இருக்கின்றன. இவை இந்தியப் பணமார்க்கட்டில் சிறந்த செல்வாக்கைக் கொண்டிருக் கின்றன. ஆங்கிலேயப் பாங்குகளைப் போலவே இவைகளும் சிறந்த முறையில் நிருவாகம் செய்யப்படுகின்றன. ஆனால், நமது பாங்கு முறையில் சில குறைகள் இருக்கின்றன. இக்குறைகளை நீக்கி, நமது பாங்கு முறையைச் செம்மைப்படுத்த ரிசர்வ் பாங்கு முயற்சி செய்து வருகின்றது.

சரியான முறையில் நிருவகிக்கப்படாததால் பல பாங்குகள் கவிழ்ந்தன. குறிப்பாக 1948, 1949, 1951-ஆம் ஆண்டுகளில் பல பாங்குகள் கவிழ்ந்தன. 1959-60-இல் பல செண்ட்ரல் பாங்கு திவாலாயிற்று. பல பாங்குகள் வேண்டிய அளவு முதலை வைத்துக் கொள்ளவில்லை. வலிமையற்ற நிலையிலிருந்த இந்தப் பாங்குகள் நெருக்கடி ஏற்பட்டபொழுது கவிழ்ந்தன. சில பாங்குகளில் அனு பவம்பெற்ற அலுவலர்கள் பணியாற்றவில்லை. இவர்கள் வேண்டிய பயிற்சியும் பெறவில்லை. மேலும் சில பாங்குகள் சிறந்த முத லீட்டுக் கொள்கையைப் பின்பற்றவில்லை. தொழில் நிலையங்களின் பங்குகளை அடைமானமாகப் பெற்று அவை கடன் கொடுத்தன. ஊகவாணிகம் செய்வோர்க்கும் அவை கடனுதவியளித்தன. பங்கு மாற்று நிலையங்களில் நடக்கும் ஊகவாணிகம் சில வாணிகப் பாங்குகளைத் தாக்கியது. சில பாங்குகளின் இயக்குநர்கள் நேர்மை யுடனும், நாணயத்துடனும் நடந்து கொள்ளவில்லை. தாங்கள் தொடர்புகொண்டிருக்கும் தொழில் நிலையங்களுக்குத் தகுந்த அடை மானங்களைப் பெறுமல் கடனுதவியளித்தனர். சில பாங்குகளைச்

சிக்கனமாகவும், இலாபகரமான முறையிலும் நிருவகிக்காததால் அவை நெருக்கடியான நிலைமையைச் சமாளிக்க முடியவில்லை. சில பாங்குகள் தம் நிலைமையை வலுப்படுத்திக்கொள்ளாமலும் தொழிலைப் பெருக்கிக்கொள்ளாமலும் கிளைகளை ஆரம்பித்தன.

வாணிகப் பாங்குகளின் நிலைமையை வலுப்படுத்த டெபாசிட்டு இன்சூரன்சுத் திட்டத்தை இந்தியாவில் புகுத்தலாமென்று பலர் கருதுகின்றனர். இத்திட்டத்தைப்பற்றி முன்பே குறிப்பிட்டோம். 1954-ஆம் ஆண்டில் ஷராப்புக் குழுவினர் (Shroff Committee) இத்திட்டத்தை நன்கு பரிசீலனை செய்தபின் நம்நாட்டில் புகுத்தலாமென்று சிபாரிசு செய்தனர். டெபாசிட்டு இன்சூரன்சுத் திட்டத்தை அமெரிக்காவில் முதன் முதலில் அமுலில் கொண்டு வந்தனர். இத்திட்டம் டெபாசிட்டர்களின் நம்பிக்கையை வளர்த்துப் பாங்குகளின் நிலைமையைச் சீர்படுத்தும். அமெரிக்காவில் பெடரல் டெபாசிட்டு இன்சூரன்சுக் கார்ப்பரேஷன் (Federal Deposit Insurance Corporation) என்று ஒரு நிறுவனத்தை ஆரம்பித்து இத்திட்டத்தைப் புகுத்தினர். இத்திட்டத்தில் பங்குகொள்ளும் பாங்குகள் தம் டெபாசிட்டில் $\frac{1}{12}$ சதவீதத்தை ஆண்டுதோறும் தவணைக்குக் கட்டணமாக இன்சூரன்சுக் கார்ப்பரேஷனுக்குச் செலுத்தவேண்டும். இந்த விதமாக டெபாசிட்டுத் தொகைகளை இன்சூரன்சுத் திட்டத்துக்கு உட்படுத்தினர். பாங்குகளுக்கு ஆபத்து நேரிட்டாலும், டெபாசிட்டர்கள் தம் தொகையைப் பெறுவர். ஆனால், இப்படி டெபாசிட்டர்கள் பெறும் தொகை 5,000 டாலர்களுக்கு மேற்படாமலிருக்கவேண்டும்.

இத்திட்டத்தை இந்தியாவில் புகுத்துவது எளிதல்ல என்று பலர் கருதினர். பாங்குகளின் அடக்கச் செலவு நம்நாட்டில் மிகுதியாக இருக்கின்றது. ஆகையால், அவை மிகுதியான இலாபத்தைப்பெற முடியவில்லை. டெபாசிட்டு இன்சூரன்சுத் திட்டம் பாங்குகளின் அடக்கச் செலவை மேலும் மிகுதியாக்குமென்றும், இத்திட்டம் நம்நாட்டில் சிறந்த பயனைக் கொடுக்காமல் போகலாமென்றும் அஞ்சி, அண்மைக் காலம்வரை இதை இந்தியாவில் புகுத்தவில்லை. ஆனால், பாலை சென்ட்ரல் பாங்கு கவிழ்ந்த பிறகு, இந்தப் பிரச்சினையை மீண்டும் அரசாங்கம் பரிசீலனை செய்து, இறுதியில் இத்திட்டத்தை நம்நாட்டில் புகுத்தியது. 1962-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் டெபாசிட்டு இன்சூரன்சுக் கார்ப்பரேஷன் தோன்றியது. ஐந்து அங்கத்தினர் கொண்ட இயக்குநர் குழு இக் கார்ப்பரேஷனை நிருவாகம் செய்யும். அரசினர் அவ்வப்பொழுது வகுக்கும் திட்டங்களையும், கொள்கைகளையும் கார்ப்பரேஷன் செயலாற்ற வேண்டும். இன்சூரன்சுத் திட்டத்தின்கீழ்வரும் உயர்ந்த

பட்ச டெபாசிட்டுத் தொகை ரூ. 1,500 ஆகும். இத்தொகையை அவசியமானுல் மிகுதியாக்கிக் கொள்ளலாம். நூறு ரூபாய் டெபாசிட்டுத் தொகைக்குக் கட்டவேண்டிய தவணைக் கட்டணம் 15 நயா பைசாவுக்கு மேற்படாமல் இருக்கவேண்டும். ஆரம்பத்தில் ஐந்து நயா பைசா வீதம் கட்டணம் வசூல் செய்யலாமென்று முடிவு செய்திருக்கின்றனர். கார்ப்பரேஷன் கோரிக்கையின்பேரில் ரிசர்வ் பாங்கு எந்த வாணிகப் பாங்கையும் மேற்பார்வையிடலாம்.

முற்றிற்று

# பல்கலைக் கழக வினாக்கள்.

## ஸ்டேட் பாங்கு

1. ஸ்டேட் பாங்கின் அலுவல்களையும், இந்தியப் பண மார்க்கட்டில் அது பெற்றுள்ள சிறப்பான இடத்தையும் விளக்குக.

## செலாவணித் திட்டம்

2. இந்தியாவின் செலாவணி முறையை விளக்குக. அரசினர் ரூபாயின் புறமதிப்பையும், அகமதிப்பையும் எவ்வாறு நிலை நாட்டுகின்றனர்?

## விவசாயத்திற்கு நிதியுதவி

3. கடன் சுமை இன்று விவசாயிகளுக்கு எந்த அளவு தொல்லை களைக் கொடுக்கின்றது? இத்தொல்லைகளை அகற்ற அரசியலார் எடுத்துள்ள நடவடிக்கைகள் யாவை?

4. இந்தியாவில் விவசாயிகளுக்கு நிதியுதவி செய்யும் ஏற்பாடு களில் உள்ள குறைகள் யாவை? இக்குறைகளை எவ்வாறு நீக்கலாம்?

## கூட்டுறவு இயக்கம்

5. கூட்டுறவு இயக்கம் இந்திய விவசாயிகளுக்கு நிதியுதவி செய்ய எந்த ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றது? இந்த ஏற்பாடுகள் குறைபாடற்ற முறையில் அமைந்துள்ளனவா?

6. கூட்டுறவு இயக்கம் இந்திய விவசாய முன்னேற்றத்திற்கு எந்த வழிகளில் உதவி புரியலாம்?

## ரிசர்வ் பாங்கு

7. இந்தியாவில் விவசாய முன்னேற்றத்திற்கு ரிசர்வ் பாங்கு எவ்வாறு உதவி புரிகின்றது? இவ்வுதவியால் விவசாயிகள் எந்த அளவு பயனடைந்திருக்கிறார்கள்?

8. ரிசர்வ் பாங்கின் அலுவல்கள் யாவை? இந்தியப் பண மார்க்கட்டில் அது பெற்றுள்ள இடத்தை விளக்குக.

9. பாங்குச் செலாவணியை ரிசர்வ் பாங்கு எவ்வாறு கட்டுப்பாடு செய்கின்றது?

10. இந்தியப் பாங்கு முறையைச் செம்மைப்படுத்த ரிசர்வ் பாங்கு எவ்வித ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றது?

11. இந்தியப் பண மார்க்கட்டின் உறுப்புக்கள் யாவை? அவைகள் எவ்வாறு இணைக்கப்பட்டிருக்கின்றன ?

12. இந்தியப் பண மார்க்கட்டின் அமைப்பை விளக்குக. அதன் பல்வேறு பகுதிகள் எவ்வாறு ஒன்றோடொன்று இணைந் திருக்கின்றன.

## விலைவாசிகள்

13. இரண்டாவது உலகப் போருக்குப் பின் விலைவாசிகள் ஏன் படிப்படியாக உயர்ந்து வருகின்றன? அரசினர் விலைவாசிகளைக் கட்டுப்பாடு செய்ய எவ்வித ஏற்பாடுகளைச் செய்திரு கின்றனர்?

14. பற்றுக்குறை நிதியாக்கம் என்றால் என்ன? அது இந்தியத் திட்டங்களில் எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது?

## பன்னாட்டு நாணய நிதி

15. பன்னாட்டு நாணய நிதியுடன் இந்தியா கொண்டுள்ள தொடர்பை விளக்குக. இத்தொடர்பு இந்தியப் பொருளா தாரத்திற்கு எப்படி உதவி புரிகின்றது?

# கலைச்சொல் அகராதி

## அ

| தமிழ்ச்சொல் | பக்கம் | ஆங்கிலச்சொல் |
| --- | --- | --- |
| அச்சுத் தீர்வை | 9 | Seigniorage |
| அடையாள நாணயங்கள் | 24 | Token coins |
| அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை | 57 | Balance of Payments |
| அங்காடி | 64 | Market |
| அயல் நாட்டுச் செலாவணி | 64 | Foreign Exchange |
| அயல் நாட்டுச் செலாவணி இருப்பு | 99 | Foreign Exchange Reserves |
| அமைப்பற்ற பணமார்க்கட்டு | 124 | Unorganised Money Market |
| அமைப்புள்ள பணமார்க்கட்டு | 124 | Organised Money Market |
| அனுமதிக்கப்பட்ட மூலதனம் | 128 | Authorised Capital |
| அகில இந்திய கிராமாந்தரக் கடன் விசாரணைக் குழு | 137 | All India Rural Credit Survey |
| அதிகப் பற்றுக் கடன் | 146 | Overdraft |
| அகில இந்திய உயர்முறை மன்றம் | 151 | All India Tribunal |
| அயல் நாட்டினர் சுற்றுலா | 166 | Tourist Traffic |
| அழைப்புக் கடன் | 170 | Call Money |
| அமைப்பு பெற்ற முதல் மார்க்கட்டு | 207 | Organised Capital Market |
| அஞ்சல் அலுவலக டெபாசிட்டு | 211 | Postal Savings Deposit |

## ஆ

| தமிழ்ச்சொல் | பக்கம் | ஆங்கிலச்சொல் |
| --- | --- | --- |
| ஆவணங்கள் | 257 | Documents |
| ஆணைச் செலாவணி | 67 | Fiat Money |

## இ

| தமிழ்ச்சொல் | பக்கம் | ஆங்கிலச்சொல் |
| --- | --- | --- |
| இரட்டை உலோக நாணய முறை | 4 | Bimetallism |
| இந்தியச் செலாவணி இயக்கம் | 59 | Indian Currency League |
| இயந்திர முறை கணக்கு வைப்பு | 127 | Mechanised Accounting |
| இருப்பு நிலைக் குறிப்பு | 151 | Balance Sheet |
| இலாப இழப்புக் கணக்கு | 156 | Profit and Loss Account |
| இலாப ஈவு | 158 | Dividend |
| இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகள் | 192 | State Co-operative Banks |

| தமிழ் | பக்கம் | English |
|---|---|---|
| **உ** | | |
| உண்டியல் | 26 | Bill |
| உண்டியல் (கவுன்சில்) | 26 | Council Bills |
| உண்டியல் (எதிர்) | 26 | Reverse Councils |
| உண்மையான வருமானம் | 67 | Real Income |
| உடன் துய்த்தற்குரிய பொருள்கள் | 95 | Consumers' Goods |
| உதவி நிருவாக இயக்குநர் | 129 | Deputy Managing Director |
| உண்டியல் பில் மார்க்கட்டு | 135 | Bill Market |
| உண்டியல் ஏற்பு அகங்கள் | 152 | Acceptance Houses |
| உறுதி ரசீது | 168 | Trust receipt |
| உண்டியல் பழக்கம் | 222 | Bill Habit |
| **ஊ** | | |
| ஊக வாணிகம் | 54 | Speculation |
| ஊக வாணிக முதலீடு | 157 | Speculative Investment |
| **ஏ** | | |
| ஏற்றுமதி உண்டியல் | 38 | Export Bill |
| ஏற்றுமதி வரி | 54 | Export Duty |
| ஏஜன்சி நிலையங்கள் | 110 | Agency Houses |
| ஏற்றுக் கொள்ளும் ஆவணங்கள் | 167 | Documents of Acceptance |
| ஏற்றுமதிச் சரக்கு ஆவணங்கள் | 167 | Bills of Lading |
| **ஐ** | | |
| ஐரோப்பிய மீட்சித் திட்டம் | 72 | European Recovery programme |
| ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் | 163 | Federal Reserve Banks |
| **ஒ** | | |
| ஒப்பிய முதல் | 159 | Subscribed Capital |
| ஒதுக்கும் பகுதி | 272 | Margin requirements |
| **க** | | |
| கருவூலம் | 9 | Treasury |
| கட்டணங்கள் | 9 | Payments |
| கருவூல உண்டியல்கள் | 54 | Treasury Bills |
| காப்பு நிதி | 12 | Reserve |
| கூலி | 49 | Wage |
| கூட்டுப் பங்குப் பாங்கு | 51 | Joint Stock Bank |
| கட்டுப் படுத்தப்பட்ட ரூபாய்-ஸ்டெர்லிங் முறை | 54 | Controlled Sterling-Exchange Standard |
| குறைந்த பட்சக் காப்பு முறை | 70 | Minimum Reserve System |
| கடினச் செலாவணி | 87 | Hard currency |
| கிளை பாங்கு முறை | 124 | Branch Banking |

| | | |
|---|---|---|
| டாலர் நிதி | 81 | Dollar Reserves |
| டெபாசிட்டு இன்சூரன்சுத் திட்டம் | 125 | Deposit Insurance Scheme |
| டிரஸ்ட் | 146 | Trust |
| **த** | | |
| தன்-நிறைவு | 1 | Self Sufficiency |
| தொழிலுற்பத்தி | 2 | Industrial Production |
| தடையற்ற பொருளாதார அமைப்பு | 2 | Free economy |
| தரமிழந்த நாணயம் | 3 | Debased currency |
| தடையற்ற நாணய அச்சிடல் | 4 | Free Coinage |
| தனி உலோக நாணய முறை | 5 | Monometallism |
| துணை நாணயம் | 8 | Subsidiary Coinage |
| தீர்வை | 9 | Tax or Levy |
| தள்ளுபடி வீதம் | 22 | Rate of Discount |
| தந்தி வழி மாற்று | 27 | Telegraphic Transfer |
| தனியார் துறை | 36 | Private Sector |
| தங்க உலோக முறை | 46 | Gold Bullion Standard |
| தசம முறை | 70 | Decimal System |
| தவணை டெபாசிட்டு | 120 | Fixed Deposit |
| தானாகக் கலைதல் | 125 | Voluntary Liquidation |
| தணிக்கை | 153 | Audit |
| தரகு | 154 | Brokerage |
| தள்ளுபடி நிலையங்கள் | 170 | Discount Houses |
| தொழில் நிதிக் கார்ப்பரேஷன் | 175 | Industrial Finance Corporation |
| தொழிற் பத்திரங்கள் | 176 | Industrial Securities |
| தொழில், கடன் முதலீட்டுக் கார்ப்பரேஷன் | 182 | Industrial Credit and Investment Corporation |
| தேசியத் தொழில் முன்னேற்றக் கார்ப்பரேஷன் | 182 | National Industrial Development Corporation |
| தொடக்கச் சங்கங்கள் | 192 | Primary Societies |
| தொடக்க நில அடைமான பாங்குகள் | 197 | Primary Land Mortgage Banks |
| தவணைப் பேரங்கள் | 214 | Time Deals |
| தவணை முடிவு | 219 | Maturity |
| தரிசன வெண்ணிலைக் கடன் பத்திரங்கள் | 219 | Demand Promissory Notes |
| துணையீட்டுக் கடன் மார்க்கட்டு | 225 | Collateral Loan Market |
| தகுதியுடைய உண்டியல்கள் | 256 | Eligible Bills |

பணச் சுருக்கம் 39 Monetary Contraction or deflation
பணவீக்கம் 40 Inflation
பங்கீடு 68 Ration
பன்னாட்டு நாணய நிதி 69 International Monetary Fund
பொன் சமன்பாட்டுத் திட்டம் 69 Gold Parity Standard
பேரரசின் டாலர் நிதி 86 Empire Dollar Pool
பற்றாக்குறை நிதியாக்கம் 90 Deficit Financing
பட்டயங்கள் 111 Charters
புற உண்டியல்கள் 112 Foreign Bills
"பேரைந்து" 115 "Big Five"
பத்திர முதலீடு 123 Investment
பெடரல் டெபாசிட் இன்சூரன்சுக் கார்ப்பரேஷன் 125 Federal Deposit Insurance Corporation
பயிற்சிக் கல்லூரி (பாங்கு ஊழியர்) 127 Bankers' Training College
பாங்குத்துறை 134 Banking Department
பொதுச் செலவு 141 Overhead Cost
பதிவுப் பணம் 153 Registration Fees
பக்கா ஆர்கத்தியர்கள் 154 Pucca Arkatyas
பற்றுத் திருமுகம் 155 Letter of Credit
பன்னோக்குச் சங்கங்கள் 194 Multi-purpose Societies
பத்தாண்டு தவணைப் பத்திரங்கள் 211 Ten year certificates
பங்குமாற்றுச் சந்தைகள் 212 Stock Exchanges
புறச்சோடனை 218 Window-dressing
புறக்குறிப்பு 227 Endorsement
பொதுக்கடன் நிருவாகம் 250 Administration of Public debt

ம

மாநில அரசு 6 Provincial government
முதலீடு 16 Investment
மையப் பாங்கு 86 Central Bank
முழுவளர்ச்சி பெற்ற பொன் நாணயத் திட்டம் 46 Full Gold Standard
மொத்தக் குறியீட்டெண் 75 Whole-sale Index
மென்மைச் செலாவணி 87 Soft currency
மறைமுக வரிகள் 96 Indirect Taxes
மூலதனக் கணக்கு 99 Capital Account
மாறாத நம்பிக்கை வெளியீட்டு முறை 105 Fixed Fiduciary system
மந்த காலம் 123 Slack Season
முற்றிலும் செலுத்தப் பட்ட மூலதனம் 128 Fully paid-up Capital

---

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 34 | வெளியிட்டனர் | வெளியிட்டது |
| 18 | 19 | பேஜ்காட் | பேஜ்ஹாட் |
| 19 | 22 | இந்திய | இந்தியா |
| 20 | 18 | ஹெர்ஷெல் ஒரு குழுவை | ஹெர்ஷெல் குழுவை |
| 28 | 3 | சேம்பர்லின் ஒரு குழுவை | சேம்பர்லின் குழுவை |
| 28 | 32 | நிதிக் குழுவினர் | நிதிக்குக் குழுவினர் |
| 49 | 31 | முதல் முதல் உலகப்போர் | முதல் உலகப்போர் |
| 63 | 3 | பொருளாதரப் | பொருளாதாரம் |
| 65 | 14 | கொடுத்தனர் | கொடுத்தது |
| 71 | 14 | 1951-இல் | 1950-இல் |
| 79 | 1 | கொடிக்கு வேண்டிய | கொடுக்க வேண்டிய |
| 85 | 20 | வகுத்தது | வகுத்தனர் |
| 88 | 11 | பேரரசின் ஸ்டெர்லிங் நிதி | பேரரசின் டாலர் நிதி |
| 124 | 38 | வரவேற்கின்றன | வரவேற்கின்றது |
| 126 | 34 | பெறுகின்றனர் | பெறுகின்றன |
| 158 | 35 | இருந்தனர் | இருந்தன |
| 167 | 31 | இறக்குமதி | இறக்குமதிக்கு |
| 169 | 37 | வற்புறுத்தினர் | வற்புறுத்தின |
| 176 | 32 | கூறுவர் | கூறினர் |
| 178 | 17 | Undertaking | Underwriting |
| 183 | 17 | Undertaking | Underwriting |
| 214 | 15 | 360 ரூபாய் | 360 கோடி ரூபாய் |
| 226 | 7 | பெருபாலும் | பெரும்பாலும் |
| 244 | 16 | வேண்ணாள் | வேண்டிய |
| 281 | 35 | அனுமதிக்கொடுக்க | அனுமதிகொடுக்க |
| 286 | 14 | பல செண்ட்ரல் | பாலெய் செண்ட்ரல் பாங்கு |
| 287 | 31 | பாலே செண்ட்ரல் பாங்கு | பாலெய் செண்ட்ரல் பாங்கு |

